*செவ்விலக்கிய வரிசை*

# இந்துலேகா

மலையாள மூலம்: ஒ. சந்துமேனோன்

தமிழில்: இளம்பாரதி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# பொருளடக்கம்

# ஒ. சந்துமேனோன்

ஒய்யாரத்து சந்துமேனோன் வடக்குமலபாரில் 1847-ஆம் ஆண்டு, ஜனவரி 9-ந்தேதி பிறந்தார். தந்தையார் ஆங்கிலேய ஆட்சியில் "ஆபீஸ் மாஜிஸ்ட்ரேட்" பதவி வகித்தார். தனது சமூகத்தில் ஒரு நாட்டாண்மையும் கூட. சந்துமேனோனின் இளம் பருவத்திலேயே தந்தையார் மறைந்துவிட்டார். பின்னர் அண்ணன் சங்கரமேனோனின் பராமரிப்பில் வளர்ந்தார். அவரும் அகால மரணமடைந்துவிட்டார். சந்து மேனோன் கல்வி பயின்றது தலைச்சேரியில் பி.இ.எம்.பி. பள்ளியில் (அன்றைய பார்சி பள்ளி). "அன்கவன்ட் சிவில் சர்வீஸ்" என்ற பரீட்சையில் தேறி (1863) கல்வியைத் தொடர்ந்தார். 1864-இல் தலைச்சேரி நீதிமன்றத்தில் குமாஸ்தாவாக நியமிக்கப்பட்டார். இந்தக் காலகட்டத்தில் லோகன் (மலபார் மான்யுவலை உருவாக்கியவர்) தலைச்சேரி உதவி கலெக்டராக நியமிக்கப்பட்டார். 1867-இல் சந்துமேனோன் லோகனின் கீழ் குமாஸ்தாவானார். 1871-இல் மலபார் கலெக்டரேட்டில் தலைமை குமாஸ்தாவானார். அதைத் தொடர்ந்து 1874-இல் முன்சீபும், 1892-இல் உதவி நீதிபதியும் ஆனார். 1897-இல் ராவ் பகதூர் பட்டம் கிடைத்தது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி.எல். பரீட்சைக்கான தேர்வாளராக இருந்தார். 1889-இல் இந்துலேகாவை எழுதினார். இரண்டே மாதங்களில் நாவலை எழுதி தனது முன்னுரையுடன் டிசம்பர், 1889-இல் வெளியிட்டார். இரண்டாம் பதிப்பின் முன்னுரையை 1890 மே 31-இல் எழுதினார். இரண்டும் பரப்பனங்காடியில் வைத்து எழுதப் பட்டன. சாரதா என்ற இரண்டாவது நாவலை எழுதி முடிப் பதற்கு முன்பாகவே, கோழிக்கோடில் உதவி-நீதிபதியாக இருந்தபோது, 1899 செப்டம்பர் 7-இல் அமரரானார்.

# இந்துலேகா முதல் பதிப்பின் முன்னுரை

1886 கடைசியில் கோழிக்கோட்டிலிருந்து சென்றது முதல் நாள் ஆங்கில நாவல் புத்தகங்கள் அதிகம் படிக்கத் தொடங்கினேன். அரசாங்க வேலைத் தொடர்பான நடவடிக்கைகள் இல்லாமல் வீட்டில் ஓய்வாக இருந்த எல்லா நேரங்களிலும் நாவல்கள் படிப்பதிலேயே காலம் கழித்தேன். இதன் காரணமாக சாதாரணமாக என்னுடன் பேசிப் பொழுதுபோக்கும் என்னுடைய சில நெருங்கிய நண்பர்களுக்குச் சிறிது மனவருத்தம் ஏற்பட்டதாகத் தெரிந்தது. அதனால் நாவல் படிப்பதை முற்றாக விட்டு விடவில்லையென்றாலும் அவர்களுடைய ஆதங்கத்தை வேறு எந்த விதத்திலாவது தீர்க்க முடியுமா என்று முயன்றேன். அந்த முயற்சிகளில் ஒன்று சில நாவல் புத்தகங்களை வாசித்து, கதையின் சாரத்தை அவர்களுக்கு மலையாளத்தில் மொழிபெயர்த்துச் சொல்லிப் புரிய வைப்பதாக இருந்தது. இரண்டு மூன்று நாவல் புத்தகங்களை அங்கங்கே இவ்வாறு மொழிபெயர்த்துக் கேட்கச் செய்ததில் அவர்கள் அவ்வளவாக ரசித்ததாகத் தெரிய வில்லை. கடைசியில் தெய்வாதீனமாக லார்டு பீகன்ஸ் ஃபீல்டு எழுதிய 'ஹென்றியிட்ட டெம்ப்பிள்' என்ற நாவல் அவர்களில் ஒருவருக்குப் பிடித்திருந்தது. அது முதலாக அந்த நபருக்கு நாவல் படிக்கச் செய்து கேட்பதில் மிகுந்த ஈடுபாடு தொடங்கி, போகப்போகத் தீவிரமாயிற்று. மொழி பெயர்த்துச் சொல்லிக் கேட்க வேண்டுமென்ற கட்டாயத் தினால் எனக்கு சொந்தமாக எந்த புக்கும் படிக்கப் பல சமயங்களில் முடியாமல் போயிற்று. சில சமயங்களில் எந்த 'லா புக்கும்' தனியே உட்கார்ந்து வாசித்தாலும்கூட, "அது நாவல்தான்; மொழி பெயர்த்துச் சொல்ல வேண்டும்" என்ற

சொல்லி வற்புறுத்தத் தொடங்கினார். அவருக்கிருந்த ஆர்வத்தைத் தீர்க்க முயன்றது பெரிய தொந்திரவாகப் போய்விட்டது என்பதாக எனக்குத் தோன்றியது. கடைசியில் நான் மேலே குறிப்பிட்ட பீகன்ஸ்ஃபீல்டின் நாவல் ஒன்றை மொழிபெயர்த்து எழுதித் தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். இதற்கு நான் முதலில் சம்மதித்தேன். பின்னர் சிறிது மொழிபெயர்த்துப் பார்த்த போது அப்படி மொழிபெயர்ப்பதில் எந்தப் பலனும் இல்லை என்பதாக எனக்குத் தோன்றிற்று.

ஆங்கிலம் அறிந்திராத என்னுடைய நண்பர்களுக்கு ஓர் ஆங்கில நாவலைப் படித்து மொழிபெயர்த்துச் சொல்லி சரியாகப் புரிந்து கொள்ளச் செய்ய அவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்குமென்று எனக்குத் தோன்றவே இல்லை. அதாவது மொழிபெயர்ப்பை எழுதி, கதையை அவர்களுக்குச் சரியானபடி புரிய வைப்பது முடியாது என்று நான் நினைக்கலானேன். மொழிபெயர்த்து எழுதியதைப் படித்தபோது அப்படி வார்த்தைக்கு வார்த்தை எழுதியிருப்பதாக மட்டுமே புரிந்தது. அது போதுமானதல்ல. ஆங்கிலத்தின் சரியான அர்த்தத்தை அவ்வப்போது மொழிபெயர்த்துச் சொல்லிப் புரியவைக்க வேண்டுமென்றால், ஒவ்வொரு விவரத்தையும் மொழிபெயர்த்துச் சொல்வதுடன் அவற்றுக்கான விளக்கங்களைப் பல நிகழ்ச்சிகளின் வாயிலாக உதாரணங்கள் சொல்லியும், வார்த்தைகளின் உச்சரிப்பு வேறுபாடுகள் கொண்டும் உணர்வு கொண்டும் கதையின் சாரத்தை ஓரளவுக்குத்தான் சரியாகத் தெரிவிக்க முடியும். அவ்வாறான விளக்கங்களையும் சங்கேதங்களையும் பிறவற்றையும் நேர் மொழிபெயர்ப்பாக எழுதுவதாகக் கொண்டால் மொத்தத்தில் மொழிபெயர்ப்பு குறைபாடாக அமையும் என்பதில் சந்தேகமில்லை. ஆங்கில நாவல் புத்தகங்களில் உள்ள சிருங்கார ரச கட்டங்களை மலையாள மொழியில் அப்படியே நேர் மொழிபெயர்ப்புச் செய்து எழுதினால் அவ்வளவு அழகாக இருக்காது. இந்த விவரங்களையெல்லாம் ஆலோசித்து ஒரு நாவல்புக் ஏறத்தாழ ஆங்கில நாவல் புத்தகங்களின் மாதிரியில் மலை

யாளத்தில் எழுதலாமென்று நான் தீர்மானித்து, என்னை சீண்டி வலுக்கட்டாயப்படுத்திய நண்பரிடம் சத்தியம் செய்து கொடுத்தேன். இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது கடந்த ஜனவரியில். ஒவ்வொரு காரணம் சொல்லி ஜூன் மாதம் வரைத் தள்ளிப்போட்டேன். பின்னர் நிர்ப்பந்தம் தவிர்க்க முடியாததாயிற்று. ஜூன் 11-ஆம் தேதி முதல் இந்தப் புத்த கத்தை நான் எழுதத் தொடங்கினேன்; ஆகஸ்ட் 17-ஆம் தேதி முடித்தேன். இது தான் இந்தப் புத்தகம் உருவாவதற்கான காரணம்.

இந்த மாதிரியான புத்தகத்தைப் பற்றி என்னுடைய நாட்டவர்க்கு என்ன அபிப்ராயம் உண்டாகுமோ எனக்குத் தெரியாது. ஆங்கிலம் அறியாதவர்கள் இந்த மாதிரியான கதைகளைப் படித்திருக்க வாய்ப்பில்லை. இந்த மாதிரிக் கதைகளை முதன் முதலாகப் படிக்கும்போது அவற்றில் பிடிப்பு ஏற்படுமா என்பது சந்தேகம் தான்.

இந்தப் புத்தகத்தை நான் எழுதிக் கொண்டிருந்தபோது ஆங்கிலம் படித்தறியாத என்னுடைய சில நண்பர்கள் என்னிடம், எந்தப் பொருள் பற்றிப் புத்தகம் எழுதுவதாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரிருவரிடம் நான் உள்ளோட்டமாகச் சொன்னதில் அவர்களுக்கு என்னுடைய இந்த முயற்சி அவ்வளவாகப் பிடித்தமானதாக எனக்குத் தெரியவில்லை—"இதென்ன விவகாரம்—இதுக்குத்தானா இவ்வளவு அலட்டல்—உண்மையிலே நடக்காத ஒரு கதையை எழுதறதிலே என்ன பலன்?" என்று அவர்களில் ஒருவர் சொன்னதாக எனக்குத் தெரியவந்தது. இதற்கு பதில்மொழியாக எனக்குச் சொல்ல வேண்டியது ஒரு விஷயம் மட்டும்தான். உலகத்தில் உள்ள புத்தகங்களில் அதிகமானவை கதைகளாக எழுதப்பட்ட புத்தகங்கள்தாம். அவற்றுள் சில சரித்திரங்கள் என்று கூறப்படுவதும், உண்மையில் நிகழ்ந்ததாக நம்பப்படுவதுமான கதைகள் அடங்கும். இவற்றைத் தவிர மற்ற புத்தகங்களில் காணப் படும் கதைகளெல்லாம் உண்மையில் நடந்தவைதானென்று நம்பப்படாதவையோ சந்தேகப்படத் தக்கவையோ ஆன கதைகள்தாம்.

ஆனால் சாதாரணமாக கதைகள் உண்மையில் நிகழ்ந் திருந்தாலும், நிகழாவிட்டாலும் கதைகள் சொல்லப்பட்ட தான சாதுர்யம் மனிதர்களுக்கு ரசிக்கத் தக்கதாகவே காணப்படுகிறது. இல்லாவிட்டால் இவ்வளவு அதிகமான புத்தகங்கள் இந்த விதமாகக் கதைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டிருக்காது. கதை உண்மையில் நடந்ததா இல்லையா என்பதான உள்ளோட்டமான சிந்தனைக்கு விவரம் தெரிந்தவர்கள் இந்த வகைப் புத்தகங்களைப் படிக்கும்போது ஆட்படுவதே இல்லை. சொல்லும் திறன், கதையின் நேர்த்தி ஆகியன மனிதர்களின் மனங்களை ஈர்க்கின்றன. நன்கு நேர்த்தியாகப் புணையப்பட்டுள்ள ஒரு கதையை ரசிகனான ஒருவன் படிக்கும்போது, அந்தக் கதை உண்மையில் நடந்திராத ஒன்று என்பதான உணர்வு அவனுடைய மனதில் எப்போதும் இருந்தபோதிலும், அந்தக் கதையில் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் உண்மையில் நிகழ்ந் திருந்தால் அவனுடைய மனதில் என்னவெல்லாம் உணர் வுகளை உண்டாக்குமோ அந்த உணர்வுகளைத் தான் நிச்சயமாக உண்டாக்குமென்பதில் சந்தேகமில்லை. பெரும் புலமை வாய்ந்த அறிவாளிகளும் தாங்கள் வாசிக்கும் கதை உண்மையில் நிகழ்ந்ததல்ல என்ற உணர்வுடன் அந்தக் கதையில் ஒவ்வொரு கட்டத்தையும் வாசிக்கும் போதும் அதை எழுதிய படைப்பாளனின் பிரயோக சாமர்த்தியத்தை அனுசரித்து ரசிக்கிறார்கள். சிறிதும் கலக்கமுறாத மனிதர் களுக்கும் இந்த வகைப் புத்தகங்களில் சில துன்பியல் சார்ந்த கட்டங்களை வாசிக்கும்போது மனம் வருந்தி கண்களி லிருந்து நீர் கொட்டுகிறது. நகைச்சுவையான கட்டங்களை வாசித்து எத்தனையோ பேர் உரக்கச் சிரிக்கிறார்கள். இவையெல்லாம் இயல்பான அறிவுள்ளவர்களுக்கு மத்தி யில் தினமும் காணப்படுபவை. இந்த வகைக் கதைகளை நேர்த்தியாய் எழுதினால் சாதாரண மனிதர்களின் மனங் களை மகிழ்விக்கவும், அவர்களில் அறிவை வளர்க்கவும் மிகவும் பயன்படும் என்று நான் கருதுகிறேன். எனவே கதை உண்மையில் நிகழாதது என்பதனால் அது பயனில்லாதது என்று கூறுவது சரியல்ல என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. அந்தக் கதை எழுதப்பட்ட விதம்

நேர்த்தியாய் இருக்கிறதா என்று மட்டும் சிந்திக்க வேண்டும்.

என்னுடைய மற்றொரு நண்பர் இதனிடையே ஒரு நாள் நான் இந்தப் புத்தகத்தின் அச்சுப் பிரதியை சரி பார்த்துக் கொண்டிருந்தபோது, இந்தப் புத்தகம் எந்த விஷயத்தைப் பற்றியது என்று என்னிடம் கேட்டார். புத்தகம் அச்சடித்து முடிந்ததும் அதன் ஒரு பிரதியை நான் அவருக்கு அனுப்பி வைப்பதாகவும், அப்போது அவருக்கு விவரம் புரியுமென்றும் மட்டும் நான் பதில் சொன்னேன். அதற்கு அவர் என்னிடம் மீண்டும் சொன்ன வார்த்தைகளை இங்கே தருகிறேன்.

"சயன்ஸ் என்று சொல்லப்படும் இங்கிலீஷ் சாஸ்திரக் கலையைப் பற்றி இந்தப் புத்தகம் எழுதப்படுவதாக இருந்தால் சரி. அப்படியில்லாமல் வேறே விஷயங்களைப் பற்றி மலையாளத்தில் இப்போதைக்குப் புத்தகங்கள் தேவையில்லை."

நான் இந்த வார்த்தைகளைக் கேட்டு ஆச்சரியப் பட்டேன்.

சாதாரணமாக இந்தக் காலங்களில் நடப்பது மாதிரியான நிகழ்ச்சிகளை மட்டும் குறிப்பிட்டும், வியப்பூட்டுவதான யாதொரு நிகழ்ச்சியையும் குறிப்பிடாமலும் ஒரு கதை எழுதினால் அது எப்படி மற்றவர்களுக்கு ரசிக்கும் என்று இந்தப் புத்தகம் எழுதும் போதில் வேறு சிலர் என்னிடம் கேட்டதுண்டு. அதற்கு நான் அவர்களிடம் சொன்ன பதில்—எண்ணெய் சாய ஓவியங்கள் ஐரோப்பாவில் எழுதப்படுகிற மாதிரி இந்த நாட்டில் கண்டு ரசிக்கத் தொடங்குவதற்கு முன்பு, அமைந்திருக்க முடியாத விதமுள்ள உருவத்தில் வரையப்பட்ட நரசிம்மமூர்த்தியின் ஓவியம், வேட்டுவ குலதெய்வ ஓவியம், சில மிருக முக ஓவியங்கள், சாதாரணமாக இரண்டு கால் உள்ளவர்களால் நின்று கொண்டிருக்க முடியாத தோற்றத்தில் கால் பின்னிய நிலையில் புல்லாங்குழல் ஊதுகிற மாதிரித் தோன்றும் ஸ்ரீகிருஷ்ணன் ஓவியம், ஆயிரம் தலை நாகனான அனந்தனின் ஓவியம், பெரிய ராட்சசர்களின் ஓவியங்கள் ஆகியவற்றை நிழலும் வெளிச்சமும், மென்மை-அடர்த்தித்

தன்மைகளும் வெளிப்படாத மாதிரியில் அடர்வான சாயங்கள் கொண்டு வரைந்ததைக் கண்டு ரசித்து, அந்த வகை ஓவியங்களுக்குப் பலவித சம்மானங்கள் கொடுத்து வந்த பலர்க்கும் இப்போது அவற்றின் மீது சலிப்பு வந்து விட்டது; மனிதனுடையதோ மிருகத்தினுடையதோ வேறு பொருட்களினுடையதோ சாதாரண இயல்புகளை வெளிப் படுத்தும் எண்ணெய்ச் சாய ஓவியம், நீர்ச் சாய ஓவியம் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்து, படைப்பார்வத்திற்கு ஓவியங்கள் எந்த அளவுக்கு ஒத்து வருமோ அவ்வளவுக்கு அந்த ஓவியர்களை கௌரவிப்பதைக் காண்கிறோம். அப்படித்தான் கதைகள் இயல்பாக நடைபெறும் நிகழ்ச் சிகளைக் கொண்டு நேர்த்தியாகப் படைக்கப்பட்டால் காலப்போக்கில் அந்த வகைக் கதைகள் நடக்காத சம்பவங் களைக் கொண்டு படைக்கப்பட்ட பழைய கதைகளைவிடச் சுவையாக இருக்கும்.

ஆனால் நான் எழுதிய இந்தக் கதை நேர்த்தியாய் அமைந்திருப்பதாகச் சிறிதும் எனக்கு நம்பிக்கையில்லை. அப்படி ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருப்பதாக மேற்குறிப்பிட்ட விவரங்களால் எனது வாசகர்களுக்குத் தோன்றுமானால் அது எனக்குப் பரம சங்கடமாகும். இந்த மாதிரிக் கதைகளை நேர்த்தியாக எழுதுவதற்குத் தகுதியானவர்கள் முயன்று எழுதினால் படிப்பவர்களுக்குச் சுவை உண்டாகும் என்பது தான் நான் சொல்வதன் சாரம்.

இந்தப் புத்தகத்தை நான் வீட்டில் இயல்பாகப் பேசும் மலையாள மொழியில் எழுதியிருக்கிறேன். சமஸ்கிருதத்தில் சிறிது அனுபவ ஞானம் உண்டென்றாலும் பல சமஸ்கிருத வார்த்தைகளை மலையாள மொழியில் நமது மலையாளிகள் பேசும்போது உபயோகப்படுத்துவது மாதிரிதான் இந்தப் புத்தகத்தில் இயல்பாக நான் உபயோகித்திருக்கிறேன். எடுத்துக்காட்டாக, 'வ்யுல்பத்தி' என்று சரியான சமஸ் கிருதத்தில் உச்சரிக்க வேண்டிய வார்த்தையை 'வில்பத்தி' என்பதாகத் தான் நாம் சாதாரணமாகக் கூறுகிறோம். அதை அவ்வாறு சாதாரண விதமாகத்தான் இந்தப் புத்தகத்தில் எழுதியிருக்கிறேன். இதைப் போன்று பல வார்த்தைகளைக் காணலாம். 'படு', 'த்ருதகதி' 'த்ருதகதிக்காரன்', 'யோக்யமாய

சப' இம்மாதிரியான பல சொற்களும் மரபுத் தொடர்களும் சமஸ்கிருத வழக்கில் உள்ள மாதிரியில் அல்ல, மலை யாளத்துடன் சேர்த்துச் சொல்லும்போது உச்சரிப்பதும் அர்த்தம் கொள்வதும்: எனவே இயல்பான மலையாள மொழி பேசும்போது' இந்த வகை வார்த்தைகளை உச்ச ரிப்பது போன்றுதான் இந்தப் புத்தகத்தில் உபயோகித் திருக்கிறேன் என்று முன்கூட்டியே எனது வாசர்களுக்குத் தெரிவிக்க நான் ஆசைப்படுகிறேன். அது மட்டுமல்லாமல் செய்வினையும் செயப்பாட்டு வினையுமான சொற் களையும் இயல்பாகப் பேசும்போது உபயோகப்படுத்துவது போலவே இந்தப் புத்தகத்தில் பல இடங்களிலும் உபயோ கித்து வந்திருக்கிறேன் என்பதையும் நான் இங்கே கூறிக் கொள்கிறேன். மலையாள வாசகங்களை மலையாளிகள் பேசிக்கொள்வது மாதிரியல்லாமல் சமஸ்கிருத நடைப் போக்கில் தூயவடிவில் எழுத நான் முயலவில்லை.

பரப்பனங்காடி. ஓ. சந்துமேனோன்
1889 டிசம்பர் 9-ஆம் தேதி

# முன்னுரை

"இந்துலேகா" நாவலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஜான் வில்லபி பிரான்சிஸ் ட்யுமெர்க் 1890 டிசம்பர் 10-இல் எழுதிய முகவுரையில் அதற்கு முந்தின ஆண்டு மலையாளத்தில் வெளியாகியிருந்த இந்தப்படைப்பின் அருமையைப் பற்றி ஒரு குறிப்பைச் சொல்லியிருந்தார். "தேவையான காரண காரியம் இல்லாமல் எந்த ஒரு புத்தகமும் எழுதப்படக் கூடாது என்பது சரிதான் என்றால் 'இந்துலேகா' என்ற மலையாள நாவலைவிட காரணகாரியத்துடனான எந்தப் புத்தகமும் எந்தக் காலத்திலும் எழுதப்பட்டதில்லை என்பதே முற்றிலும் சரியாகும்." ('இந்துலேகா' ஆங்கில மொழி பெயர்ப்பு, 1890—கோழிக்கோடு, மாத்ருபூமி மறுபதிப்பு, 1965, பக்கம் vii) 1889 டிசம்பர் 19-இல் 'இந்துலேகா'வின் ஒரு பிரதியை ட்யுமெர்க்குக்கு சமர்ப்பித்து உடனனுப்பிய கடிதத்தில் நாவல் எழுதியதற்குண்டான காரணத்தைப் பற்றிச் சந்துமேனோன் இவ்வாறு எழுதினார்:

> முதலாவதாக, ஆங்கிலம் போன்று சொந்த மொழியிலேயே எழுதப்பட்ட நாவல் ஒன்றைப் படிக்க என்னுடைய மனைவி பல சமயங்களில் வெளியிட்ட ஆசை. இரண்டாவதாக, ஆங்கில நாவல்கள் ஆதிக்கம் செலுத்துவது போன்று இந்த இலக்கியப் பிரிவிடம் மலையாள வாசர்களுக் கிடையே சுவையுணர்வை உருவாக்க வேண்டு மென்பது என்னுடைய் ஓர் ஆசை. இயல்புக்கு அன்னியமாகவும், பெரும்பாலும் பொருத்தமில்லா மலும், நிகழ முடியாததுமான சம்பவங்கள் நிறைந்த மலையாளக் கதைகளைப் படித்துப் பழகியிருக்கும் அவர்களுக்கு இந்த மாதிரிக் கதைகள் மீது பெரிய தான ஈர்ப்பு எதுவும் இல்லை. குறிப்பிட்ட ஒரு

சூழ்நிலையில் அவர்களுடைய வீடுகளி லெல்லாம் இடம்பெறுவதான சம்பவங்களும் நடப்புகளும் மட்டும் அமைந்ததான ஒரு கதை அவர்களுக்கு சுவை யூட்ட முடியுமா என்று தெரிந்து கொள்ளும் ஆசை. பிறவியிலேயே அமைவதான புத்திசாலித்தனத் திற்கும் அழகுக்கும் பெயர்பெற்ற நம்முடைய நாயர் பெண்களுக்கு நல்ல ஆங்கிலப் படிப்பை அளித்தால் அவர்களுக்கு சமூகத்தில் கிடைக்கப் பெறும் உயர்வும் ஆற்றலும் தன்னம்பிக்கையும் பற்றி என் னுடைய மலையாளச் சகோதரர்களுக்குப் புரிய வைக்க வேண்டுமென்ற ஆசை. முடிவாக, பயன் படுத்தப்படாத காரணத்தாலும், முரண்பட்ட பயன் பாட்டின் காரணத்தாலும் அதிவேகமாக நசித்துக் கொண்டிருக்கிற மலையாள இலக்கியத்தின் வளர்ச் சிக்கு என்னாலான சிறிய பங்களிப்பை நல்கு வதான ஆசை.

('இந்துலேகா' ஆங்கில மொழி பெயர்ப்பு-மறுபதிப்பு, 1965-பக்.xvi)

இந்த இலட்சியங்களையெல்லாம் எட்டிப் பிடிப்பதான தரத்திலான கதையையும் தெள்ளிதான நடையையும் சந்துமேனோன் தேர்ந்தெடுக்க முடிந்தது என்பதில் மாற்றுக் கருத்தில்லை. தனது மனைவிக்கு மட்டுமில்ல, அதே போன்ற பல வாசகர்களுக்கு, வாசித்து மகிழத்தக்க ஒரு நாவலாயிற்று "இந்துலேகா". இன்றைக்கும் அந்தப் படைப்பின் பெருமை தொடர்ந்து கொண்டுதானிருக்கிறது. ஆங்கிலம் தெரிந்து கொள்ள முடியாதவர்களுக்கு மட்டுமல்ல, உலக இலக்கியத் தொடர்பு பெரிதும் உள்ளவர்களுக்கும்கூட "இந்துலேகா" விருப்பமான நாவல்தான். அன்றாட வாழ்க்கையின் சூழலில் அமையும் சம்பவங்களைக்கொண்டு சுவையான கதை சொல்ல முடியுமென்று "இந்துலேகா" சான்று கூறு கிறது. பெண்களுக்குப் புதுமுறைக் கல்வியை அளித்தால் ஏற்படும் நன்மைகளை மீண்டும் மீண்டும் விளக்கியாயிற்று. மலையாள இலக்கியத் தரத்தை 1889-லான நிலைமையில் எடுத்துகாட்டுவதற்கு "இந்துலேகா"வுக்கும் அதைப் போன்ற பிற படைப்புகளுக்கும் முடிந்தது. இலக்கியத்தின் சமூகப் பயன்பாட்டை வெளிப்படுத்தும் வேறு பல நூல்கள்

"இந்துலேகா"வின் கவட்டைப் பின்பற்றி உருவாயின என்ற போதிலும் "இந்துலேகா"வின் பெருமித நிலைக்குப் பின்னடைவு எதுவும் நேரவில்லை.

1930-இல் முதல் பதிப்பை வெளியிட்ட எம்.பி.பால் எழுதிய "நாவல் இலக்கியம்" என்ற நூலில் 'இந்துலேகா' வின் இலட்சிய வெற்றி விளக்கப்பட்டிருக்கிறது:

> பாத்திரப்படைப்பிலும் கதைச் சம்பவங்களிலும் படைப்பாளியின் நோக்கம் புலனாகிறது. தனது சமுதாயத்தின் நடைமுறைப் போக்குகளை ஆராய்ந்து, நிந்தனைக்குரிய ஆசாரங்களைப் பரிகசிக்கும் முறையில் வேரோடுகளைவதும், வாழ்க்கை நடைமுறைகளை நெறிப்படுத்துவதும் தான் நோக்கம் என்பது தெளிவாகிறது. அதற்கு ஆங்கிலப் படிப்பு முறை தான் சிறந்த வழி என்று அவர் கதைப்பாத்திரங்கள் மூலமாகவும் நேரடியாகவும் வாசகர்களுக்கு அறிவுறுத்துகிறார். குற்றமற்ற மேற்கத்திய கல்வி முறைக்கான சரியான எடுத்துக்காட்டு இந்துலேகா பாத்திரம்தான். ஒரு பூனைக்குட்டியைப் போல நம்பூதிரிப்பாடுக்குப் பிடித்துக் கொடுக்கப்பட்ட கல்யாணிக்குட்டிக்கும், அந்த நம்பூதிரிப்பாடைத் திடமான தன்மான வெளிப்பாட்டினால் பேடியாக்கிய இந்துலேகாவுக்கும் இடையேயான வேறுபாடு சீரான கல்வி முறையின் பலன்தான் என்பதை ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியாது. பரம்பரையாக வந்துள்ள உறவுமுறைச் சம்பிரதாயங்களை மறுத்து ஒதுக்குவதற்கும், சுதந்திர உணர்வும் சமூகப் பற்றும் முளைவிடுவதற்கும், நம்பூரிதிமார்களின் சோம் பேறித்தனமான நாட்டாண்மைப் போக்கு நீங்குவதற்கும், மூடநம்பிக்கை அகற்றப் பட்டு உண்மை நடப்பைப் புரியச் செய்வதற்கும் அத்தகைய சாத்வீகமான நூல்களின் மொழி நடையும் கருத்துகளும் மட்டுமே நிகழ்கால நிலைமைக்குப் பயன்படும் என்பதாக இந்த நாவலின் பல பகுதிகள் அறை கூவல் விடுக்கின்றன. (நாவல் இலக்கியம், 1930; மறு பதிப்பு எஸ்.பி.டி.எஸ்., கோட்டயம், 1980; பக்கம் 184-5)

ஆங்கிலக் கல்வியின் பிரசாரத்திற்காக எழுதப்பட்ட ஒரு நேரடி எழுத்தாகவே 'இந்துலேகா"வை எண்ணுவதற்குத் தேவையான விஷயங்களையும் நாவலில் சந்து மேனோன் விரும்பியே வைத்திருக்கிறார். இந்துலேகா ஆங்கிலம் மட்டுமல்ல படித்தது—மலையாளமும் சமஸ்கிருதமும் ஆங்கிலத்தைவிட மிக நன்றாகவே அவளுக்குத் தெரிந்திருந்தன. மேலாதிக்க சக்தியின் ஆயுதமாக ஆங்கிலத்தை சந்துமேனோன் கருதியிருக்கவில்லை. ஆங்கிலம் படித்திராத செறுசேரிக்கு செயலாற்றும் திட்பம் தேவையான அளவுக்கு இருந்ததல்லவா! அது மட்டுமல்ல, ஆங்கிலத்தை நன்றாகவே படித்திருந்த மாதவன் இந்துலேகாவின் அளவுக்கு மனத்திண்மை கைவரப் பெற்றதாகத் தெரியவில்லை. பொய்வதந்தி கேட்டு பிரமை பிடித்து ஊரை விட்டுப் போகும் அளவுக்கு "சப்பாணி"யாக மாறுகிறான் அவன். கல்யாணிக்குட்டி நம்பூதிரிப்பாடுக்கு ஆட்பட்டுச் செல்வது ஆங்கிலம் படிக்காததனால் மட்டுமல்ல. இயல்பாய் அமைந்த அறிவுத்திறனும், யுக்தியும், மனஉறுதிப்பாடும் தாம் இந்துலேகாவின் சுபாவச் சிறப்புகள். ஏற்கெனவே இருந்த இந்த சுபாவம் ஆங்கிலக் கல்வியால் மேலும் சிறப்படைந்தது.

தான் வாழ்ந்த காலகட்டத்தையும் சமுதாய நிலையையும் பற்றிதான சந்துமேனோனின் அறிவைப் புலப்படுத்தும் ஒரு படைப்பு "இந்துலேகா". மலையாளத்தில் சமூக நாவல் பிரிவில் நிகரில்லாத படைப்பு. சமூகச் சூழ்நிலையை உணர்வூட்டத்துடன் விமர்சிப்பதற்கு ஏற்ப, பாத்திர இயல்புகளின் தனித்தன்மையையும் முரண்பாடுகளையும் சித்திரித்து சுவையான ஒரு கதையைச் சொல்ல சந்துமேனோன் முனைந்திருக்கிறார். 1847 ஜனவரி 9-இல் பிறந்த் அவர் தலைச்சேரியில் பி.இ.எம்.பி. பள்ளியில் படிப்பை முடித்த பின்னர் 1864-இல் கோர்ட் குமாஸ்தாவாக பணி ஏற்றார். மலபார் மான்யுவலை உருவாக்கிய லோகன் என்பவரின் கீழ் 1867-ல் குமாஸ்தாவாகப் பணி தொடர்ந்த அவர் 1871-ல் கலெக்டரேட்டில் தலைமை குமாஸ்தாவாகவும், 1874-இல் முன்சீப்பாகவும், 1892-இல் சப்ஜட்ஜாகவும் பணியாற்றினார். 1889-இல் "இந்துலேகா" நாவலை இரண்டு மாதங்களில் எழுதி

முடித்து டிசம்பரில் முதல் பதிப்பும், 1890 மே மாதத்தில் இரண்டாம் பதிப்பும் வெளியிடச் செய்த சந்துமேனோன் இரண்டாவது நாவலான "சாரதா"வை எழுதி முடிப்பதற்குள்ளாகவே 1899 செப்டம்பர் 7-இல் அமரரானார். எழுதிய நூல்களின் எண்ணிக்கையாலும் வண்ணத்தாலும் அல்லாமல், அவற்றின் மகத்துவத்தைக் கொண்டுதான், இலக்கியத்தன்மையும் சமூகப் பார்வையும் கொண்டுதான் சந்துமேனோன் மலையாளத்தில் எக்காலத் திலும் பெரிய நாவலாசிரியர்களில் ஒருவராக இன்றைக்கும் கருதப் படுகிறார்.

தென்மலபாரில் ஒரு நாயர் குடும்பத்தில் "இந்துலேகா" வின் கதை தொடங்குகிறது. மருமக்கத்தாய காலகட்டத்தில் கூட்டுக்குடும்பத்தின் தனித்தன்மைகளை—குழப்பங்களும் சச்சரவுகளும் பேதைமைகளும்— வெளிப் படுத்தும் வகையில் கதாபாத்திரங்களை 15 பிரிவுகளுக்குட் படுத்தி ஒரு பட்டியலை ட்யுமொர்க்குக்கு அனுப்பிய கடிதத்தில் சந்து மேனோன் கொடுக்கிறார்.

1. சங்ஙாழியோட்டு பூவள்ளிவீட்டுப் பஞ்சுமேனோன்
2. பஞ்சுமேனோனின் தம்பி சங்கரமேனோன்
3. பஞ்சுமேனோனின் மூத்த சகோதரியின் மகள் பார்வதியம்மா
4. பார்வதியம்மாவின் மகன் மாதவன் பி.ஏ.,பி.எல்.,
5. பஞ்சுமேனோனின் அம்மாவைப் பெற்ற பாட்டியின் சகோதரியின் பேத்தி கும்மினியம்மா
6. கும்மினியம்மாவின் மகன் சாத்தரமேனோன்
7. கும்மினியம்மாவின் மகன் கோபாலன்
8. கும்மினியம்மாவின் மகள் கல்யாணிக்குட்டி
9. கும்மினியம்மாவின் மகன் சின்னன் (9-10 வயதான பையன்)
10. பஞ்சுமேனோனின் மனைவி குஞ்ஞிக்குட்டியம்மா
11. பஞ்சுமேனோனின் மகள் லட்சுமிக்குட்டியம்மா
12. பஞ்சுமேனோனின் மகன் கோவிந்தன் குட்டி மேனோன்
13. லட்சுமிக்குட்டியம்மாவின் மகளும் பஞ்சுமேனோனின் பேத்தியுமான இந்துலேகா

14. இந்துலேகாவின் தந்தையான காலஞ்சென்ற கிளிமானூர் ராஜாவின் விதவையான லட்சுமிக்குட்டியம்மாவின் இரண்டாவது கணவனான கேசவன் நம்பூதிரி
15. மாதவனின் தந்தை கோவிந்தப்பணிக்கர்

('இந்துலேகா' ஆங்கில மொழிபெயர்ப்பு பக்.xvii-xviii)

குடும்ப உறவுகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள ஒரு சார்ட் கீழே தரப்படுகிறது.




மருமக்கத்தாயக் கூட்டுக்குடும்பத்தில் நிரந்தரமான சண்டைகளில் ஒன்றுதான் தாய்மாமனுக்கும் மருமகனுக்கும் இடையிலானது. சொந்த சகோதரியின் பேரனை ஆங்கிலம் படிக்க வைக்கத் தயங்காத பஞ்சுமேனோன் தாய்வழியில்

தொலைதூர உறவுக்கார சின்ன மருமகனைப் படிக்க வைக்கத் தீவிரமான எதிர்ப்பைக் காண்பிக்கிறார். காரண வர்களின் இந்தப் பஞ்சுமேனோன் மனோபாவம் பெரும் பாலான மருமக்கத்தாயக் குடும்பங்களில் குடும்பக் கலகங் களுக்கு வழிவகுத்திருக்கின்றன. இந்த் தாய்வழிப் பிணக்கு தான் மாதவனையும் இந்துலேகாவையும் பாதித்து துக்கத்தில் ஆழ்த்துகிறது. மாதவனுக்கு எதிரான சபதத்தை நிறை வேற்றுவதற்காகப் பஞ்சுமேனோன் சூரிநம்பூதிரிப்பாடை கதையரங்கத்திற்கு எதிர்கொண்டழைக்கிறார். அதிகக் குழப் பத்திலான பிரச்சனை எதிர்ப்பட்டதால் சின்னனுடைய படிப்பு முக்கியமல்லாத விஷயமாகி விடுகிறது. திடசித்தம் கொண்ட இந்துலேகாவின் காதல் தீவிரத்தை சஞ்சல மனம் கொண்ட மாதவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் சூரிநம்புதிரிப்பாடை மணந்துகொண்டாள் என்ற பொய்வதந்தியை நம்பி, உண்மையைத் தெரிந்து கொள்ள முயலாமல் ஊரைவிட்டுப் போகும் மாதவன், வட இந்தியப் பயணம் செய்தபோது தற்செயலாக எதிர்ப்படும் உறவினர்கள் மூலமாகத்தான் நடந்த விவரத்தை அறிந்து திரும்பி ஊருக்கு வந்து சேர்வதும், இந்துலேகாவைத் திருமணம் செய்து கொள்வதும். மொத்தத்திலுள்ள இருபது அத்தியாயங்களில் பாதியளவை சூரிநம்பூரிதிப்பாடின் மந்த புத்தியை வெளிப் படுத்தவே சந்துமேனோன் பயன்படுத்தி யிருக்கிறார். நாவலின் மொத்தப் பகுதியில் ஆறிலொன்றை எடுத்துக் கொள்ளும் பதினெட்டாம் அத்தியாயம் முழுவ தையும் ஒரு சர்ச்சைக்கென்று ஒதுக்கி வைத்திருக்கிறார்: நாத்திக வாதமும் இந்திய தேசிய காங்கிரசும்தான் அங்கே சர்ச்சைக் குரிய விஷயங்கள். கதையின் மேன்மைக்கு இந்தச் சர்ச்சை துணைபுரியவில்லை. சில மலையாளி நண்பர் களின் வேண்டுகோளினால்தான் இந்த அத்தியாயத்தை எழுதியதாகச் சந்துமேனோன் ட்யுமெர்க்குக்கு எழுதிய கடிதத்தில் கூறுகிறார். உயர்கல்வி கிடைத்தும் நெளிவு சுளிவும் மனத் திண்மையும் பெறாத மாதவன் தேசசஞ்சாரம் செய்து அயலூர்கள் சென்று துன்ப அனுபவங்கள் ஏற்பட்டு மீண்டு வருவதை நாம் காண்கிறோம். பஞ்சு மேனோனின் சபதத்தைத் தொடர்ந்து வருவதான கதைப்

பகுதி சாதா ரணமாக நாயர் குடும்பங்களில் நிகழ்வதுதான் என்பதாக ட்யுமெர்க்குக்கான கடிதத்தில் சந்துமேனோன் குறிப்பிட்டிருக்கிறார். பல்வேறான கதாபாத்திரங்களை நடத்திச் செல்ல உதவும் வகையில் கதைக்களத்தை மலபா ருக்கு வெளியேயும் கொண்டுபோக நேர்ந்தது என்றும் அவர் கூறுகிறார். உயர்குலத்தில் பிறந்தோரும், அவ்வா றல்லாத நாயன்மார்களும், பல்வேறு நிலைகளிலுள்ள நம்பூதிரிமார்களும், பட்டர்மார்களுமல்லாமல் உயர்ந்த நிலையிலான ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும் வட இந்தியர்களும் கதையரங்கில் வருகிறார்கள். கேரளத்தில் ஒரு கிராமத்தில் ஆரம்பிக்கும் இந்தக் குடும்பக் காதல்கதை ஒரு வகையில் சந்துமேனோனின் சமகால இந்தியா முழு வதையும் பிரதிபலிக்க முயல்கிறது என்று கூறலாம்.

நாவலில் ஈர்ப்புமையம் தலைப்புப் பாத்திரமான இந்து லேகாதான் என்பதில் ஐயமில்லை. இந்துலேகா இல்லாமல் மாதவனோ சூரிநம்பூதிரிப்பாடோ பஞ்சுமேனோனோ இயங்குவதற்கில்லை. இந்துலேகா சார்ந்த ஒரு ஜாதியின் வேறுபாடுகளினால் தான் பழைய வாழ்க்கை முறையின் சரடுகள் பின்னிப் பிணைந்திருக்கின்றன. உயர்குலத்தவரும் படித்துத் தேர்ந்தவருமான நாயர்ப் பெண்களின் க்ம்பீரத் தையும், தன்னம்பிக்கைப் போக்கையும், பேச்சிலும் பார்வையிலும் நடவடிக்கைகளிலும் உள்ள ஈர்ப்புத் தன்மையையும் பரிபூரணமாக வரவேற்று இணைத்துத்தான் சந்துமேனோன் தனது பிரியமான இந்து லேகா பாத்தி ரத்தை உருவாக்கியிருக்கிறார். கதாசிரியரின் வாழ்க்கைப் பார்வையைச் சிறப்பாகப் பிரதி பலிப்பது இந்துலோகா பாத்திரம்தான். செயல்திறம், நளினம், சமயோசித புத்தி, இலக்கிய அறிவு, வாக்கு வன்மை, தன்மானம், இளகிய மனம், அயலாரின் பாராட்டு என்பதான பல கிடைத்தற் கரிய பண்புகள் அவளிடம் ஒட்டு மொத்தமாகப் பொருந்தி யிருக்கின்றன. நாவலாசிரியரின் அன்புப் பெருக்கு மிகத் தெளிவானது. இந்துலேகாவைப் போலத் தற்சார்பும் சுயேச்சை இயல்பும் கொண்ட நாயர்ப் பெண்கள் அன்றைக்கும் எண்ணிக்கையில் குறைந்திருக்க வில்லை என்றும், இருபது ஆண்டுகள் கழித்து மலபாரில் நூற்றுக்

கணக்கில் இந்துலேகாக்கள் உருவாவார்கள் என்றும் சந்துமேனோன் குறிப்பிடுகிறார். இந்தியாவானாலும் இங்கிலாந்தானாலும் அன்புணர்வு எங்கும் ஒன்றுதான் என்பதை அவர் சுட்டிக் காட்டுகிறார். வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் தனிநபர் சம்பந்தப் பட்டதென்று சொன்ன போதிலும் இந்தக் கதையில் வரும் இந்துலேகா மாதவனின் முறைப் பெண்தான். ஆனால் காரணவரின் உசிதமற்ற தலையீட்டையும் நம்பூதிரி உறவையும் நிந்திக்கிற இந்துலேகா வருங்கால சமூக எழுச்சியின் சூசகமாக வளர்கிறாள். சந்துமேனோனின் சமகாலத்தவரான ஸி.வி. ராமன் பிள்ளை கடந்த காலத்தை நிலைக்களமாக்கி எழுதிய *மார்த்தாண்டவர்மாவில்* (1891) ஸுபத்ரு என்ற பாத்திரத்தின் மூலம் பொதுவிவகாரங்களில் பங்கெடுக்கும் பெண்மணியின் சித்திரத்தை அறிமுகப் படுத்துகிறார். கணவனின் தப்பெண்ணத்தினால் இழக்க நேர்ந்த தந்தையைக் கூட அறிந்துகொள்ள முடியாமல் வளர்ந்து நாட்டு நன்மைக்காக உயிர்த்தியாகம் செய்யும் ஸுபத்ரு ஒரு வழக்கமான ஏமாறும் நாயகி அல்ல. தப்பெண்ணத்தின் காரணமாக இந்துலேகாவின் காத லனும் விலகிப் போக நேர்கிறதல்லவா? இடர்ப்பாடான நிலையிலும் தன்னம்பிக்கையைக் கைவிடாத இத்தகைய பெண் பாத்திரங்களைச் சித்திரிப் பதன் மூலம் சந்து மேனோனும் ஸி.வி. ராமன்பிள்ளையும் புதிய பெண்மை இலட்சியங்களை மலையாளிகளின் முன்பாகக் கொண்டு வந்து நிறுத்துகிறார்கள்.

சமகால வாழ்க்கையை எதார்த்தமாகச் சித்தரிக்க சாதாரண நடைமுறை மொழியைத்தான் சந்துமேனோன் பயன்படுத்துகிறார். "இந்தப் புத்தகத்தை எழுதியிருப்பது நான் வீட்டில் சாதாரணமாகப் பேசும் மலையாள மொழி யில்தான். ஒரளவு கூடுதலான சமஸ்கிருத ஞானம் எனக்கு உண்டென்றாலும் பல சமஸ்கிருதச் சொற்களை மலையாளி களாகிய நாம் மலையாள மொழியில் பேசும் போது உப யோகிக்கும் மாதிரியில்தான் இந்தப் புத்தகத்தில் சாதாரண மாக நான் கையாண்டிருக்கிறேன்." (இந்துலேகா நூற் றாண்டுப் பதிப்பு—கோட்டயம் டி.ஸி.புக்ஸ்—1989; பக்.11)

பேச்சுவழக்கு மொழி மீதான பற்று, மொழியியலைச் சார்ந்த ஒன்று என்றெண்ணாமல், சமகால வாழ்க்கையில் சாமானிய மனிதர்களின் அன்றாட வாழ்க்கையைச் சார்ந்தது என்பதாகச் சந்துமேனோன் கருதுகிறார். அதற்கு மிகவும் பொருத்தமான மொழிநடை, வாழ்க்கையில் அந்தக் கதாபாத்திரங்கள் நித்தமும் உபயோகிக்கும் வகையில்தான் அமைந்திருக்க வேண்டும் அல்லவா? பிற்கால மலையாள நாவல் இலக்கியத்தின் மலர்ச்சியை ஆற்றலுடன் தன் வயப்படுத்தி இரண்டு இணைப்புகளையும்—சாமானிய வழக்குமொழி, சாதாரண வாழ்க்கை—"இந்துலேகா"வில் காண்கிறோம். அந்தப் படைப்பை மக்கள் ஏற்றுக் கொண்டதற்கான இரண்டு அடிப்படைக் காரணங்கள் இவையே. கதைப்போக்கின் எந்த சந்தர்ப்பத்திலும் சந்துமேனோனின் மொழிநடை அணுக முடியாததோ அன்னியத்தனமோ ஆன வரம்புகளுக்கு ஆட்பட்டதில்லை. மிகவும் பழக்கமான சுவையுணர்வுகளை உயர்வாகக் காட்ட அவரால் முடிந்தது அதனால்தான். ஏற்கெனவே பழக்கமான பாத்திரங்களைக் கொண்டு பழக்கமான வாழ்க்கைத் தளத்தை விளக்கி வாசகனை மகிழ்விக்க அவரால் முடிகிறது. படித்துத் தேர்ந்தவர்களின் வீட்டுச் சூழலில் உரையாடலுக்குத் தக்கதான நடையைக் கையாண்டு, சமகால சாமானிய வாழ்க்கைக் கனவுகளைச் சித்திரித்து என்றென்றைக்குமாக நிலைக்க வைக்க அவர் முயன்றிருக்கிறார். வாசகனைக் கதை கேட்க வந்த நண்பனாக—சகதர்மினியுடன் சரிநிகராகி—எண்ணுவதான ஒரு சரச சம்பாஷணை வித்தகராகச் சந்துமேனோனில் கதாசிரியரைக் காண்கிறோம். சூரிநம்பூதிரிப்பாடின் செலவில் இந்துலேகாவும் செறுசேரியும் காணும் வெற்றி சந்துமேனோன் கையாளும் மொழியின் ஒரு கெட்டிக்காரத்தனத்தினால்தான். "இந்துலேகாவுக்கு அதிலே பைத்தியமோ?" என்பதும் மற்ற பகுதிகளும் இயற்கையான நளினத்திற்குச் சான்றானவை. தன்னையறியாமலே அசடாகும் சூரிநம்பூதிரிப்பாடின் புத்திமந்தத்தை வெளிப்படுத்த செறுசேரியும் நல்லதொரு கருவியாகிறார். கறுத்தேடத்து கேசவன்நம்பூதிரி மற்றவர் தூண்டல் இல்லாமலே அசட்டுத்தனத்தை வெளிப்படுத்துகிறார். தப்பெண்ணமும்

விரகமும் வேதனையும் ஆக எல்லாமே கதையில் இடம் பெறுகின்றன. ஆனாலும் பொதுவாக ஒரு நளினமே கதை நெடுக அமைந்திருக்கிறது. வர்ணனை நிறைந்து பிற்பகுதிக் கதை நடப்பதாகக் கூறலாம். பகல் வெளிச்சத்தின் மொழியில் தான்—நேரடியாகத்தான்—கதை கூறப்படுகிறது. குரோதமும் சோகமும் பின்புல உணர்வுகளான போதிலும் சுவையுணர்வில் தூக்கலாகத் தெரிவது நகைச்சுவையே என்பதாகத் தோன்றுகிறது.

ட்யுமெர்க்குக்கான கடிதத்தில், "என்னுடைய நாட்டைச் சேர்ந்த பெண்களின் நிலையும் மதிப்பும் மெச்சப்படுவதற்கான ஆசையினால் மட்டுமே இதை எழுத நான் முனைந்தேன்" என்று சந்துமேனோன் கூறுகிறார். ('இந்துலேகா' ஆங்கில மொழிபெயர்ப்பு—பக்.xxv) இந்த நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பில் இருபதாம் அத்தியாயத்தில் "கதை இங்கே முடிவடைகிறது" என்று எழுதி முடித்துவிட்டு, இரண்டு பக்க அளவுக்குப் பெண்கல்வியின் அவசியத்தைப் பற்றி நூலாசிரியர் விரிவுரையாற்றுகிறார். முகவுரையில் கூறிய விஷயத்தை மீண்டும் நினைவுபடுத்திக் கூறுகிறார். தந்தையும் அன்பு காட்டிய தாய்மாமனும் இறந்த பின்னரும், தாத்தா கடுங்கோபம் கொள்ள நேர்ந்தும் வாழ்க்கையைத் தன்மானத்துடன் எதிர்கொள்ள இந்து லேகாவுக்கு முடிந்ததென்றால் அதற்கு அவளுடைய படிப்பு தான் காரணமென்று சந்துமேனோன் சுட்டிக்காட்டுகிறார். ஒரு பூனைக் குட்டியைப் போல கல்யாணிக்குட்டி சூரிநம்பூதிரிப்பாடுக்குப் பிடித்துக் கொடுக்கப்படும் காரியத்தைக் குறிப்பிட்டுக் காட்டி அவர் கேட்கிறார்: "என் அன்புக்குரிய நாட்டின் பெண்மணிகளே, இதில் உங்களுக்கு வெட்கமில்லை? உங்களில் சிலராவது சமஸ்கிருதம் படித்திருக்கிறீர்கள்; சிலர் சங்கீதமும்; ஆனால் இந்தத் தகுதிகள் மட்டுமே போதாது. உங்களுடைய உள்ளம் உண்மையில் எழுச்சி பெற வேண்டுமானால், நீங்கள் ஆங்கிலம் படிக்க வேண்டும். இந்தக் காலத்தில் நீங்கள் அறிந்திருக்க வேண்டிய பல விஷயங்களை அதன் மூலம் மட்டுமே உங்களால் அறிந்துகொள்ள முடியும். ஆண்களைப் போலவே படைக்கப்பட்டவர்கள்தாம் நீங்கள் என்றும்,

அவர்களைப் போலவே சுதந்திரமானவர்கள் நீங்கள் என்றும், பெண்கள் ஆண்களின் அடிமைகள் அல்ல வென்றும் அதன் மூலம் மட்டுமே நீங்கள் புரிந்துகொள்ள முடியும்." (பக்.368-9) ஆங்கிலம் படிப்பது ஆபத்தானது என்றால் அந்த ஆபத்தைத் தான் வரவேற்பதாகவும் அவர் குறிப்பிடுகிறார். இந்த இறுதிக் குறிப்புகளும் ட்யுமெர்க் குக்கான கடிதமும் மலையாளப் பதிப்புகளில் சாதாரண மாக இணைத்துக் காணப்படுவதில்லை என்பது கவனிக்கத் தக்கது.

ஜூன், 1993 டாக்டர் கெ. அய்யப்பப் பணிக்கர்

# 1

## தொடக்கம்

சாத்தரமேனோன்: என்னப்பா மாதவா இவ்வளவு வேகமா வார்த்தை பேசிட்டே? சீ, கொஞ்சம்கூட நல்லா இல்லே. அவர் மனசு போலச் செய்யட்டும். வீட்டுக்குப் பெரியவர் காரணவருக்கு நாம பணிஞ்சி போக வேண்டாமா? உன் பேச்சு கொஞ்சம் எல்லை மீறிடிச்சி.

மாதவன்: ஒண்ணும் மீறல்லே. யாரும் கோவிச்சுக்காதீங்க. அவருக்கு மனசில் லேன்னா செய்ய வேண்டாம். சின்னனை நான் என்னோட கூட்டிக் கிட்டுப் போறேன். அவனை நான் படிக்க வைக்கிறேன்.

கும்மினியம்மா: வேண்டாம்ப்பா, அவன் என்னைப் பிரிஞ்சி இருக்க மாட்டான். நீ சாத்தரையோ கோபாலனையோ கூட்டிப் போய்ப் படிக்க வை. என்ன வானாலும் உன்மேலே காரண வருக்குக் கோபம்தான். இதுக்கு முன்னாலே எங்க மேலே எரிஞ்சி விழுந்தாலும் இதுவரைக்கும் உன் மேலே அவருக்கு ரொம்ப நல்ல எண்ணம்தான்.

மாதவன்: சாத்தரன் அண்ணனையும் கோபால னையும் இனிமே போயி இங்கிலீஷ் படிப்பு படிக்கக் கூட்டிப் போகிறது வேடிக்கைதான்.

இப்படி அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது ஒரு வேலைக்காரன் வந்து, மாதவனைத் தாய்மாமன் சங்கர மேனோன் கூப்பிடுகிறார் என்று சொன்னான். உடனே மாதவன் தாய்மாமனின் அறைக்குச் சென்றான்.

இந்தக் கதை இதற்கு மேல் தொடர்வதற்கு முன்பு மாதவனுடைய நிலைமையைக் குறித்து இங்கே சிறிது குறிப்பிட நேர்கிறது.

மாதவனின் வயது, பஞ்சுமேனோனுடனான உறவு முறை, தேறிய பரீட்சைகளின் விவரம் ஆகியவற்றைப் பற்றி முன்னுரையில் கூறியிருக்கிறேன். இனி அவனைப் பற்றிக் கூற வேண்டியதைச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

மாதவன் அதிபுத்திசாலியும் அதிக அழகனுமான ஓர் இளைஞன். அவனுடைய புத்திசாலித்தனத்தின் சிறப்பை இங்கிலீஷ் படிப்பு தொடங்கியது முதல் பி.எல். தேறியது வரை ஸ்கூலில் அவனுக்கு சிலாகிக்கத் தக்க வகையில் தொடர்ந்து பெருமை தேடித் தந்த புகழ் தெளிவாகவும் முழு மையாகவும் வெளிப்படுத்தும். ஒரு தடவைகூட மாதவன் பரீட்சையில் வெற்றி பெறாமல் இருந்ததில்லை. எஃப்.ஏ., பி.ஏ. ஆகிய இரண்டிலும் முதல் வகுப்பில் தேறினான். பி.ஏ. பரீட்சையில் இரண்டாம் மொழிப்பாடம் சமஸ் கிருதமாயிருந்தது. சமஸ்கிருதத்தில் மாதவனுக்கு ஆழ்ந்த புலமை ஏற்பட்டது. பி.எல். தேர்வில் முதல் வகுப்பில் முதலா மவனாகத் தேறினான். இது தவிர ஸ்கூல் அளவில் பல வகைப் பரீட்சைகளில் வெற்றி பெற்றதனால் மாதவ னுக்குப் பல பரிசுகளும், படிப்பை மேலும் தொடர்வதற் கென அமைந்திருந்த பலவகை ஊக்கத்தொகைச் சலுகை களும் கிடைத்தன. பள்ளியில் மாதவனைப் படிப்பித்த எல்லா ஆசிரியர்களுக்கும் மாதவனுக்கு மேலான திற மையும் தகுதியும் பெற்ற அவர்களுடைய மாணவர்கள் எவரும் ஒருபோதும் இருந்ததில்லை என்ற கருத்து உருவாகி யிருந்தது.

இவ்வாறு சிறப்பாக அமைந்த அறிவுத்திறனுக்குப் புகலிடமாயிருக்க இணக்கமாகப் படைக்கப்பட்டதோ

மாதவனின் உடம்பு என்று அவனுடன் அறிமுகமாகும் எவருக்கும் தோன்றும். ஓர் ஆண்மகனின் குணச்சிறப்புக் களை விவரிக்கும்போது அவனுடைய உடலழகை வர்ணிப்பது சாதாரணமாக அநாவசியமாகும். அறிவு, திறமை, படிப்பு, ஆண்மை, அடக்கமான குணம் ஆகிய வற்றைப் பற்றிக் கூறினாலே போதும். இருந்தாலும் மாதவனின் தேகக்காந்தியைப் பற்றி இரண்டு எழுத்தாவது இங்கே சொல்லாமல் விடுவது இந்தக் கதையின் தன்மைக்குப் போதாது என்று ஒருவேளை என் வாசகர்கள் கருதுவார்களோ என்று நான் சந்தேகப்படுவதனால் சுருக்கமாகக் கூறுகிறேன்.

உடல் தங்க நிறம். உடம்பின் பராமரிப்புக்காக தினமும் கடைப்பிடித்து வந்த உடற்பயிற்சிகளினால் இந்த யௌவனப் பருவத்தில் மாதவனின் உடல் அதிமோகன மாயிருந்தது. தேவைக்கு மேல் கொஞ்சம்கூடத் தடித்து விடாமலும் கொஞ்சம் கூட மெலிந்த தோற்றம் கொண்டு விடாமலும் காணப்பட்ட மாதவனின் கைகள், மார்பு, கால்கள் ஆகியன தோற்றத்தில் பொன்னால் வார்க்கப் பட்டனவோ என்று எண்ணத் தோன்றும். ஆள் நல்ல உயரம். மாதவனின் உடம்பை அளந்து பார்க்க வேண்டு மானால் சுணக்கமில்லாமல் முழங்கால் வரை நீளமுள்ளதும் அதிகச் செழுமையுள்ளதுமான மாதவனின் தலைமுடி கொண்டு முட்டுவரை முறையாக அளந்து பார்க்கலாம். மாதவனின் முகத்தின் காந்தியும், ஆண்மை மிடுக்கும், ஒவ்வோர் அங்கத்திற்கும் தனித்தனியே அமைந்ததான சௌந்தர்யமும், அவற்றிடையேயான அன்னியோன்னி யமான பொருத்தமும், மொத்தத்தில் மாதவனின் முகமும் உடல் இயல்பும் சேர்த்துப் பார்க்கும் போதுள்ள ஒரு சோபையும் அதிசயிக்கத் தக்கனவாகவே சொல்லப்பட வேண்டும். மாதவனுக்கு அறிமுகமாகும் எல்லா ஐரோப் பியரும் பார்த்த மாத்திரத்திலேயே மாதவனிடம் அதிக ஈர்ப்பு ஏற்பட்டு மாதவனின் நண்பர்களாகிவிடுவார்கள்.

இவ்வாறு இந்த இளமைப் பருவத்தில் தன்னுடைய உடல்வாகும் புகழும் அதிமனோகரமானதென்று எல்லாரும் கருதுவது தனக்கு ஒரு பெரிய ஆபரணம்—அதை ஒருநாளும்

கெடுத்துக் கொள்ளக்கூடாது என்ற எண்ணம் கொண்டோ, இயல்பாகவே அமைந்த அறிவாற்றலினாலோ தெரிய வில்லை, சாதாரணமாகப் பதினெட்டு வயதிலிருந்து முறைப்படித் திருமணம் செய்துகொண்டு கிரகஸ்தாசிரமம் காண்பதற்கிடையில் துர்ப்பாக்கியவசமாகச் சில இளைஞர் களிடம் காணப்படுவது போன்ற கெட்ட நடத்தைகள் எதுவும் கொஞ்சம்கூட மாதவனிடம் இடம்பெறவில்லை என்பதை நான் நிச்சயமாகச் சொல்வேன். அதனால் இயற் கையாய் அமைந்த தேக காந்தியும் மிடுக்கும் ஆண்மையும் குறைவுபடாமல் முழுமையான இளைஞனாக மாதவன் தென்பட்டான்.

மாதவன் ஆங்கிலத்தில் அதிநிபுணனாக இருந்தான் என்பதை நான் தனியே சொல்ல வேண்டியதில்லை அல்லவா! லான் டென்னிஸ், கிரிக்கெட் முதலிய ஆங்கில ரீதியான விளையாட்டு விநோதங்களிலும் மாதவன் அதி நிபுணனாயிருந்தான். வேட்டையாடுவதில் சின்ன வயதி லிருந்தே பழக்கப்பட்டிருந்தான். இது அவனுடைய தந்தை யார் கோவிந்தப்பணிக்கரிடமிருந்து கைவரப்பெற்ற பழக்க மாயிருக்கலாம்—அவர் ஒரு பெரிய வேட்டைக்காரராக இருந்தார். வேட்டையிலிருந்த ஈடுபாடு மாதவனுக்கு ஒரு வெறியாக இருந்தது. இரண்டு மூன்று விதமான விசேஷத் துப்பாக்கிகள், இரண்டு மூன்று பிஸ்டல்கள், ரிவால்வர் ஆகியவற்றைத் தான் போகுமிடங்களுக் கெல்லாம் எடுத்துச் செல்லும் பழக்கம் ஏற்பட்டிருந்தது. தனது ஒய்வு நேரக் களி யாட்டங்கள் திசை திரும்பும் வரை வேட்டையில்தான் மாதவன் அதிகம் ஈடுபட்டிருந்தான்.

வேலைக்காரன் வந்து அழைத்ததன்படி மாதவன் தன் தாய்மாமன் அருகில் போய் நின்றான்.

சங்கரமேனோன்: மாதவா, இதெல்லாம் என்ன கதை! வயசான வீட்டுப் பெரியவங்களான காரணவர்கிட்ட அதென்ன மரியாதை இல்லாத வார்த்தைகளெல்லாம் நீ பேசறது? அவங்க உன்னை இங்கிலீஷ் படிப்பு படிக்க வச்சதோட பலனா இது?

எவ்வளவு பணம் உனக்காக அவங்க செலவு செஞ்சிருக்காங்க!

மாதவன்: தாய்மாமனும் இப்படி நினைக்கிறது துரதிருஷ்டம்தான்! விஷயத்தைச் சொல்றப்போ நான் அநியாயமா யாருக்காகவும் பயந்து சொல்லாமல் இருக்க முடியலே. எனக்கு அந்த மாதிரி வஞ்சனைகள் கிடையாது. பெரிய மாமன் உடலுழைச்சிச் சம்பாதிச் சதிலே ஒரு காசுகூட நான் செலவு செய்யக் கேட்டதில்லை. முன்னோர் கள் சம்பாதிச்சதும், நம்முடைய முன் னேற்றத்துக்கும் நல்லதுக்கும் வேண்டி அவருடை கைவசம் வச்சிருந்த பணத்தை நியாயமான தேவைகளுக்கு வேண்டி செலவிடலாமேன்னுதான் நான் சொன்னேன். கும்மினியம்மாவும் அவங்க பிள்ளைகளும் இங்கே வேலைக்காரங்க இல்லே. அவங்களை எதுக்காக பெரியமாமன் இப்படி இரக்கமில்லாமே ஒதுக்கி வச்சிருக் கிறது? அவங்க ரெண்டு பிள்ளை களுக்கும் இங்கிலீஷ் படிப்பு படிக்க வைக்கலே—கல்யாணிக்குட்டிக்கும் தேவையான படிப்பு கொடுக்கலே. இவர் செய்கிறது எவ்வளவு கஷ்டமாக இருக்கு! இப்படி வஞ்சகம் செய்ய லாமா? இனி அந்தச் சின்னனையும் காளங்கண்ணு மாதிரி வளர்க் கணும்னு நினைக்கிறாரு. இதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன்—நான் அவனைக் கூட்டிப்போய்ப் படிக்க வைக்கப் போறேன்.

சங்கரமேனோன்: படிப்பு, படிப்பு! நல்லாத்தான் இருக்கு! நீ எதுக்காகப் படிப்பிக்கணும்? மாசம்

அம்பது ரூபாய்தானே உனக்குத் தர்றாங்க? நீ எப்படிப் படிக்க வைப்பே? தாய்மாமனுக்குக் கோபம் வந்தா பல கெடுதல்கள் உண்டாகும். உடனே போயி காலிலே விழு.

"தாய்மாமனுக்குக் கோபம் வந்தா பல கெடுதல்கள் உண்டாகும்" என்று சொன்னதைக் கேட்டதும் இந்து லேகாவைப் பற்றித்தான் முதலில் மாதவன் நினைத்தான். அந்த நினைப்பு வந்ததும் மாதவனின் முகத்தில் பிரத்தி யட்சமான ஒரு மாற்றம் ஏற்பட்டது. ஆனாலும் அதை உடனே அடக்கிக் கொண்டான். அறையில் இங்கும் அங்கு மாக நடந்தபடி லேசான புன்முறுவலுடன் மாதவன் மீண்டும் பேசினான்.

மாதவன்: அவரை நான் என்ன கோபிக்க வச்சிட்டேன்? நியாயமான வார்த்தை பேசினால் அவர் எதுக்காகக் கோபிக் கணும்? அவருடைய நியாயமில்லாத கோபத்தினாலே எனக்கு பயமில்லே.

சங்கரமேனோன்: சீ! மரியாதைக் குறைவா பேசாதே.

மாதவன்: என்ன மரியாதைக் குறைவு? எனக்கு இந்த வார்த்தையோட அர்த்தம் புரியலே.

சங்கரமேனோன்: அப்படிப் புரியாததனாலேதான் கோளாறு. தம்பீ! நீ இங்கிலீசு படிச்சி கெட்டிக் காரனாயிட்டேன்னு நினைச்சி நம்முடைய சம்பிரதாயத் தையும் நடப்புமுறைகளையும் விட்டு டாதே. தம்பி, சாப்பாடு முடிச்சாச்சா?

மாதவன்: இல்லை. எனக்கு மனசிலே ரொம்ப வேதனையா இருக்கு. அம்மா பால் கஞ்சி எடுத்துக்கிட்டு வந்துக்கிட்டிருக் கிறாங்க.

அப்போது பார்வதியம்மா பால்கஞ்சி உள்ள வெள்ளிக்கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அறைக்குள் நுழைந்தாள்.

சங்கரமேனோன்: பார்வதீ கேட்டியா தம்பி சொன்னதையெல்லாம்?

பார்வதியம்மா: கேட்டேன். கொஞ்சம்கூட நல்லா இல்லே.

மாதவன்: பால்கஞ்சியை இங்கே கொடுங்க.

இரண்டு மடக்கு பால்கஞ்சியை நின்ற இடத்தில் நின்ற படியே குடித்துவிட்டு அம்மாவின் முகத்தைப் பார்த்துச் சிரித்தபடி கேட்டான்.

மாதவன்: அப்படீன்னா, அம்மாவுக்கும் என் மேலே கோபம்தானாக்கும்?

பார்வதியம்மா: பின்னே, அதிலென்ன சந்தேகம்? வீட்டுப் பெரியவருக்கும் மாமனுக்கும் பிடிக்காதது எனக்கும் பிடிக்காதுதான். போகட்டும், கஞ்சியைக் குடிச்சி முடி, பிறகு பேசிக்கிடலாம். நேரம் உச்சி வேளை ஆயிடிச்சி. குடுமி எதுக்காக எப்பவும் இப்படித் தொங்கிக்கிட்டிருக்கு? இங்கே வா; நான் கட்டி விடுறேன். குடுமி பாதியா கொட்டிப் போயிருக்கு.

மாதவன்: அம்மா, சின்னனுக்கு இங்கிலீஷ் படிக்க வைக்கிறது தேவையா இல்லையா? நீங்க சொல்லுங்க.

பார்வதியம்மா: அது உன் பெரியமாமன் தீர்மானிக்க வேண்டியதாச்சே, மகனே. எனக்கு என்ன தெரியும்? பெரியமாமன்தானே உன்னைப் படிக்க வச்சது; அவர்தானே அவனையும் படிக்க வைக்கிறதாயிருக்கணும்?

மாதவன்: பெரியமாமன் படிக்க வைக்க லேன்னா?

பார்வதியம்மா: படிக்க வேண்டாம்.

மாதவன்: அதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன்.

பார்வதியம்மா: கிண்ணத்தை இங்கே கொடு; நான் போகணும். சாப்பிடுறதுக்குச் சீக்கிரமா வந்திடு.

# 2

# இந்துலேகா

அழகிகளான கதாநாயகிகளை வர்ணிப்பதற்கான சாமர்த்தியம் கொஞ்சமும் எனக்கில்லை என்பதால் இந்த அத்தியாயம் எழுத வேண்டுமென்று நினைத்தபோது எனக்கேற்பட்ட பயம் எனக்கு நன்றாகவே தெரியும். ஆனாலும் தவிர்க்க முடியாததல்லவா! முடிந்தவரை சொல்லியே ஆக வேண்டும்.

இந்தக் கதை ஆரம்பிக்கும் காலத்தில் இந்துலேகாவுக்கு ஏறத்தாழப் பதினெட்டு வயதுப் பிராயம். அவளுடைய அழகைப் பற்றி அங்கம் அங்கமாக வர்ணிப்பதைவிட அதிக எளிமையானது ஒட்டுமொத்தத்தில் அவளுடைய தோற்றத்தின் பொலிவைக் குறித்து மட்டும் சிறிது சொல்வதாகும். அழகு என்பது இன்னதுதான் என்றும், இன்ன விதத்தில் உள்ளதால் என்றும் முன்கூட்டி மனதில் கிரகித்து உருவப்படுத்திக்கொள்ளத் தக்கதான ஒரு குணபதார்த்தமல்ல. பல நிலைகளாலும் பல வகையான கூட்டமைப்புகளாலும் ஓர் உருவத்துக்கு அழகு அமையும் எனலாம். கறுப்பு நிறம் சாதாரணமாக உடல் நிறத்துக்கு அழகு தருவதில்லை என்று சொல்கிறார்கள். ஆனால் சில சமயங்களில் கறுப்பு நிறம் வேறு சாதனங்களுடனான கலப்பினாலோ வேறு விதத்திலோ மிக்க பொலிவுடன் காணப்படுவதுண்டு. (இந்துலேகா கறுப்பு என்று எனது வாசகர்கள் இங்கே சந்தேகப்படக் கூடாது.) அவ்வாறே வெள்ளை நிறம் அல்லது தங்க நிறம் உடல் நிறத்திற்கு அழகூட்டுவதாகச் சாதாரணமாக நினைக்கிறோம். ஆனால் சில சமயங்களில் இந்த நிறமானாலும் கூட சில

உடம்புகளுக்கு அழகில்லாததாகத் தோன்றும். என்னுடைய அபிப்பிராயத்தில் அழகு என்பது பொலிவு பொதிந்த ஒரு சாதனம் என்பதுதான். பொலிவு எங்கே இருக்கிறதோ அங்கே அழகு இருப்பதாகக் கூறலாம். இந்திய நாட்டிலுள்ள சமஸ்கிருத இலக்கியங்களில் ஒரு பெண்ணின் அழகுக்கான வர்ணனையில் கூந்தலுக்குக் கறுப்பு நிறமும், கண்களுக்குக் கருங்குவளைத் தோற்றமும் அதிசிறப்பான சௌந்தரிய லட்சணங்களுக்கான முக்கியக் கூறுகளாகக் கூறப்பட்டிருக் கின்றன. ஆங்கிலக் கவிஞர்கள் ஒரு யுவதியின் சௌந்தரிய லட்சணங்களாக அவளுடைய தலைமுடியின் பொன்னிறத் தன்மையையும், கண்விழிகளுக்கு மங்கிய வெளுப்பு கலந்த இள நீல நிறத்தையும் (அல்லது கொச்சை மொழியில் நீங்கள் சொல்வது போல் சொன்னால் சரியான பூனைக்கண்) சிறப்பானவையாக வர்ணிக்கிறார்கள்.

இங்கே சமஸ்கிருதக் கவிஞர்களின், ஆங்கிலக் கவிஞர் களின் கோட்பாடுகள் இரண்டுமே சரிதானென்று பல சமயங்களில் எனக்குத் தோன்றியதுண்டு. கறுப்பு நிறத் திலான தலைமுடி எப்படி நம்முடைய பெண்மணிகளுக்கு அழகைத் தருகின்றதோ அதைப் போன்றே தங்க நிறமான தலைமுடி ஐரோப்பியப் பெண்மணிகளுக்கு மிகப் பொருத்தமானதாகவும் பாந்தமாகவும் என்னுடைய கண் களுக்குத் தென்படுகிறது. கண்விழிகளும் மேற்குறிப்பிட்ட நிறத்தில் அமைந்திருப்பது சில ஐரோப்பியப் பெண்களி டத்திலும் ஆண்களிடத்திலும் அதிக அழகும் உயிரூட்டமும் தருவதாகத் தோன்றுகிறது. மேற்குறிப்பிட்ட தலைமுடியும் கண்விழி களும் கொண்ட சில ஐரோப்பிய பெண்கள் என் மனதில் அழகிகளாகத் தென்பட்டதுண்டு.

பல அவயங்களின் பொருத்தங்களிலிருந்தும் நிறங்களி லிருந்தும் தோற்றப் பொலிவிலிருந்தும் சில தனிப்பட்ட தேகங்களைப் பார்க்கும்போது அழகாய் இருப்பதாகவோ இல்லாததாகவோ தோன்றலாம். எனவே சாதாரணமாக ஒரு பெண்ணுக்கு அழகு என்பது இன்னின்ன வகையில் அவயவங்களையும் நிறத்தையும் சார்ந்து அமைவது என்பதாக மனத்தளவில் முன்கூட்டியே வரையறுக்க முடியாத ஒரு சாதனமென்று நான் கருதுகிறேன்.

சில பெண்களை உச்சி முதல் உள்ளங்கால் வரை பார்த்தால் ஒவ்வோர் அவயவமும் தனித்தனியே குற்றம் சொல்ல முடியாதபடி அமைந்திருந்தாலும் ஒட்டுமொத் தத்தில் பார்க்கும்போது மனதைக் கொஞ்சம்கூட ஈர்க்கா திருக்க நேரலாம். சில பெண்களின் அவயவங்களைத் தனித்தனியாய் உற்றுப் பார்க்கும்போது மிகுந்த குறை பாடுள்ளவையாகத் தோன்றினாலும் ஒட்டுமொத்தத்தில் அவர்களைப் பார்த்தால் ஈடுபாடு ஏற்படும்.

எனவே ஒரு பெண்ணுக்கு அழகு இருக்கிறது, ஒரு பெண் அழகாக இருக்கிறாள் என்று நான் சொல்ல வேண்டுமானால் அவளுடைய அவயவங்கள் முதல் பார்வையிலும், பின்னர் சாவகாசமாய் உன்னிப்பாகப் பரிசீலித்துப் பார்த்தாலும் ஒரே மாதிரி அதிநளினமாக, மனோகரமாக இருக்க வேண்டும். ஒட்டுமொத்தமாக எல்லா அவயவங்களையும் ஒன்றாகச் சேர்த்துப் பார்த்தால் மேம் பட்டதான ஒரு பொலிவு தென்பட வேண்டும். பார்த்த மாத்திரத்திலேயே மனதை எப்படி ஈர்க்கிறதோ அதே போன்று எப்போதும் எவ்வளவு நேரமாகப் பார்த்துக் கொண்டிருந்தாலும் பார்த்தது போதாது என்பதான மோகத்தை மனதில் உண்டாக்கிக் கொண்டே இருக்க வேண்டும். அப்படியான பெண்ணைத் தான் நான் அழகி என்று சொல்வேன். இந்துலேகா அப்படிப்பட்ட பெண் களில் தலைமையானவளாக இருந்தாள்.

இந்துலேகாவின் உடம்பு நிறத்தைப் பற்றி நான் ஒன்று மட்டும் சொல்வேன். இடுப்பில் வழக்கமாக உடுக்கும் ஆடைத் துணியின் முடிவிலுள்ள தங்க ஜரிகைக்கரை நடுப் பகுதியிலுள்ள பட்டுடை போல மூடுதுணியாக இருப்பது ஜரிகைதான் என்று வேறுபடுத்தியறிய கையினால் தொட்டுப் பார்த்தால்தான் முடியும்; உடம்பின் நிறம் ஜரி கையின் தங்க நிறமாகையால் ஜரிகைக்கரை எங்கே முடி வடைகிறது, உடம்பு எங்கே தொடங்குகிறது என்று பார்த்த மாத்திரத்தில் சொல்ல ஒருவராலும் முடியாது. கூந்தலின் கருமையும் நீளமும் அடர்த்தியும் மென்மையும் அதி மனோகரமென்றே கூறப்பட வேண்டும். அதரங்கள், அந்தச் சிவந்த நிறத்தில், ஐரோப்பிய பெண்களில் அல்லாது

பிறரிடம் காணக் கிடைக்குமா என்பது சந்தேகம். கண் களின் நீட்சியும், நிற வகைப்பாடும், அவற்றில் மிளிரும் உயிர்ப்பும், அவற்றினின்றும் சில சமயங்களில் வெளிப் படும் ஒவ்வொரு கடைக்கண் பார்வையும் இளைஞர்களின் நெஞ்சில் பாய்ச்சும் நெருப்பின் தீட்சண்யமும் பார்த்து அனுபவப்பட்டவர்களால்தான் தெரிந்துகொள்ள முடியும். இந்தப் பருவத்தில் ஸ்தனங்கள் கவர்ச்சித் திண்மையை எட்டிவிட்டன என்றுதான் கூற வேண்டும். வட்ட வடிவில் நிரந்தரமாகப் பொங்கி மிளிரும் அந்தத் தங்கக் குடங்களைப் பார்த்த பின் எந்த இளைஞனால் பொறுமையாக இருக்க முடியும்? இந்த அதிமனோகரியான இந்துலேகாவின் சௌந்தரியத்தை வர்ணிக்க யாரால் முடியும்?

இந்துலேகாவின் தங்கம் நிகர்த்த நிறமும், இள மொட்டுக்களைப் போன்ற பற்களும், பவளம் போலச் சிவந்த அதரங்களும், கருங்குவளை மலர்களுக்குப் பணி விடை செய்யும் கண்களும், செந்தாமரை மலர் போன்று பொலிவுள்ள அந்த முகமும், கருங்கூந்தலும், ஸ்தன பாரமும், ஒடிசலான இடையும் பிறவும் ஒட்டுமொத்தமாகப் பார்வைக்கு உட்படும்போது ஆண்களின் மனதில் உண்டாக்கும் ஆனந்தமும், சந்தோஷமும், ஏக்கமும், மயக்கமும், ஆற்றாமையும், நோவும் இன்ன வகைத்தானவை என்று சொல்லித் தெரிவிக்க என்னால் முடியாதென்று நான் தயக்கமின்றி இந்த இடத்தில் ஒப்புக்கொள்கிறேன்.

இந்த உருவ அமைப்புக்குத் தக்கதான படிப்பும் நல்லொழுக்கம் முதலான குணங்களும் அவளுக்கு அமைந் திருந்தன. இந்துலேகா கிளிமானூர் ராஜா ஒருவரின் மகளாவாள். இந்துலேகாவுக்கு இரண்டரை வயது ஆன போது ராஜா சொர்க்கலோகம் எய்தினார். அவளுக்கு ஏறத் தாழ மூன்று வயதானபோது அவளுடைய தாத்தா பஞ்சு மேனோனின் மூத்த மகனும், அவளுடைய தாய்மாமனும் ஆன கொச்சுகிருஷ்ணமேனோன் தான் உத்தியோகம் பார்த்துக்கொண்டிருந்த ஊருக்கு அவளை அழைத்துச் சென்று பதினாறு வயதுவரை வித்தியாப்பிசங்கள் செய்து வைத்தார். இங்கிலீஷ், சமஸ்கிருதம், சங்கீதம் முதலிய கலைகளில் அதிநிபுணனான கொச்சுகிருஷ்ணமேனோன்

திவான் பேஷ்கர் உத்தியோகத்தில் எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார். இந்துலேகாவை நல்ல படி இங்கிலீஷ் படிக்கச் செய்தார். சங்கீதத்தில் பல்லவி ராக விஸ்தாரம்வரை பாடவும் மற்றும் பியானோ, பிடில், வீணை ஆகியவற்றைச் சிறப்பாக வாசிக்கவும் பயிற்சி அளித்தார். மேலும், பொழுது போக்காக ஐரோப்பாவில் பெண்கள் கற்றுக் கொள்ளும் தையல், ஓவியம் முதலியவற்றிலும் தன்னுடைய அதிமனோகரியான மருமகளுக்கு அறிமுகம் செய்துவைத்தார். மேலை நாட்டில் ஓர் இங்கிலீஷ் மாது படிக்கத் தக்கதான படிப்பும் அறிவுகளும் சம்பிர தாயங்களும் இந்துலேகாவுக்கு ஏற்படுத்தித் தர வேண்டு மென்ற ஆர்வம் கொண்டு பெருந்தன்மையாளனும் அதிபுத்திசாலியும் ஆன கொச்சுகிருஷ்ணமேனோன் இந்து லேகாவின் பதினாறாம் வயதில் செய்ய முடிந்ததை யெல்லாம் செய்து முடித்தார் என்று தான் சொல்ல வேண்டும். ஆனால் அதிர்ஷ்டம் எந்த ஓர் இடத்திலும் பரி பூர்ணமாய் இருக்கிறது என்று சொல்ல முடியாதல்லவா! இந்துலேகாவின் பதினாறாவது வயது முடிவடைந்ததும், கொச்சுகிருஷ்ணமேனோனின் காலமும் முடிவடைந்தது. பின்னர் தாத்தாவுடனும் தாயுடனும் சேர்ந்து, தாத்தாவுக்குச் சொந்தமான பூவரங்கு என்ற மாளிகையில் வசிக்க நேர்ந்தது.

இந்துலேகாவின் இயல்பான குணங்களாலும், தன் னுடைய பேத்தி என்பதனாலும், தன் உயிருக்குயிரான மகனுக்கு இந்துலேகாவிடம் இருந்த பாசத்தை நினைத்தும் பஞ்சுமேனோனுக்கு இந்துலேகாவின் மீதான பற்று இன்ன வகைத்ததாக இருந்தது என்றும், எந்த அளவுக்கு இருந்தது என்றும் எனது வாசகர்களுக்குச் சொல்லிப் புரியவைப்பது என்பது எனக்குக் கடினம். இந்துலேகா தங்கியிருப்பதற் கென்று தனியான ஒரு பங்களா ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. அந்த பங்களாவில் எல்லா அறைகளிலும் இங்கிலீஷ் முறைக்கேற்ப சாமான்களும் பிறவும் அழகாக அடுக்கப்பட்டு இந்துலேகாவின் விருப்பப்படி வைக்கப் பட்டிருந்தன. கொச்சுகிருஷ்ணமேனோனின் அகால மரணத்தால் இந்துலேகாவுக்கு எதிலும் எந்த விதத்திலும்

மனக்குறை நேர்ந்துவிடக் கூடாது என்பதில் தாத்தா உறுதி யாக இருந்தார்.

இந்துலேகாவின் அன்றாட நடவடிக்கைகளும், சம்பிர தாயங்களும், சுபாவமும் அவளுக்குக் கிடைத்த படிப்பின் காரணமாகவும், தாய்மாமன் கொச்சுகிருஷ்ணமேனோ னின் புத்திசாலித்தனத்தைச் சார்ந்து அவளுக்குக் கிட்டிய அறிவுகள் காரணமாகவும் அதிரனணீயமாயிருந்தன என்றே சொல்ல வேண்டும். இங்கிலீஷ் படித்ததனால் தான் ஒரு மலையாளப் பெண் என்ற நிலையை அவள் சிறிதும் புறக்கணித்து விடவில்லை. இந்து மத துவேஷமோ, நாத்திகக் கருத்தோ, துரதிருஷ்டவசமாக சில சமயங்களில் சில படித்த இளவட்டங்களுக்கு உண்டாவது போலப் பிறரைத் துச்சமாக மதிக்கும் இளசகார உணர்வோ இந்துலேகாவை ஒருபோதும் அண்டியதில்லை. குளியல் நியமங்கள், உடுப்புகள், பேச்சு முறை—தன்னுடைய அம்மா, பாட்டி, தாத்தா, தாய்மாமன் ஆகியோர் மீதான பக்தி, விசுவாசம்—நாட்டுப்புறவாசிகளான, இங்கிலீஷ் படிக்காத தன்னுடைய தோழிமார்களுடனான நட்பு, இணக்கம்—குறிப்பாகச் சொல்லும் வார்த்தைகளிலும் செய்யும் காரியங் களிலும் பித்தியட்சமாய் வெளிப்படும் அடக்கமும் கர்வ மின்மையும் ஆக இவற்றையெல்லாம் பார்த்து இந்து லேகாவை அறிந்தவர்கள் எப்போதும் வியப்பதுண்டு. இப்படித்தான் குழந்தைகளை முறைப்படுத்தி வளர்க்க வேண்டும் என்று விவரமுள்ள எவரும் சொல்வார்கள். பெருமைக்குரியவரான அந்தக் கொச்சுகிருஷ்மேனோ னுக்குப் புகழ் சேர்க்கும் தளிர்க்கொடியாக இந்துலேகா அமைந்தாள்.

இந்துலேகா வழக்கமாக குறைந்த நகைகளையே அணிந்தாள். நகைகள் தாய்மாமன் கொச்சுகிருஷ்ண மேனோன் கொடுத்ததும், அம்மாவின் வகையில் தன் அப்பா கொடுத்துத் தனக்குக் கிட்டியதும், தாத்தா கொடுத்ததுமாகச் சேர்த்து ஏராளமாக இருந்தன. ஆனால் இந்துலேகா அந்த நகைகளில் அவ்வளவு நாட்டம் கொண்ட ஒரு பெண்ணாக இல்லை. விசேஷ நாட்களில் எல்லா நகை களையும் விசேஷவிதியாக - அணிய வேண்டுமென்றால்

அம்மாவின், பாட்டியின் அல்லது தாத்தாவின் வலுக் கட்டாயமான நிர்பந்தம் தேவைப்படும். காதில் கொத்தான தோடுகளும், கழுத்து மத்தியில் உருண்டையான தங்கச் சரட்டில் ஒரு சிறிய பதக்கமும், அதற்குக் கீழ் ஒரு பெரிய தங்கச் சரட்டில் விலை மதிப்புள்ள வைரமும் பச்சைக் கல்லும் சிவப்புக் கல்லும் கொண்டு வேலைப்பாடு செய்யப் பட்ட ஒரு பதக்கமும், கைகளில் தஞ்சாவூரில் தமிழ்நாட்டுச் சம்பிரதாயப்படி வடிவமைக்கப்பட்ட ஒவ்வொரு பூட்டு வளையலும், கைவிரல்களில் சில மோதிரங்களும் மட்டும் தான் வழக்கமாகப் போட்டுக் கொள்ளும் நகைகள். நகை களில் அவ்வளவு அதிகமான நாட்டம் இல்லையென்றாலும் இந்துலேகாவிக்கு ஆடைகள் மீது அதிக விருப்பமுண்டு. விசேஷ இழையாலான ஜரிகையுள்ள இடுப்புத் துணியும் மேல்முண்டும் தினமும் எப்போதும் வெளுப்பானதாக, குளிக்கும்போதும், சாயங்காலங்களில் முகம் கழுவிக் கொள்ளும்போதும் தயாராக இருக்க வேண்டும். மார்புப் பகுதிகள் வெண்மையான ஒரு ஜரிகை மேல்முண்டினால் எப்போதும் மறைத்தபடிதான் இருக்கும். இதுதான் வழக்கப் படியான உடுப்பு.

'இந்துலேகா' என்ற பெயர் இந்தக் கதையிலுள்ள மற்ற பெண்களின் பெயர்களுடன் ஒப்புநோக்கும்போது ஒரு வேளை சிறிது பொருத்தமில்லாமல் இருப்பதாக எனது வாசகர்கள் நினைக்கக்கூடும். இப்படிப் பெயரிட்டுக் கூப்பிடத் தொடங்கியது கொச்சுகிருஷ்ணமேனோன்தான். பிறந்தபோது குழந்தைக்கு வைத்த பெயர் மாதவி என்பது தாகும். ஆனால் குழந்தையின் அதிநளினமான உருவ அமைப்புக்கு ஏற்ப இந்துலேகா என்ற பெயர் சொல்லிக் கூப்பிட வேண்டுமென்று கொச்சுகிருஷ்ணமேனோன் தீர்மானித்து அவ்வாறே கூப்பிடத் தொடங்கினார். ஆனால் அவளை நம்முடைய இந்தக் கதை தொடங்கியபோது மாதவி என்று ஒரு நபர் மட்டுமே பெயர் சொல்லி அழைக்க நேர்ந்தது. அந்த நபர் மாதவன்தான். அழகனும் ரசிகனும் படிப்பாளியும் சாமர்த்தியசாலியும் பஞ்சுமேனோனின் மருமகனும் ஆன மாதவனும், இந்துலேகாவும் பரஸ்பரம் நட்புக் கொள்ளாதிருக்க இயலாது என்று நான் சொல்ல

வேண்டியதில்லை அல்லவா? இந்தக் கதை தொடங்கும் காலத்தில் இவர்கள் பரஸ்பரம் மனதுக்குள் அந்தரங்க விவாகம் முடித்துக் கொண்டார்கள் என்று தான் கூற வேண்டும்.

இயல்பாகவே இனிய பண்புகள் உள்ளவளான இந்து லேகாவின் ஆசைக்கோ விருப்பத்திற்கோ மாறாகப் பேச அந்த வீட்டில் யாருக்கும் சக்தி கிடையாது. இவளுடைய தற்சார்பும், ஏறார்ந்த நிலையும் அந்த விதமான இருந்தன. ஆனால் இந்துலேகாவின் நடவடிக்கையிலோ, இருப்பிலோ எவரும் ஒரு குறை சொல்லும்படியாக நேர்ந்ததில்லை.

இந்தக் கதை தொடங்கும் காலத்தில் இந்துலேகாவும் மாதவனும் பரஸ்பரம் மனதுக்குள்ளேயே அந்தரங்க விவாகம் செய்துகொண்டார்கள் என்று பொத்தாம் பொது வாகச் சொன்னால் போதுமா என்று நான் சந்தேகப் படுகிறேன். இவர்களுக்குப் பரஸ்பரம் காதல் உண்டா காமல் இருக்க முடியாதென்று எனது வாசகர்கள் ஊகித் திருக்கலாம். ஆனால் இந்த விஷயத்தை ஊகித்துக்கொள்ள விடுவதைவிட சுருக்கமாக வெளிப்படையாக இங்கே சொல்லிவிடுவதுதான் நல்லது என்று நான் நினைக்கிறேன். அதனால் சிறிது பூர்வகதாப் பிரசங்கம் செய்கிறேன்.

மரியாதைக்குரிய கொச்சுகிருஷ்ணமேனோன் இந்து லேகாவுக்கு வித்தியாப்பியாசம் முழுவதும் முடித்த பின்னர் இந்துலேகாவுக்குப் பொருத்தமான கணவனைத் தகுதியான வர்களிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற கருததைக் கொண்டிருந்தார். ஆனால் அந்த கனவான் இதைப் பற்றி அதிகமாக யாரிடத்திலும் எதுவும் பேசியதில்லை. பெண்ணுக்குப் பத்துப் பதினொன்று வயதானது முதலாகப் பல தகுதியான நபர்களெல்லாம் இந்த விஷய மாகக் கொச்சுகிருஷ்ணமேனோன் பேஷ்காரின் மனதை அறிய முயன்றும் பலனில்லை.

அவர் இறப்பதற்குச் சில நாட்களுக்கு முன்பு அழைப் பின் பேரில் இந்துலேகாவுடன் அவள் அப்பாவைப் பார்க்க வந்திருந்த சமயம், ஒரு நாள் பஞ்சுமேனோன் அவரிடம், "இந்துலேகாவுக்கு வயசு பதினைஞ்சிக்கு மேலே ஆயிடிச்சில்ல; நல்ல ஒரு சம்பந்தம் செய்ய வேணாமா?"

என்று கேட்டதற்கு மறுமொழியாக, இந்துலேகாவின் படிப்பு முழுவதும் முடியவில்லையென்றும், அது முடிந்த பிறகுதான் அந்த ஆலோசனை செய்ய வேண்டியது அவசியம் என்றும், வித்தியாப்பியாசம் செய்து முடித்து இந்துலேகாவைத் தகுதியுள்ளவளாக்கி முடிக்க வேண்டிய பாரம் தனக்குள்ளது என்றும், அந்தத் தகுதி அவளுக்கு ஏற்பட்டுவிட்டால் இந்துலேகாவே பின்னர் தனக்கு வேண்டியதையெல்லாம் தன் விருப்பப்படி நடத்திக் கொள்வாள் என்றும் கொச்சுகிருஷ்ணமேனோன் சொல்லி யிருந்தார். வயோதிகரான பஞ்சுமேனோன் இந்த பதிலை நல்லபடி புரிந்துகொள்ளவோ, அவ்வளவாக விரும்பவோ இல்லையென்றாலும் மகனிடம் மேலும் இதைக் குறித்து எதுவும் கேட்டுக் கொண்டதே இல்லை.

இந்துலேகா கொச்சுகிருஷ்ணமேனோனுடன் இருந்த காலத்திலும் மாதவனை அவ்வப்போது பார்த்துக்கொண்ட துண்டு. கொச்சுகிருஷ்ணமேனோனுக்கு மாதவனை மிகவும் பிடித்திருந்தது. மாதவன் அதிபுத்திசாலியான பைய னென்று பல சமயங்களில் பலரிடத்தில் அவர் பேச்சு வாக்கில் சொன்னதை இந்துலேகாவும் கேட்டிருக்கிறாள். ஆனால் அதைவிட அதிகமாக எதுவும் மாதவனைக் குறித்து அவர் பேசிக் கேட்டதில்லை. அவருடைய மனதில் மாதவன் இந்துலேகாவுக்குத் தகுதியானவன்தானென்று நிச்சயித் திருந்தாரா இல்லையா என்று யாருக்கும் திட்டவட்டமாகத் தெரியவில்லை.

கொச்சுகிருஷ்ணனமேனோனின் மரணத்திற்குப் பின்னர் பூவரங்கில் இருக்கத் தொடங்கியது முதல் இந்து லேகாவும் மாதவனும் தங்களுக்குள் மிகவும் நட்புறவாக இருந்தார்கள். மாதவன் மதராசிலிருந்து வீட்டுக்கு வரும் சமயங்களில் எப்போதும் இருவரும் பேசிக் களித்தும் சிரித்தும் பொழுதைப் போக்குவார்கள். இவ்வாறு சில நாட்கள் கழிந்த போது இந்துலேகாவுக்கும் மாதவனுக்கும் இடையே பரஸ்பரம் காதல் மலர்ந்தது. ஆனால் இதை ஒருவர்க்கொருவர் சிறிதுகூட வெளிப்படுத்திக் கொள்ள வில்லை. இந்துலேகா அப்போது அதை வெளிப்படுத்தாதது மாதவனின் படிப்புக்கு அதனால் இடையூறு நேர்ந்துவிடக்

கூடாது என்ற எண்ணத்தினால் ஆகும். மாதவன் வெளிப் படுத்தாதது சற்றே வெட்கப்பட்டதனாலும், தனக்கு இந்தக் காரியம் நிறைவேறக் கஷ்டப்படுமென்று தயங்கிய தனாலும் ஆகும். அவ்வாறு எண்ணுவதற்கு மாதவனுக்கு நல்ல காரணம் இருந்தது. இந்துலேகா மலையாள நாட்டில் எங்கும் பிரசித்தி பெற்ற ஒரு பெண்மணியாக இருந்தாள். மகாராஜாக்கள் முதலாகப் பலரும் இந்தப் பெண் கிடைக்க வேண்டுமே என்று விரும்புகிறார்களென்று அவ்வப் போது பஞ்சுமேனோனுக்கு வரும் கடிதங்களாலும், பூவரங் கிலும் பிற இடங்களிலும் இதைப்பற்றி ஆட்களிடத்தில் இடம்பெறும் பேச்சுவார்த்தைகளினாலும் மாதவனுக்கு நன்றாகவே தெரியும். இவ்வாறிருக்க, அப்போது ஒரு பள்ளிக்கூடப்பையன் என்ற நிலையிலிருந்த தான் இதற்காக ஆசைப்படுவது வீண் என்று மாதவனுக்குச் சில சமயங் களில் தோன்றியதுண்டு. முதலில் ஏற்பட்ட எண்ணம் இவ்வாறுதான் என்றாலும் போகப் போக இந்துலேகா மீது மாதவனுக்கு காதல் வளர்ந்துகொண்டுதான் இருந்தது.மதரா ஸிலிருந்து வீட்டிற்கு வந்து தங்கும் காலங்களில் பகல் முழுவதும் இந்துலேகாவுடன்தான் இருப்பாள் என்று சொல்லலாம். பலவகையான புத்தகங்களைப் படித்துக் கொண்டும் பாட்டு, பியானோ, சதுரங்கம் முதலியன கொண்டு பொழுது போக்கியும் சாயங்காலம் பிரிய நேரும்போது ஒவ்வொரு நாளும் பகல் நேரம் மட்டும் போதாது என்று இருவருக்கும் தோன்றாமல் இருந்ததில்லை. இவ்வாறு சிறிது காலம் மதராசிலிருந்து மாதவன் வீட்டிற்கு வந்த சமயங்களில் எல்லாம் பரஸ்பரம் கேலி பேசியும் வம்பு செய்தும் பொழுதுபோக்கிக் கழித்தார்கள்.

இந்துலேகாவுக்கும் மாதவனுக்கும் இடையேயான, தொடர்பைக் குறித்தும், உருவத்தாலும் படிப்பாலும் அவர் களிடையே இவ்வாறு நட்பு வளர்ந்ததிலும் மிகச் சிலரைத் தவிர மற்ற எல்லோருக்கும் மகிழ்ச்சியாகவே இருந்தது. ஆனாலும் இந்துலேகா மாதவனுக்கு மனைவியாகக் கிடைப்பாளா என்ற ஒரு சந்தேகம் எல்லோருக்கும் உண்டு. மலையாள நாட்டின் நிலைமை புரிந்தவர்களுக்கு இந்த சந்தேகம் ஏற்படாதிருக்க வழியில்லை. திருவனந்தபுரத்துப்

பொன்னுத்தம்புரானுக்கு இந்துலேகாவை ஆசைக்கிழத்தியாக்கிக் கொண்டுபோகும் எண்ணம் உண்டென்று அந்தக் காலத்தில் பஞ்சுமேனோனின் வீட்டு முற்றத்திலேயே சிலர் பேசிக் கொண்டதுண்டு. அப்படியிருக்க மேலே குறிப்பிட்ட சந்தேகம் ஏற்பட்டதில் வியப்பில்லை அல்லவா!

நம்முடைய கதை தொடங்குவதற்கு சற்று முன்பு மாதவன் பி.எல். பரீட்சைக்குப் போனான்; பரீட்சை முடிந்ததும் வீட்டிற்குத் திரும்பி வந்தான். முன்னைப் போலவே இந்துலேகாவுடன் களித்தும் பொழுது போக்கியும் இருந்த போதிலும் காலப்போக்கில் மாதவனுக்கு இந்துலேகா மீதான காதல் அதிகரித்து அதிகரித்துத் தீவிரமடைந்தது; "எந்தப் பொன்னுத்தம்புரான்?", "எந்த ராஜா?", "என்னோட இந்துலேகா என்னோட மனைவிதான்", "அப்படி இல்லேன்னா அதுக்குப் பிறகு நான் உயிரோட இருக்கப் போறதில்லே" என்று மனதில் அலைக்கழிப்புகளுக்குப் பின் உறுதியானான். அப்போது இந்துலேகாவின் எண்ணம் என்னவென்று அறிந்துகொள்ள மாதவனுக்கு ஆர்வம் ஏற்பட்டது. இந்துலேகாவுக்கு மாதவனிடம் அப்படி இப்படி என்றில்லாது தீவிரமான காதல் ஏற்பட்டிருந்தது என்ற போதிலும், இந்துலேகா மாதவனிடம் இதைக் குறித்து எந்த ஜாடையும் காண்பித்துக் கொள்ளவில்லை. விளையாட்டு, சிரிப்பு, பாட்டு முதலியன மூலமாகவோ, இந்துலேகாவின் நடவடிக்கைகளிலிருந்தோ அதிகமாக எதையும் மாதவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. மாதவன் ஒளிவு மறைவு இல்லாத பையன் என்பதால் அவனுடைய மனத்தின் போக்குகள் இதற்கிடையே சிறிது வெளிப்படையாகத் தெரியத் தொடங்கின. அதனால் இந்துலேகா சிறிதும் கோபமோ பிணக்கோ கொள்ளவில்லை. ஆனாலும் தன்னுடைய காதல் ஈடுபாட்டை மாதவனிடமிருந்து ஒளித்து வைத்திருந்தாள்.

அவ்வாறிருக்கும்போது ஒரு நாள் மாதவனும் இந்துலேகாவும் சதுரங்க விளையாட்டில் இருந்தபோது தான் நகர்த்த வேண்டிய காயைக் கையில் எடுத்துக்கொண்டு மாதவன் இந்துலேகாவின் முகத்தை வெறித்துப் பார்த்தபடி விளையாடாமல் இருந்தான்.

இந்துலேகா: ஏன் விளையாடலே, விளையாட வேண்டாமா?

மாதவன்: விளையாடுறதுக்கு எனக்கு இன்னிக்கு அவ்வளவா பிடித்தம் இல்லே.

இந்துலேகா: இன்னிக்கு விளையாட்டு சலிப்பா இருக்காக்கும். பரீட்சை முடிவு தெரியா. ததனாலே ஏற்பட்ட மனச்சோர்வா இருக்கலாம். அதைப்பத்தி இப்போ நினைச்சி ஒண்ணும் ஆகப் போற தில்லே. மனசிலே சும்மா அலட்டிக் காதீங்க.

மாதவன்: பரீட்சையைப் பத்தி நான் நினைக் கவே இல்லே. மனசிலே வேதனையை உண்டாக்கவும் உண்டாக்கமலிருக் கவும் காரணங்கள் இருக்கும்போதும், அந்தக் காரணங்களைத் தவிர்க்க முடியாதிருக்கும்போதும் ஒருத்தனுக்கு எப்படி மனசைக் கட்டுப்படுத்தி வச்சி ருக்க முடியும்?

இந்துலேகா: மனசைக் கட்டுப்படுத்தி வைக்கணும். அதுதான் ஒரு ஆம்பிளைக்கு அழகு.

மாதவன்: பொம்பளைக்கு அழகு?

இந்துலேகா: ஒரு பொம்பளை இப்போ மனசு சரியில்லேன்னு, விளையாடப் பிடிக்க லேன்னு சொல்லலே. நீங்கதானே விளையாடறதுக்கு இன்னிக்கு அவ் வளவா பிடிக்கலேன்னு சொன்னது?

மாதவன்: அப்படீன்னா, நீ மனசைக் கட்டுப் படுத்தி வச்சிருக்கலாம்.

இந்துலேகா: நான் அதை சோதிச்சிப் பார்க்கலே. கட்டுப்படுத்த முடியாம இருந்தாத் தானே அந்தச் சோதனையெல்லாம் பண்ணணும்? கட்டுப்படுத்த முடிய லேன்னு இதுவரைக்கும் எனக்குத் தோணினது இல்லே, அப்படி ஏற்படுற

துக்கான விவகாரம் எதுவும் நடந்ததும் இல்லே.

மாதவன்: மனசிலே விரும்புறது , எல்லாமே நடந்துக்கிட்டிருக்கிறப்போ மனசிலே வேதனை உண்டாக வழியில்லே. உனக்கு அப்படி எல்லாமே நடந்துக் கிட்டிருக்கிறதனாலே மனசை சோதிச்சிப் பார்க்கிற அவசியம் ஏற்பட்டதில்லே.

இந்துலேகா: நடக்க முடியாததைப் பத்தி என் மனசு ஆசைப்படாது. இது என் மனசோட தன்னடக்கமான ஒரு குணம்னு தெரிஞ்சி நான் சந்தோஷப்படுறேன். அதனாலே நீங்க சொன்னது சரிதான். என்னோட மனசு ஈடுபடுற எதிலும் எனக்கு வருத்தப்பட சந்தர்ப்பம் ஏற் பட்டதில்லே.

மாதவன்: அப்படி எப்புவம் இருக்க முடியுமா? அப்படி ஒரு சந்தர்ப்பம் வந்தால்தானே அது மனசை அடக்கினதாக அர்த்தம்?

இந்துலேகா: இல்லே; மனசைக் கட்டுப்படுத்த ணும்னா அதுக்கு வேறே சில வழி முறைகளை உபயோகிக்கணும். தைரியம், பொறுமை முதலான வழி முறைகளை உபயோகிக்கணும் மனசைக் கட்டுப்படுத்த. ஆனால் அப்ப டியான எதையும் உபயோகிக்காமலே என்னோட மனசு தன் நிலையிலே நிற்க முடியும். அதனாலேதான் என் மனசோட ஸ்திர நிலை எனக்குப் பழக்கமாகிப்போன ஒரு குணம்னு நான் நினைக்கிறேன்.

மாதவன்: உடனுக்குடன் நிறைவேற முடியாத எந்தக் காரியத்திலும் உன்னோட மனசு இதுவரைக்கும் ஈடுபட்டதில்லைதானே?

இந்துலேகா: இல்லேன்னுதான் எனக்குத் தோணுது. ஆனால் உடனுக்குடன் நிறைவேற முடியாததுன்னு நீங்க சொன்னதோட அர்த்தம் எனக்குப் புரியலே. நடக்கறது, நடக்க முடியாதது பத்தி மட்டும்தான் நான் சொன்னேன்.

மாதவன்: நான் உதாரணம் சொல்றேன். இப்போ நீ அதிமனோகரமானதும் அதிபரிமளத்துடனும் இருக்கும் ஒரு பூவைப் பார்க்கிறே. அதைப் பார்க் கிறப்போ அந்தப் பூ கஷ்டப்படாமக் கிடைக்க முடியாதுன்னு தெரிஞ் சிருந்தும், அதை உடனே கையில் எடுத்து அதோட நறுமணத்தை அனுப விக்கணும்னு ஒரு எண்ணம் அல்லது ஆசை உனக்கு உண்டாகாதா? அது உடனுக்குடன் உண்டாகிற ஆசை தானே? அப்படி இல்லாமல் முடியுமா, முடியாதா, உடனே கிடைக்குமா, வெளியே சொல்ல முடிகிற விஷய மான்னு யோசிச்சி முடிச்ச பிறகுதான் பூவைப் பத்தின ஆசை உண்டாகுமா?

இந்துலேகா: அந்தப் பூ அழகும் மணமும் கொண்ட துன்னு பார்த்த மாத்திரத்திலேயே தெரிஞ்சிக்கிட்டா என்னோட மனசு அந்தப் பூவுக்காக ஆனந்தப்படும். அது பறிக்கிறதுக்குத் தக்கது, முடியக் கூடியதுதான்னு தெரிஞ்சிக்கிடுறதுக்கு முன்னாடி அதை எடுத்துக் கையில் வச்சிக்கணும்கிற ஆசை எனக்கு உண் டாகாது. அதுதான் என் மனசோட ஒரு தன்மைன்னு நான் கருதுறேன்.

மாதவன்: இப்போ நீ சொன்னதும் நான் முன் னாலே சொன்னதும் ஒண்ணுதான். "மனசு ஆனந்தப்படும்"னு சொன்ன

தோட அர்த்தம் உள்ளோட்டமா மன சிலே அதைப் பத்தி நாட்டம் உண் டாகும்னு மட்டுமில்லே, அப்படியான ஆனந்தத்திலே அதை அனுபவிக் கணும்கிற ஆசையும் உள்ளோட்டமா இருக்கும். அப்படீன்னா அந்த ஆசை நிறைவேறுமா நிறைவேறாதான்னு யோசிச்சி, அதை நிறைவேத்தறதுக்கு நீ முயற்சி எடுக்கணும். அதுதான் இப்போ சொன்னதோட தாத்பரி யம்னு எனக்குத் தோணுது. இது சரின்னா நீ ஆசையைக் கட்டுப் படுத் தறது மன உறுதியினாலேயும் பொறு மையினாலேயும் என்கிறது தெளி வாகுது.

இந்துலேகா: அப்படியில்லே நான் சொன்னது. உங்களுக்குப் புரியலே. முதலாவது, பூவைப் பத்தின உவமை சரியில்லே. இதைவிட நல்லதா நான் ஒரு உவமை சொல்லி உங்களுக்குப் புரிய வைக்கி றேன். நான் யௌவனம் அடைஞ்ச ஒரு பொண்ணு; நான் அழகான ஒரு வாலிபனைப் பார்க்கிறேன். அந்த வாலிபன் என்னோட கணவனா இருக்கத் தகுதியானவனான்னு என் மனசுக்குப் பிடிபடுறதுக்கு முன்னாடி அந்த ஆள்மேலே எனக்கு மனசு செல்லாது. இங்கே மனசிலே முதல்லே பிடிப்பை ஏற்படுத்திட்டு அதுக்குப் பின்னாலே நான் தைரியமா மனசை ஈடுபடுத்த முடியாது. என் மனசுக்கு முதல்லே பிடிப்பு ஏற்படாது. அதே மாதிரிதான் பண விஷயத்திலும்; நியா யமான முறையிலே சேர்த்துவச்ச பணமா இல்லேன்னா எனக்கு பிடிப்பு

ஏற்படாது. இதெல்லாம் சிலருக்கு மனசிலே இயல்பான குணமா அமைஞ் சிருக்கும். சிலருக்கு அப்படி இல்லே. மனசோட தர்மம்—கிடைக்கிறதிலும் கிடைக்காததிலும், தேவைப்பட்ட திலும் தேவைப்படாததிலும் ஒரே மாதிரி ஈடுபாடு கொள்ளும். சாமர்த் தியமும் தைரியமும் புத்தியும் இருக்கிற வங்களா இருந்தா அந்த மனசைக் கட்டுப்பாட்டிலே வச்சிருப்பாங்க. நீங்க நான் கடைசியிலே சொன்ன மாதிரி யான வகையிலே புத்திசாலித்தனம் உள்ளவர் என்கிறதனாலே நடக்கக் கூடாததோ நடக்க முடியாததோ ஆன எந்தக் காரியத்திலும மனசு போனா அந்த மனசை அடக்கி ஒடுக்க முடியும், அப்படி அடிக்கி ஒடுக்கற சக்தி ஏற்பட்டா மனசு கட்டுப் படும்.

மாதவன்: நீ சொல்றதை நான் மறுக்கலே. ஆனாலும் இந்த விஷயத்தைப் பத்தி நான் இனிமே வாக்குவாதம் பண்ண மாட்டேன். இப்போ எனக்கு முன்னே மாதிரி உன்னோட வாக்குவாதம் பண்ண மனசு சரியில்லே!

இந்துலேகா: முனைப்பா சதுரங்கம் ஆடக்கூட சுரத்தில்லாம இருக்கீங்கன்னு நான் நினைச்சேன். இப்போ என்கூடப் பேசக்கூடப் பிடிக்கலேன்னு கேட்டு ஆச்சரியமா இருக்கு!

மாதவன்: ஏன் இப்படியெல்லாம் பேசறே? நான் ஒரு மகா அதிர்ஷ்டக்கட்டைன்னு தோணுது—வீணா மனவேதனை ஏற் படுறது துரதிருஷ்டம்தானே?

இந்துலேகா: அந்த வேதனையைப் போக்குறதுக்கு சக்தி இல்லாமப் போறதுதான் துர திருஷ்டம்.

மாதவன்: அந்த வேதனையை எப்படிப் போக்குற துன்னு நீ சொல்லிக் கொடுத்தா ரொம்ப உபகாரமா இருக்கும்.

இந்துலேகா: வேதனை என்னன்னு தெரிஞ்சா அதைப் போக்குறதுக்கு வழி சொல் லலாம்.

என்று சொல்லிச் சிரித்தாள்.

இந்துலேகா: ஆடுங்க; உங்க குதிரையை நான் வெட்டப் போறேன். ஒரு கையிலே காயைப் பிடிச்சிக்கிட்டு சேகும்னு சொல்லி முகட்டைப் பார்த்தது போதும்; விளையாடுங்க, குதிரையைக் காப்பாத்த முடியுமா, சாமர்த்தியத்தைப் பார்த்திரலாம்.

மாதவன்: இரு, நான் இப்போ ஆடலே, ஆடுற மன நிலையிலே இல்லே. நான் இந்த சோபாவிலே கொஞ்சம் படுத்துக் கிடக்கறேன்.

என்று சொல்லி காயை மேஜைமீது வைத்துவிட்டு, மாதவன் சோபாவுக்குச் சென்று படுத்தான். இந்துலேகா சிரித்துக்கொண்டே அங்கிருந்து எழுந்து சென்று சாகுந் தலம் நாடகப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு ஒரு நாற்கா லியில் உட்கார்ந்து படிக்கத் தொடங்கினாள்.

மாதவன்: என்ன புஸ்தகம் அது,

இந்துலேகா: சாகுந்தலம்.

மாதவன்: எந்த இடத்திலே படிக்கிற?

இந்துலேகா: ஏன், உரக்கப் படிக்கணுமா?

மாதவன்: படியேன்.

இந்துலேகா: (ஒரு சுலோகத்தைப் படிக்கிறாள்)

“க்ஷாமக்ஷாமக போலமானனமுர-
காட்டின்யமுக்தஸ்தனா
மத்ய: க்லாந்தர: ப்ரகாமவினதா-
வம்ஸௌச்சவி: பாண்டுரா
சோக்யா ச ப்ரியதர்சனா சமதனு-

க்லிஷ்டெயமாலக்ஷ்யதெ
பத்ராணாமிவ சோஷனே மருதா-
ஸ்ப்ரஷ்டாலதாமாதவீ."

மாதவன்: அடடா! இப்படி ஒண்ணு பார்த்தால் என் வேதனை தீரும்.

இந்துலேகா: சகுந்தலையை எப்படி இனிமே பார்க்க முடியும்? சகுந்தலையை மனசிலே நல்லா நினைச்சிக்கிட்டு கண்ணை இறுக்க மூடிக்கிட்டு படுத்துக் கிடங்க; ஒருவேளை கனவிலேயாவது பார்க்கலாம்.

மாதவன்: நீ ரொம்ப அழகியானாலும் அறிவாளியானாலும் உன்னோட மனசு ரொம்பக் கடிசுன்னு நினைக்கிறேன்.

இந்துலேகா: ஆமாம், என் மனசு ரொம்பக் கடிசு தான்—இருக்கட்டும். சாகுந்தலத்திலே இன்னும் ஒரு சுலோகம் சொல்றேன்.

மாதவன்: எது?

இந்துலேகா: (மற்றொரு சுலோகம் படிக்கிறாள்)

"அனாக்ராதம் புஷ்பம் கிஸலயமலூனம் கரருஹை
ரனாவித்யம் ரத்னம் மதுநவமனாஸ்வாதிதரஸம்
அகண்டம் புண்யானாம் பலமிவ ச தத்ரூபமனகம்
ந ஜானெ போக்தாரம் கமிஹஸமுபஸ்தாஸ்யதி விதி:"

மாதவன்: அது நான் சொல்ல வேண்டிய சுலோகம் அல்லவா?

இந்துலேகா: சாகுந்தலத்திலே உள்ளதுதானே; யார் வேணுமானாலும் சொல்லலாம்.

மாதவன்: மனுஷனோட நினைப்பிலே ஒரு இளக்காரத்தைப் பத்தி யோசிக்கிறப்போ எனக்கு ஆச்சரியமா இருக்கு.

இந்துலேகா: அதென்ன?

மாதவன்: தன்னோட கூட்டாளிகள்கிட்ட கருணை காட்ட வேண்டியதுக்கு பதிலா கிண்டல் பண்ணினா அது

இளக்காரமில்லையா? போக்கிரித் தனமான இளக்காரமில்லையா?

இந்துலேகா: கிண்டல் பண்ணினா இளக்காரம் தான்.

மாதவன்: நீ கிண்டல் பண்ணலே?

இந்துலேகா: இங்கிலீஷ் புஸ்தகங்கள் ஏதாச்சும் படிக் கணுமா?—நான் எடுத்துத் தர்றேன்.

மாதவன்: எனக்கொண்ணும் படிக்க வேணாம்.

இந்துலேகா: அப்படீன்னா பர்த்ருஹரி படிங்க.

மாதவன்: எனக்கு எதுவும் படிக்க வேணாம், தயவுசெய்து என்னைக் கிண்டல் பண்ணாம இருந்தாப் போதும்.

இந்துலேகா: அப்படீன்னா நான் கொஞ்சம் வீணை வாசிக்கிறேன்; மனசிலே சோகம் இருந்தா அது தீர்த்து வைக்கும்.

மாதவன்: எனக்கு வீணை வாசிக்கிறதெல்லாம் கேட்கத் தேவையில்லே.

இந்துலேகா: அப்போ தூங்குங்க; சகுந்தலையையும் நினைச்சுக்குங்க; வேணுமின்னா இந்த நாடகப் புத்தகத்தைப் பக்கத்திலே வச்சிக்குங்க.

என்று சொல்லி இந்துலேகா புத்தகத்தை எடுத்துக் கொண்டு மாதவனுக்கு அருகில் சென்று, "புஸ்தகம் வேண்டாமா?" என்று கேட்டாள்.

மாதவன்: எதுக்காக இப்படிக் கிண்டல் பண்றே? இதிலே அப்படி என்ன ஒரு சுகம்?

இந்துலேகா: இது கிண்டலா?—எனக்குத் தெரியாது. ஆனால் என்னவானாலும் எனக்கு இப்படியெல்லாம் நடந்துக்கிடுறதும் பேசறதும் ரொம்ப சந்தோஷமாக்கும். நான் இப்படித்தான் ஏதாவது பேசிக் கிட்டிருப்பேன். பேசாம நீங்க இப்போ விளையாட வந்திடுறதுதான் நல்லது; குதிரையைக் காப்பாத்திகுங்க; எந்தி ரிங்க.

மாதவன்: எனக்குக் குதிரையோ யானையோ எதுவும் வேண்டாம்.
இந்துலேகா: சகுந்தலையை நினைச்சிப் படுத்துக் கிடந்தாப் போதும், அப்படித்தானே?
மாதவன்: அதேதான்—அது போதும்.
இந்துலேகா: அப்படியே இருக்கட்டும். ஆமாம், இப்போவெல்லாம் வேட்டைக்கே போகலியே? துப்பாக்கிகளும் வெடிகளும் ஆர்ப்பாட்டமும் எதுவுமே பார்க்க முடியலையே, என்ன சங்கதி?
மாதவன்: எனக்கு எதிலேயும் நாட்டமில்லே.
இந்துலேகா: ஏன்? புத்திக் கோளாறு ஏதாவது ஆரம்பிச்சிரிச்சா?
மாதவன்: ஒருவேளை அப்படி இருக்குமோன்னு தான் நினைக்கிறேன்.
இந்துலேகா: அப்படீன்னா அதுக்குத் தேவையான மாத்துவழி பார்க்க வேண்டாமா?
மாதவன்: பார்க்கணும்.
இந்துலேகா: அப்படீன்னா உங்க அப்பாகிட்ட உடனே சொல்லணும்; நான் சொல்லிடுறேன். எனக்கு டீ குடிக்கிற நேரம் வந்தாச்சி, உங்களுக்கும் டீ கொண்டு வரட்டுமா?
மாதவன்: எனக்கு டீ வேண்டாம்.
இந்துலேகா: பலகாரம் வேணுமா?
மாதவன்: வேண்டாம்.
இந்துலேகா: ஏன், வயித்திலே ஏதாவது கோளாறா?
மாதவன்: எல்லா இடத்திலேயும் கோளாறுதான்.
இந்துலேகா: அப்படீன்னா அது பொல்லாத வியாதியாச்சே!
மாதவன்: பொல்லாத வியாதிதான்னு தோணுது. ஒரு வேளை இதிலேருந்து சொஸ்த மடையறதுகூடக் கஷ்டம்தான். என் மனசு ஒருக்காலும் சமாதானம் அடையும்னு தோணலே. இந்துலேகா, இந்த

சோபாவிலே கொஞ்சம் உட்காரு. அது கூடக் கூடாதா?

இந்துலேகா: கூடவே கூடாது. நீங்க வாலிப வயசு வந்த ஒரு ஆம்பிளை. நானும் வயசுக்க வந்த ஒரு பொம்பிளை. முன்னாலே குழந்தைங்க விளையாடின மாதிரி இனிமே விளையாட முடியுமா?

மாதவன்: சோபாவிலே ஒண்ணா உட்கார்ந் திருக்கிறதிலே என்ன தப்பு?

இந்துலேகா: ரொம்பத் தப்பு. ஒண்ணா உட்கார்ந் திருக்க இப்போ நம்மாலே முடியாது.

மாதவன்: அப்படி முடிகிற காலம் இனிமே எப்போவாவது வருமான்னு தெரிஞ் சிக்கிடுறதுக்கும் வழியில்லே; அப்படித் தானே? என்ன செய்யலாம்!

இந்துலேகா: ஆமாம்; எதிர்காலத்திலே நடக்கப் போற காரியத்தைப் பத்தி உறுதியாச் சொல்ல யாருக்கும் முடியாதுதானே!

மாதவன்: (பெரிதாக ஒரு பெருமூச்சு விட்டு) யாருக்கும் சொல்ல முடியாது—சரிதான்.

இவ்வாறு பேசிக்கொண்டிருந்தபோது குட்டிப்பட்டர் தேநீரும் பலகாரங்களும் கொண்டு வந்தான். மாதவன் எழுந்து போனான். எதையும் நினைத்தபடி அன்று பேச முடியவில்லை.

மாதவன் மறுநாள் பொழுதைக் கழித்த விதத்தைப் பற்றிச் சொல்ல எனக்கு சங்கடமாக இருக்கிறது. இந்து லேகா எதைப் பற்றிப் பேசினாலும் மாதவன் மௌன விரதம் பூண்டான். சில சமயங்களில் இந்துலேகா, "என்ன வாம் மனசிலே ஒரு மௌட்டியம்?" என்று கேட்பாள். அதற்கு மாதவன் பதில் சொல்லத் தொடங்குவதற்கு முன்பு மற்றொன்றைக் கேட்பாள். ஒரு நாள் சாயங்காலம் இந்து லேகா முகம் கழுவிக் கொள்ள வெளியே போன நேரத்தில் மாதவன் இந்துலேகாவின் மாடி அறையில் இருந்தான். அங்கே கிடந்த துண்டுக் காகிதத்தை நிரப்பித் தனது மனப்போராட்டங்களை எல்லாம் எழுதி இந்துலேகாவின்

மேஜை மீது வைத்துவிட்டுப் போய்விட்டான். மாதவன் மறுநாள் காலையில் இந்துலேகாவின் மாடிக்கு வந்து, "நான் இங்கே ஒரு கடுதாசி எழுதி வச்சிருந்தேனே, அதைப் படிச்சியா?" என்று கேட்டான். அப்போது இந்துலேகா, "எனக்கு எதுவும் தெரியாதே" என்று சொல்லி மாதவனிடம் வேறே ஒரு விவரம் கேட்டாள். மாதவன் என்னதான் சங்கடப்பட்டாலும் இந்துலேகா அதைப் பொருட்படுத்திய தாகத் தெரியவில்லை. இந்துலேகா தன்னில் ஏற்பட்டிருந்த காதலை மறைத்து வைத்திருந்தாள்.

அவ்வாறு இருக்கும்போது ஒரு நாள் நிலவு நன்றாகக் காய்ந்து கொண்டிருந்த போது மாதவன் தனியே பூவரங்கு மாளிகையின் தெற்கே முற்றத்தில் சந்திரனைப் பார்த்தபடி நடைபோட்டுக் கொண்டிருந்தான். இந்துலேகா மாடியி லிருந்து ஜன்னல் வழியே பார்த்து மாதவனை நோக்கி "மாதவா! மாதவா!" என்று கூப்பிட்டாள்.

மாதவன்: என்ன?

இந்துலேகா: என்னவாம்—நிலா விடு தூதா? நிலா வெளிச்சம் மாடியிலே இந்த அறையி லேயும் நல்லா இருக்கு. இங்கே படி யேறி வர்றதிலே ஏதாச்சும் ஆட்சே பணை இருக்கா?

மாதவன்: நான் மாடிக்கு வரல்லே. ஒரு சோபா விலே சேர்ந்து உட்கார்ந்திருக்கிறது தப்பான காரியம்னா ராத்திரி நேரத் திலே ஒரே அறையிலே நாம ரெண்டு பேருமா இருக்கிறது தப்பில்லையா?

இந்துலேகா: ஆமாம்—அதுவும் சரிதான்; தப்பான காரியம்தான். அதை நினைச்சிப் பார்க்காமச் சொல்லிட்டேன். நான் இறங்கி முற்றத்திற்கு வர்றேன்.

மாதவன்: எனக்காக வேண்டி வர வேண்டாம்.

இந்துலேகா: எனக்காக வேண்டித்தான் வர்றேன்.

மாதவன்: அதிலே எனக்குத் தடையில்லே.

இந்துலேகா மாடியிலிருந்து இறங்கி முற்றத்தில் அதி மனோகரமான நிலவொளியில் மாதவனின் அருகே போய்

நின்றாள். கையில் அவளே அன்று சாயங்காலம் கட்டி முடித்த ஒரு முல்லைச் சரம் இருந்தது. அதிவெண்மையான நிலவொளியில் இந்துலேகாவின் முகத்தையும் அளகபாரத் தையும் மேனியையும் ஒட்டுமொத்தத்தில் பார்த்தபோது மாதவனுக்கு மனதில் ஒரு மயக்கம் உண்டாயிற்று. 'கடவுளே! இந்த அழகிக்கு என் மீது காதல் இருக்குமானால் என்னைப் போல அதிருஷ்டசாலி வேறு யார்? அப்படிக் காதல் இல்லையானால் நான் எப்படி உயிரோடு இருப்பது? மறுகணமே உயிர் விடுவதுதான் உத்தமம்' என்பதாக மாதவன் நினைக்கலானான்.

இந்துலேகா அப்போதைய சூழ்நிலையால் ஈர்க்கப் பட்ட போதிலும் அப்போதெழுந்த நினைவுகளால் நிலை தடுமாறிவிடவில்லை—வைராக்கியம் கொஞ்சம் கூடுத லாகவே இருந்தது. ஏனென்றால், இந்துலேகா தன்னுடைய எண்ணங்களை மனதுக்குள் அடக்கி வைத்திருந்ததனால் தான். மனதில் உண்டாகும் உணர்வுகளை வெளியே தெரியாமல் அடக்கி வைக்கவும், எளிதில் உணர்ச்சி வசப் படாமல் இருக்கவும் பழகிப் போனவள் அவள். துக்கத்தில் உரக்க அழுவது ஒரு வகையில் ஆறுதல் தந்து துக்கத்தைக் கட்டுப்படுத்தும். அவ்வாறே ஆனந்தத்திலும் ஹாஸ்ய ரசத்திலும் சிரிப்பதும் ஆகும். தன்னுடைய துக்கங்களைக் குறித்து ஒருவன் தன்னுடைய சிநேகிதனிடம் மனம் திறந்து வெளிப்படையாகப் பேசுவதனால் சிறிது ஆறுதல் ஏற்படும். கடும் துக்கம் உள்ளே இருப்பதை மூடி மறைத்து, வேறோர் உணர்வு இருப்பதாக நடிக்கும்போதுதான் பாய்ந் தோடும் தண்ணீரை நடுவில் அடைத்து நிறுத்தினால் ஏற்படுவது போல உள்ளுக்குள் அடிக்க முடியாதபடி வேகம் அதிகரிப்பதும், சில சமயங்களில் எதிர்பாராமல் வெளியில் பாய்ந்தோடுவதுமான அவலம் ஏற்படுகிறது.

முற்றத்திற்கு வந்து நிலவொளியில் பார்த்தபோது மாதவனின் அழகு முகத்தில் தெளிவாகத் தென்பட்ட வேதனையைக் காண நேர்ந்ததில் இந்துலேகாவுக்கு மனம் பொறுக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

நிலவொளி மனதைப் பெரிதும் கிளறுவது. அவ்வா றான நிலவொளியில் தன்மீது தன்னினும் தீவிரமான காதல்

கொண்டுள்ள அதியழகனான ஒரு வாலிபனைத் தன் அருகில் காணும்போது இந்துலேகாவுக்குத் தீவிர ஈர்ப்பு உண்டாயிற்று என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா!

இவ்வாறெல்லாம் இருந்தபோதும் தன்னுடைய புத்திசாலித்தனத்தாலும் பொறுமையாலும் தைரியத்தாலும் இந்துலேகா தனது மனச்சலனத்தை வெளியில் சிறிதும் காட்டிக் கொள்ளாமல்தான் நின்றிருந்தாள். சிறிது நேரம் இருவரும் ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ளாமல் நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பின்னர் இந்துலேகா கீழே குறிப்பிட்ட ஒரு சுலோகத்தைச் சொன்னாள்:

"ஸ்வைரம் கைரவவகோரகான் விதலய
ந்யூனாம் மன: கேதய
ன்னம்போஜானி நிமீலயன் ம்ருகத்ருசா
ம்மானம் ஸமுன்மூலயன்
ஜ்யோத்ஸ்நாம் கந்தளயன் திசோ தவளய
ன்னம்போதிமுத்வேலயன்
கோகாநாகுலயன் தம: கபளய
ந்நிந்துஸ்ஸமுஜ்ஜ்ரும்பதே."

மாதவன்: இந்த சுலோகத்தை எழுதிய ஆள் சந்திரனோட குணங்களைப் பத்தி எல்லாமே சரியாத் தெரிஞ்சவன்னு நான் நினைக்கலே.

இந்துலேகா: அதென்ன?

மாதவன்: "ம்ருகத்ருசாம் மானம் ஸமுன்மூலயன்" அப்படீன்னு சொன்ன குணம் சரியா இருக்கும்னா அதை இப்போ இங்கே பார்க்கணுமில்ல?

இந்துலேகா: (சிரித்துக் கொண்டு) அப்படீன்னா வேறே ஒரு சுலோகம் சொல்றேன்.

"யாம்னீகாம்னீ கர்ணகுண்டலம் சந்த்ரமண்டலம்
மாரநாராசநிர்மாணசாணசக்ரம்வோதிதம்."

மாதவன்: கொஞ்ச காலமா மாரன் தன்னோடி அம்புகளைப் பெண்கள் மேலே பிர யோகிக்கிறதில்லேன்னு தோணுது.

இந்துலேகா: பெண்கள் அப்பாவிங்களாச்சே— கோழைங்களாச்சே! காமதேவனுக்குக் கருணை உண்டாகி தேவையில் லேன்னு விட்டிருக்கலாம்.

மாதவன்: அப்படீன்னா அந்தக் காமதேவன் மகா துஷ்டன் என்கிறது மட்டுமில்லே, ஒரு அசடுன்னுதான் நான் சொல்லுவேன். பெண்களிடத்திலே கருணையினாலே பிரயோகிக்கிறதில்லேன்னா அப்போ ஆண்களிடத்திலே பிரயோகிக்கிறது மட்டும் எப்படி சாத்தியமாகும்? ஒரு பிரயோஜனமும் இல்லாம ஆண்களை உபத்திரவம் செய்யறது எதுக்காக?

இந்துலேகா: அது சரிதான்; அதாவது, ஆண்களை உபத்திரவப்படுத்தினா அவங்க திட மானவங்க என்கிறதனாலே தேவை வர்றப்போ அப்பாவிங்களான பெண் களை ஆண்கள் நேரடியா உபத்திரவப் படுத்துவாங்கன்னு நினைச்சித்தான் காமதேவன் இப்படிச் செய்கிறது. இதோ நான் ஒரு முல்லைச் சரம் கொண்டு வந்திருக்கனே். இது இன்னிக்கு நானே தொடுத்துக் கொண்டு வந்ததாக்கும், இதோட நடு நாயகமாக் கட்டியிருக்கிற இந்தச் சின்ன தாமரைப் பூவை நான் தான் இன்னிக்குக் காலையிலே பூவள்ளி மேற்குக் குளத்திலேருந்து பறிச்சேன். இந்த மாலையை உங்க குடுமியிலே வச்சா நல்லா அழகா இருக்கும். இந்தாங்க, எடுத்துக்குங்க.

மாதவன் முல்லைச் சரத்தைக் கையில் வாங்கிக் கொண்டான். வாங்கும்போது மாதவனின் கை நடுங்குவதாக இந்துலேகாவுக்குத் தோன்றியது.

இந்துலேகா: ஏன் கை நடுங்குது?

மாதவன்: காமதேவன் பாணமல்லவா? பயத்தினாலே ஏற்படுற நடுக்கம்தான்.

இந்துலேகா சிரித்தாள்.

மாதவன்: (தாமரைப் பூவைக் கையில் வைத்துப் பார்த்தபடி)

"சோபாஸர்வஸ்வமேஷாம் ப்ரதமமபஹ்ருதம்
யத்வயா லோசனாப்யாம்
மாத்வீமாதுர்யஸார: தவ களவசஸா
மார்த்தவம் த்வத் ப்ரதீகை:
ஸ்தானப்ரம்சோ மஹீயானபி ச விரசித:
த்வன்முகஸ்பர்த்தினாம் வை
பத்மானாம் பந்தனாத்வம் விரம வரதனோ
பிஷ்டபேஷேண கிம் ஸ்யாத்."

இந்துலேகா: பிரமாதமான சுலோகம்—எனக்கு இது படிக்கணும்.

மாதவன்: இந்த மாலையிலே ஒரு சின்னத் துணுக்கை நான் கிள்ளி எடுத்து குடுமியிலே வச்சிக்கிடுறேன். மீதி முழுசையும் உன்னோட கூந்தல்லே வைக்கிறதுதான் பொருத்தம்.

இந்துலேகா: பொருத்தம் எப்படி இருந்தாலும் இருக்கட்டும்—உங்க இஷ்டம் போலச் செய்யலாம்.

மாதவன்: இஷ்டம்போலச் செய்யச் சம்மதமா?

இந்துலேகா: மாலை சம்பந்தமா இஷ்டம்போலச் செய்துக்கிடலாம்.

மாதவன் மாலையைக் கிள்ளி ஒரு சிறிய துணுக்கைத் தன்னுடைய குடுமியில் வைத்துக் கொண்டான். மீதி முழுவதையும கையில் பிடித்தபடி இந்துலேகாவின் முகத்தை உற்று நோக்கினான்.

மாதவன்: இதை நானே உன்னோட கூந்தல்லே செருகி வைக்கட்டுமா?

இந்துலேகா: என்னோட கூந்தல்லேயா?

மாதவன்: ஆமாம்.

இந்துலேகா: உங்க கையாலேயா?

மாதவன்: ஆமாம்.

இந்துலேகா எதுவும் பேசாமல் புன்னகை புரிந்தபடி நின்றாள். மாதவன் பூமாலையை இந்துலேகாவின் கூந்தலில் அழகாகச் சூட்டினான். (சூட்டி முடிந்தவுடன்)

இந்துலேகா: இதெல்லாம் அக்கிரமம். நீங்க என் தாத்தாவோட மருமகன்னாலும், நாம பால்யம் முதல் அன்னியோன்னியமா விளையாடி வளர்ந்தவங்கன்னாலும் எப்பவும் நாம குழந்தைங்க இல் லேன்னு நினைப்பிருக்கணும்.

மாதவன்: இந்த மாலையை உன் கூந்தல்லே வச்சப்போ நான் குழந்தைன்னு கொஞ் சமும் நினைக்கலே—நல்ல வாலிபன் அப்படீன்னுதான் நினைச்சிக் கிட்டேன்.

இந்துலேகா: அந்த நினைப்பிலே நீங்க எப்படி என்னைத் தொடலாம்?

மாதவன்: தொட்டதைப் பார்த்தே இல்லே?

இந்துலேகா: அதைத்தான் அக்கிரமம்னு சொன் னேன்.

மாதவன்: (கண்களில் நீர் நிறைத்துக்கொண்டு) என்னை ஏன் இப்படித் தவிக்க வைக்கிறே? நீ இல்லாமல் அரை நிமிஷம் இந்த பூமியிலே இருக்க எனக்கு ஆசையில்லே.

இந்துலேகா: (மனதில் எழுந்த விசனத்தை பலவந்த மாக அடக்கிக்கொண்டு) என்னைப் பிரிஞ்சி இருக்கணும்னு யாரு சொன்னது?

மாதவன்: 'இல்லாம' என்கிற வார்த்தைக்கு நான்

எதிர்பார்த்த அர்த்தத்திலேதான் நீ என்னோட இப்போ பேசினதா?

இந்துலேகா: என்னவாம் நீங்க எதிர்பார்த்த அர்த்தம்?

மாதவன்: 'இல்லாம' என்கிறதுக்கு, இந்துலேகா வோட இரவும் பகலும் ஒரே மாதிரி பழகற சுதந்திரமும் அதிருஷ்டமும் இல்லாம—அப்படீன்னு அர்த்தம்.

இந்துலேகா: நேரமாயிடிச்சி. பனி விழ ஆரம்பிச் சிடிச்சி. போய்ப் படுத்துக்குங்க. நாளைக் காலையிலே டீ குடிக்க மாடிக்கு வாங்க.

மாதவன்: உடம்பும் மனசும் புண்பட்ட மாதிரி வேதனைப்படுற எனக்கு—படுத்துத் தூங்க எப்படி முடியும்?

இந்துலேகா: அதுக்கு புண்ணை சொஸ்தமாக்குற நல்ல மருந்து போட்டு சரியாக்கணும்.

மாதவன்: நான் அதுக்கு ஒரு மருந்து கண்டு பிடிச்சிருக்கேன்—ஒரு வைத்திய முறைப்படி, அந்த முறையைச் சொல் றேன். மருந்து தருவியா?

இந்துலேகா: என்ன வைத்திய முறை—சொல்லுங்க.

மாதவன்: "இந்தீவராக்ஷி தவதீக்ஷ்ண கடாக்ஷ பாண

பாதவ்ரணே த்விதமௌஷத மேவமன்யெ
ஏகம் த்வதீயமரராம்ருத பானமன்ய
துத்துங்கபீனகுசகுங்கும பங்கலேப:."

இந்துலேகா: சரி; நல்ல முறைதான். இந்த மருந்து எங்கே கிடைக்கும்?

மாதவன்: இந்துலேகாவோட கைவசமே இருக்கே.

இந்துலேகா: நான் இப்போ எடுத்து வர முடியாது. பனி அதிகமாயிடிச்சி. நான் போகணும். நீங்க போய்ப் படுத்துத்

தூங்குங்க—பைத்தியக்காரங்க மாதிரி ஆயிடக் கூடாது.

மாதவன்: ஆகட்டும், எனக்கு அந்த மருந்து எப்போவாவது கிடைக்குமா? கிடைக்கும்னு நீ ஒரு வார்த்தை சொன்னாப் போதும். அப்போ நான் ரொம்ப அதிருஷ்டசாலி ஆயிருவேன். என்னை இப்படித் தவிக்க விடாதே—அந்த வார்த்தையை மட்டும் ஒரு தரம் சொல்லக் கேட்கணும். அதுக்கு எனக்கு அதிருஷ்டம் இருக்கா?

இந்துலேகா: எனக்குத் தூக்கம் ரொம்ப வருது. இதோ நான் போறேன்.

என்று சொல்லி இந்துலேகா உடனே மாடி ஏறிப் போய்விட்டாள்.

இந்துலேகா சென்ற வழியைப் பார்த்து மாதவன் திகைத்துக் போய் மிகுந்த பரிதாபத்துடன் நின்றிருந்தான்.

இந்துலேகா மாடிக்குப் போயும் போகாததுமாக அறையைச் சென்றடைந்து ஜன்னல் வழியே மாதவன் முற்றத்திலிருந்து போகும்வரை மாதவனையே பார்த்தபடி நின்றிருந்தாள்.

இவ்வாறு மாதவனுக்கும் இந்துலேகாவுக்கும் இடையே பரஸ்பரம் நடந்த சல்லாபங்களைக் குறித்துச் சொல்ல வேண்டுமானால் நிறையச் சொல்ல வேண்டியிருக்கும். அதுவும் தவிர, குறிப்பாக இது ஒரு பூர்வ கதா பிரசங்கம் தானே! ஆனாலும் ஒரு நாள் இவர்களுக்கிடையே நிகழ்ந்த ஒரு சல்லாபத்தையும் எனது வாசகர்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்று எனக்கு ஓர் ஆசை உண்டானதால் சொல்கிறேன்.

இந்துலேகாவை இரவும் பகலும் நினைத்து நினைத்து மாதவனின் மனதில் ஒரு புகைச்சல் ஏற்பட்டது. ஒரு நாள் இரவு மாதவன் தூங்குவதற்காகப் படுத்தான்; என்ன செய்தும் தூக்கம் வரவில்லை. அப்படிப் படுத்திருக்கும் போது மாதவனுக்குத் தோன்றியது: 'எதற்காக இப்படி சங்கடப்படுவது? இந்துலேகாவுக்கு என்மீது காதல் இருந்தால்

இதற்கு முன்பு எப்போதோ எனக்கு மனைவியாகி யிருப்பாள். என்மீது அவளுக்கு சினேகம் இருக்கலாம்; காதல் இருக்கிறதா என்று இன்னமும் எனக்கு சந்தேகம் தான். என்னைவிட எவ்வளவோ பொருத்தமானவர்களும் செல்வந்தர்களும் இந்துலேகாவை விரும்புகிறார்கள் என்று அவளுக்கே தெரிந்திருப்பதனால் அவ்வாறு பொருத்தமான வர்களில் ஒருவனுடன் இணைந்து மனதைப் பரஸ்பரம் ஈர்த்து கணவன் மனைவியாக இருக்க வேண்டும் என்பதாக இருக்கும் அவளுடைய எண்ணம். பெண்களின் மனதை எப்படி அறிய முடியும்? எவ்வளவு தான் படிப்பிருந்தாலும் பெண்ணின் இயல்பு மாறுமா? பின் ஏன் நான் வீணாக வருத்தப்படுகிறேன்? இனிமேல் இந்துலேகாவைப் பற்றி நினைத்து இப்படி மனதில் தவிக்கப்போவதில்லை— நிச்சயம். காலையில் துப்பாக்கிகளை எடுத்துக் கொண்டு வேட்டைக்குப் போக வேண்டியதுதான். அப்பாவும் வரக் கூடும். ரொம்ப நாட்களாகிவிட்டன வேட்டைக்குப் போய். இந்த ஒரு மன வேதனையால் என்னுடைய ஆண்மைக் குணங்கள் எல்லாம் அழிந்து விட்டன. அப்படி விட்டுவிடக் கூடாது. நான் மதியீனனாக ஆனதனால்தான் இப்படிக் கிடந்து தவிக்கிறேன். நான் இளைஞன். இந்துலேகாவுக்குக் கணவன் அமைய வேண்டிய காலம் நெருங்கிவிட்டது. நான் ஒரு பெரிய உத்தி யோகஸ்தனாகவோ வேறு ஏதாவ தாகவோ ஆகும்வரை ஒருக்காலும் இந்துலேகாவுக்குக் கணவனாக வேண்டு மென்று நினைக்கப் போவதில்லை. அந்த ஆசை வீண். இனி நான் இப்படி என் மனதைத் துன் புறுத்திக்கொள்ள மாட்டேன்' என்று மனதுக்குள் நிச்ச யித்துக் கொண்டான்; மிகுந்த நிர்பந்தத்துடன் கண்களை மூடித் தூங்க வேண்டும் என்ற உறுதியுடன் படுத்தான். கண்ணை மூடிய நிமிஷமே இந்துலேகாவின் நெடிய கண்களும் செந்தாமரை போன்று பொலிவான முகமும் அளகபாரமும் அதரங்களும் எதிரில் நின்று தென்படுவது போல் தோன்றியது. கண் விழித்தான்; எதுவும் தென்பட வில்லை. மாதவன் எழுந்து உட்கார்ந்து மனதில் திடமாய் இருக்க வேண்டுமென்பதாக உறுதிப் படுத்திக் கொண்டு, 'இனி நான் இந்துலேகாவை நினைக்க மாட்டேன்' என்று

திட்டவட்டமாக முடிவு செய்தான். அப்போது தன்னுடைய அறை வாசலில் ஒரு பெண் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தான்.

மாதவன்: யாரது?

"நான்தான். பூவரங்கிலேருந்து ஒரு மாலை கொடுத் தனுப்பியிருக்காங்க" என்று சொல்லி இந்துலேகாவின் வேலைக்காரி அம்மு மாதவனின் அறைக்குள் வந்து தன் கையிலிருந்த ஒரு சண்பக மலர் மாலையை மாதவனின் கையில் கொடுத்தாள்.

மாதவன் மாலையை வாங்கிப் பார்த்தபடி நீண்டதாக ஒரு பெருமூச்சு விட்டான்.

அம்மு: நாளைக்குக் காலையிலே சாயா குடிக்க மாடிக்கு வரணும்னு சொல்லி அனுப் பிச்சாங்க. வராம இருக்கக் கூடா துன்னு திட்டவட்டமா சொல்லி யிருக்காங்க.

மாதவன்: நான் விடிஞ்சும் விடியாததுமா நாலு நாழிகை ஆறப்போ வேட்டைக்குப் போறேன். அப்பாவும் வருவாங்க. நாளைக்கு அஸ்தமிச்ச பிறகுதான் வரு வோம்னு சொல்லு.

அம்மு: அப்படியே சொல்லிவிடுறேன். ஆனால் விடிகாலையிலே பார்த் திட்டுப் போறது நல்லது. திருவாதிரைக் குளியல் உண்டு—அம்மா ஏழெட்டு நாழிகைக்கு வெளிச்சம் வந்த பிறகு எந்திரிச்சி குளத்து அறையிலே குளிக்கப் போகிறது வழக்கம்.

மாதவன்: ராத்திரி நேரத்திலே எனக்குப் பொண் ணுங்களை வந்து பார்க்கிறது முடி யாது. மறுநாள் காலையிலே பார்க்க லாம்னு சொல்லு.

அம்மு புன்னகை புரிந்தபடி "சொல்லிடுறேன்" என்று சொல்லி இந்துலேகாவின் மாடிக்குச் சென்று விவரம் சொன்னாள்.

இந்துலேகா மறுபடியும் வேலைக்காரியிடம் வேறொரு தகவல் சொல்லி மாதவனிடம் அனுப்பி வைத்தாள்.

அம்மு இரண்டாவது தடவை சென்றபோது மாதவன் மாலையைக் கையில் வைத்துப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான். அம்முவை மீண்டும் பார்த்தபோது எதற்காக மறுபடியும் வந்ததாகக் கேட்டான்.

அம்மு: அம்மா பிரமாதமா ஒரு தொப்பி பின்னிக்கிட்டிருக்காங்க. அதை வேட்டைக்குப் போறப்போ தலையிலே வச்சிக்கிட்டுப் போகச் சொன்னாங்க. அதிகாலையிலே மாடிக்கு ஏறி வர்றதுக்கு எஜமானுக்குப் பிடிக்கலேன்னா முற்றத்திலே ஜன்னலுக்கு நேரே நின்னா தொப்பியை எடுத்துத் தர்றதாக அம்மா சொல்லி அனுப்பிச்சாங்க.

மாதவன்: இப்பவே இங்கே கொடுத்தனுப்பியிருக்கலாமில்லே?

அம்மு: தொப்பி இன்னும் முழுசா முடியலே போலிருக்கு.

மாதவன்: என்னவாம், ராத்திரியிலே உட்கார்ந்து பின்னிக்கிட்டு இருக்கப் போறாளாமா?

அம்மு: ராத்திரியிலே இப்போவெல்லாம் பின்னல்வேலையும் புஸ்தகம் படிக்கிறதும் மத்ததும்தான்; தூக்கம் ரொம்பக் குறைஞ்சி போச்சி.

மாதவன்: அதுக்கு என்ன காரணம்?

"காரணம் என்னவா!" என்று சொல்லி அம்மு புன்னகை புரிந்தபடித் தலையைத் தாழ்த்தி வெட்கப்பட்டபடி நின்றாள்.

மாதவன்: சரி, இருக்கட்டும். நீ போய் வா. நான் காலையிலே போறப்போ ஜன்னல் திறந்திருந்தா கூப்பிடறேன்னு சொல்லு. ஜன்னல் திறந்திருக்கலேன்னா நேரா போயிடுறேன்.

அம்மு போனதும் மாதவன் மீண்டும் நினைவில் ஆழ்ந்தான்: 'இந்துலேகாவுக்கும் தூக்கம் இல்லை. என் மேலே இந்துலேகாவுக்குக் காதல் இருக்கு என்கிறதிலே சந்தேகம் இல்லை. எனக்குக் கொஞ்சம்கூட சந்தேகம் இல்லை. ஆனால் எதற்காக அதை வெளிக்காட்டாமல் இருக்கிறாள்? சின்னச் சின்னக் குறும்புகள் அல்லாமல் வேறே எதுவும் வெளியே காட்டிக் கொள்ளவில்லையே! இதற்கு என்ன காரணம்?' என்பதாக யோசித்துக் கொண்டு மாதவன் கட்டிலிலிருந்து எழுந்து காலையில் வேட்டைக்குப் போவதற்கான ஆயத்தங்களைச் செய்தான். முதல் தரமான துப்பாக்கி ஒன்றை எடுத்துத் துடைத்து வைத்தான்; தேவையான தோட்டாக்களை எடுத்து வைத்தான்; விடிகாலையில் நான்கு நாளிகைக்கு தேநீர் வேண்டுமென்று வேலைக் காரனைக் கூப்பிட்டு முன்கூட்டியே சொல்லி வைத்தான். நான்கு மணிக்கு எழுந்து குப்பாயம், காலுறை, பூட்ஸ் ஆகியவற்றை இட்டுக் கொண்டு, தன்னுடன் ஒரு வேலைக் காரனையும் அழைத்துக்கொண்டு வேட்டைக்குப் புறப் பட்டான். போகும் வழியில் இந்துலேகாவின் மாடிக்குக் கீழே நின்று மேலே பார்த்தபோது சந்திரன் உதித்து பொலிந்து நிற்பது போல இந்துலேகாவின் முகம் ஜன்னல் வழியாக மாடியில் இந்துலேகாவின் அருகில் எரிந்து கொண்டிருந்த அதிபிரகாதமான வெளிச்சத்தில் பார்த்து மாதவன் மயங்கிப் போனான்.

இந்துலேகா: என்ன இவ்வளவு சீக்கிரத்திலே கிளம்பிட்டீங்க? மிருகங்களை வேட்டையாடணும்னா மிருகங்களைக் கண்ணாலே பார்க்கவாவது வேண்டாமா? இருட்டிலே எப்படிப் பார்க்கிறது?

மாதவன்: கொஞ்ச தூரம் கடந்த பிறகுதான் வேட்டையைத் தொடங்கணும்.

இந்துலேகா: ஓகோ! பெரிய திட்டம் போட்ட வேட்டை போலிருக்கு.

மாதவன்: கொஞ்சம் தொலைவாப் போகணும்னு எண்ணம். அப்படிப் போனாத்தான் மனசு கொஞ்சமாவது நிம்மதியாகும்னு தோணுது.

இந்துலேகா: சரி; இந்தத் தடவை மதராசிலேருந்து வர்றப்போ எத்தனை துப்பாக்கிங்க கொண்டு வந்தீங்க?

மாதவன்: ஒண்ணு தான்—'ப்ரீச் லோடர்'.

இந்துலேகா: அதை நான் ஒரு தடவை பார்க்கணும். இங்கே கொடுத்தனுப்புங்க.

மாதவனின் வேலைக்காரன் உடனே துப்பாக்கியை மாடிக்கு எடுத்துச் சென்றான். இந்துலேகா அதை வாங்கி உள்ளே வைத்துவிட்டு, கதவைப்பூட்டிய பின் அம்முவை விளக்கை எடுத்துக்கொள்ளச் சொல்லியவாறு குளிப் பதற்காகக் கீழே இறங்கினாள். மாதவனுக்கும் அருகில் சென்றதும் சொன்னாள்:

இந்துலேகா: சரி; 'ப்ரீச் லோடர்' இப்போ மாடியிலே இருக்கட்டும். தொப்பி வேலை முழுசும் முடியலே. அதனாலே நாளையோ மறு நாளோ வேட்டைக்குப் போகலாம். நிம்மதியா இப்போ போய்ப் படுத்துத் தூங்குங்க.

மாதவன்: இது பெரிய சங்கடம்தான். நான் வேட்டைக்குப் போகக் கூடாதாக்கும்?

இந்துலேகா: ஆமாம்; இன்னிக்குப் போக வேண்டாம்தான்.

மாதவன்: அது ஏன்?

இந்துலேகா: தொப்பி வேலை முடியலே, அதனாலே தான்.

மாதவன்: தொப்பி வேணும்னு நான் சொன் னேனா?

இந்துலேகா: தொப்பி வேண்டாம்னு சொன்னீங் களா? நேத்து அம்மு வந்து சொன் னப்போ வேண்டாம்னு சொல்லியிருக் கலாமில்ல?

மாதவன்: வேண்டாம்னு நான் இப்போ சொல் றேன்.

இந்துலேகா: அது சரியில்லே. அதை நான் ஒத்துக்க மாட்டேன். நேத்து வேண்டாம்னு

சொல்லியிருந்தா நான் ராத்திரி தூக்கம் முழிச்சி பின்னிக்கிட்டு இருந்திருக்க மாட்டேன். என்னை இவ்வளவு தொந்திரவு பண்ணிட்டு இப்போ வேண்டாம்னு சொன்னா யாரு ஒத்துக்கிடுவாங்க?

மாதவன்: இந்தச் சின்னப்பிள்ளை விளையாட்டெல்லாம் எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கலே. மனுசனை சும்மா தொந்திரவு பண்ணி என்ன பிரயோஜனம்?

இந்துலேகா: நான் குழந்தைதான். மாதவனும் குழந்தைதான்னு இப்பவும் எனக்குத் தோணுது. அதனாலே முன்னாலே நாம விளையாடினது மாதிரி இப்பவும் விளையாடலாம்.

மாதவன்: நேத்துத்தானே நீ சொன்னே, சின்னப் பிள்ளை விளையாட்டெல்லாம் இனிமே கூடாதுன்னு.

இந்துலேகா: அப்போ அந்த சமயத்திலே நீங்க குழந்தை மாதிரித் தெரியலே.

என்று சொல்லிவிட்டு சிரித்துக் கொண்டே குளிக்கச் சென்றாள். மாதவன் விரக்தியடைந்து தோட்டத்தில் நடை போட்டான்.

குளித்து முடித்து இந்துலேகா திரும்பி வந்தபோது நேரம் புலர்ந்து நன்றாக வெளிச்சமாகியிருந்தது. மாதவனை மாடிக்குத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போனாள். தேநீர் குடிக்கும்படி கேட்டுக் கொண்டாள். தானும் தேநீர் குடித்தாள். மாதவன் வேண்டாமென்று மறுத்தான். ஆனால் இந்துலேகாவின் வற்புறுத்தலினால் சிறிது குடித்தான்; இருவரும் தனித்தனியே நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தார்கள்.

இந்துலேகா: இனிமே இன்னிக்கு வேட்டைக்குப் போகத் தேவை இல்லைதானே?

மாதவன்: உனக்குச் சின்னப்பிள்ளை விளையாட்டுத்தனம் மாறலேன்னா விளை

யாடுறதுக்கு வேறே ஆளைப் பாரு. இதெல்லாம் எனக்குச் சகிக்க முடியலே.

இந்துலேகா: எதைச் சகிக்க முடியலே—வேட்டையா?

மாதவன்: நான் வெளிப்படையாச் சொல்லணு மாக்கும்?

இந்துலேகா: சொல்லுங்க—அவ்வளவு வெளிப் படையாச் சொல்லணும்னில்லே. நீங்க நல்ல தைரியசாலின்னு நான் முன் னாலே நினைச்சிருந்தேன். உங்க ளோட இப்போதைய நடவடிக்கை களைப் பார்க்கிறப்போ என்னோட அபிப்ராயம் தப்புன்னு நான் இப்போ நினைக்கிறேன்.

மாதவன்: எனக்கு இந்த விஷயத்திலே தைரிய மில்லே. சாதாரணமா இந்த விஷயத் திலே அலைஞ்சி திரியற பயல்னு என்னைச் சந்தேகப்பட வேண்டாம். நான் இதுவரைக்கும் எந்தக் கெட்ட நட வடிக்கையுலேயும் கொஞ்சமும் தலை யிடாதவனாக்கும். எனக்குப் பெண்கள் மேலேயான சலனம் இந்துலேகாவைப் பார்க்கிறதுக்கு முன்னாலே ஏற் பட்டதே இல்லே. அதனாலேதான் இப்போ ஏற்பட்டிருக்கிற பிடிப்புக்கு இவ்வளவு அதிக சக்தி இருக்கு. இனியும் நீ என்னை விரக்தியடைய வைக்கணும்னா நான் இந்தத் திசை யிலேயே இருக்கிற எண்ணமில்லே.

இந்துலேகா: அப்போ வேறே ஊருக்குப் போயிட்டா இந்த எண்ணம் உண் டாகாது, அப்படித்தானே? அதோட அர்த்தம், ஆளைப் பார்த்தாத்தான் இந்தக் காதலும் மத்ததும் உண்டாகும் என்கிறதுதானே?

மாதவன்: அப்படியில்லே அதோட அர்த்தம். என் மனசுப்படி இந்துலேகாவோட இருக்க முடியலேன்னா இந்த நாடும் வீடும் எனக்கு வேண்டாம் என்கிறதுதான் நான் சொன்னதோட அர்த்தம்.

இந்துலேகா: சரி, இருக்கட்டும். உங்களுக்கு என் மேல் இவ்வளவு காதல் இருந்தும் எனக்கு உங்க மேலே கொஞ்சம்கூடக் காதல் இல்லேன்னு வச்சிக்குவோம், அதுக்குப் பிறகும் உங்களுக்கு என் மேலே பிரியம் இருக்குமா?

மாதவன்: என்மேலே உனக்குக் காதல் இல்லேன்னு நான் ஒருக்காலும் நினைக்கலே.

இந்துலேகா: பின்னே எதுக்கு இந்த தடுமாற்றம்?

மாதவன்: தடுமாற்றமா?

இந்துலேகா: ஆமாம், தடுமாற்றம்னுதான் சொல்லணும்.

மாதவன்: சொல்லலாம்தான். இந்தத் தடுமாற்றத்துக்குக் காரணம்—முதலாவது, நான் இன்னமும் ஒரு பெரிய நிலைமையிலே இல்லையென்னு நீ நினைச்சிக் கிட்டிருக்கிறது. இரண்டாவது, வேறே ரொம்பத் தகுதியான பணக்காரங்களும் பிரபுக்களும் மகாராஜாக்களும் உன்னை விரும்புறாங்க என்கிறது உனக்குத் தெரிஞ்சிருக்கிறது.

இந்துலேகா: நீங்க இவ்வளவு உதவாக்கரை சப்பாணின்னு நான் இதுவரைக்கும் நினைச்சதில்லே. என்னை விரும்புறவங்களிலும் மகாராஜாக்களிலும் எனக்கு எண்ணம் இருந்தா அவங்கள்ளே ஒருத்தரை இதுக்குள்ளே புருஷனாக்கிக்கிட்டிருப்பேனில்ல? இப்படிக் குறை சொன்னது ஆச்சரியம்தான்

எனக்கு இந்த விஷயத்திலே பணமும் புல்லும் சமம். என் மனசுக்குப் பிடிச்சவர்தான் எனக்குப் புருஷன்னு நான் தீர்மானிச்சிருக்கேன்.

மாதவன்: அப்படி ஒரு நாட்டம் இதுவரைக்கும் யார் மேலேயாவது ஏற்பட்டிருக்கா?

இந்துலேகா: இருந்தாலும் அதை சப்பாணிகிட்டே நான் இனிமே எதுக்காகச் சொல்லணும்?

மாதவன்: எதுக்காக என்னைத் திட்டுறே? இது தேவையா?

இந்துலேகா: போதும், போதும், ரொம்பக் கெட்டிக்காரர்தான் நீங்க. எனக்கு உங்க மேலே காதல்னு உங்களுக்குத் தெரிஞ்சது தான். ஆனாலும் மகாராஜாக்களும் பிரபுக்களும் என்னை விரும்புற தனாலே என்னோட காதலுக்கும் மனசுக்கும் விரோதமா அவங்களிலே யாரையாவது ஏத்துக்கிடுவேன்னு நினைக்கிறீங்க, அப்படித்தானே? கஷ்டம்! இவ்வளவு அறிவிலியா மாதவன்! கஷ்டம்! இவ்வளவு உருப்படியில்லாத ஒருத்தின்னு என்னை நினைச்சிருக்கீங்க, இல்லே? இப்படி நினைச்சிருந்தா என்மேலே எப்படி இவ்வளவு பிரியம் ஏற்பட்டது?

இந்த வார்த்தைகளைக் கேட்டபோது மாதவனுடைய கண்களில் நீர் நிறைந்தது. மகிழ்ச்சியினாலே பெருமையினாலா துக்கத்தினாலா இந்தக் கண்ணீர் சுரந்தது என்பதை எனது வாசகர்கள்தான் ஆலோசித்து நிச்சயப் படுத்திக் கொள்ள வேண்டும்.

இந்துலேகா: என்ன, பதில் சொல்லாம அழுறீங்க?

மாதவன்: பதில் இல்லாம இல்லே. எனக்கு எப்பவும் ஒவ்வொண்ணாச் சொல்லித் தர்க்கம் பண்ணிக்கிட்டிருக்க முடியாது.

இந்துலேகா மேலே பைத்தியம் பிடிச்சி தான் நான் இங்கே உட்கார்ந்தேன். உட்கார்ந்ததிலேருந்து ஒரு வார்த்தை யாவது இனிமையா என்கிட்ட பேசலே. எல்லாம் வக்கிரம் பிடிச்ச வார்த்தைகள்தான். மலையாள நாட் டிலே பெண்களுக்கு ஆம்பிளைகளை அலைக்கழிக்கிறதிலே ரொம்ப சுதந் திரமும் இடமும் இருக்கிறதனாலே ஆம்பிளைங்க சங்கடம் அனுபவிக் கிறாங்கன்னுதான் சொல்லணும்.

இந்துலேகா: எதுக்காக நான் இனிமையாப் பேச ணும்? கொஞ்சம் தேன் குடிச்சிட்டுப் பேசட்டுமா? இல்லேன்னா நான் பேசறப்போ நீங்க கொஞ்சம் தேன் குடிச்சிக்குங்க. அப்படீன்னா இனிப்பா இருக்கும். உருப்படாதது எதையாவது சொல்லி, அதுக்கு ஏத்த பதில் கிடைச்சா, பதில் சொல்ற ஆளோட வார்த்தையிலே இனிப்பில்லே, புளிக் குதுன்னு சொன்னா யார் சம்மதிப் பாங்க?—எதுக்காக மலையாளப் பொண்ணுங்களை ஒட்டுமொத்தமாக் குத்தம் சொல்றீங்க?—ஆம்பிளைகளைத் தொந்திரவு பண்ண ரொம்ப ஆத்திர மாக்கும்?

மாதவன்: அது மட்டுமில்லே, மலையாளத்திலே பொண்ணுங்க மத்த ராஜ்யத்துப் பொண்ணுங்களைப் போலப் பதி விரதா தர்மத்தைக் கடைப்பிடிக்கிற தில்லே. கணவன்மார்களை விருப்பம் போலத் தேர்ந்தெடுக்கவும் நிராகரிக் கவும் செய்றாங்க. இது தவிர பல சுதந்திரங்கள் இருக்கு. அதனாலே மலை யாளப் பொண்ணுங்களுக்கு கர்வம்

ரொம்ப அதிகமா இருக்கு, அப்ப டீன்னு நான் சொல்றேன்.

இந்துலேகா: கொடுமை! ரொம்ப இனிமையான வார்த்தைதான். இப்படி உசத்தியான படிப்பும் அறிவும் உங்களுக்கு இருந்தும் இப்படியா மலையாளப் பொண்ணுங் களைப் பத்தி அபிப்பிராயப்படுறது? இது ஆச்சரியம் தான்.

இந்த விஷயத்தில் அறிவுள்ள ஒரு மலையாளப் பெண் மாதவனிடம் கீழே குறிப்பிட்டவாறு பதில் சொல்வாள்:

"என்ன சொன்னீங்க?—மலையாளப் பொண்ணுங்க பதிவிரதா தர்மத்தைக் கடைப்பிடிக்கிறதில்லையா? கஷ்டம்! மத்த ராஜ்யங்களிலே உள்ள பொண்ணுங்களைப் போல மலையாளப் பொண்ணுங்களும் தவறாம பதிவிரதாதர்மம் கடைப்பிடிக்கிறாங்க—ஏராளமான பொண்ணுங்க கடைப் பிடிக்கிறாங்க: ஒருத்தி பதிவிரதாதர்மம் கடைப்பிடிக் கிறதில்லேன்னு சொன்னா அவ விபசாரியா இருக் கிறாள்னு அர்த்தம். கேரளத்திலே பெண்களெல்லாம், இல்லாட்டி அதிக பட்சம் பேர் விபசாரிகள்னு நீங்க சொல்றீங்களா? அப்படிச் சொன்னா அதை நான் நம்ப மாட்டேன்—நிச்சயம். விபச்சாரம் எங்கேயும் எந்த இனத் திலேயும் இருக்கு. ஆனால் நம்ம நாயர் பொண்ணுங்க பிராம்மண அந்தர்ஜனங்களைப் போல மத்த ஜனங்களோட பேசாமலும், வித்தியாப்பியாசம் செய்யாமலும், கட்டுப் பெட்டியாய் நடந்துக்கிடாததனாலும் விபசாரிகள்னோ, பதிவிரதாதர்மம் இல்லேன்னோ நீங்க நினைச்சா இவ்வளவு அபத்தமான எண்ணம் வேறே எதுவும் இல்லே. ஐரோப்பா, அமெரிக்கா முதலான ராஜ்யங்களிலே பொண்ணுங்களோட நிலைமையை யோசிச்சுப் பாருங்க. இந்த ராஜ்யங்களிலே ஆண்களுக்கும் பெண்களுக்கும் படிப்பு, அறிவு, சுதந்திரம் இதெல்லாம் ஒரே மாதிரி அல்லவா? இந்தப் பொண்ணுங்களெல்லாம் விபசாரிகளா? இந்தப் பக்கத்திலே ஒரு அழகான பொண்ணுக்குப் பெரிய படிப்பு இருந்தா அவளோடப் பேசிப் பழகும் எல்லா ஆம்பிளைகளுக்கும் அவளுக்கும் கள்ளத் தொடர்பு

இருக்குன்னு உடனே நினைச்சிடுறாங்க. இதிலே எவ்வளவு உண்மை இருக்கு? சங்கீதம் தெரிஞ்ச ஒரு பொண்ணு பாடுறதைக் கேட்ட ஒரு பத்து ஆம்பிளைகள் ஒண்ணாச் சேர்ந்து உட்கார்ந்து கேட்டிட்டுப் போனால் அந்தப் பத்து ஆம்பிளைகளையும் அவளோட கள்ளக் காதலர்கள்னு நீங்க சொல்வீங்க. ஆம்பிளைங்கன்னா அப்படித்தான்னு நடந்துக்கவும் செய்வீங்க. இப்படி நீங்க செய்றதை நாங்க தப்பா நினைச்சா என்ன முடிவு ஏற்படும்? நீங்க ஆம்பிளைங்க தன்னம்பிக்கை உள்ளவங்களா இருந்தால் சுயஜாதிப் பொண்ணுங்களை இப்படி அவமானப்படுத்த வாய்ப்பு வருமா? ஒரு பொண்ணுக்கு பதி விரதாதர்மம் கொஞ்சமும் குறையாமல் மத்த ஆம்பிளை களோடு பல விதத்திலும் பேசவும் பழகவும் வாய்ப்புகளும் சுதந்திரமும் உண்டா கலாம். அப்படிப் பேசறதும் பழகறதும் எல்லாமே விபசாரம் பண்ற ஒரே எண்ணத்தினாலேதான்னு புத்தியில்லாத வங்க கருதி வீணாகக் கேரளப் பொண்ணுங்களை அவமானப்படுத்தறதிலே மாதவனும் சேர்ந்துக்கிட்டது எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு.

"என்னோட எண்ணப்படி பெண்களுக்கு சுதந்திரம் கொடுக்காம மிருகங்களைப் போல வளர்த்து வர்றதுதான் விபசாரத்தைவிட அதிகத் தீங்கை உண்டாக்கும். ஒரு பசுவுக்கோ பன்றிக்கோ விபசாரத்திலே வெட்கம் உண்டா? ஆனால் படிப்பும் அறிவும் உள்ளவங்களுக்கு எந்தக் காலத்திலேயும் விபசாரத்திலே எண்ணம் வர்றதுக்கு வழியில்லேன்னு நான் சொல்றேன். துர்புத்தியும் துர்சகவாசமும் எத்தனை படிச்சவங்களுக்கு சில சமயங்களிலே ஏற்பட்டுறுது? அப்படி ஏற்படுறது படிப்பினாலேயும் அறிவினாலேயும்னு சிலர் குறை சொல்றதைக் கேட்கிறப்போ எனக்கு ஆச்சரியம் ஏற்படுது. படிப்பும் அறிவும் இந்த மாதிரியான துர்புத்திகளை அழிக்கிறதுக்கான முக்கிய கருவிகளாகும். கணவனை விருப்பம் போலத் தேர்ந்தெடுக்கிறதும் நிராகரிக்கிறதும் செய்றவங்க நாங்கன்னு நீங்க ஒரு குற்றம் சொல்லலாம். மரியாதை கெட்ட சில பொண்ணுங்க அப்படிச் செய்றவங்களா இருக்கலாம். ஆனால் இப்படிச் செய்றதுக்கான சுதந்திரம் எங்க

ளுக்கிருக்கிறது எவ்வளவோ நல்லதுக்கான நிலைமைதான். ஐரோப்பாவிலேகூட இந்தச் சுதந்திரம் இல்லே. ஐரோப்பா விலுள்ள புத்திசாலிகளான சில ஆட்களும், அமெரிக்கா நாட்டிலுள்ள ரொம்பப் பெரியவங்களும் இந்த சுதந்திரம் எப்பவும் இருக்கணும்னு அபிப்பிராயப்பட்டதா நான் படிச்சிருக்கேன். இந்த சுதந்திரம் இல்லாததனாலே எத்தனை கணவன் மனைவிமார் ஒவ்வொரு நாளும் ஐரோப்பா விலும் இந்தியாவிலும் சங்கடம் அனுபவிக்கிறாங்க! இந்த சுதந்திரத்தைக் கெட்ட வழிக்கு உபயோகப்படுத்தாம சரியாகத் தேவையானதுக்கு மட்டும் உபயோகப்படுத்தி வந்தால் அது ஆணுக்கும் பெண்ணுக்கும் ரொம்ப உப காரமா அமையும். இந்த சுதந்திரம் இருக்கு என்கிறதனாலே மலையாளத்திலே எத்தனை மனைவிமார்கள் கணவன் மாரை உதாசீனப்படுத்துறாங்க? எத்தனை கணவன்மார் மனைவிமாரை உதாசீனப்படுத்துறாங்க? இந்த மாதிரி எத்தனை காரியங்கள் கடந்த பத்து வருஷங்களிலே இந்த மலையாளத்திலே கணவன் மனைவிமார்களிடத்திலே நடந் திருக்குன்னு மாதவனுக்கு திட்டவட்டமா ஒரு கணக்கு எடுக்க முடிஞ்சா, அப்போ தெரியும் ஆயிரத்திலே ஒண்ணு கூட இருக்குமா என்கிறது சந்தேகம்தான்னு. சில சமயங் களிலே சில இடங்களிலே இருக்கலாம். அதற்கான காரணங்களும் இருக்கும். காரணம் இல்லாமலும் தம்பதி களில் யாராவது ஒருவருடைய துர்புத்தியால் கெடுதல் உண்டாகலாம். ஆனால் அதெல்லாம் கேரளப் பெண் களிலே சர்வசாதாரணம்னு சொல்லி எங்களை அவமானப் படுத்தறது நல்லா இல்லே. இந்த சுதந்திரம் அமைகிறது நல்லதுதான். ஆனால் அதை வேணும்கிறப்போ மட்டும் உப யோகிக்கணும். சில சமயங்களிலே சிலர் வேண்டாத இடத் திலேயும் உபயோகிச்சிடுறாங்க. அதனாலே அவமானம் ஏற்பட்டுவிடுது. ஆனால் அது அந்த சுத்ந்திரத்தோட தப் பில்லே. அதைத் தவறாப் பயன்படுத்தறதனாலே ஏற்படுற கோளாறுதான். அதனால மாதவனுக்கு என்மேலே கோபம் இருந்தா அதுக்காக எங்க இனத்து மொத்தத்தையும் பழிச்சிப் பேசறதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன்; நிச்சயமா."

மாதவன்: தம்பதிகளுக்கு வேண்டிய போதெல்லாம் விருப்பப்படி பரஸ்பர உறவை முறிச்சிக்கிட அவங்க ரெண்டு பேரிலே எவருக்கும் உரிமை தர்றதை நல்ல சுதந்திரம்னு நான் நினைக்கலே. இந்த நிலைமை ஏற்பட்டா தம்பதிகளுக்கிடையேயான உறவு ஒரு நிர்பந்தத்தினாலே ஏற்படுற உறவு மாதிரி ஆகும். அதிலே ஒரு விருப்பமோ நல்ல எண்ணமோ எனக்குத் தோணலே.

இந்துலேகா: (சிரித்துக்கொண்டு) ஆக, மலையாள வழக்கத்திலான கல்யாணத்திலே மாதவனுக்கு விருப்பம் இல்லே போலிருக்கு, அப்படித்தானே?

மாதவன்: இல்லே.

இந்துலேகா: அப்படீன்னா முன்னாடி சொன்னீங்களே வேறே எந்த ராஜ்யத்துக் காவது போகணும்னு, அப்படியே செய்யுங்க, அதுதான் நல்லது.

மாதவன்: அப்படித்தான் எண்ணம். உனக்கு அது சம்மதமா?

இந்துலேகா: என்னோட சம்மதம் எதுக்கு?

மாதவன்: நீ என்னோட மனைவி ஆயிட்டா எனக்கு மலையாள ராஜ்யம்தான் சொர்க்கம்.

இந்துலேகா: மலையாள முறைப்படியான சம்பந்தம் ஒத்து வராத மாதிரிதானே அப்போ சொன்னீங்க? பின்னே அதிலே எதுக்கு ஆசைப்படணும்?

மாதவன்: அது உனக்கும் எனக்கும் சம்பந்தப் பட்டதில்லையா?

இந்துலேகா: சரி; இது நல்ல வார்த்தைதான்.

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது இந்துலேகாவின் அம்மா மாடிக்கு வந்து இருவரையும் கேலி பேசத் தொடங்கினாள். எனவே ரகசிய- சல்லாபப் பேச்சையும்

அன்றைய வேட்டைத் திட்டத்தையும் மாதவன் நிறுத்திக் கொண்டான்.

இனி இந்த பூர்வகதையைச் சுருக்கிச் சொல்கிறேன்.

மாதவனுக்கு போகப் போக வேதனை பொறுக்க முடியாமல் போயிற்று. ஆகாரம், தூக்கம் ஆகியவற்றில் கொஞ்சமும் சிரத்தையில்லாமல் போயிற்று என்றுதான் சொல்ல வேண்டும். இந்துலேகாவின் மாடியில் அவ்வளவு நீண்ட நேரம் போய் உட்கார்ந்திருப்பதும் அற்றுப் போயிற்று. ஒரு நாள் இந்துலேகாவுடன் மாதவனின் தாய் (பார்வதியம்மா) பேசிக்கொண்டிருந்தபோது தற்செயலாக மாதவனைப் பற்றிய பிரஸ்தாபம் வந்ததில், "மாதவனி டத்திலே ஏதோ காரணமில்லாம ஒரு வருத்தம் தெரியுது" என்று பார்வதியம்மா சொன்னாள்.

இந்துலேகா: காரணம் இல்லாம இருக்காது.

பார்வதியம்மா: எனக்கு ஒரு காரணமும் தெரியலே. சோறு சாப்பிடுறதில்லே; ரெண்டு நேரமும் கட்டாயப்படுத்தி சாப்பிடச் சொல்ல வேண்டியிருக்கு. பாலோ மோரோ எதுவும் குடிக்கிறதில்லே. கூட இருக்கிறவங்க அவன் ராத்திரி தூங்குறதும் இல்லேன்னு சொல்றாங்க. என்னவோ, உடம்புக்கு ஏதாச்சும் பெரிசா கெடுதல் வந்திடுமோன்னு கவலையா இருக்கு.

இந்துலேகா: அப்படீன்னா நான் ஒரு தடவை கேட்டுப் பார்க்கிறேன். இங்கே வரச் சொல்லுங்க.

பார்வதியம்மா போய் மாதவனிடம் சொன்னாள்.

மாதவன் இந்துலேகாவின் மாடிக்குச் சென்றான்.

இந்துலேகா: என்ன இப்போவெல்லாம் இந்தப் பக்கம் வர்றதை நிறுத்திட்டீங்க?

மாதவன்: வர்றதுக்கு எனக்கு மனசு கொஞ்சம் கூட சரியில்லே?

இந்துலேகா: இங்கே வர்றதினாலேயா சரியில்லே?

மாதவன்: ஆமாம், சுகக்கேடு அதிகமாகிறது இங்கே வர்றப்போதான். சுகக்கேடு சாதாரணமா எப்பவும் இருக்கு.

இந்துலேகா: நான் முகத்தைக் கழுவிக்கிட்டு வந்திடு றேன். நியூஸ்பேப்பர் படிச்சிக்கிட்டு அந்த சோபாவிலே படுத்திருங்க. நான் உடனே வர்றேன். சில விவரங்கள் சொல்லணும்.

மாதவன் சோபாவில் படுத்தான். நியூஸ்பேப்பரைத் தொடக்கூட இல்லை. இந்துலேகா, "நியூஸ்பேப்பர் என்ன தப்பு பண்ணிச்சி?" என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே முகம் கழுவக் கீழே இறங்கிப் போனபோது மாடிக்கு ஒரு வேலைக்காரன் மாதவனுக்கான ஒரு தந்திச் செய்தி உறையை எடுத்துக் கொண்டு மேலே போவது தெரிந்தது. ஏதாவது பரீட்சை சம்பந்தப்பட்டதாக இருக்குமென்று எண்ணி, சந்தேகம் பொறுக்க முடியாமல் இந்துலேகா உறையை வாங்கிப் பிரித்து வாசித்தபோது மிகுந்த மகிழ்ச்சி யடைந்தாள். உடனே மாடிக்கு ஓடிச் சென்று, "பி.எல். தேறியாச்சி" என்று சொல்லி மாதவனின் அருகில் தந்திச் செய்திக் காகிதத்தைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு நின்றாள்.

மாதவன், "சரி; நல்லது" என்று மட்டும் சொன்னான். கடிதத்தை வாங்கிக் கொள்ளவே இல்லை. அதற்குப் பிறகு ஓர் எழுத்துக் கூட உச்சரிக்கவில்லை. படுத்திருந்த இடத்தை விட்டு நகரவே இல்லை. இந்துலேகாவின் சந்திர பிம்பம் நிகர்த்த முகத்தை சங்கடத்தோடு பார்ப்பது போலப் பார்த்த படிப் படுத்தே கிடந்தான். இதைப் பார்த்தபோது இந்துலேகாவுக்குத் தீவிரமான ஒரு வேதனை ஏற்பட்டது. ஆனாலும் அதை மன உறுதியால் அடக்கிக் கொண்டாள்.

இந்துலேகா: இது என்ன கதை! ஏன் ஒரு சோக பாலம் தெரியுது? பி.எல். முதலாம் வகுப்பில் முதலாவதா தேறியாச் சின்னு சேதி வந்தா இவ்வளவு வருத்தமா? இப்படி சேர்ந்து படுத்துக் கிடக்கிறது ஆச்சரியமா இருக்கு.

மாதவன்: எனக்கு இதிலே பிடிமானமே இல்லே. பி.எல். பாஸ் ஆனாலும் இல்லேன்னாலும் எல்லாமே எனக்கு ஒண்ணு தான்.

இந்துலேகா: தேறின விவரத்தை நான் போய் தாத்தாகிட்டேயும் நம்ம ரெண்டு பேர் அம்மாக்கிட்டேயும் சொல்லப் போறேன். நான் ஓடிப்போய்ச் சொல்றேன்; அவங்களுக்காவது சந்தோஷம் உண்டாகட்டும்.

மாதவன்: எதுக்காக இந்துலேகா இவ்வளவு அலட்டிக்கிறே? அவங்ககிட்ட நானே போய் சாவகாசமா சொல்லிக்கிடுறேன். என்ன அவசரம்?

இந்துலேகா: நானே இப்பவே போய்ச் சொல்றேன். தந்தியை வாசிக்கட்டுமா? இதோ பாருங்க.

மாதவன்: எனக்கு வாசிக்க வேண்டாம். எனக்கு இந்த பி.எல். பாசானதிலே ஒரு சந்தோஷமும் இல்லே.

இந்துலேகா: எதனாலே?

மாதவன்: என் மனசிலே வருத்தம் இருக்கிறதனாலே.

இந்துலேகா: பி.எல். பாஸானா வருத்தமா?

மாதவன்: இந்துலேகாவுக்கு இவ்வளவு கடினமான கல்லுப் போல இருதயம்னு எனக்கு முன்னமேயே தெரிஞ்சிருந்தா—

என்று சொல்லி நிறுத்தினான்.

இந்துலேகா: தெரிஞ்சிருந்தா? ஏன் முழுக்க சொல்ல மாட்டேங்கறீங்க?

மாதவன்: தெரிஞ்சிருந்தா—

இந்துலேகா: தெரிஞ்சிருந்தா என்னவாம்?

இந்துலேகா இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு மாதவனுக்கு அருகாகக் கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கி வந்து நின்றாள்.

மாதவன்: தெரிஞ்சிருந்தா எனக்கு இந்தச் சங்கடமும் சீரழிவும் வராம இருந்திருக்கும்.

இந்துலேகா: சங்கடமும் சீரழிவும்— அப்படித்தானே?

மாதவன்: மனசிலே இவ்வளவு தயவுதாட்சண்யம் இல்லாமப் போயிடுச்சே!

இந்துலேகா: இருக்கட்டும், அந்த விவரத்தை நான் வந்து பேசிக்கிறேன். பி.எல். தேறின விவரத்தை நானே போய்த் தாத்தா கிட்டேயும் நம்ம ரெண்டு பேர் அம்மாக்கிட்டேயும் சொல்லணும். நான் இதோ போய்ட்டு வந்திடுறேன். ஓடிப்போய்ச் சொல்லிட்டு வர்றேன். இங்கேயே படுத்திருங்க. பரீட்சையிலே தேறியாச்சின்னு வந்து சொன்னா அதுக்கு இப்படி சங்கடப்படணுமாக்கும்?

மாதவன்: நீ எனக்காக இவ்வளவு அலட்டிக்க வேண்டாம், எனக்கு இப்படித் தேறினதிலே எந்தச் சந்தோஷமும் இல்லே. என்னோட உயிரும் உடலும் உடனடியா பிரிஞ்சிடணும்னு கடவுள் கிட்ட ஒரு பிரார்த்தனை மட்டுமே செஞ்சுகிடுறேன். உயிர் வேதனைப் படுறப்போ எனக்கு எதுக்காக பரீட்சை, முடிவு இதெல்லாம்?

என்று சொல்லும்போதே மாதவனுக்குக் கண்ணீர் பெருக்கெடுத்தது.

மாதவனின் இந்த நிலையைப் பார்த்ததும் இந்துலேகாவின் இருதயம் பெரிதும் தவித்து வெந்துவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். தன்னால் அப்போது எந்த விதத்திலும் அடிக்க முடியாதபடி பெருக்கெடுத்து உண்டான அநுராக உணர்வுகளால் பரவசப்பட்டு இந்துலேகா சோபாவுக்கு அருகில் சென்று மாதவனுடைய அதியழகான முகத்தைத் தன்னுடைய சந்திரவதனத்துடன் சேர்த்து நெடிய பெருமூச்சுடன் அதரங்களில் ஒரு முத்தமிட்டாள்.

"எனது ஜீவநாதமான கணவரே! ஏன் இப்படி வருத்தப் படுறீங்க? நான் உங்களை ரெண்டு வருஷமா என்னோட மனசிலே கணவரா வரிச்சி வச்சிருக்கேனே, என்னோட சரீரமும் மனசும் எல்லாமுமே உங்களுக்குத்தான் சொந்தம். விருப்பம்போல சுகமா இருக்க நினைப்போம். என்னோட மனசு இது வரைக்கும் உங்களைத் தவிர வேறே ஒருத்தரையும் விரும்பினது இல்லே—இனியும் விரும்பாது" என்று சொல்லி மாதவனின் மார்பில் ஒரு நிமிஷ நேரம் சாய்ந்து கிடந்தாள். மாதவனின் கண்ணீரைத் தன் கைகளால் துடைத்தாள். பின்னர் எழுந்து நின்றாள்.

இந்துலேகா முதலில் சொன்ன இரண்டு மூன்று வார்த்தைகளை மட்டுமே மாதவன் தெளிவாகக் கேட்டான். உடனே ஆனந்த சாகரத்தில் மூழ்கிப் போனதால் வேறெதையும் கேட்க முடியாமலும் காண முடியாமலும் ஆனான். சிறிது நேரம் கழித்துத் தன் நினைவு வந்ததுபோல் எழுந்தான்.

மாதவன்: இனி நான் பி.எல். பாசான விவரத்தை எல்லார்க்கிட்டேயும் சொல்லு. எனக்கு இந்த ஜன்மத்திலே கிடைக்க இருக்கிற எல்லா நல்லதுகளும் மேன்மைகளும் இந்துலேகாவும் நானுமாகச் சேர்ந்து அனுபவிக்கிறதாக இருந்தாத்தான் இந்த இகலோகத்திலே வாழ்றதை நான் விரும்புவேன். அது எனக்குக் கிடைச்சிருச்சி. நான் ரொம்ப அதிருஷ்டக்காரன்தான்; சந்தேகமில்லே. நான் பாஸான விவரத்தை இனிமே நீதான் போயத் தெரியப்படுத்தறது நல்லது.

இப்படித்தான் அவர்களுடைய அந்தரங்க விவாகம் முன்னமேயே நடந்து முடிந்திருந்தது.

அவர்களுக்குள் இணக்கம் இருக்கிறது என்றும், மாதவன்தான் இந்துலேகாவின் கணவனாக அமையும் வாய்ப்பிருக்கிறது என்றும் பஞ்சுமேனோனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவருக்கு அதில் மிகவும் விருப்பம் என்றில்லாவிட்டாலும் மறுப்பு எதையும் காட்டிக் கொள்ளவில்லை.

3

# ஒரு கோபக்காரரின் சபதம்

முதலாம் அத்தியாயத்தில் குறிப்பிட்டதான காரணவர் பஞ்சுமேனோனுக்கும் மாதவனுக்கும் இடையே உண்டான சண்டை பஞ்சுமேனோனைக்கோபக்காரனாக்கியது. பஞ்சு மேனோன் இயல்பாகவே கடுங்கோபக்காரர். பழைய சம்பிரதாயக்காரர் என்று தனியே சொல்ல வேண்டிய தில்லை. அவர் செம்பாழியோட்டு பூவள்ளி என்ற பெரும் பணக்காரக் குடும்பத்தில் தலைமைப் பொறுப்பான காரணவர். இவருடைய குடும்பத்தில் முன்பு தோன்றிய இரண்டு காரணவர்கள் திவான் உத்தியோகம் பார்த்த வர்கள். செம்பாழியோட்டு பூவள்ளிக்குடும்பம் புராதன மாகவே பெயர்பெற்ற குடும்பமாக இருந்து வந்திருக்கிறது. வழிவழியாக அதில் பிறந்த ஒவ்வொரு குடும்பத் தலைவரும் நிறைய நிறையப் பணம் சம்பாதிப்பவர்களாக அமைந்து, மிகவும் பிரசித்தமானதொரு குடும்பமாக அது இருந்து வந்திருக்கிறது. ஆனால் இடையே சில நாசங்களும் நேரிட்டன. சொத்துக்களுக்குக் கொஞ்சம் நஷ்டமும் ஏற்பட்டதுண்டு.

நான் சொல்லும் இந்தக் கதை நடந்த காலத்தில் இந்தக் குடும்பத்திற்கு ஆண்டுக்கு இருபத்தெட்டாயிரம் மரக்கால் நெல் வரும் பரம்பரைச் சொத்துக்களும், ஆண்டுக்குப் பதினைந்தாயிரம் ரூபாயளவு வாரம் ஈட்டித் தரும் தோட்டங் களும் இருந்தன. அதில் செலவெல்லாம் போக ஆண்டுக்கு ஐயாயிரம் ரூபாய் வரை மிச்சமாகும். செலவுகள் சிக்கனமாக இருந்ததாகவே சொல்ல வேண்டும். முன்பிருந்த காரணவர்கள் மிகவும் தாராள மனம் படைத்தவர்களாக

இருந்ததனால் அவர்கள் வகுத்துச் சென்ற நியமப்படி நிறையச் செலவுகள் செய்யப்பட்டன. முறைப்படி இரண்டு நேரமும் அங்கிருந்தவர்கள் எல்லாருக்கும் நல்லபடி சாப்பாடு கொடுக்கும் இரண்டு பிராமணச் சத்திரங்கள், பல திருவிழாக்கள் குறித்தபடி நடக்கும் ஓர் அம்மன் கோயில் முதலியவற்றுக்காக ஆகும் செலவுகள் செய்யப்பட்டன. குடும்பத்துக்கு முறைப்படியான சாப்பாடு, உடுத்தும் துணி, எண்ணெய் தேய்த்துக் குளித்தல், வேலைக்காரர் வகைச் செலவுகள் ஆகியவை எல்லாம் ஏற்கனவே வரையறுக்கப் பட்டது மிகவும் தாராளமாகவே இருந்தது. பிறவியிலேயே கஞ்சன் என்ற போதிலும் பஞ்சுமேனோன் இம்மாதிரிச் செலவுகள் வேண்டாமென்று தடுக்க வழியில்லாமல் இருந்தார். இதெல்லாம்போகக் கிடைக்கும் லாபம்தான் ஐயாயிரம். அதிலிருந்து ஒரு காசு செலவழிக்க வேண்டு மென்றாலும் பஞ்சுமேனோனுக்குப் பரம சங்கடம். ஆனால் தன்னுடைய மகளான (இந்துலேகாவின் அம்மா) லட்சுமிக் குட்டியம்மாவுக்கும், அவளுடைய அம்மாவும் தன்னுடைய மனைவியுமான குஞ்ஞிக்குட்டியம்மாவுக்கும் சேர்த்து ஒரு முப்பத்தைந்தாயிரம் ரூபாய்க்கான சொத்துக்களை இவர் தான் கொடுத்திருந்தார். இந்துலேகாவும், அவளுடைய அம்மாவும் தன்னுடைய மனைவி குஞ்ஞிக்குட்டியம்மாவும், (மதராசில் இல்லாத காலத்தில்) மகன் கோவிந்தன்குட்டி மேனோனும் ஆக எல்லாருடனும் சேர்ந்து பஞ்சுமேனோன் இரண்டு மூன்று பெரிய மாடிகள் அமைந்த பூவரங்கு என்ற வீட்டில் தனியாகக் குடியிருந்தார். அங்கே குளம், குளிய லறை, கோயில், சத்திரம் ஆகியனவும் அமைந்திருந்தன. பூவள்ளி என்ற பெரிய குடும்பத்து வீடு பூவரங்கிலிருந்து ஒரு இருநூறு-முந்நூறு கஜ தூரத்தில்தான் இருந்தது. இந்த இரண்டு வீடுகளுக்கும் மதில் சுவர் ஒன்றுதான்.

இந்தக் கதை தொடங்கும் காலத்தில் பஞ்சுமேனோ னுக்கு எழுபது வயது. இவருடைய ஒரு தாய்மாமன் திவான் வேலையிலிருந்தபோது இவருக்கு தாசில்தார் வேலை வாங்கிக் கொடுத்திருந்தார். அதையெல்லாம் விட்டுவிட்டு வந்து இப்போது முப்பது ஆண்டுகளாகிவிட்டன. ஆள் நல்ல வெளுப்பு நிறத்துடன்குட்டையாக கொஞ்சம்

தடித்திருந்தார். இவருடைய சௌந்தர்ய வர்ணனைக்கு—தலையில் வழுக்கை; வாயில் மேல் வரிசையில் மூன்றும் கீழ் வரிசையில் ஐந்தும் ஆகப் பற்கள் இல்லை; கண்கள் இரத்தச் சிவப்பு; இடுப்பில் கட்டும் முண்டுத்துணிமீது ஒரு தங்கச் சரடும், கழுத்தில் தங்கம் பொருத்திய ஒரு ருத்திராட்ச மாலையும், தலையில் ஒரு சிவப்புக் கம்பளித் தொப்பியும், கையில் வெள்ளிப்பூணிட்ட ஒரு கைத்தடியும் இருக்கும் என்று சொன்னால் போதுமானது. முன்பு உத்தியோகம் பார்த்ததுண்டு என்ற போதிலும் இங்கிலீஷ் அறவே தெரியாது. மனதில் நேர்மையும் இரக்கமும் உண்டென்றாலும் பிறவியிலேயே மகா கோபக்காரர். இப்போது வயதாகிவிட்டதாலும், வியாதி காரணமாகவும் எல்லா நேரமும் கோபகுணம்தான் நிலைபெற்றிருந்தது. இந்து லேகாவிடம் மட்டும்தான் அவர் கோபப்படுவதில்லை. இது ஒரு வேளை அவளுடைய குணச்சிறப்பினாலோ அல்லது இறந்துபோன தனது மூத்த மகன் கொச்சுகிருஷ்ண மேனோன் பேஷ்காரிடம் கொண்டிருந்து வாத்சல்யத் தினாலோ இருக்கலாம். தான் கோபக்காரனென்ற உண்மையைத் தனக்குத் தானே நன்றாகவே அறிந்திருந்த தனால் பல சமயங்களில் கோபம் வந்து பாதிக்குமோ என்ற சந்தேகத்தில் இந்துலேகாவின் மாளிகைக்கு அவர் அதிகம் போவதில்லை. ஆனால் இரண்டு மூன்று தடவையாவது இவர் இந்துலேகாவைப் பற்றி விசாரிக்காமல் ஒரு நாள் கூடக் கழிந்ததில்லை. இந்துலேகாவைத் தவிர பூவரங்கிலும் பூவள்ளியிலும் உள்ள எவரும் இவரிடம் வசவு வாங்காமல் ஒரு நாளாவது கடத்தியிருப்பார்களா என்பது சந்தேகம் தான். வீட்டில் மாதவனுடன் சண்டை போட்டது காலை ஆறு மணிக்கு. அது முடிந்து உடனே அங்கிருந்து கிளம்பி பெரும் கோபத்துடன் தன் கண்காணிப்பில் இருந்த பூவரங்குக்கு வந்தார். முற்றத்தில் ஏறியபோது மகள் லட்சுமிக்குட்டியம்மாவைத்தான் முதலில் பார்த்தார்.

பஞ்சுமேனோன்: அந்தக் கூறுகெட்ட சண்டாளன்—அந்தமகாபாவி—என்னை அவமானப் படுத்தினது உனக்குத் தெரியுமில்லை?

லட்சுமிக்குட்டியம்மா: யாரு?

பஞ்சுமேனோன்: மாதவன்

லட்சுமிக்குட்டியம்மா: என்னது, மாதவனா?

பஞ்சுமேனோன்: ஆமா, மாதவன்தான்.

பிறகு மாதவன் பேசின பேச்சையெல்லாம் சற்று மிகைப்படுத்தியே லட்சுமிக்குட்டியம்மாவிடம் சொல்லித் தீர்த்தார். அப்போது கேசவன்நம்பூதிரியும் உள்ளேயிருந்து வெளியே வந்தபடி எல்லாவற்றையும் கேட்டார்.

பஞ்சுமேனோன்: (கேசவன் நம்பூதிரியிடம்) இந்தப் பாவிக்கு இந்துலேகாவை நான் இனிமே கொடுக்க மாட்டேன். என்ன, லட்சுமிக்குட்டி ஒண்ணும் பேசலே?

லட்சுமிக்குட்டியம்மா: நான் என்னத்தைச் சொல்றது?

பஞ்சுமேனோன்: மாதவன் மேலே இருக்கிற பிடிப்பை விட முடியலே, அவனுடைய செளந்தரியம் கண்டதாலே, அப்படித்தானே? எதனாலே நீ பேசாம நின்னுக்கிட்டிருக்கிறே? தண்டங்கள்—தண்டங்கள்—எல்லாமே தண்டங்கதான். கழுத்தைச் சீவணும்.

லட்சுமிக்குட்டியம்மா: மாதவன்கிட்ட எனக்கு என்ன பிடிப்பு? எனக்கு இதிலொண்ணும் பேசறாப்பிலே இல்லே.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா நான் சொல்றேன். என்னோட பகவதி அம்மன் மேல் ஆணை, நான் இந்துலேகாவை மாதவனுக்குக் கொடுக்க மாட்டேன்.

இந்தச் சபதம் எடுத்த நிமிஷம்தான் அந்தக் கிழவருக் வருத்தமும் ஏற்பட்டது. இந்துலேகாவின் தைரியமும் மிடுக்கும் உறுதியும் பஞ்சுமேனோனுக்கு நன்றாகத் தெரிந்ததுதான். மாதவனுக்கும் இந்துலேகாவுக்குமான சிநேகத்தைக் குறித்து அவருக்கு நன்றாகத் தெரிந்து

தானிருந்தது. 'இப்படி இருக்கும்போது இந்தச் சபதம் எந்த அளவுக்குச் செல்லுபடியாகும்? செல்லுபடியாகாவிட்டால் தனக்கு எவ்வளவு தலைக்குனிவு? என்பதையும் மற்றதையும் நினைத்தபடி பஞ்சுமேனோன் முற்றத்துப் படிக்கட்டிலேயே இரண்டு நாழிகை நேரம் நின்றுவிட்டார். பின்னர் ஒரு வழி தோன்றிற்று. கேசவன்நம்பூதிரியை அழைத்து வரச் சொன்னார். நம்பூதிரி வந்து பெஞ்சுப் பலகையில் உட்கார்ந்த உடனேயே பஞ்சுமேனோன் அவருக்கு அருகில் சென்று ரகசியமாகச் சொன்னார்.

பஞ்சுமேனோன்: அந்த மூர்க்கில்லாத்த நம்பூதிரிப் பாடு பத்தி முன்னே சொன்னீங்களே! அவர் இந்துலேகாவைப் பத்திக் கேள்விப்பட்டதுண்டு என்றும், கல்யாணம் பண்ணிக் கொள்ளவும் எண்ணம் என்றும், இன்னும் என்னென்னவோ சொன்னார் என்றும் சொன்னீங்க தானே? அவரு ஆள் பார்க்க அழகா இருப்பாரா?

கேசவன் நம்பூதிரி: ரொம்ப அழகனாக்கும். பத்தரை மாத்துத் தங்கத்தோட நிறமாக்கும். இந்துலேகாவின் நிறத்தைவிட ஒரு மாத்து அதிகம். அப்படி ஒரு ஆம்பளையை நான் பார்த்ததில்லே. அப்புறம், பண விஷயத்திலே சொல்ல வேண்டியதே இல்லை.

பஞ்சுமேனோன்: அவரைப் பார்த்துப் பழக்கமாயிட்டா இந்துலேகாவுக்குப் பிடிச்சிப் போகுமா?

கேசவன் நம்பூதிரி: (பூணூலைக் கையில் பிடித்தபடி) நான் சத்தியம் பண்றேன்—பார்த்த நிமிஷமே பிடிச்சுப்போகும். சிவ! சிவ! என்ன கதைபோங்க! அவரை நேரில் பார்த்தால்தானே அந்த விவரம் சரியாப் புரியும்?

பஞ்சுமேனோன்: அவரை ஒரு தடவை வரவழைக்க முடியுமா?

கேசவன் நம்பூதிரி: வரவழைப்போம்.

பஞ்சுமேனோன்: அவர் வந்தால் இந்துலேகாவுக்கு மாதவன்கிட்ட இருக்கிற மயக்கம் விட்டுப் போகுமா?

கேசவன் நம்பூதிரி: (இப்போதும் பூணூலைப் பிடித்த படி) இந்தக் கடவுளானை, விட்டுப் போகும். எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லே.

பஞ்சுமேனோன் மகிழ்ச்சியுடன் சிரித்தார்.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா ஒரு கடுதாசு போட லாம். அவர் வர்ட்டும். எதுவும் ஏடா கூடமா எழுதிற வேண்டாம். இந்து லேகாவைப் பத்தி நல்லாத் தெரியு மில்ல. பின்னாலே நாம் மாட்டிக் கிடக் கூடாது. இங்கே வந்து ரெண்டு மூணு நாள் தங்கியிருக்கிற மாதிரி மட்டும் எழுதினால் போதும்.

கேசவன் நம்பூதிரி: இது தோணினது பகவத் கிருபை! பகவத் கிருபை! இந்துலேகாவின் மகா பாக்கியம்! அவளோட குடும் பத்துக் காடாட்சம். இந்த வீட்டு அதிருஷ்டம். என்னோட ஒரு நல்ல காலம். இப்பவே எழுதிப் போட்டி டுறேன்.

பஞ்சுமேனோன்: கடுதாசியிலே வாசகம் குறிப்பா இருக்கணும். இந்துலேகா ஆங்கி லமும் மத்ததும் படிச்ச அதிபுத்தி சாலியாக்கும். அவளோடு நாம யாரும் பேசி ஜெயிக்க முடியாது. நம்பூதிரியின் அழகினாலேயும் சாமர்த்தினாலேயும்தான் அவளை வழிக்குக் கொண்டு வரணும்— அதுதான் வேண்டியது.

கேசவன் நம்பூதிரி: நம்பூதிரிக்காரன் இங்கே வந்து ரெண்டு நாழிகை இந்துலேகா வுடன் பேசின பிறகு அவள் நம்பூதிரியின் பெண்டாட்டியாக லேன்னா அன்னிக்கி சூரியன் தெற்கே உதிச்சி வடக்கே போகும்.

பஞ்சுமேனோன்: அவ்வளவு உறுதியாகவா? அவ் வளவு திறமைசாலியா நம்பூதிரிப் பாடு?

கேசவன் நம்பூதிரி: நீங்க ஒண்ணு—அதிலே ஒண்ணும் எனக்குச் சந்தேகமே இல்லே. நான் சீக்கிரம் எழுதிப் போட்டிடுறேன்.

பஞ்சுமேனோன்: அதாவது நான் சொன்ன மாதிரி.

## 4

# ஒரு பிரிவு

மாதவன்: அம்மா, எல்லாம் ஆயத்தப்படுத்தணும். நாளைக் காலையிலே எனக்கு மதராசுக்குப் புறப்படணும். அப்பா உள்ளே இருக்காங்களா?

பார்வதியம்மா: போகணும்னு தீர்மானிச்சிட்டியா?

மாதவன்: என்ன சந்தேகம்? நான் போயாகணும்.

பார்வதியம்மா: உங்கப்பா விடிகாலையிலே போறப்போ உன்னை அங்கே வந்து பார்க்கச் சொன்னாங்க.

உடனே மாதவன் தன் தந்தை கோவிந்தப்பணிக்கரின் இருப்பிடம் நோக்கிச் சென்றான்.

கோவிந்தப்பணிக்கர் நல்ல பணக்காரரும் அறிவாளியும் மரியாதை தெரிந்தவரும் தயாளமானவரும் ஆன ஒரு மனிதர். சொந்தக் குடும்ப உறவினர் யாரும் இல்லாததனால் செலவு எதுவும் செய்யாமல் நிறையப் பணம் சேர்த்து வைத்திருந்தார்.

கோவிந்தப் பணிக்கர்: தம்பி குளிச்சி முடிச்சாச்சா?

மாதவன்: முடிச்சாச்சி

கோவிந்தப் பணிக்கர்: நாளைக்கு மதராசுக்குப் போகணுமோ?

மாதவன்: போகணும்னுதான் நினைக்கிறேன், அப்பாவுக்குச் சம்மதமானால்.

கோவிந்தப் பணிக்கர்: போகணும்னு இருந்தால் போய்ட்டு வா. வழிச்செலவுக்கும் மத்ததுக்கும் பணம் காரணவர் கிட்ட கேட்க வேண்டாம், நான் தர்றேன். உனக்காக நான் ஒரு ஜோடி கடுக்கன் வரவழைச்சி வச்சி ருக்கேன். இதோ பாரு.

என்று சொல்லி ஏறத்தாழ ஐந்நூறு ரூபாய் விலை யுள்ள முதல் தரமான ஒருஜோடி சிவப்புக் கடுக்கனை மாதவனின் கையில் கொடுத்தார்.

கோவிந்தப் பணிக்கர்: பி.எல். தேறிட்டா உனக்கு ஒரு சம்மானம் தரணுமின்னு நான் நினைச்சிருந்தேன்—அதுதான் இது.

மாதவன்: இது ரொம்ப நல்ல கடுக்கன். நான் சாப்பிடுறதுக்கு இங்கே வர் றேன்ப்பா, நான் மதராசுக்கு ஒரு கடுதாசு எழுத வேண்டியிருக்கு. தபால் அனுப்பற நேரம். நான் உடனே வந்திடறேன்.

என்று சொல்லிவிட்டு மாதவன் அங்கிருந்து வீடு திரும் பினான். வீட்டை அடைந்தபோது வீட்டுக்குள்ளிருந்து இந்து லேகாவின் வேலைக்காரி அம்மு திரும்பிப் போனவள் மாதவனைக் கண்டதும் தன்னை நோக்கி மறுபடியும் வருவதைக் கண்டான்.

மாதவன்: ஏதாவது முக்கியமா?

அம்மு: அம்மா குளிக்கிறதுக்குப் படித் துறைக்கு வந்திருக்காங்க. அவசரம் கிறதனாலே கொஞ்சம் ஒரு தரம் வந்துட்டுப்போகச் சொன்னாங்க.

மாதவன்: ஓகோ, அப்படியா. படித்துறை யிலே–வேறெ யாரு இருக்காங்க?

அம்மு: யாரும் இல்லே.

மாதவன்: நீ முன்னாலே நட.

மாதவன் படித்துறையை அடைந்தபோது இந்துலேகா எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்காகத் தோடுகளைக்

களைந்து கொண்டிருந்தாள். மாதவன் பக்கத்தில் வந்ததும் உடனே தோடுகளைக் காதில் போட்டுக் கொண்டு மந்த காசத்துடன் மாதவனின் முகத்தைப் பார்த்தபடி நின்றாள். மாதவன் தயக்கம் எதுவுமில்லாமல் இரண்டு கைகளாலும் இந்துலேகாவை இறுகப் பிடித்து மார்போடு சேர்த்து அழுத்தமாக ஆலிங்கனம் செய்யவும், அதற்கு பதில் சொல்வதாக இந்துலேகா அதிமதுரமாக மாதவனின் அதரங்களில் ஒரு முத்தம் இட்டாள். முத்தமிட்டு முடிந்ததும் "விடுங்க—விடுங்க" என்று இந்துலேகா சொல்லலானாள்.

மாதவன்: நான் நாளை மதராசுக்குப் போறேன்.

இந்துலேகா: நான் கேள்விப்பட்டேன். பதினைஞ்சு நாள் இன்னமும் இருக்குல்ல ஹைகோர்ட் திறக்கிறதுக்கு, பிறகு எதுக்கு நாளைக்கே போகிறது? பெரியப்பா கோவிச்சதுக்காக அவசரப்பட்டு மதராசுக்குப் போறது எதுக்காக?

மாதவன்: நேத்து ஒரு சபதம் நடந்ததாமே இங்கே?

இந்துலேகா: ஆமாம்—ஆனா, என்கிட்ட எதுவும் கேட்டுக்காமே செய்ததுதான்.

மாதவன்: மாதவிகிட்ட எதுக்காகக் கேட்கணும்? தாத்தா இஷ்டப்படி மாதவி நடக்க வேண்டியதுதானே?

இந்துலேகா: இஷ்டப்படி நான் நடக்க வேண்டியவதான்—நடக்கவும் செய்வேன். ஆனால் சில காரியங்களிலே என்னிஷ்டப்படி நடக்க எனக்கு உரிமை இருக்கு. துர்பாக்கிய வசமா அதிலே ஒண்ணுதான் இந்தச் சபத விவகாரம்.

மாதவன்: கண்ணு, தாத்தா கழுத்தைப் பிடிச்சி வெளியே தள்ளிடுவாரு இப்படியெல்லாம் பேசினா.

இந்துலேகா: கட்டிக்கப்போறவரை நேத்து விரட்டலே? நாளை என்னையும் விரட்டட்டுமே.

மாதவன்: புருஷனுக்கு உன்னை வச்சி சுயமா காப்பாத்துற சக்தி இல்லாதிருக் கிறப்போ—

இந்துலேகா: வீட்டிலேருந்து விரட்டப்பட்ட வங்களுக்கு இந்தச் சாராரண உல கத்தில் தெய்வீகமாகக் கிடைக்கிற பாதுகாப்பு எனக்குப் போதும். நாம இனிமே எதுக்காகக் காத்திருக் கணும்? மரியாதையா எல்லாருக்கும் சொல்லிட்டு நமக்கு நாமே இந்தக் காரியத்தை நடத்திக்கிடுறதுதான் இனி உத்தமம்.

மாதவன்: நாம நம்மோட மனசாலே அதை ஏற்கனவே தீர்மானிச்சிட்டோ மில்ல. தாய்மாமனும் அப்படியே ஆகட்டும்னு ஒப்புத்துகிட்டாரு. இதுக்கு மத்தியிலே இப்படி ஒரு குழப்பம் உண்டாகும்னு யார் நெனச்சது. இப்போதானே இது சிக்கலாயிருக்கு?

இந்துலேகா: என்ன சிக்கல்—அதெல்லாம் ஒண்ணுமில்லே. இனிமே இதிலே எந்தச் சிக்கலும் ஏற்படுகிறதுக் கில்லே. நாளை மதராசுக்குப் போகும்போது என்னையும் சேர்த்துக் கூட்டிப் போகச் சம்ம தம்னா வர்றதுக்கும் நான் தயார் தான்.

மாதவன்: அது ரொம்பத் தப்பாப் போயிடும். மாதவியைப் பிரிஞ்சி கால்க்ஷனம் இருக்கிறதிலே எனக்கிருக்கிற மனோவேதனையை தெய்வம்

மட்டும்தான் அறியும். ஆனாலும் என்னோட காதலியைப் பற்றி ஜனங்களுக்குக் கெட்ட அபிப் பிராயம் உண்டாகிறது எனக்கு அதைவிட வேதனையாக இருக்கும். அதனாலே கொஞ்சம் பொறுத் துக்கோ. அஞ்சாறு நாளுக்கு முன்னாலே எனக்கு கில்ஹாம் துரைகிட்டேருந்து ஒரு கடுதாசு வந்திருக்கு. அதில் செக்ரட்ரி யேட்டில் ஒரு அசிஸ்ட்டன்ட் வேலை காலியாகும்னும், அதுக்குச் சம்மதம்தானான்னும் கேட்டிருந் தாரு. சம்மதம்னு பதில் எழுதிப் போட்டிருக்கிறேன். எவ்வளவு நாள் காத்திருக்கணும்னு தெரி யலே. அந்த வேலை கெடைச்சதும் உடனே நான் இங்கே வந்திரு வேன். பிறகு மாதவி என்னோட மதராசிலேதான். நாமரெண்டு பேருமே பணக்காரங்களா இருந் தாலும், எங்கப்பா எனக்குத் தேவை யான பணம் முழுக்கத் தந்தாலும் கூட, சொந்தமா ஒரு வேலை இல்லாமே என்னோட காதலியை மதராசுக்குக கூட்டிக்கிட்டுப் போறது நம்ம ரெண்டு பேருக்குமே நல்லதில்லே.

இந்துலேகா: என்னங்க கையிலே கடுதாசுப் பொட்டலம்?

மாதவன்: இது அப்பா எனக்கு இப்போ கொடுத்திருக்கிற ஒரு சம்மான மாக்கும்—நல்ல சிகப்புக் கடுக்கன்... இந்தா பாரு.

இந்துலேகா வாங்கிப் பார்த்தாள்.

இந்துலேகா: முதல் தரம்; அப்படியே உட்கா ருங்க—இதை நானே மாதவன் காதிலே போட்டு விடறேன்.

மாதவன் உட்கார்ந்தான். இந்துலேகா மாதவனின் காதில் கடுக்கன் இட்டாள். மாதவன் எழுந்திருக்க முயன்ற போது:

இந்துலேகா: உட்காருங்க. அப்படியே இந்தக் குடுமியையும் நானே கட்டிவிட்டிடு றேன். அதைக் கட்டி ஒரு பக்க மாக ஒதுக்கி வச்சாத்தான் அந்தக் கடுக் கனோட, முகத்தோட பாங்கு தெரியும்.

குடுமியைக் கட்டிவிட்டு இந்துலேகா மாதவனின் முகத்தைப் பார்த்தாள். நேர்த்தியாகக் கடுக்கனும் முகமும் பொருந்தியிருக்கின்றன என்பதை மாதவனின் கன்னங் களில் இந்துலேகா ஒரு நிமிட நேரம் இடையிடையே பெருமூச்சு விட்டபடி, சுறுசுறுப்புடன் இட்ட முத்தங்களால் மாதவனுக்குப் புரிந்துவிட்டது.

இவர்கள் இருவரும் இப்படிப் பேசிக் கொண்டும் உரசிக் கொண்டும் இருந்தபோது லட்சமிக்குட்டியம்மா படித் துறைப் படிக்கட்டுக்கு வந்து "யாரு அங்கே பேசிக்கிட்டி ருக்கிறது?" என்று கேட்டபடி குளியறைக்குள் வந்தாள்.

லட்சுமிக்குட்டியம்மா: உங்களுக்கு வெட்கம் என்கிறது வள்ளிசா விட்டுப்போச்சி. வெறி பிடிச்ச மாதிரி தோணுது. தம்பியைத் தேடி கோவிந்தப் பணிக்கர் ஆள் அனுப்பியிருக் காரு. சாப்பிடுறதுக்கு அங்கே வர்ற தாகச் சொல்லியிருந்தியா? பின்னே படித்துறைக்கு வந்து களி யாட்டமென்ன வேண்டியிருக்கு? இந்துலேகாவுக்கு இன்னமும் பசிக் கலியா? வெறிபிடிச்ச சிறுசுங்க. தம்பி நாளை போகணும்னு சொன்னாங்களே.

மாதவன்: நேரம் என்னாச்சி?

லட்சுமிக்குட்டியம்மா: பத்தரை மணி.

மாதவன்: சிவ! சிவ! எனக்கு ஒரு கடுதாசு அனுப்ப வேண்டியிருக்கு. அது இன்னிக்கு முடங்கிப் போச்சி. அப்பா கோவிச்சிக்குவாங்க. நான் உங்களைப் பார்த்துச் சொல்லிக் கிட்டுத்தான் கிளம்புவேன்.

என்று லட்சுமிக்குட்டியம்மாவிடம் சொல்லிவிட்டு நேராகத் தந்தை இருந்த வீட்டுக்குச் சென்றான்.

அங்கே சென்றபோது தந்தையார் சாப்பிடுவதற்காக இலைக்கு முன்னால் உட்கார்ந்திருந்தார். மாதவனுக்கும் இலை போட்டிருந்தது.

கோவிந்தப்பணிக்கர்: தம்பி எங்கே போயிருந்தே இவ் வளவு நேரம்?

மாதவன்: நான் ஒரு ஆளோட பேசிக்கிட்டி ருந்ததிலே கொஞ்சம் தாமதமா யிடிச்சி. அப்பா சாப்பிடாம இருந் திட்டீங்களாக்கும். கஷ்டம்! நேரத் திலே சாப்பிடறது இன்னிக்கு என் னாலே தாமதமாயிடிச்சி போலி ருக்கு.

கோவிந்தப்பணிக்கர்: உன்னாலேயும் இந்துலேகாவா லேயும் தாமதமாச்சின்னு சொல்லு. உன்னை மட்டும் குற்றவாளியாக்கி நான் தண்டிக்க மாட்டேன். சரி— கடுக்கன் மாட்டி முடிச்சாச்சா? இதெல்லாம் இந்துலேகாவோட வேலைதானே, இல்லியா?

மாதவன் வெட்கத்தால் தலை குனிந்தபடி சாப்பிடத் தொடங்கினான். சாப்பாடு முடிந்தவுடன் கோவிந்தப் பணிக்கர் மகனை உள்ளே அழைத்துச் சென்று தன்னுடைய மடியில் கிடத்தி உச்சந்தலையில் முத்தமிட்டுவிட்டுச் சொன்னார்:

கோவிந்தப்பணிக்கர்: இந்துலேகாவை நெனச்சி வருத்தப் படுறியா? அப்படீன்னா அது அநாவசியம். அந்தப் பெண்ணை எனக்கு நல்லாவே தெரியும். அவளைப் போல ஒரு புத்திசாலிப் பெண்ணை நான் இதுவரைக்கும் பார்த்ததில்லே. அவளுடைய அழகைப் பார்த்து நான் ஆச்சரியப் படறதைவிட புத்திகூர்மையையும் மன உறுதியையும் கண்டு நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். இந்த ஜன்மத்தில் உன்னைத் தவிர அவள் வேறே யாரையாவது ஏத்துக் கிடுவா என்கிற ஒரு சந்தேகம் உனக்கு வேண்டியதில்லை. பஞ்சு மேனோன்னு இல்லே அந்த பிரம்ம தேவனே வேறே விதமா தூண்டி விட்டாலும் இனி அதிலே எந்த மாற்றமும் உண்டாகப் போற தில்லே.

மாதவன் எதுவும் பேசாமல் தந்தையின் கையைத் தடவியவாறு மடியில் கிடந்தான்.

கோவிந்தப்பணிக்கர்: சின்னனை நீ இப்போ கூட்டிக் கிட்டுப் போறியா?

மாதவன்: கூட்டிக்கிட்டுப் போகணும்கிறது தான் என்னோட எண்ணம். ஆனால் அப்பாவோட இஷ்டம் தெரிஞ்சி அதன்படி செய்யலாம்னு நினைக்கிறேன்.

கோவிந்தப்பணிக்கர்: உன்னோட இஷ்டம் போலே செய். கூட்டிக்கிட்டுப் போனால் அவ னுக்கு வேண்டிய எல்லாச் செலவு களுக்கும் நான் தர்றேன்.

மாதவன்: எதுக்காக அப்பா தரணும்? தாய் மாமன் தர வேண்டியதுதானே நியாயம்?

கோவிந்தப்பணிக்கர்: தரல்லேன்னா?—தரமாட்டார்னு தான் நான் நினைக்கிறேன்.

மாதவன்: தரல்லேன்னா—

கோவிந்தப்பணிக்கர்: சண்டை வேண்டாம். பஞ்சு மேனோான் இயல்பாகவே கோபக் காரனும் புத்திக்குறைவான மனு ஷனும் ஆச்சே! சண்டை வந்தா ஜனங்கள் அதுக்குக் காரணம் தெரிஞ்சி சண்டை போடுறவங் களைக் கேலி செய்ய மாட்டாங்க. சண்டை வந்திட்டா ரெண்டு பக்கத் தையும் ஒரே மாதிரி தான் கிண்டல் பண்ணுவாங்க. உலக அபவாதத் துக்குப் பயந் தாகணும்.

மாதவன்: எனக்காக வேண்டி அப்பாவுக்கு அநாவசியமா இந்தச் செலவை இழுத்து விடுறதுல நான் வருத்தப் படறேன்.

கோவிந்தப்பணிக்கர்: எனக்கு இது என்ன பெரிய செலவு, தம்பி? உன்னுடைய தாய்மாமன் வீட்டுக் குடும்பத்தைப் போல எனக்குச் சொத்து இல்லேன் னாலும், செலவும் அவ்வளவாக இல்லாததனால் மிச்சம் பிடிச்சது எனக்கும் நிறைய இருக்கு. அதை யெல்லாம் நான் உன்னுடைய தேக சௌக்கியத்துக்கும் விருப்பப் பட்டதை நிறைவேத்துறதுக்கும் செலவு செய்யச் சம்மதம்தான். சின்னனைக் கூட்டிக்கொண்டு போ. ஆனால் காரணவர் தாய் மாமன் கிட்ட முன்கூட்டியே கேட்டுக்கிடணும். இதைக் கேட்கிற துக்கு நீ போக வேண்டாம். அந்தப் பையனோட அப்பன் சீனுப்

பட்டரை அனுப்பிச்சிக் கேட்டுக்கச் சொல்லு. பயணம் கிளம்பறப்போ நீயும் அவர்கிட்டச் சொல்லிட்டுப் போ. சண்டைக்கு வம்புக்கிழுத்தால் பதிலுக்குப் பேசாதே.

மாதவன்: அப்படியே செய்யறேன்ப்பா; நான் சாயந்திரமும் சாப்பிடுறதுக்கு இங்கே வர்றேன். நேரப்படி அப்பா சாப்பிட்டு முடிச்சிரணும். எனக்காகக் காத்திருக்கக் கூடாது.

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருந்தபோது சீனு பட்டர் கோவிந்தப்பணிக்கரைப் பார்ப்பதற்காக வேண்டி அங்கே வந்து வெளிமுற்றத்தில் நின்றபடி ஒரு முறை செருமினார்.

கோவிந்தப்பணிக்கர்: யாரு வெளியிலே?

சீனுபட்டர்: நான்தாங்க—சீனுபட்டர்.

கோவிந்தப்பணிக்கர்: உள்ளே வாரும். இவருகிட்ட நானே விவரம் சொல்லிடுறேன், மாதவா.

சீனுபட்டர் உள்ளே வந்தவுடன்:

கோவிந்தப்பணிக்கர்: உட்காரும் ஸ்வாமீ!

சீனுபட்டர்: யாரது—மாதவனோ? அதென்ன வதந்தி, நான் கேள்விப்பட்டது? காரணவர் கோவமா இருக்காரு. என்னோடவும் கோவமா இருக்காரோன்னு சந்தேகம். கொஞ்சம் முன்னாடி நான் கோயில்லேருந்து வரும்போது அவரை வழியிலே பார்த்தேன். என்னோட எதுவும் பேசாமே தலையைக் குனிஞ்சிக்கிட்டுக் கடந்து போயிட்டாரு. இப்படித் துவண்டுபோய் நான் அவரைப் பார்த்ததே இல்லே. முன்னாலே ஒரு தடவை ரெண்டு

தடவை பார்த்திருக்கிறேன். ஆனால் அதுக்கெல்லாம் சரியான காரணங்கள் இருந்திருக்கு. இதுக்கான காரணம் நான் எவ்வளவு யோசிச்சும் புலப்படலே.

மாதவன்: நீங்க சின்னனோட அப்பா வாச்சே—அது ஒரு நல்ல காரண மில்லையா?

கோவிந்தப்பணிக்கரும் சீனுபட்டரும் சிரித்தார்கள்.

கோவிந்தப்பணிக்கர்: ஸ்வாமி, நீங்க இப்பவே பஞ்சு மேனோன் வீட்டுக்குப் போகணும். போய், சின்னனைத் தம்பி மதராசுக்குக் கூட்டிப் போகிறான் என்றும், அதுக்கு அவருடைய அனுமதி மட்டும் போதும் என்றும் சொல்லணும். அவனுக்கான படிப்புச் செலவை நான் கொடுக்கிறதாகத் தீர்மானிச்சிருக்கேன். அதை நீங்க அவருகிட்டச் சொல்ல வேண்டாம்.

சீனுபட்டர்: ஓ-கோ. இப்பவே போய் சொல்லிடுறேன். சின்னனுடைய செலவுக்கு நான் கொடுக்கப் போறதாகச் சொல்லிடுறேன். எனக்கும் ஒரு மரியாதை இருக்கட்டுமே. என்னை நேருக்கு நேரா கோவிச்சிக்கிடுவாரு. ஏதாச்சும் திட்டிப் பேசினா நானும் பேசிடுவேன்.

கோவிந்தப்பணிக்கர்: சச்சரவு வேண்டாம். செலவைப் பொறுத்தமட்டும் அங்கே இஷ்டப் பட்டதைப் பேசிக்குங்க. ஆனால் பொய் பேசறதுக்கு நான் சொல்ல மாட்டேன்.

சீனுபட்டர்: ஒரு பொய்யுமில்லே அது. நான் அப்படித்தான் பேசுவேன்.

மாதவன் தந்தையின் முகத்தைப் பார்த்துச் சிரித் தான்—அப்பாவும் சீனுபட்டரும் அவ்வாறே சிரித்தார்கள். "அப்படித் தான் நான் பேசுவேன்" என்று சொல்லி சீனு பட்டர் தலையை ஆட்டியபடிச் சிரித்தார்.

சீனுபட்டர் உடனே அங்கிருந்து புறப்பட்டார். பூவரங்கு சென்று பஞ்சுமேனோன் இருந்த மாடியின் மேல் ஏறி வெளிமுற்றத்தில் நின்றார்.

பஞ்சுமேனோன்: யாரு அங்கே?

சீனுபட்டர்: நான்தான்—சீனு

பஞ்சுமேனோன்: நீரு எதுக்கு இப்போ வந்தீரு?

சீனுபட்டர்: ஒண்ணு சொல்ல வேண்டியிருக்கு.

பஞ்சுமேனோன்: என்னவாம்?—சொல்லும்.

சீனுபட்டர்: என் மகன் சின்னனை இங்கிலீசு படிக்க வைக்கப் போறேன்.

பஞ்சுமேனோன்: உமக்கு இங்கிலீசு தெரியுமா?

சீனுபட்டர்: நான் செலவு பண்ணிப் படிக்க வைப்பேன்.

பஞ்சுமேனோன்: படிக்க வைங்களேன்.

சீனுபட்டர்: மதராசுக்கு அனுப்பி வைக்கப் போறேன்.

பஞ்சுமேனோன்: எந்த ராசிக்கும் எப்படியும் அனுப்பிவையும்—எந்தக் கழுவி லேயும் கொண்டுபோய் ஏத்திக் கிடும்.

சீனுபட்டர்: கழுவிலேத்திப் படிக்கிறதில்லே இங்கிலீசு.

பஞ்சுமேனோன்: என்ன ஓய் கோமுட்டிப் பட்டரே, அதிகப்பிரசங்கித்தனமா பேசறீர்? அந்தக் கூறுகெட்ட மாதவன் சொல்லி இங்கே என்னை அவ மானப்படுத்த வந்தீராக்கும்? எறங் குய்யா கீழே எறங்கு—யாருடா அங்கே? இவரைப் பிடிச்சி வெளியே தள்ளுங்கடா.

"கோமுட்டியா இருந்தா உம்ம வீட்டுப் பொண்ணுங் களை எனக்குக் கட்டி வைப்பீரா?" என்று ஈனக் குரலில் சொல்லியபடி பட்டர் வேகமாக இறங்கிக் கீழே போய் விட்டார்.

தீர்மானிக்கப்பட்டிருந்தபடி அடுத்த நாள் அதி காலையில் மாதவன் சின்னனையும் அழைத்துக் கொண்டு மதராசுக்குப் புறப்பட்டுப் போனான்—பஞ்சுமேனோனின் கோபம் படிப்படியாக அதிகரித்துக் கொண்டிருந்தது என்று தெரிந்ததனால் மாதவன் பயணம் சொல்லிக் கொள்ள அவருடைய வீட்டுப் பக்கம் போகவே இல்லை.

5

# பஞ்சுமேனோனின் கோபம்

தன்னுடைய சம்மதம் இல்லாமல் சின்னனை மதராசுக்கு அழைத்துப் போனதாலும், சீனுபட்டரின் அதிகப்பிரசங்கத் தனமான பேச்சு வார்த்தையினாலும் பஞ்சுமேனோனின் கோபம் பொறுத்துக்கொள்ள முடியாததாக இருந்தது. தன் எதிரில் தென்பட்ட சகலரையும் சகட்டுமேனிக்குத் திட்டவும், முடிந்தவர்களை அடிக்கவும் தொடங்கினார். முதலாவதாக—சாத்தரமேனோனை அழைத்து வரச் சொன்னார். மிகவும் சாதுவும் பொறுமைசாலியுமான சாத்தரமேனோன் பஞ்சுமேனோனின் எதிரில் வந்து ஐம்புலனும் அடங்கி பயந்தபடி நின்றான்.

பஞ்சுமேனோன்: டேய், கூறுகெட்ட கழுவேறி, போக்கத்தவனே, சின்னானை மதராசுக்கு அனுப்பிச்சியோ? எலே!

சாத்தரமேனோன்: சின்னனை மதராசுக்கு மாதவன் கூட்டிக்கிட்டுப் போனாரு.

பஞ்சுமேனோன்: உன் சம்மதம் இல்லாமலேயா?

சாத்தரமேனோன்: என்கிட்ட தனிப்பட்டு சம்மதம் எதுவும் வாங்கிக்கிடல்லே.

பஞ்சுமேனோன்: உன் சம்மதம் இல்லாமலேயா கூட்டிக்கிட்டுப் போனான்?—அதைச்சொல்லு, போக்கத்தவனே, அதைச் சொல்லு.

சாத்தரமேனோன்: நான் மறுக்கலே.

பஞ்சுமேனோன்: நீ ஏன் மறுத்துச் சொல்லலே?

எனக்கு இந்தக் காரியம் சம்மதம் இல்லேன்னு உனக்குத் தெரியுமில்லே? பின்னே எதுக்காகத் தடுத்துக் சொல்லலே?

சாத்தரமேனோன்: பெரியமாமன்கிட்ட அப்பா பேசி சம்மதம் வாங்கிட்டதாகச் சொன்னான்.

பஞ்சுமேனோன்: எந்த அப்பன்? கோமுட்டியா? அந்தப் போக்குக்கெட்ட கோமுட்டியைக் குடும்பத்திலே சேர்த்துக்கிட்டதிலேருந்து இங்கே கண்றாவியெல்லாம் நடக்குது. அந்தக் கோமுட்டி உன்கிட்ட என்னண்ணு சொன்னான்?

சாத்தரமேனோன்: அப்பா கேட்டு சம்மதம் வாங்கினதா என்கிட்ட கோபாலன்தான் சொன்னான்.

பஞ்சுமேனோன்: கோபாலனைக் கூப்பிடு.

இந்த கோபாலன் ஊர்சுற்றியும் அவிவேகியுமான ஓர் இளவட்டம். சொன்னபடி கோபாலன் காரணவருக்கு எதிரில் வந்து நின்றான்.

பஞ்சுமேனோன்: உன்கிட்ட உன்னப்பன் கோமுட்டி என்னடா சொன்னான்? சின்னனைக் கூட்டிப்போக நான் சம்மதிச்சதாகச் சொன்னானா?

கோபாலன்: எங்கப்பா கோமுடிட் யில்லே—பட்டராக்கும்.

பஞ்சுமேனோன்: என்னடா சொன்னே நீ—புத்தி கெட்ட மடப்பயலே!

என்று சொன்ன பஞ்சுமேனோன் எழுந்து நின்று கோபாலனுக்கு இரண்டு மூன்று அறை கொடுத்தார்.

கோபாலன்: என்னை சும்மா அடிக்காதீங்க.

பஞ்சுமேனோன்: அடிச்சா என்னடா? இப்போ அடிச்சேனில்லே? என்னடா, உனக்கு உறைக்கலே?

அப்போது சங்கரமேனோன் ஓடி வந்தார். மாமனுக்கு எதிரில் போய் நின்று கோபாலனைப் பிடித்துத் தள்ளி பின்னால் கொண்டுபோய் நிறுத்தினார்.

பஞ்சுமேனோன்: சங்கரா, இங்கே எல்லாமே தப்பா நடக்குது. கலியுகத்து விசேஷம்! அந்தக் கூறுகெட்ட மாதவன் என்னை அவமானப்படுத்தினதை யெல்லாம் நீ கேள்விப்பட்டியா? என் கெட்ட காலத்துக்கு அவனை நான் ஆங்கிலப் படிப்பு படிக்க வச்சதனாலே எனக்கு வந்த வினை தான் இது. அதிருக்கட்டும். இப்போ இந்தத் தெக்கு வடக்குத் தெரியாத கிறுக்கன் கோபாலன்கூட என்னை எதிர்த்துப் பேசறான். இவனோட பல்லை உடைக்க வேண்டாம்?

சங்கரமேனோன்: இந்தக காலத்துப் பசங்களோட அதிகம் பேச்சுக் கொடுக்காமே இருக்கிறதுதான் நல்லது. மரியாதை கொஞ்சம்கூட இல்லாத காலமாகிப் போச்சி. நான் இவங்களோட எதுவும் பேச்சு வச்சிக்கிர்றதில்லே.

பஞ்சுமேனோன்: நீதான் இவங்களையெல்லாம் இப்படித் தும்பறுத்துவிட்டது. போகட்டும்—சாத்தரன் இனிமேலே செருதுருத்திக் களத்திலே வேலை எதுவும் பார்க்க வேண்டாம். கணக்கு வழக்கையெல்லாம் இப்பவே முடிக்கணும். வசூலான பணத்துக்கெல்லாம் கணக்குக் காண்பிக்கணும்—இந்த நிமிஷமே செய்து முடிக்கணும்.

சாத்தரமேனோன்: பெரியமாமன் சொல்றபடியே நடக்கிறேன்.

பஞ்சுமேனோன்: கழுவேறி! உனக்குப் பெரியமாமன் சொல்லணுமாக்கும்? கோமுட்டி மகன்தானேடா நீ? அதனாலேதான் நீ இப்படிப் புத்திகெட்டுப் போறே. உனக்கு ஏதாச்சும் தேவைப்பட்டா என்கிட்ட கேட்காம எடுத்துக்கக் கூடாது. மாதவனுக்கு அவனுடைய அப்பன் அதிகப்பிரசங்கி கோவிந்தப்பணிக்கரே கொடுக் கட்டும். கோவிந்தப்பணிக்கருக்குக் குடும்பமே இல்லை. அந்த அகம் பாவம்தான் மாதவனுக்கு. உங் கப்பன் கோமுட்டியாலே என்ன தர முடியும்? விருந்து எச்சிலி லேருந்து பொறுக்கின அப்பளமும் பழமும்—இல்லே? வேறே என்ன இருக்கு அந்தக் கோமுட்டிகிட்ட? பின்ன எதுக்காக இத்தனை அழிச் சாட்டியம் பண்றே, கூறுகெட்ட கிறுக்கா! நீ ஏன் எதுவுமே பேசமாட்டேங்கறே?

சாத்தரமேனோன்: எனக்கு எல்லாத்துக்கும் பெரிய மாமன்தானே கதி?

பஞ்சுமேனோன்: பின்னே நீ ஏன் மாதவனைப் போலக் குறும்பு பண்றே? யாருடா சின்னனுக்கு செலவுக்குப் பணம் கொடுத்தது?

சாத்தரமேனோன்: அப்பாதான்னு சொன்னான் கோபாலன்.

பஞ்சுமேனோன்: (கோபாலனிடம்) அப்படித்தானா?

கோபாலன்: அப்பாதான் கொடுத்தாங்க.

பஞ்சுமேனோன்: அப்பன்—உங்கப்பன் பாலக் காட்டுக் கோமுட்டி, சமையல் காரனா வயிறு வளர்க்கிற பிச்சைக்காரன்! அவன்கிட்ட எங்கே இருக்குது பணம்?

கோபாலன்: எங்க அப்பா கோமுட்டியில்லே.

சங்கரமேனோன்: அதிகப்பிரசங்கித்தனமா பேசாதே.

பஞ்சுமேனோன் எழுந்து அடிக்க ஓடினார். சங்கர மேனோன் குறுக்கே புகுந்து மாமனின் கோபத்தைத் தணிக்க முயன்றதில் இரண்டு மூன்று அடி அவருக்கும் விழுந்தது.

பஞ்சுமேனோன்: சங்கரா! கோபாலன் பொறுப்பில் விட்ட நிலத்தையெல்லாம் இப்போ திருப்பி வாங்கணும். இந்த வெட்டிப்பயலுக்கு இனி ஒரு காசு கூட நான் கொடுக்க மாட்டேன்.

கோபாலன்: நிலத்தையெல்லாம் நான் ஒரு வருசத்துக் கட்டுக்குத்தகையா வாரத்துக்கு எடுத்திருக்கேன். வருசம் முடிஞ்ச பிறகுதான் குத்தகை முடியும்.

பஞ்சுமேனோன்: நீ தரமாட்டே?

கோபாலன்: குத்தகை முடியணும்.

பஞ்சுமேனோன்: நீ தரமாட்டே? உன்னைத் தர வைக்கிறேன், பார்க்கிறியா? தர வைக்கிறதைப் பார்க்கணுமா?

கோபாலன்: தர வைக்கிறதை நானும் பார்க்கிறேன்.

பஞ்சுமேனோன்: நீ தருவியா மாட்டியா?

கோபாலன்: என் கைவசம் நிலம் எதுவும் இல்லே.

பஞ்சுமேனோன்: என்னது—ஏண்டா திருட்டுப் பயலே—பொய் வேறே பேசறியா? உன்னை நான் நிலத்தைப் பார்த்துக்கிடப் பொறுப்பிலே விடலேன்னு சொல்றியா?

கோபாலன்: பொறுப்பிலே விடல்லேன்னு நான் சொல்லலே. நான் ஒரு வருசத்துக் வேறே ஆள்கிட்ட பொறுப்பிலே விட்டிருக்கேன்னு சொல்றேன்.

பஞ்சுமேனோன்: நீ ஒவ்வொன்னாப் புரட்டுவாதம் பண்றியோ?

என்று பேசிய பஞ்சுமேனோன் எழுந்து மறுபடியும் அடிக்க ஓடினார். கோபாலன் தப்பித்து ஓடினான். பின்னாலேயே கிழவரும் முன்னதாக கோபாலனுமாக ஓடி வீட்டுக் குள்ளிருந்து வெளியே போய்ச் சேர்ந்தார்கள். முற்றத்து வெளிவரை ஓடினார்கள். கடைசியில் சாக்கடை வாய்க் காலைத் தாண்டும்போது பஞ்சுமேனோன் விழுந்து முழங் கால் சிராய்த்துக் கொண்டது. அப்போது சங்கரமேனோன் போய்ப் பிடித்துத் தூக்கினார். பஞ்சுமேனோன் அதிக ஆத்திரத்துடன் அதன் பிறகும் ஓடத் தொடங்கினார். சங்கர மேனோன் தடுத்து நிறுத்தி அமைதிப்படுத்தும் வார்த்தைகள் பேசலானார்.

பஞ்சுமேனோன்: நாராயணா!—காலம் போற போக்கைப் பாரு. கலியுகத்தோட ஒரு விசேஷம்! இந்தக் கூறுகெட்ட கிறுக்கன் பின்னாலே ஓடி விழுந்து இந்தா என் காலு ரெண்டும் போச்சி. நான் இதையெல்லாம் அனுபவிக்கணுமா? கும்மிணிக்கும் இந்தக் கூறுகெட்ட பசங்களுக்கும் இனி அரைக் காசுகூட, புழங்கற துக்கு எதையும் கொடுக்கப் போற தில்லே. எல்லாத்தையும் இன் னிக்கே திருப்பி வாங்கிடணும், சங்கரா. வேலைக்காரங்களும் வேலைக்காரிகளும் தின்கிறது போல சோறு மட்டும் தின்னிட்டுப் போகட்டும்.

என்று சொல்லிவிட்டு பஞ்சுமேனோன் மிகுந்த வெறுப்போடு மாதவனின் தந்தை கோவிந்தப்பணிக்கரை நன்றாகத் திட்டித் தீர்க்க வேண்டுமென்று தீர்மானித்து அவருடைய வீட்டை நோக்கிப் புறப்பட்டார். வழியில் சீனுபட்டரைப் பார்த்தார்.

பஞ்சுமேனோன்: முந்தா நாள் வீட்டிலே என்ன சொன்னீரு?

சீனுபட்டர்: என்னது, எனக்கு ஞாபகமில்லே.

பஞ்சுமேனோன்: கோமுட்டீ! ஞாபகமில்லே?

சீனுபட்டர்: எதுக்காக பிராமணங்களை சும்மா அவமானப்படுத்திப் பேசறீங்க?

பஞ்சுமேனோன்: பிராமணன்! நீர் பிராமணனே இல்லை. நீர் என்னய்யா சொன்னீரு?

சீனுபட்டருக்கும் சிறிது ஆத்திரம் வந்தது.

சீனுபட்டர்: நீரு பையனைக் கழுவிலேத் தணும்னு சொன்னப்போ, அப்படியில்லே இங்கிலீசுப்படிப்பு படிக்க வைக்கிறதுன்னு நான் சொன்னேன்.

பஞ்சுமேனோன்: நீர் இனிமேலே என் வீட்டுப்படி ஏறக்கூடாது.

சீனுபட்டர்: ஓ-கோ. எனக்குப் பூரண சம்மதம். வரவே இல்லே.

பஞ்சுமேனோன்: அப்படியே பிராமணச் சத்திரத்திலேயும் கோயில்லேயும் தலை காட்டக் கூடாது.

சீனுபட்டர்: அதுக்கு உம்ம அதிகாரமில்லே. எல்லா சத்திரத்துக்கும் கோயிலுக்கும் பிராமணன் போகலாம்.

பஞ்சுமேனோன்: என் சத்திரத்துக்கும் கோயிலுக்கும் என் சம்மதம் இல்லாமே நீர் வந்திருவீரோ? அதையும் பார்த்திரலாம்.

சீனுபட்டர்: என்னங்காணும் பார்த்திரலாம்? நிச்சயம் போவேன். தடுத்தால் நான் உம்ம மேலே பிராது கொடுப்பேன்.

பஞ்சுமேனோன்: என்ன சொன்னே கோமுட்டி?

என்று சொல்லி பட்டருக்கு எதிரில் நின்றார். இந்தக் கூச்சலும் சச்சரவும் கேட்டு சங்கரமேனோன் ·ஓடோடி

வந்தார். பட்டரை அங்கிருந்து போகச் சொல்லி ஜாடை செய்தார். தாய்மாமன் பக்கத்தில் போய் நின்று சமாதானம் செய்யத் தொடங்கினார்.

பஞ்சுமேனோன்: இந்த சீனுபட்டரை இந்தத் திசைப் பக்கமே நான் இனிமே பார்க்கக் கூடாது. அவன் என்மேலே பிராது கொடுக்கப் போறானாம்! அயோக்கியன், துஷ்டன், பாவி. திவான்ஜி மாமன்கிட்ட வேலைக்காரனாட்டம் இருந்தவன்தானே இந்தக் கோமுட்டி! என்னுடைய முட்டாள்தனத்தினாலே இந்தக் குடும்பத்திலே சேர்த்துக்கிட்டேன். தன்னை மாதிரியே அயோக்கியன்களா ரெண்டு மூணு பசங்களையும் பெத்து வச்சிருக்கான். அவங்களை முன்னிட்டு இப்போ என் சொந்த மருமகனையும், என் சொந்தப் பையன் மாதவனையும் பகைச்சிக்கிட்டு சண்டை போட வேண்டியதாகிப் போச்சி.

"சொந்தப் பையன் மாதவன்" என்று சொன்னபோது அந்த நல்ல மனிதரின் தொண்டை அடைத்துப்போய் கண்ணீர் வெளிப்பட்டது.

சங்கரமேனோன்: மாதவன் இது மாதிரியெல்லாம் நடந்துக்க மாட்டான். அவன் ஏதோ ஒரு வெறுப்பிலே விவேகமில்லாம் பேசிட்டுப் போயிட்டான் போலிருக்கு.

"விவேகமில்லாம் பேசிட்டுப் போயிட்டான்" என்று சொல்லக் கேட்டபோது மாதவனைப் பற்றி மீண்டும் பஞ்சுமேனோனுக்கு வெறுப்பினால் ஆத்திரம் வந்தது.

பஞ்சுமேனோன்: நீ ஒரு புத்தியில்லாத கழுதை, உதவாக்கரை, பொறுக்கி. விவேகமில்லாம பேசிட்டுப் போயிட்

டானோ? மாதவனா? இருக்கட்டும்—அவனை நான் பார்த்துக்கிடுறேன். என்கிட்ட பேசினதுக்கு அவனுக்கு நான் 'பாடம் சொல்றேன்'. அவன் நொந்துபோய் என் காலிலே வந்து விழுவான். அவன் அப்பனோட பணமும் புல்லும் எனக்குச் சமம்.

என்று சொல்லியபடி பஞ்சுமேனோன் தடியை ஊன்றி கோவிந்தப்பணிக்கரின் வீடு நோக்கி நடந்தார். சங்கர மேனோன் பின்னால் தொடரவில்லை. சங்கரமேனோன் கொஞ்சம் புத்திசாலி. பஞ்சுமேனோன் அதிதிறமைசாலி யான கோவிந்தப்பணிக்கரைச் சந்தித்தால் சண்டை வரப் போவதில்லை என்று அவருக்கு நன்றாகவே தெரியும். அதனால் சங்கரமேனோன் வீடு திரும்பினார். பஞ்சு மேனோன் மெதுவாக கோவிந்தப்பணிக்கரின் வீட்டுப்படி ஏறினார். கோவிந்தப்பணிக்கர் ரொம்பவும் மரியா தையாகப் பஞ்சுமேனோனை ஒரு நாற்காலியில் இருக்கச் செய்தார். தானும் உட்கார்ந்தார்.

பஞ்சுமேனோன்: இந்த மாதவன் இங்கே வந்து போனானில்ல? விவரமெல்லாம் பணிக்கருக்குத் தெரியுமா?

கோவிந்தப்பணிக்கர்: அவனுக்கு இப்பவெல்லாம் கொஞ்சம் அகம்பாவம் கூடிப் போச்சி. முதல்லே பசங்க இங்கி லீஷ் படிச்சாலே அகம்பாவம் கூடித் தான் போகும்—அதோட பரீட்சை யிலேயும் மத்ததிலேயும் தேறி கொஞ்ச நாள் மதராசிலேயே இருந் திட்டா சொல்லவே வேண்டிய/ தில்லே. உங்க முன்னாலே நின்னு கொஞ்சம் எளக்காரமா பேசினதா நான் கேள்விப்பட்டேன். எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கலே. நான் அவன்கிட்ட ஒரு வார்த்தைகூட இதைப் பத்திக் கேட்டுக்கிடல்லே—கேட்டு என்ன லாபம்?

பஞ்சுமேனோன்: அப்படிக் கேட்காம விட்டிட்டா பசங்க கூறுகெட்டுப் போயிடு வாங்களே! தட்டிக் கேட்கலேன்னா பசங்க மட்டுமரியாதை இல்லாமே தறிகெட்டுப் போயிடுவாங்களே.

கோவிந்தப் பணிக்கர்: சரிதான், சரிதான். நீங்க சொல் றதும் ரொம்பச் சரிதான். சந்தேக மில்லே. இப்படியே விட்டுட்டா பசங்களுக்கு மட்டுமரியாதை இல்லாமப் போயிடும்.

பஞ்சுமேனோன்: என்ன பணிக்கரே, நான் இள வட்டமா இருந்தப்போ (இந்த மாத வன் இப்போ இருக்கிற வயசு) என் பெரியமாமன் எதிரில் நின்னா பயத்திலே நான் கிடுகிடுத்து நடுங்கு வேன். ஏதாச்சும் கேட்டால் அதுக்கு பதில் சொல்றதுக்கு பயந்து நான் முழிச்சிக்கிட்டு நிப்பேன். மாமனைக் கண்டால் ஒரு சிங் கத்தைப் பார்த்தாற்போல எனக்கு பயமா இருக்கும். இப்போகூட மாமனை நினைச்சிக்கிட்டா எனக்கு பயமா இருக்கு. மாமன் உயி ரோட இருந்தப்போ ஒரு நாள் நடந்த கதையைச் சொல்றேன். அப்போ எனக்கு நெருக்கமாப் பழகின மாப்பிள்ளை இனத்துப் பையன் ஒருத்தன் இந்தப் பக்கம் நண்பனா இருந்தான்—குஞ்ஞாலிக் குட்டின்னு அவனுக்குப் பேரு. அவனை உங்களுக்குத் தெரியாது. அவன் செத்து ரொம்பக் கால மாகிப் போச்சி. அவனுக்கும் அப்போ கிட்டத்தட்ட என் வயசு தான். அவன் ஒரு சமயம் ஏதோ ஒரு

திசையிலே அவனோட அப்பா கூடச் சேர்ந்து வியாபார விஷய மாகவோ வேறே எதுக்காகவோ போய்ட்டுத் திரும்பறப்போ ஒரு ஜோடி செருப்பை ஒரு துணியிலே சுருட்டிவச்சி பூவள்ளி வீட்டிலே யிருந்து இறங்கிப் போனேன். அங்கேயிருந்து ரொம்ப தூரம் தாண்டிப் போன பிறகுதான் காலிலே போட்டு நடப்பேன். திரும்பி வரும் போதும் அதே மாதிரி தொலை விலேயே செருப்பை எடுத்து யாருக்கும் தெரியாமல் சுருட்டிக் கொண்டு வருவேன். இதுதான் பழக்கமாக இருந்தது. அப்படி இருக்கும்போது ஒரு நாள் சாயங்காலம் நான் வழக்கம்போலத் துணியிலே சுருட்டிக்கிட்டுத் திரும்பிக் கிட்டிருக் கறப்போ மாமன் மேல் முற்றத் திலே நிற்கிறதைப் பார்த் திட் டேன். செத்துப்போன திவான்ஜி மாமனோட மாமனா இருந்த அவர் அதிசூரனாக்கும்! என்னைப் பார்த் ததும்"என்னடா கையிலே சுருட்டி எடுத்துப் போகிறது?" அப்படீன்னு கேட்டார். நான் பயத் திலே எதுவும் பேசாம நின்னேன். மாமன் முற்றத்திலேயிருந்து இறங்கி வந்து என் கையை எட்டிப் பிடிச்சார். சுருட்டி யிருந்த துணியைப் பிரிக்கச் சொன்னார். பிரிச்சுப் பார்த் தப்போ செருப்பு இருக்கிறதைப் பார்த்தார். "நீ செருப்புப் போட்டு நடக்கிற அளவுக்கு வந்தாச்சோ

காலிப்பயலே" அப்படீன்னு சொல்லி என்னுடைய குடுமியைக் கையாலே மடக்கிப் பிடிச்சி முற்றத் துக்கு இழுத்துக்கிட்டுப் போய் அடிக்க ஆரம்பிச்சார். நாராயணா! சிவ, சிவா! அடிக்கிறதை நிறுத் தறதா இல்லை. அதுவும் போதா துன்னு உள்ளே போய் ஒரு கம் பெடுத்து வந்து விளாசத் தொடங் கினார். இதோ பாரும், என்னோட இந்தத் தொடையிலே இருக்கிற இந்தப் பெரிய தழும்பு அன்னிக்கு அடிச்ச அடியிலே உண்டான காயத்தினாலே வந்ததாக்கும். நான் பலக்கக் கத்தினேன். அன்னிக்கு திவான்ஜி மாமன் வீட்டிலேதான் இருந்தார். என் கூப்பாடு கேட்டுப் பூவரங்கிலிருந்து ஓடி வந்து மாமனைத் தடுத்து நிறுத்தி என்னைப் பூவரங்குக்குக் கூட்டிப் போய் எண்ணெயும் மற்றதும் தடவி காயங்களிலே மருந்து போட்டார். நான் பதினைஞ்சி இருபது நாளாக எழுந்திருக்க முடியாதபடி படுக்கையிலே கிடந் தேன். என் செருப்பைச் சுட்டுப் பொசுக்கி மாமன் நினைச்ச படியே அதைச் சாம்பலாக்கித் தீர்த்தார். அதிலேருந்து இதுவரைக்கும் நான் செருப்பே போட்டதில்லை. செருப்பை எங்கேயாச்சும் பார்த் திட்டா இப்பவும் எனக்கு பயம் தான். இந்தக் காலத்துப் பசங்க கதையை நினைச்சுப்பாரும்— மாதவன் - துலுக்கன் செருப்பைப்

போட்டுக்கிட்டுத்தான் நடக்கிறான். அவன் சில சமயங்களிலே வீட்டுக் குள்ளேகூட அதை மாட்டிக்கிட்டு நடக்கிறதை நான் பார்த்திருக்கேன். பசங்க இப்படி கூறுகெட்டுப் போனால் என்ன செய்றது? பசங்களை இங்கிலீசு படிக்க வைக்கிறதைப் போலக் கேவலம் வேறே ஒண்ணுமில்லே. இந்து லேகா இந்த இங்கிலீசு மட்டும் படிக்காம இருந்திருந்தா இப்போ எவ்வளவு நல்ல பொண்ணா இருந்திருப்பா! என்ன செய்றது! கிரகம் சரியில்லாதப்போ சங்க டங்கள் ஒவ்வொண்ணா வந்து சேருது. இந்த இங்கிலீசு படிச்சவங்க நடந்துக்கிடுறதைப் பார்த்து அதைப் படிக்காதவங்களும் அதே மாதிரி நடக்கத் தொடங்கிட்டாங்க. அந்தத் திருட்டுப்பயல் கோபாலன், அந்தக் கோமுட்டி சீனுவோட மகன், என் கிட்ட எவ்வளவு எகத்தாளமா இப்போ பூவரங்கிலே பேசிட் டான்—எனக்குப் பொல்லாத ஆத்திரம். நல்லா உதைக்கணும்னு நினைச்சி நான் அவன் பின்னா லேயே ஓடினேன். நடுவழியிலே நான் விழுந்திட்டேன். இதோ என் முழங்கால்லே சிராய்ப்பு. பாரும்—கலியுகத்திலே நடக்கிறதைப் பாரும்.

கோவிந்தப்பணக்கர்: கலியுக விவகாரம்தான். சந் தேகமே இல்லை. முதல் தரமான கலியுக விவகாரம். இல்லாட்டி இந்த

மாதிரி விழுறதும் காயம்படுறதும் நடந்திருக்காதில்ல—சந்தேகமே இல்லை.

பஞ்சுமேனோன்: கோவிந்தப்பணிக்கருக்கு இப்போ நினைவிருக்கோ என்னமோ தெரியலே, உங்க காரணவர் ஒரு நாள் உங்களைப் பலமா அடிச்சிட்டாரு. நான்தான் ஓடி வந்து சமாதானப்படுத்தினேன். உங்க மாமன் நாராயணப்பணிக்கர் அதி சூரனாகத்தான் இருந்தார். நீங்க ஒரு நாள் ஓணம் சமயத்திலே வேறே சில பசங்களோட சேர்ந்து அந்தக் கோயில் பக்கத்திலே ஓடிப்பிடிச்சி விளையாடுகிறதை அவர் பார்த்திட்டு அந்த இடத்திலேயே உங்களை அடிக்க ஆரம்பிச்சார். இங்கே வந்து சேருகிற வரைக்கும் அடிச்சார். அதுக்குப் பிறகு இங்கே வந்த பிறகும் அடிச்சார். நல்லாத்தான் அடிச்சி நொறுக்கிப்பிட்டார். கூச்சல்கேட்டு நான் ஓடி வந்து சமாதானப்படுத்தினேன். அப்புறம் அந்த ஓணத்துக்கு நீங்க வெளியே இறங்கி நடமாடவே இல்லை—இது ஞாபகம் இருக்கா?

கோவிந்தப்பணிக்கர்: எனக்கு ஒரு கனவு கண்ட மாதிரி ஞாபகம் வருது. நல்லா ஞாபகமில்லே.

பஞ்சுமேனோன்: உங்களுக்கு அப்போ தோராயமா பதினாலு வயசுதான் ஆகியிருக்கும். அந்தக் காலத்திலே நமக்கெல்லாம் நம்ம மாமன்மார்கள் கிட்ட இருந்த ஒரு பயம் இனி இந்த ஜன்மத்திலே பார்க்கப்போற

தில்லே. இப்போ இருக்கிற பசங்களுக்கு கொஞ்சம் இங்கிலீசு படிச்ச உடனேயே ஏதோ ஒரு அகம்பாவம் தானாகவே வந்திடுது. நமக்கு ஒண்ணும் ஒரு அறிவும் இல்லே, நாமெல்லாம் சுத்த முட்டாளுங்க அப்படீன்னு அவங்க நினைப்பு. இதைக் கலியுக தர்மம்னுதான் சொல்லணும். ஒரு நாள் இந்துலேகா ஒரு இங்கிலீசுப் புஸ்தகம் வாசிக்சிக்கிட்டிருந்ததை நான் பார்த்தேன். என்னம்மா, அந்தப் புஸ்தகத்திலே என்ன கதைன்னு நான் கேட்டேன். அவ அந்தக் கதையோட சுருக்கத்தை மலையாளத்திலே எடுத்துச் சொன்னாள். நான் அதைக் கேட்டு அப்படியே அசந்து போயிட்டேன்.

கோவிந்தப்பணிக்கர்: என்ன கதை? எனக்குத் தெரியலியே!

பஞ்சுமேனோன்: அதுவா? சொல்றேன். அது கட்டுக் கதைன்னு அவளே சொன்னாள். ஆனால் அதை வாசிச்சா பசங்க மனசு எவ்வளவு கெட்டுப் போகும்னு நீங்களே நினைச்சுப் பாருங்க. கதையை நான் சொல்றேன். முழுக்கவும் எனக்கு நல்லபடி ஞாபகமில்லைதான். ஒரு சீமானுக்கு (ஏதோ ஒரு பேரு சொன்னாள். எனக்கு ஞாபகமில்லே) ஒரு மகள் இருந்தாளாம். அவள் அந்தச் சீமானின் மருமகனைக் கல்யாணம் கட்டிக்கிடணும்னு தீர்மானிச்சா. மருமகனுக்கும் பெண்ணோ அப்பனுக்கும் பிடிக்கலே. அதனாலே

கல்யாணத்துக்கு அப்பன் ஒத்துக் கிடல்லே—ஆனால் ஏதோ ஒரு தந்திரம் பண்ணி இந்த மருமக னுக்கு வேறே ஒரு பெண்ணைக் கல்யாணம் பண்ணி வைத்தான் இப்படிச் செய்திட்டு மகளுக்குக் கல்யாணம் செய்து வைக்கப் பொருத்தமான பலரை அந்தச் சீமான் வரவழைத்தார். அதெற் கெல்லாம் மகள் சம்மதிக்காமல் தான் யாரையும் கல்யாணம் செய் துக்க முடியாதுன்னு தீர்மானமாச் சொல்லி அடம்பிடித்தாள். கடைசி யிலே மனோவியாதியினாலே தகப்பன் செத்துப் போனான். இது தான் கதையோட சுருக்கம். பாரும்— கோவிந்தப்பணிக்கரே, இந்த மாதிரிக் கதையைப் பொண்ணுங்க வாசிச்சா உருப்படுமா?

கோவிந்தப்பணிக்கர்: வாசிச்சால் மகா கஷ்டம்! மகா கஷ்டம்! இதுக்கு என்ன முடிவு? இவங்களை இங்கிலீசு படிக்க வச்சிட்டோம். இனி அந்தப் படிப்பை இல்லேன்னு நம்மளாலே ஆக்க முடியாது. இந்தக் கதையை எப்போ சொன்னாள்?

பஞ்சுமேனோன்: கொஞ்ச நாளைக்கு முன்னாலே.

கோவிந்தப்பணிக்கர்: சரி, இந்த மாதிரிக் கதையெல்லாம் படிக்கணும்னு என்ன தேவை—ராமாயணமோ மகாபாரதமோ வேறேதோ படிக்கக் கூடாதா?

பஞ்சுமேனோன்: அதைத்தான் நானும் சொல்றேன். என்னவெல்லாம் இலக்கியங்க நம்ம பூவள்ளியிலே இருக்க, அதை யெல்லாம் யாரும் கையாலே கூடத்

தொடுகிறது இல்லே. ஓலைச் சுவடியிலே இருக்கிற இலக்கியங்க எல்லாமே செல்லரிச்சிப் பாழாப் போகுது. இந்தச் சுவடிங்களை யெல்லாம் நல்லா துடைச்சிவச்சி பத்திரப்படுத்தணும்னு மாதவன் கிட்ட முன்னாலே ஒரு நாள் சொன்னேன்—அவன் செய்யவே இல்லே.

கோவிந்தப்பணிக்கர்: ஆனா இந்துலேகாவே இதை யெல்லாம் சரிபண்ணி வைக்கலா மில்ல?

பஞ்சுமேனோன்: ஓலைச்சுவடின்னா அவளுக்கும் வெறுப்புத்தான். காகிதப் புஸ்த கங்களைத் தவிர வேறே எதையும் இவங்க யாரும் கையாலே தொடு வாங்களா? கலியுகத்தோட வக்கிரம்—வேறே என்னத்தைச் சொல்ல!

கோவிந்தப்பணிக்கர்: கலியுகத்தோட வக்கிரம்தான். இதைப்பத்தி நான் வேறே ஒண்ணும் சொல்றதுக்கில்லே.

பஞ்சுமேனோன்: இங்கிலீசுப் படிப்புட் படிச்சிட்டு இனிமே அந்தக் கிறிஸதவ வேதத் திலே இந்தப் பசங்க சேர்ந்திடு வாங்களோன்னு எனக்கு பயம்.

கோவிந்தப்பணிக்கர்: அதைப்பத்தி எனக்கும் ஒரு பயம் உண்டு. இந்த புத்திகெட்டதுகள் அதிலே போய்ச் சேர்ந்திட்டா நாம என்ன செய்ய முடியும்? ராஜாவும் இங்கிலீஷ் ராஜாவாச்சே? யாரு நம்ம சங்கடத்தைக் காதிலே போட்டுக்கிறாங்க?

பஞ்சுமேனோன்: சரி—சரி, கோவிந்தப்பணிக்கர் சொல்றது உண்மைதான். இருந்

தாலும் நாம செய்ய வேண்டியதைச் செய்யத்தான் வேணும். பிறகு வர்றது வரட்டும். நீங்க மாதவன் கிட்ட நேத்துச் சண்டையைப்பத்தி நல்லபடியா ஒருதரம் கண்டிக் கணும்.

கோவிந்தப்பணிக்கர்: கண்டிக்கணும்னு நானே தீர் மானிச்சிருக்கேன். அவன் மதராசி லிருந்து திரும்பி வரட்டும்.

பஞ்சுமேனோன்: மதராசிலிருந்து திரும்பி வந்ததும் நல்லபடியா அவனைக் கண்டிக் கணும். பணிக்கரே நேரடியா கண்டிக்கணும்.

கோவிந்தப்பணிக்கர்: நானே அவனைக் கேட்கிறேன்— எந்தச் சந்தேகமும் வேண்டாம்.

பஞ்சுமேனோன்: நானும் நீங்களும் சேர்ந்தாப் போலே கண்டிச்சால் மாதவன் அடங்கிப் போயிடுவான். இப்போ இந்த எளக்காரத்தை என்கிட்ட காட்டறது உங்க சகாயம் இருக்கும் கிறதை வச்சிக்கிட்டுத்தான். அது இல்லேன்னு ஆயிடுச்சின்னா மாதவன் தன்னாலே பணிஞ் சிருவான்.

கோவிந்தப்பணிக்கர்: பணிஞ்சிருவான், சந்தேகமில்லே.

பஞ்சுமேனோன்: அதுவும் தவிர நான் இன் னொண்ணும் யோசிச்சி வச்சி ருக்கேன். அதையும் உங்ககிட்டச் சொல்லிடுறேன். பணிக்கரு விவர மான ஆளுன்னு எனக்கு நல்லாவே தெரியும். அதனாலே சொல்றேன். மாதவனுக்கு இந்துலேகாவைக் கட்டிக்கிடணும்னு ஒரு பிடிப்பு உண்டு. இந்துலேகாவுக்கும் அவனைப் பண்ணிக்கணும்னு

எண்ணம் இருக்கிறதாகத் தெரியுது. இதைத் தடுக்கிறதுன்னு நான் தீர் மானிச்சிட்டேன். முதல்லே மாதவ னுக்கும் இந்துலேகாவுக்கும் வயசுப் பொருத்தம் இல்லே. அதுவும் தவிர மாதவனுக்கு இப்போ இருக்கிற நிலைமையிலே கல்யாணம் பண்றது சரியில்லே. இந்துலேகா வுக்கு பெரிய பணக்காரங்கள்லே யாரையாவது கல்யாணம் செய்து வச்சா அதுதான் அவளுக்கு நல்லது. அதனாலே நான் அவளை ஒரு பெரிய பணக்காரருக்கு கொடுக்கிறதாகத் தீர்மானிச்சிருக் கேன். அந்தப் பணக்காரர் உடனே இங்கே வரச் சொன்னா வந்திடு வாரு. ஆனால் அந்தப் பெண் ணைத்தான் பேசிச் சம்மதிக்க வைக்கணும். அவள் ஒரு பிடி வாதக்காரி. அதுக்குப் பணிக்கரும் சேர்ந்து ஒத்துழைக்கணும்—எப்படி?

கோவிந்தப்பணிக்கர்: ஓ-கோ, அப்படியே ஆகட்டும். வரப் போற பணக்காரர் யாருன்னு தெரியலையே.

பஞ்சுமேனோன்: மூர்க்கில்லாத்தமனைக்கல் நம்பூ திரிப்பாடுதான். பெரிய பணக் காரர்—ரொம்பப் பெரிய ஆளு.

கோவிந்தப்பணிக்கர்: சரி; அவர் வரட்டும்.

பஞ்சுமேனோன்: சின்னனுக்கு செலவுக்கு சீனு பட்டர் கொடுக்கப் போறதாகத் தெம்பு. அந்த ஆளு கையிலே பணம் எங்கே இருக்கு? நான் ஒரு காசுகூடக் கொடுக்க மாட்டேன். கும்மினியுடைய பிள்ளைகள்கிட்ட

இருந்து எல்லாத்தையும் திருப்பி வாங்கிடுறதாக நினைச்சிருக்கேன். இந்த உருப்படாததுகள் எப்படிப் படிக்கும்? பார்த்துக்கிடுறேன்.

கோவிந்தப்பணிக்கர்: அதுதானே—அதையும் பார்த்திரலாம்.

பஞ்சுமேனோன்: நீங்க எதுவும் பணம் கொடுத்து உதவக்கூடாது.

கோவிந்தப்பணிக்கர்: பணம் கொடுக்கணும்னு எனக்கென்ன தேவை?

பஞ்சுமேனோன்: அதுதான் நான் சொல்றது.

என்று சொல்லிவிட்டு பஞ்சுமேனோன் அங்கிருந்து கூச்சலும் வசவும் முடித்து தன்னுடைய ரகசியத்திட்டங்களை கோவிந்தப்பணிக்கரிடம் வெளிப்படையாகத் தெரிவித்து விட்ட நிம்மதியுடன் வீட்டிற்குத் திரும்பிப் போனார்.

இரண்டு நாட்களில் பஞ்சுமேனோனின் கோபம் சற்றே தணிந்தது. ஆனாலும் நம்பூதிரிப்பாட்டுடனான சம்பந்தத்தை உடனே முடித்தாக வேண்டுமென்ற ஆத்திரம் மட்டும் வளர்ந்து கொண்டே இருந்தது.

# 6

## பஞ்சுமேனோனின் வருத்தம்

மாதவன் மதராசுக்குச் சென்று ஆறேழு நாட்கள் கழிந்த பிறகு ஒரு நாள் இரவு பஞ்சுமேனோன் தெற்குப்பக்கத்து அறையில் இரவுச் சாப்பாடு சாப்பிட உட்கார்ந்தபோது கேசவன்நம்பூதிரி தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்து வழக்கம்போல் உள்ளே போவதைப் பார்த்து, தன் னருகில் வந்து உட்காரச்சொல்லி பஞ்சுமேனோன் விரும்பி அழைத்தார். பெஞ்சியின் மீது அவரும் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.

பஞ்சுமேனோன்: ஆளை இன்னமும் அனுப்பலையா? ஏன் பதில் எதுவும் இன்னமும் வரலே?

கேசவன்நம்பூதிரி: அன்னிக்கே ஆளை அனுப்பி யாச்சி. நம்பூதிரி அங்கே இல்லேன் னும், நாலைஞ்சு நாள் கழிச்சுத்தான் வீட்டுக்கு வருவாராம் அப்ப டீன்னும் அனுப்பிவச்ச ஆள் திரும்பி வந்து சொன்னான். இன்னிக்குக் காலையிலே நான் ரெண்டாவது தடவையா கடுதாசு கொடுத்து ஆளை அனுப்பிச் சிருக்கேன். இதுக்குள்ளே வீடு வந்து சேர்ந்திருந்தா அவர் நாளைக்கு இங்கே வருவார்னு எதிர்பார்க்கலாம்.

உடனே பஞ்சுமேனோன் லட்சுமிக்குட்டியம்மாவை அழைத்துவரச் சொன்னார். லட்சுமிக்குட்டியம்மா அப்பாவுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள்.

பஞ்சுமேனோன்: லட்சுமிக்குட்டி! நீ இந்துலேகாகிட்ட இந்த விவரத்தை எடுத்துச் சொன்னியா?

லட்சுமிக்குட்டியம்மா: எந்த விவரம்?

பஞ்சுமேனோன்: பாரேன், இந்தப் பொண்ணோட குறும்பைப் பாரேன்! இந்த விவரம் எதுவும் உனக்குத் தெரியாதாக்கும்? அசடு, பொய்தானே சொல்றே? கழுத்தைச் சீவணும். இந்த மகா பாவிங்களையெல்லாம் மிதிச்சி வெளியே தள்ளணும்.

லட்சுமிக்குட்டியம்மா: இது என்ன கதை அப்பா? என் கிட்ட யாரும் ஒரு விவரமும் சொல்லவே இல்லையே. அப்பா எதுக்காக வீணா எரிஞ்சி விழறீங்க?

கேசவன்நம்பூதிரி: லட்சுமிக்குட்டிக்கு சமாச்சாரம் எதுவும் தெரியாது. நான் எதுவும் சொல்லலே. காரியம் ரகசியமா இருக்கட்டும்னுதானே அன்னிக்கு என்கிட்ட சொன்னீங்க? அதனாலே நான் யார்கிட்டேயும் சொல்லலே.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா சரிதான். பெரியவரு லட்சுமிக்குட்டிகிட்ட சொல்லியிருப்பீங்கன்னு நான் நினைச்சிட்டேன். (லட்சுமிக்குட்டியம்மாவைப் பார்த்து) அதனாலே தாண்டி, உன்மேலே எரிச்சல் பட்டுட்டேன். போகட்டும், உன் மனசு எப்படி இருக்குன்னு தெரிஞ்சிக்கிடுறேன். மூர்க்

கில்லாத்த நம்பூதிரிப்பாடுக்கும் இந்துலேகாவுக்கும் கல்யாணம் பேசி முடிக்கலாம்னு நான் தீர் மானிச்சிருக்கேன். இந்துலேகா வுக்கு அது சம்மதமா இருக்குமா?

லட்சுமிக்குட்டியம்மா: இந்துலேகாவுக்கு சம்மதமா இல்லை யான்னு நான் எப்படி இப்போ சொல்ல முடியும்?

பஞ்சுமேனோன்: இதுதானே குறும்புங்கிறது! பொண்ணோட அழிச்சாட்டி யத்தைப் பார்த்தீங்கல்ல, பெரி யவரே?

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவையே நேரிலே கேட்டிட வேண்டியதுதானே— அதுதானே நல்லது?

பஞ்சுமேனோன்: பெரியவருக்கு மூளையே இல்லே. இந்துலேகாகிட்ட யாரு கேட்கிறது? ஆனால் லட்சுமிக்குட்டி கேட்டால் அவள் நிச்சயமா பதில் சொல்லு வாள். லட்சுமிக்குட்டி! நீ இந்த மூர்க்கில்லாத்த நம்பூதிரிப்பாடு பத்திக் கேள்விப்பட்டிருக்கியா?

லட்சுமிக்குட்டியம்மா: இல்லே.

பஞ்சுமேனோன்: பெரியவங்க நீங்களே சொல்லி லட்சுமிக்குட்டிக்குப் புரியவையுங்க.

கேசவன்நம்பூதிரி: ஆகட்டும்.

பஞ்சுமேனோன் சாப்பாடு முடிந்து எழுந்து கை கழுவினார். அப்பாது ஒரு வேலைக்காரன் கூடத்துத் தலை வாசலில் வந்து, கேசவன்நம்பூதிரிக்கு ஒரு கடிதம் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். கேசவன்நம்பூதிரி வேகமாக எழுந்து கடிதத்தை வாங்கி விளக்கு வெளிச்சத்துக்கு வந்து படித்து விவரம் அறியத் தொடங்கியபோது—

பஞ்சுமேனோன்: இது அந்த பதில்தானே?

கேசவன்நம்பூதிரி: ஆமாம், அதேதான்.

பஞ்சுமேனோன்: என்ன எழுதியிருக்குன்னு படிங்க. கேட்டுக்கிடறேன். சப்த்தமில்லாம மெதுவாக படிங்க.

கேசவன்நம்பூதிரி கடிதத்தைப் படித்தார்.

"கடிதம் கிடைத்தது—மகிழ்ச்சி. நாளைக்கு நான் குளிக்கிற நேரத்துக்கு அங்கே வந்து சேர்கிறேன். செருசேரியும் என்னுடன் வருவார். நீங்கள் சொன்னதைவிட அதிகமாகவே போதாய்ப்ரம் மூலமாகவும் மற்றவர்கள் மூலமாகவும் நான் விசாரித்துவிட்டேன். தங்களைச் சந்திக்க எனக்கு மிக ஆவல். பிற நேரில்."

பஞ்சுமேனோன்: பிரமாதம்! இந்துலேகா இன்னும் தூங்கியிருக்க மாட்டாள். பெரியவர் என்கூட வரணும். நாம் அவளுடைய அறைக்குப் போவோம். இதைப்பத்தி அவகிட்ட கொஞ்சம் பேசிப் பார்ப்போம். அப்போ அவளோட மனசு தெரியுமில்ல.

பஞ்சுமேனோனும் நம்பூதிரியும் சேர்ந்து இந்துலேகாவின் அறைக்குச் சென்றபோது அவள் ஓர் இருக்கையில் அமர்ந்தபடி சாகுந்தலம் நாடகம் புத்தகத்தைப் புரட்டிக்கொண்டிருந்தாள். அவர்களைப் பார்த்ததும் எழுந்து நின்றாள். கேசவன்நம்பூதிரி ஒரு நாற்காலியிலும் பஞ்சுமேனோன் இருக்கை மீதும் உட்கார்ந்தார்கள். இந்துலேகாவைப் பஞ்சுமேனோன் தன்னருகே இருக்கையில் உட்காரச்செய்து அவளுடைய தோளை ஆதரவாக நீவியபடிப் பேசலானார்.

"குழந்தே, நீ என்ன படிச்சிக்கிட்டிருக்கிறே? அன்னிக்குச் சொன்னியே, அது மாதிரியான கட்டுக் கதையா?"

இந்துலேகா: இல்லே. இது சாகுந்தலம், தாத்தா, இந்தக் புத்தகத்திலே அச்சு ரொம்ப மோசம். வாசிக்க ரொம்பக் கஷ்டம்.

பஞ்சுமேனோன்: ஒரு நல்ல புத்தகமா வாங்கிக்கிட வேண்டியதுதானே? எங்கே

கிடைக்கும்? நான் இப்பவே பணம் தர்றேன்.

இந்துலேகா: இதிலே நல்ல அச்சடிச்ச புத்தகம் இருக்கா இல்லையான்னு தெரி யலே. இருந்தா விசாரிச்சி தாத்தா கிட்டே தகவல் சொல்றேன்.

பஞ்சுமேனோன்: என் குழந்தைக்காக நல்லா அச்ச டிச்ச ஒண்ணை நான் வாங்கித் தர்றேன்.

இந்துலேகா: (சிரித்தபடி) அது ரொம்பக் கஷ்டம், தாத்தா, ரொம்பச் செல வாகும்—அதுவும் தவிர, இதிலே பெரிய டைப்பிலே அச்சாயிருக் கான்னும் தெரியலே.

பஞ்சுமேனோன்: என்னன்னு தெரியலே?

இந்துலேகா: பெரிய எழுத்து அச்சு.

பஞ்சுமேனோன்: எனக்கு இதெல்லாம் தெரியாது, குழந்தே! அச்சு இல்லேன்னா அதையும் வாங்கிக்கோ.

இந்துலேகா சிரித்தாள்.

பஞ்சுமேனோன்: நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து உன்கிட்ட ஒரு காரியம் பேச ணும்னுதான், குழந்தே, வந்திருக் கோம். அதாவது பரம்பரை வழக் கப்படி இதை நீ இப்போ தெரிஞ் சிக்கிட வேண்டிய விஷயமில்லே தான். அது நடக்கும்போது தெரிஞ் சிக்கிட்டாப்போதும். ஆனாலும் இப்போ கலிகாலம் இல்லையா? அதனாலே எங்களுக்குப் பயம்— அதனாலேதான் சொல்ல வந்திருக் கோம். (நம்பூதிரியிடம்) பெரிய வரே, சொல்லுங்க.

இந்துலேகா: பரம்பரை வழக்கப்படி தாத்தா செய்தால் சரிதான். எனக்குக் கலி

காலத்தைப் பத்தியெல்லாம் ஒண்ணும் தெரியாது. விஷயம் நடக்கும் போது மட்டும் என்கிட்ட சொன்னால் போதும்.

கேசவன்நம்பூதிரி: (பஞ்சுமேனோனிடம்) சரி, சரி— நல்ல பதில்தான். போதும், போதும், இனி தூங்கப் போகலாம்.

பஞ்சுமேனோன்: காரியத்தை எடுத்துச் செய்கிறப்போ ஏதாவது பெரிய இடைஞ்சல் வந்தால்—அதை இப்பவே சரிப்படுத்திக்கிட வேண்டாமா?

இந்துலேகா: எப்பவோ வர இருக்கிற இடைஞ்சலை இப்பவே எப்படித் தெரிஞ்சிக்க முடியும்? எப்படிச் சரிப்படுத்த முடியும்?

பஞ்சுமேனோன்: அதுதான்—பார்த்தீங்களா இங்கிலீசு மூளைவிடுறதை!

இந்துலேகா: எங்கே இங்கிலீசு மூளைவிடுது? நான் நம்ம பாஷையிலேதானே பேசறேன், தாத்தா?

பஞ்சுமேனோன்: அதுதான் குழந்தே, உன்னோட சாமர்த்தியம் எனக்குத் தெரியாதாக்கும்!

இந்துலேகா: இதிலே என்ன சாமர்த்தியமோ, கடவுளே! தாத்தா சொல்றது எனக்குப் புரியவே இல்லே.

பஞ்சுமேனோன்: (நம்பூதிரியிடம்) இவளோட தர்க்கம் பண்ணிக்கிட்டிருந்தா, நமக்கு இன்னிக்குத் தூங்க முடியாது. பெரியவங்க நீங்களே நாம வந்த காரியத்தைச் சொல்லுங்க. வெளிப் படையாவே சொல்லுங்க.

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்கு எல்லாம் புரியும்.

பஞ்சுமேனோன்: அது சரிதான். ஆனால் இந்துலேகாவோட மனசு நமக்குத் தெரியணுமில்ல?

கேசவன்நம்பூதிரி: அதது நடக்கும்போது தெரிஞ்சிக் கிட்டால் போதும்—அப்படித் தானே இந்துலேகாவே சொல்றா?

பஞ்சுமேனோன்: பெரியவரு நீங்களே என்ன இப்படி அசட்டுத்தனமா பேசறது? கேளுங்க—கேளுங்க.

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்கு ஒரு இடத்திலே கல்யாணம் நிச்சயம் பண்ணி யிருக்கு.

இந்துலேகா: யாரு நிச்சயம் பண்ணினது?

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவோட தாத்தாதான் நிச்சயம் பண்ணினது.

இந்துலேகா: சரி, நிச்சயம் பண்ணட்டும்.

கேசவன்நம்பூதிரி: அது இந்துலேகாவுக்குச் சம்மதம் தானே?

இந்துலேகா: நிச்சயம் பண்ணி முடிச்ச பிறகு சம்மதம் தேவைதானா?

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்குச் சம்மதமா இல்லையான்னு எங்களுக்குத் தெரி யணும்.

இந்துலேகா: அப்படீன்னா அதைத் தெரிஞ் சிக்கிட்டில்ல நிச்சயம் பண்ணி யிருக்கணும்?

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாகிட்டச் சொல்லிட்டுத் தீர்மானிக்க வேண்டிய விஷய மில்லை இது.

இந்துலேகா: இது மகா மோசம்—பின்னே எதுக் காக இப்போ வந்து என்கிட்ட கேட்கறீங்க? தெரிஞ்சிக்கிட்டுத் தீர் மானிக்க வேண்டிய விஷய மில்லை, நடக்கறப்போ மட்டும் தெரிஞ்சிக்க வேண்டிய விஷயம்— அப்படீன்னா நிச்சயம் பண்ணி முடிச்சிட்டு எதுக்காகச் சம்மதம் கேட்கணும்?

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பஞ்சுமேனோனுக்குச் சற்றுக் கோபம் வந்தபோதிலும் இந்துலேகாவின் ஒளிரும் தன்மையான சந்திரபிம்பம் போன்றதான முகத்தில் பிரத்தியட்சமாகக் காணப்பட்ட தைரியத்தைக் கண்டவுடன் அடங்கிப்போனார்.

பஞ்சுமேனோன்: எல்லாம் கோளாறுதான். நாளை இவளோடு லட்சுமிக்குட்டி பேசிப் பார்க்கட்டும். நாம தூங்கப் போகலாம்.

என்று சொல்லிவிட்டு நம்பூதிரியும் பஞ்சுமேனோனும் கீழே இறங்கிப் போனார்கள். பஞ்சுமேனோன் தன் அறைக்குப் போய் மனைவியிடம் இந்துலேகாவின் முரட்டுப் பிடிவாதத்தைப் பற்றி மிகவும் வருத்தப்பட்டுப் பேசினார்.

குஞ்ஞிக்குட்டியம்மா: நல்லா ரெண்டு சாத்து சாத்தினா இந்த மாதிரி அதிகப்பிரசங்கித் தனம் இருக்காது. கொஞ்சல் வார்த்தை பேசறதனாலேதான் இந்த அழிச்சாட்டியத்தைக் காண் பிக்கிறா. குழந்தைகளை அதிகமா செல்லம் கொஞ்சக் கூடாது.

பஞ்சுமேனோன்: எனக்கு இந்த உலகத்திலே எந்த ஆள்கிட்டேயும் பயம் கிடையாது. என்னவோ இந்த இந்துலேகாகிட்ட மட்டும் ரொம்ப பயம்! அவளுக்குக் கோபம் வந்தால் எதிரிலே நிற்கக் கூட என்னாலே முடியாது. நான் என்ன செய்றது!

இவ்வாறு சொன்ன பின் கோபத்தில் தான் செய்திருந்த சபதத்தை சபித்துக்கொண்டும் வருத்தப்பட்டுக் கொண்டும் அந்தக் கிழவர் தூங்கிப்போனார்.

கேசவன்நம்பூதிரியும் அவருடைய மனைவியும் தங்களுக்குள் இந்த நேரத்தில் அவர்களுடைய வீட்டில் நிகழ்ந்த ஒரு சம்பாஷணையைக் குறித்து இங்கே கொஞ்சம் விளக்கி விட்டுத்தான் இந்த அத்தியாயம் முடிக்கப்பட வேண்டும்.

கேசவன்நம்பூதிரி தன்னுடைய வீட்டிற்குச் சென்ற போது மனைவி கட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்துத் தானும் கட்டிலின்மீது அமர்ந்து கையால் மெதுவாக மனைவியின் தேகத்தை வருடியபடி எழுப்பினார்.

இந்தக் கேசவன்நம்பூதிரியின் நிலை குறித்து இதுவரை இந்தப் புத்தகத்தில் எங்கும் குறிப்பிடப்படவில்லை. இவர் பெரிய செல்வந்தர் என்று குறிப்பிடப்படுபவர்—ஆனால் ஒரு சுமாரான பணக்காரர்தான்; கையில் சொந்தமாக இருந்த கொஞ்சம் பணத்தை ஒரு நூற்பாலையில் பங்குப் பணமாக முதலீடு செய்திருந்தார். ஆள் பார்வைக்கு அழகன் என்றில்லாவிட்டாலும் மிகவும் அசிங்கமல்ல. இந்துலேகாவுக்கு சம்பந்தம் பேச ஆலோசித்து வைத்திருந்த நம்பூதிரிப்பாடின் நெருங்கிய நண்பர் இவர்; சொந்தத்தில் கல்யாணம் செய்து கொள்ளாதவர்; வீட்டில் தங்குவது வெகு சுருக்கம். பூவள்ளி சத்திரத்திற்கு அருகில் ஒரு மடத்தில்தான் சாப்பாடு. அவருக்கென்று சொந்த உபசரணைக்காக ஒரு சின்னப் பட்டரும் இரண்டு வேலைக்காரர்களும் உண்டு. ஆள் பரம அப்பாவி. "குலத்தளவே ஆகுமாம் குணம்" என்ற சொல் வழக்குக்கு மிகப் பொருத்தமாகும் அளவுக்கு அப்பாவி. ஆனால் மிகவும் மரியாதைக்குரியவராகவும் நல்ல நடத்தையுள்ளவராகவும் இருந்தார் தன்னுடைய மனைவி மீது அதிக அன்பு கொண்டிருந்தார். தனது நற்பேற்றினால் கிட்டிய மனைவி என்று எப்போதும் நினைவில் கொண்டிருந்தார். கண்ணழி மூர்க்கில்லாத்தமனை நம்பூதிரிப்பாடுடன் இந்துலேகாவுக்கு ஆலோசித்திருந்த திருமணத்தைப் பற்றிச் சிறிது பேச வேண்டுமென்றுதான் இரவில் தூங்கிக் கொண்டிருந்த லட்சுமிக்குட்டியம்மாவை இவர் எழுப்பினார்.

கேசவன்நம்பூதிரி: லட்சுமீ! லட்சுமீ! என்ன உறங்கிட்டியா? நேரம் இன்னும் ஒன்பது கூட அடிக்கலையே.

லட்சுமிக்குட்டியம்மா கண்விழித்து எழுந்து உட்கார்ந்தாள்.

கேசவன்நம்பூதிரி: என்னவாம் இன்னிக்கு இவ்வளவு அதிகம் உறக்கம்?

லட்சுமிக்குட்டியம்மா: வெத்திலை வேணுமா? அதோ அந்த மேசையிலே வெள்ளித் தட்டிலே மடிச்சி வச்சிருக்கேன்.

கேசவன்நம்பூதிரி: அடடே, கொஞ்சம் வெத்திலை போட்டுக்க வேண்டியதுதான்.

என்று சொல்லி வெற்றிலை-மடிப்பை எடுத்துக் கொண்டு வந்து மீண்டும் கட்டிலின்மீது உட்கார்ந்து கொண்டார்.

கேசவன்நம்பூதிரி: நாங்க இந்துலேகாவைப் பார்க்கப் போயிருந்ததைப் பத்தி எதுவும் கேட்டுக்க வேண்டாமா?

லட்சுமிக்குட்டியம்மா: இந்துலேகா இன்னமும் உறங் கலையா? அந்தப் பொண்ணு இப்போவெல்லாம் ராத்திரி ரொம்ப நேரம் படிக்கிறா. உறக்க மில்லாததனாலே உடம்புக்கு சுக மில்லாமப் போயிடும் போல இருக்கு. மண்ணெண்ணெய் விளக்கு வெளிச்சம் கண்ணுக்கு நல்லதில்லைன்னு சொல் றாங்களே!

கேசவன்நம்பூதிரி: யாரு இந்தக் கோளாறெல்லாம் சொன்னது? மண்ணெண் ணெயைப் பத்தித்தானே சொன்னே? அது சரியான எண் ணெயாக்கும்! நூற்பாலை யிலே எல்லா இடத்திலேயும் இந்த மண் ணெண்ணெய் விளக்கு வச்சி ருந்ததை ஒரு நாள் பார்த்தேன். அங்கே எவ்வளவு ஆளுங்கக் கூட்டம் தெரியுமா! உன்னை அங்கே ஒரு தடவை கூட்டிப்போய் அந்த அதிசயத்தையெல்லாம் காட்டணும்னு எனக்கு ரொம்ப ஆசை.

லட்சுமிக்குட்டியம்மா: என்னென்ன அதிசயமாம்?

கேசவன்நம்பூதிரி: சிவ-சிவ! நாராயணா! நாராயணா! நான் என்னன்னு சொல்ல! இந்த வெள்ளைக்காரங்களோட கெட்டிக்காரத்தனம் அதி அற்புதம்தான். லட்சுமி! நீ அதைப் பார்த்தால் அசந்து போயிடுவே. என்ன மாதிரி அற்புதம்! இந்த நூல்மில்லிலேருந்து இவ்வளவு சத்தம் கேட்கிறதுக்கெல்லாம் ஒரு இரும்புச் சக்கரம்தான் காரணம். அந்தச் சக்கரம்தான் இந்த நூல் எல்லாத்தையும் உண்டாக்குது. அந்தச் சக்கரத்தைச் சுத்திவிடுறது பொகைன்னா பொகைதான்—பொகை—வெறும் பொகைதான். ஆனால் அந்தப் பொகை நம்ம அடுக்களையிலேருந்து உண்டாகிறது போல கண்ணிலும் மத்ததிலும் கொஞ்சம்கூடத் தொந்திரவு பண்றதில்லே. அந்த மில்லிலே ஒரு பெரிய வால் மேலே பார்த்து வச்சிருக்காங்க—கொடிமரம் போலப் பெரிசா ஒரு வால். அது பொகை வெளியே போறதுக்குன்னு சொல்லிக்கிடுறாங்க. ஆனால் எனக்குச் சந்தேகம்தான். அதுக்கு உள்ளே ஏதோ மந்திரதந்திரம் இருக்கு. இந்தக் கெட்டிக்கார வெள்ளைக்காரங்க அதை வெளியே சொல்றதில்லே. அப்படியெல்லாம் இல்லாவிட்டா இப்படி இரும்பாலே செஞ்ச சக்கரமும் ஊசிகளும் அவங்க சொன்னபடியெல்லாம் கேட்குமாக்கும்—ஏதோ ஒரு மாயமிருக்கு.

லட்சுமிக்குட்டியம்மா: என்ன அந்த மந்திர மாயம், நீங்க யாரும் புரிஞ்சிக்க முடியாதபடி?

கேசவன்நம்பூதிரி: அதைப்பத்திக் கேட்டால் அந்த இஞ்சினீயர் துரை சுட்டுத் தள்ளிருவான். அம்மாடி! அதைப்பத்தி எதுவும் கேட்க முடியாது. நாம யாராவது அங்கே போனால் அந்த இயந்திரத்துக்குப் பக்கத்திலே கூட்டிப்போய் ஒவ்வொரு பொய்யா நிறையச் சொல்லுவான். அவன் சொல்றதிலே குழந்தைகளுக்குக்கூட நம்பிக்கை வராது. ஆனால் நாங்க யாரும் அதை வெளியே காட்டிக்க மாட்டோம்—எல்லாம் புரிஞ்ச மாதிரி நடிப்போம்.

லட்சுமிக்குட்டியம்மா: புகைதான் இயந்திரத்தை முடுக்குதுன்னு நீங்க சொல்றது அவ்வளவா சரியில்லேன்னு தோணுது. இந்துலேகா அஞ்சாறு நாளுக்கு முன்னாலே என்கிட்ட புகைவண்டியைப் பத்தி சிலது சொன்னாள். அவள் சொன்னது இந்த வகை இயந்திரமெல்லாம் நீராவியின் சக்தியினாலே இயங்குறதாகவும், புகைக்குத் தனியா எந்த சக்தியும் இல்லேன்னும், நெருப்பு இருக்கிற இடத்திலே புகை இருக்கிறது சகஜம்தான்னாலும் புகையினாலே எந்தப் பிரயோஜனமும் இல்லேன்னுதான். இன்னும் என்னென்னவோ சொன்னாள்.

கேசவன்நம்பூதிரி: புகைவண்டி விஷயம் அப்படியிருக்கும்—நூல்மில் இயங்குறது

பொகையினாலேதான். அந்தக் கொடிமரத்துக்கு உள்ளே ஏதோ ஒரு மாயாஜாலம் இருக்கணும். எனக்கு அதிலே எந்தச் சந்தேகமும் இல்லே. இந்துலேகாவுக்கு மாதவனோ நம்ம கோவிந்தன் குட்டியோ இல்லாததையெல்லாம் சொல்லிக் கொடுத்திருக்கணும். இந்த அப்பாவிங்ககிட்ட வெள்ளைக்காரங்க சூட்சுமத்தை ஒருக்காலும் வெளிப்படுத்த மாட்டாங்க. பெரிசா பொய்யும் புளுகும் சொல்லி ஏமாத்துவாங்க. அதை உண்மைன்னு இந்த அப்பாவிப் பசங்க நம்பி பொண்ணுங்க கிட்டேயும் மத்தவங்ககிட்டேயும் சொல்லிக்கிட்டுத் திரிவாங்க. சூட்சுமத்தை அவங்க ஒருக்காலும் வெளியே சொல்ல மாட்டாங்க. இல்லாட்டி சூட்சுமத்தைத் தெரிஞ்சிக்கிடணும்னா அவங்க வேதத்திலே சேர்ந்து தொப்பி மாட்டிக்கணும். அப்படீன்னாதான் சொல்லித் தருவாங்க.

லட்சுமிக்குட்டியம்மா: அது என்னமோ—புகைக்கு எந்த சக்தியும் இல்லே.

கேசவன்நம்பூதிரி: அப்படிச் சொல்லாதே. பொகைக்கு சக்தி இருக்கு. ஹோமப் பொகைக்கு சக்தி இருக்கில்ல? எனக்கு இன்னொரு சந்தேகம் இருக்கு. இது வெவ்வேறே சாமிகளோட அருளுக்காக வேண்டி நடத்தற ஒரு ஹோமமோன்னு எனக்குச் சந்தேகம். சக்தி ஏத்தின விக்கிரகங்களையோ சக்கரங்

களையோ அந்தக் கொடிமரத் துக்கு உள்ளே மறைச்சி வச்சிருக் கலாம்—யாருக்குத் தெரியும்? அதுங் களுக்கு இந்த ஹோமம் ரொம்பப் பிடிச்சிப் போயிருக்கும். அதுங் களோட அருளினாலேதான் இந்த மில்லு ஓடுது. யாருக்குத் தெரியும்— எல்லாம் அந்த நாராயணனுக்குத் தான் வெளிச்சம்.

லட்சுமிக்குட்டியம்மா: அப்படின்னா அதை சோதிச்சு பார்த்திட வேண்டியதுதானே?

கேசவன்நம்பூதிரி: என்ன கதை பேசறே நீ, லட்சுமீ? இந்த வெள்ளைக்காரங்க அதுக்கு இந்த ஜன்மத்திலே சம்மதிப் பாங்களா? அப்படீன்னா அவங்க பெருமை போயிடுமில்ல? இந்தப் பொகை வண்டி, கம்பித் தந்தி முதலான அனேக மாயாஜாலங் களை அவங்க இங்கே கொண்டு வந்து காண்பிக்கறதோட சூட்சுமம் எதையும் அவங்க இந்த ஜன்மத் திலே உங்களுக்குச் சொல்லித் தருவாங்களாக்கும்? ஒருக்காலும் செய்ய மாட்டாங்க. இப்போ இந்த நூல்மில்லை ஏற்படுத்தறதுக்கு வெள்ளைக்காரங்க ஒரு தம்படி யாச்சும் செலவு செஞ்சிருப் பாங்களா? இல்லே—எல்லாமே நம்மவங்க பணம். இருந்தும் என்ன பிரயோஜனம்? நம்மள்ள ஒருத் தருக்காவது இந்த வித்தையைக் கத்துக் கொடுத்திருக்காங்களா? ஏராளமா பணம் வாங்கி நூல்மில் இயந்திரத்தை அவங்க நாட்டி லேயே செஞ்சி முடிச்சாங்க.

அதுக்குப் பிறகு இங்கே கொண்டு வந்து மில் ஆரம்பிச்சிட்டாங்க. மில் பார்க்கிறதுக்கு பெரிசா அழகா இருக்கும். இப்போ ஒரு வெள்ளைக் காரன்தான் பொகையை வச்சி இயந்திரத்தை முடுக்கி நூல் உண் டாக்குறது. மில் ஓடுறதைப் பார்த்தா நமக்கு ஆச்சரியமா இருக்கும். நம்ம வங்க ரொம்ப அப்பாவிங்கதான் இல்லே? இல்லாட்டி இங்கே இந்த ஊரிலேயே கோழிக்கோட்டி லேயே மில் இயந்திரங்களைச் செய்யவச்சிருக்கலாமில்ல? அதுக்கு என்ன இடைஞ்சலா இருந்தது? நம்ம பணந்தானே, நாம சொன்னபடி செய்ய வேண்டியதுதானே? ஆனால் இதையெல்லாம் சொன் னாலும் வெள்ளைக்காரங்க கிட்டப் பலிக்காது. அவங்க ஒண்ணரை லட்சம் ரூபாயோ என்னவோ இங்கே திரட்டி நூல் மில் சம்பந்தப்பட்ட எல்லாத்தையும் அவங்க நாட்டிலேயே செஞ்சி முடிச்சி இங்கே கப்பல்லே கொண்டு வந்து இறக்கினாங்க. அவங்க எவ்வளவு சாமர்த்திய சாலிங்க! நாம எவ்வளவு அப்பா விங்க!

லட்சுமிக்குட்டியம்மா: போகட்டும், இதிலே லாபம் கிடைக்குமா?

கேசவன்நம்பூதிரி: நிச்சயமா கிடைக்கும்னுதான் எல்லாரும் செல்றாங்க. நிறையப் பேர் பணம் கொடுத்திருக்காங்க. ரெண்டு மூணு வருஷம் காத்திருக் கணும். இந்த இங்கிலீசுக்காரங்

களோட வித்தையை யெல்லாம் நமக்குச் சொல்லிக் கொடுத் திட்டாங்கன்னா நல்லா இருக்கும்.

லட்சுமிக்குட்டியம்மா: இங்கிலீசுக்காரங்க நம்மவங்களுக்கு சொல்லிக் கொடுக்கத்தானே செய் றாங்க, அவங்க இனியும் என்ன செய்யணும்?—நம்மவங்களுக்குப் படிச்சிக்க அறிவில்லாம இருக்கு.

கேசவன்நம்பூதிரி: அய்யோ, அடியே லட்சுமிக்குட்டி, இப்படியா நினைக்கிறே? இவங்க இஸ்கூல்லே படிப்பிக்கிறது இந்த மாதிரிப் படிப்பெல்லாம் இல்லே. அப்படி இருந்தாத்தான் நல்லா இருக்குமே. இஸ்கூலில் படிப் பிக்கிறதெல்லாம் நம்ம பசங்களைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கத்தான். அதிலே எந்த விதச் சந்தேகமும் இல்லே. முதல்லே கோயில் களுக்குப் போகிறதில்லே; தீட்டுப் பட்டால் குளிக்கிறதில்லே, விபூதியும் சந்தனமும் பூசிக்கிற தில்லே; வீட்டுக்குப் பெரியவங்க கிட்ட பயம் கிடையாது; பிராமண பக்தி இல்லாமலே போயிடிச்சி. பிறகு, வேண்டாத கண்ட கண்ட கதைகளையும் மத்ததையும் சொல்லித் தர்றாங்க. அவங்களை சில பரிட்சைகளை எழுதச் சொல்லி, சில எழுத்துக்களை அவங்க பேர்களோட ஒட்ட வச்சி 'பட்டம் கொடுக்கிறாங்க. இத னாலே என்ன பிரயோஜனம்? தந்தி தபால் எப்படி உண்டாக்குறது, பொகை வண்டி எப்படி ஒடுது அப்படீன்னு இங்கிலீசு படிச்ச ஒரு

பையனைக் கேட்டால் உனக்கும் எனக்கும் தெரிஞ்சது கூட அவனுக்குத் தெரியலே. ஒரு பையன் இங்கிலீசு படிக்கிறப்போ அவனோட வீட்டிலே இருக்கிறவங்களையெல்லாம் துச்சமா நினைக்கிறான். இதான் இங்கிலீசு படிக்க வச்சதோட பலன்.

லட்சுமிக்குட்டியம்மா: அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. அன்னிக்கு இந்துலேகா புகை வண்டி எப்படி ஓடுதுன்னு எவ்வளவு விளக்கமா சொன்னாள். எனக்கு நல்லாவே புரிஞ்சது. இந்தப் பசங்களுக்கு எல்லாருக்கும் நம்மைவிட ரொம்ப அதிகமா அறிவிருக்குன்னு எனக்குத் தோணுது—அப்படி அறிவிருக்கிறதனாலே தான் நம்மளை அவங்க மதிக்க மாட்டேங்கறாங்க. அப்புறம் ஒரு நாள் மாதவன் தந்தி எப்படி வேலை செய்யுதுன்னு சொன்னான். எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருந்திச்சி.

கேசவன்நம்பூதிரி: போகட்டும், அப்படீன்னா இந்துலேகா ஒரு பொகைவண்டி ஓட்டட்டும்—அப்படீன்னா நீ சொல்றதை நான் ஒப்புத்துக்கறேன்.

லட்சுமிக்குட்டியம்மா: அதெப்படி? முதல்லே புகைவண்டி வேண்டாமா? அதுக்குப் பிறகு அதை ஓட்டுறதுக்குக் கத்துக்கிட வேண்டாமா? புகைவண்டியை தினமும் ஓட்டுறவங்க வெறும் கூலிக்காரங்களைப்போல வேலை செய்கிறவங்கதான். அவங்களுக்கு அதோட தத்துவமெல்லாம் இங்கி

லீஷ் படிக்கிற நம்ம பசங்களுக்குத் தெரியற மாதிரி தெரியாது.

கேசவன்நம்பூதிரி: அய்யோ கஷ்டம்! நீ மகா அசமந்தம். இந்த வெள்ளைக்காரங்களை ஒருக்காலும் நம்பக்கூடாது. இவங்களுக்கு மந்திரங்களும் தந்திரங்களும் இல்லேன்னு இவங்க வெளியிலே சொல்லிக்குவாங்க. அன்னிக்கு நான் கோழிக்கோடு போயிருந்தப்போ ஒரு ராஜாவோடு கூட வண்டியிலே கடற்கரை சவாரி போயிருந்தேன். கடற்கரைக்குப் பக்கத்திலே ஒரு சின்ன பங்களா இருந்தது. அது என்னன்னு கேட்டப்போ துரைமார்கள் பூஜை பண்ற இடம்னு ராஜா சொன்னார். தலைவெட்டிக் கோயில்னு அதுக்குப்பேர். அந்த இடத்திலே நடக்கிற பூஜையைப் பத்தின விவரத்தை யாராவது வெளியே சொன்னா அவங்க தலையை வெட்டிப்போடணும்னு வெள்ளைக்காரன் உத்திரவு. இந்த மாதிரி பூஜையை அவங்க நடத்தி, தேவி அருள் வரவழைச்சி இந்த நாட்டையெல்லாம் ஜெயிச்சிட்டாங்க. நம்ம ராஜாக்களை வெறும் நடைப்பிணங்களாக் கிட்டாங்க. ஆனாலும் எந்த மந்திரமும் தந்திரமும் இல்லேன்னு சும்மா நம்மகிட்ட சொல்லிக்கிறாங்க. நல்ல மாதிரி வேலை இல்லே, இது?

லட்சுமிக்குட்டியம்மா: இந்தத் தலைவெட்டிக்கோயில்லே நம்மவங்களை அனுமதிப்பாங்களா?

கேசவன்நம்பூதிரி: அது எனக்குத் தெரியாது. அனு மதிக்கிற மாதிரி தெரியலே.

லட்சுமிக்குட்டியம்மா: எனக்கு உறக்கம் வருது.

கேசவன்நம்பூதிரி: எனக்கும் உறக்கம் வருது.

லட்சுமிக்குட்டியம்மா தூங்குவதற்காகப் படுத்தாள். நம்பூதிரியும் தூங்குவதற்கான ஏற்பாட்டுடன் படுத்தார். அப்போதுதான் இந்துலேகாவுடன் நடந்த பேச்சுவார்த்தை குறித்தும், நம்பூதிரிப்பாடு குறித்தும் லட்சுமிக்குட்டியம்மா வுடன் பேச வேண்டுமென்ற நோக்கத்துடன் தட்டி எழுப்பி விட்டு, கடைசியில் நூல்மில்லைப் பற்றியும் மற்றது பற்றியும் பேசி நேரம் கடந்து போய்விட்டதே—இது முட்டாள்தனமாகிவிட்டதே என்று இந்தப் பரம வெகுளி யான சேகவன்நம்பூதிரிக்குத் தோன்றிற்று.

7

# கண்ணழி சூரிநம்பூதிரிப்பாடு

ஒரு கதையைச் சார்ந்து எதார்த்தமாகவும் உண்மையாகவும் ஒரு புத்தகம் எழுதத் தீர்மானித்துவிட்ட பின்னர், அந்தப் புத்தகத்தில் குறிப்பிடப்படவிருக்கும் நிகழ்ச்சிகளால் சில ருக்குத் தொந்திரவோ வெறுப்போ ஏற்பட வாய்ப்பு உண்டு என்று அந்த எழுத்தாளன் நினைத்தால் பொதுவாக அந்த எண்ணம் தேவையில்லாதது. ஆனால் மலையாளத்தில் இது ஒரு புது மாதிரிக் கதை என்பதால், எனது வாசர்களில் சிலர் இந்தப் புத்தகத்தில் காணும் சில நிகழ்ச்சிகளை ஒருவேளை தவறாகக் கருதி எனது சிந்தனையும் நோக்கமும் தடைப்பட வாய்ப்பு ஏற்படுமோ என்று நான் சந்தேகப்படுவதனால் அதைப்பற்றி இங்கே ஒரு சிறிது சொல்லிக்கொள்ள வேண்டியது அவசியமென்று நினைக்கிறேன்.

இந்த அத்தியாயத்திலும் இனி வரவிருக்கும் சில அத்தி யாயங்களிலும் கொஞ்சம் சபலபுத்திக்காரனும் ஸ்த்ரீலோ லனுமாகிய ஒரு நம்பூதிரிப்பாடின் கதையைப்பற்றிச் சொல்ல நேர்கிறது. மலையாள நாட்டில் எனக்கு நம்பூதிரி களைவிட அதிக மாரியாதைக்குரியவர்கள் வேறு யாரு மில்லை. அவர்களில் அதிக புத்திசாலிகளும் சாமர்த்திய சாலிகளும் ஆன பலரை நான் அறிவேன். அவர்களில் சிலர் எனது நெருங்கிய நண்பர்களாகவும் இருக்கிறார்கள். எந்த ஜாதியிலும் சாமர்த்தியசாலிகளாகவும் வெகுளி களாகவும், புத்திசாலிகளாகவும், அறிவிலிகளாகவும், நல்லவர்களாகவும், பொல்லாதவர்களாகவும் கலந்துதான் காணப்படுகிறார்கள். அதைப் போன்றுதான் நம்பூதிரி களிலும் இருக்கிறார்கள். இந்தக் கதையில் வரும்

நம்பூதிரிப்பாடு சிறிது ஏடாகூடமானவர் என்ற போதிலும் அவருடைய கூட்டாளியாக எனது வாசகர்களுக்கு அறிமுகமாக இருக்கும் செறுசேரிநம்பூதிரியின் சாமர்த்தியத்தையும் ரசிகத்தன்மையையும் கவனித்தால், பொதுவாகப் போற்றத் தகுந்தவர்களாகவும் மலையாள நாட்டில் மரியாதைக்குரிய நிலையில் வைக்கப்பட்டுள்ளவர்களுமான நம்பூதிரிப்பாடுகளையும் நம்பூதிரிகளையும் பரிகசிக்க வேண்டுமென்ற ஒரு கெட்ட எண்ணம் எனக்கு ஒருபோதும் இருப்பதற்கில்லை என்பது புத்திசாலிகளும் நடுநிலை பிறழாதவர்களுமான என் வாசகர்களுக்கு எளிதில் புரியும் என்று நான் நம்புகிறேன்.

இங்கிலீஷில் இந்த மாதிரிக் கதைகளில் விவரிக்கப் படுகிறவர்களெல்லாம் பல நிலைகளிலும் இருக்கின்ற ஐரோப்பிய ஆண் பெண்களாவர். சில புத்தகங்களில் இப்போது உயிரோடிருக்கும் பெரும்புள்ளிகளான சில துரைமார்களைப் பற்றி இகழ்ந்தோ பரிகசித்தோ புகழ்ந்தோ சில சமயங்களில் விவரிக்க நேர்வதுண்டு ஆனாலும் தீயநோக்கம் எதுவும் இல்லாமல் இவ்வகைக் கதைகள் விவரிக்கப்படுவதனால் ஐரோப்பாவில் யாருக்கும் வெறுப்போ வருத்தமோ உண்டாவதில்லை. எனவே இந்தப் புத்தகத்தில் கூறப்படும் நிகழ்ச்சிகளை முன்னிட்டு யாருக்கும் வெறுப்பு ஏற்படக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கேசவன்நம்பூதிரி பஞ்சுமேனோனிடம் வாசித்துக் காண்பித்த கடிதம் மேற்குறிப்பிட்ட சூரிநம்பூதிரிப்பாடின் கடிதமாகும்.

'கண்ணழி மூர்க்கில்லாத்த மனை' என்பது மலையாள நாடு எங்கிலும் பிரசித்தமான குடும்பமாகவும், செல்வத்திலும் செல்வாக்கிலும் இணையற்றதாகவும் பெயர்பெற்றதாகும். இந்தக் குடும்பத்தின் குபேரர்களான நம்பூதிரிப் பாடுகளில் இரண்டாவது நபரானவர் சூரிநம்பூதிரிப்பாடு. ஆனாலும் மூத்த நம்பூதிரிப்பாடு வயோதிகராகவும் நோயாளியாகவும் இருந்ததனால் குடும்பத்தின் எல்லாக் காரியங்களையும் பார்த்துக்கொள்ள நியமிக்கப்பட்டவர் சூரிநம்பூதிரிப்பாடு. இவருக்கு இந்தக் கதை நடந்த காலத்தில்

நாற்பத்தைந்து வயது. சின்ன வயது முதற்கொண்டே குடும்ப சம்பந்தமான காரியங்களைப் பார்த்துக்கொள்ள நேர்ந்த தனால் படிக்க முடியாமல் போயிற்று. இவர் இயல்பாகவே பெரிதும் ஸ்த்ரீலோலனாக இருந்தார். சொந்தத்தில் முறை யாகக் கல்யாணம் செய்துகொள்ளவில்லை. மூத்த நம்பூதிரி எவ்வளவு மன்றாடியும் கல்யாணம் செய்துகொள்ளாமலே இதுவரை இவர் காலம் கழித்தாயிற்று. தம்பிமார் இரண்டு பேர்க்குக் கல்யாணம் ஆகியிருந்தது. அதையே காரணம் காட்டி இவர் பல சூத்திரப் பெண்களுக்குக் கணவனாக இருந்து காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தார். இவருடைய உடம்பைப் பற்றி உச்சி முதல் உள்ளங்கால் வரை வர்ணிக்க நான் நினைக்கவில்லை. ஆள் நல்ல வெளுத்த நிறந்தா னென்றாலும் அழகோ அருளோ இவருடைய உடம்புக்குக் கொஞ்சம்கூட இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஆனாலும் குரூபி என்று சொல்வதற்கில்லை. இவரைப் போன்ற உடலமைப்புக் கொண்டவர்கள் ஒரு லட்சம் பேரையாவது மலையாள நாட்டில் பார்க்க முடியும். அவயங் களில் எதையும் சிறப்பித்துச் சொல்லும்படியாக எதுவும் இல்லை. அழகென்றோ, முரண்பாடான அங்கஹீன மென்றோ சொல்வதற்கில்லை. ஆனால் இவருடைய உடலமைப்பிலும் நடவடிக்கைகளிலும் இரண்டு மூன்று விவரங்களைத்தான் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். இவர் சிரிக்கும்போது வாய் இரண்டு கன்னங்களையும் தாண்டி, அவற்றையும் மீறி நீளுமோ என்று பார்ப்பவர் களுக்குத் தோன்றும். மூக்கு சரியான அளவில்தான் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது என்ற போதிலும் அந்த முகத் துக்குப் போதாது என்று தோன்றும். நடப்பதைப் பார்க்கும் போது தத்தித் தத்தியபடி காக்கைகள் நடப்பது போன்றி ருக்கும். இவர் பெண்பித்தரென்று முதலில் சொல்லி விட்டதனால் இனி இவருடைய சுபாவத்தைப் பற்றி மேலும் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை. பணக்கார ஆண் களுக்குப் பெண்கள் மீது அதிக சபலம் உண்டாகும் என்ற நிலையில் அவர்களைப் பற்றிய பிற நடவடிக்கைகளைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. அவர்களிடம் எப்போதும் உள்ள நினைப்பும் நடவடிக்கைகளும் இந்த ஒரு

விஷயத்தை சம்பந்தப்படுத்தாமல் ஒருபோதும் இருக்க முடியாது. இவருக்குக் குடும்பத்துக் காரியங்களைக் கவனித்துக்கொள்கிறவர் என்ற பெயர் மட்டுமே உண்டு— உண்மையில் மேற்பார்த்து கவனித்துக் கொண்டது வேலை நிமித்தம் நியமிக்கப்பட்ட காரியஸ்தர்கள்தாம். அவர்களில் சிலருடைய திறமையினால் காரியங்களெல்லாம் ஒரு வகையில் சரியாகத்தான் நடந்துகொண்டிருந்ததாகச் சொல்ல வேண்டும். இவர் உண்மையில் வெகுளி, கல்மிஷம் இல்லாதவர் என்ற போதிலும், நடத்தையில் துர்க்குணம் கொண்டிருந்ததனால் நல்லவர் என்பதாகப் பலர்க்குப் பொது அபிப்பிராயம் கிடையாது. சாதாரண அறிவும் படிப்பும் இல்லாத பணக்காரர்களுக்கு ஏற்படுவதைப் போல, இவருக்கும் தன்னைப் பற்றி மிகையான அகங்கார அபிப்பிராயம் ஏற்பட்டிருந்தது. அவர் காரியங்களைச் செய்து முடிப்பதில் அதிநிபுணனென்று அவர்களுடைய வேலைக்காரர்களாக காரியஸ்தர்களும், பார்ப்பதற்கு மன்மதனைப்போல் அழகனென்று அவர் சகவாசம் வைத்திருக்கும் வைப்பாட்டிகளும் இந்த மூடனை உயர்வாகப் பேசி நம்பிக்கைக்கு ஆட்பட்டிருந்தார்கள். முகஸ்துதி கேட்டுக் கேட்டு தான் ஒரு மகாமேதாவி என்று இவர் முடிவு செய்திருந்தார். பணம் பறிக்கும் சாமர்த்தியமும் வஞ்சகமும் கொண்ட விபச்சாரப் பெண்கள் தன்னுடைய தேகவாகைப் பற்றித் தன்னுடன் பேசும் புளுகுகளையெல்லாம் இந்த அப்பாவி உண்மையில் தனக்குள்ள சிறப்பென்று கருதி தனக்குள் கர்வப்பட்டுக் கொண்டார். வயது நாற்பத்தைந்து ஆன பிறகும் இந்த ஆணவம் கொஞ்சமும் குறையவில்லை. "இந்த ராஜாவோட திருமேனியைப் பார்க்காம ஒரு கணநேரம்கூட இந்த அடியாளால் இருக்க முடியலே" என்று ஒருத்தி எப்போதோ ஒரு சமயம் சொன்னது இவருடைய மனதில் கல்வெட்டுப்போல் பதிந்துவிட்டது. "இந்த ராஜாவோட திருமேனியிலே அடியாளின் சரீரத்தைச் சேர்க்கிறதாலே உண்டாகிற பாக்கியம்தானே அடியாளுக்குப் பெரிசு. பணம் காசு யாருக்கு வேணும்? அது யார்கிட்டதான் இல்லே? இந்த அழகுத் திருமேனி வேறு யாருக்காவது இருக்கா?" என்று மற்றொருத்தி சொன்னது வேதவாக்காக

இவருடைய மனதில் பதிந்தது. தன்னுடைய நண்பனாகத் தன்னருகே வைத்திருந்தது செறுசேரி குடும்பத்து கோவிந் தன்நம்பூதிரியைத்தான். இவரைப் போல இவ்வளவு சரசமாகப் பழகுபவரும் சாமர்த்தியமும் கொண்ட இன்னொருவரைக் குறிப்பிட வேண்டுமென்றால் முடியாது. வடமொழியில் விற்பன்னர்; இலக்கண சாஸ்திரத்தைத் தெளிவாகப் படித்திருந்தார்; சங்கீதத்தில் தீவிர ரசிகர்; பார்வைக்கு நல்ல தோற்றமுள்ள முகமும் உடல்வாகும்; சம்பாஷணையில் இவ்வளவு சரசத்தை வேறு யாரிடமும் நான் பார்த்ததில்லை. இந்தக் கதையில் வரும் வேறு யாருக்கும் இது இல்லையென்று திட்டவட்டமாக நான் சொல்வேன். இவருக்குக் கொஞ்சம்கூடக் கெட்ட எண்ணம் கிடையாது. ஆனால் பரிகாசத்திற்குரிய மனிதர்களைப் பற்றி இவருக்குச் சிறிதும் இரக்கம் கிடையாது என்று சொல்லலாம். இவருடைய கிண்டலுக்குப் பயப்படாத வர்கள் சுரணை இல்லாத மூடர்களாக மட்டுமே இருக்க முடியும். கிண்டல் செய்தால் ஒரு சிறிதும் புரியதவர்களுக்கு மட்டுமே இவரிடம் பயமில்லை. நம்முடைய சூரிநம்பூ திரிப்பாடுக்கு இவரிடம் பயம் கிடையாது. இவர் சூரிநம்பூ திரிப்பாடுக்கு ஒரு சிநேகிதனாக ஒருக்காலும் இருந்த தில்லை. சூரிநம்பூதிரிப்பாடு பற்றி இவருக்கு மிகவும் துச்சமாக எண்ணமே இருந்தது. ஆனால் அதை அவ்வளவு வெளிப்படையாகக் காட்டிக்கொள்ள முடியாதல்லவா? சூரிநம்பூதிரிபாபாடு பணத்தினாலும் செல்வாக்கினாலும் நம்பூதிரிகளில் முக்கியமானவராக .இருந்தார். எனவே வெளிப்படையாக அவருக்கு எப்படி மரியாதை செலுத் தாமல் இருக்க முடியும்? சூரிநம்பூதிரிப்பாடுக்குத் தன்னைப் புகழ்ந்து கொண்டாடுபவர்கள் மீது ரொம்பப் பிரியம். அது நிந்தாஸ்துதியானாலும் வாஸ்தவமானலும் இரண்டுக்கும் வேறுபாடு அறிவது கஷ்டம். சூரிநம்பூதிரியின் தம்பியும், மிக நல்லவருமான நாராயணநம்பூதிரிப்பாடுக்கு கோவிந் தன்நம்பூதிரி நெருங்கிய நண்பர். ஆனால் மூர்க்கில்லாத்த மனைக்குச் சென்றால் கோவிந்தன்நம்பூதிரிக்குத் தன் நண்பனுடன் பேசி அளவளாவுவதற்கான வாய்ப்பு மிகவும் அரிதாகவே இருந்தது. மனைக்குச் சென்றால்

சூரிநம்பூதிரிப்பாடு பத்தாயப் பகுதிக்கு வரச் சொல்லி உடனே கூப்பிட்டனுப்புவார்... அதைத் தவிர்த்துத் தப்பிப்பது ரொம்பக் கஷ்டம். இப்படித்தான் சூரிநம்பூதிரிப் பாடுக்கும் கோவிந்தன்நம்பூதிரிப்பாடுக்கும் இடையிலான தொடர்பு. நம்பூதிரிப்பாடின் விருப்பத்திற்கு ஏற்பப் பேசா விட்டால் கோபம் வரும், கோபித்துக் கொண்டால் இடைஞ்சல்கள் உண்டாக்கி வைப்பார் என்ற பயத்தால் கோவிந்தன் நம்பூதிரி நம்பூதிரிப்பாடை தாராளமாக நிந்தாஸ்துதி செய்வதுண்டு. தான் அதியழகனென்றும், நல்ல திறமைசாலி என்றும் தன்னிடம் யாரெல்லாம் சொல்லமாட்டார்களோ அவர்களோடெல்லாம் நம்பூதிரிப் பாடுக்குக் கடுங் கோபமும் பகையும் உண்டாகும். அதனால் செறுசேரி நம்பூதிரிக்கு இவரைப் புகழ்ந்து பேசுவதைத் தவிர்க்க முடியாது போயிற்று.

நம்பூதிரிப்பாடைப் பற்றி மேலும் குறிப்பிடப்பட வேண்டியது இவர் கலையார்வம் கொண்டவர் என்பதாகும். கதகளி ரொம்பப் பிடிக்கும். அதன் நுணுக்கம் ஒரளவுக்கு நன்றாகவே தெரியும். வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாளும், அதையும் தாண்டி நாள் இருக்குமானால் அன்றைக்கும் கதகளி பார்த்தாலும் திருப்தி ஏற்படாது. இவருடைய தம்பிமார்கள் சாமர்த்தியசாலிகள். ஆனால் இவருடைய அபிப்பிராயம் அவர்களெல்லாம் அப்பாவிகள் என்பதாகும்.

நம்பூதிரிப்பாடு குளியலறையில் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தபோதுதான் கேசவன்நம்பூதிரியின் கடிதம் வந்து சேர்ந்தது. அதைப் படித்தவுடன் அந்த நிமிஷமே செறுசேரிநம்பூதிரியை அழைத்து வரச் சொல்லி ஆள் அனுப்பினார். வெற்றிலைப் பெட்டி அடைப்பைக்காரன் கோவிந்தன் செறுசேரிநம்பூதிரியை அழைத்து வரச் சென்றான். இவன் நல்ல சாமர்த்தியசாலியான ஒரு வேலைக்காரப் பையன். தன் முதலாளியின் சுபாவம் முழுவதையும் அறிந்து, நிறைகுறைகளை அறிந்து வைத்திருந்த கள்ளன். இருந்தபோதும் நம்பூதிரிப்பாடு மீது இவனுக்கு நல்ல பக்தியும் நெருக்கமும் உண்டாகியிருந்தன. கோவிந்தன் செறுசேரிமனைக்குச் சென்றபோது கோவிந்தன்

நம்பூதிரி சாப்பாடு முடித்து, வெளியே முற்றத்திற்கு வந்து. சதுரங்கம் விளையாடக் காய்களை அடுக்கிக் கொண்டிருந்தார்.

செறுசேரிநம்பூதிரி: என்ன கோவிந்தா, அவசர அவசரமா வந்திருக்கே?

கோவிந்தன்: ஒருவாட்டி அங்கே வந்து போகணும்னு சொல்லியனுப்பிச்சாங்க.

செறுசேரிநம்பூதிரி: நம்பூதிரி சாப்பிட்டு முடிச்சிட்டாரா?

கோவிந்தன்: இல்லே; குளிப்பறையிலே முதலாளி எண்ணெய் தேச்சிக் குளிச்சிக்கிட்டு இருக்காங்க.

செறுசேரிநம்பூதிரி: என்ன இவ்வளவு ஆத்திர அவசரம்? விசேஷமா ஏதாச்சும் உண்டா?

கோவிந்தன்: செம்பாழியோட்டிலேருந்து கறுத்தேடத்துக் கேசவன்நம்பூதிரி கிட்டேருந்து ஒரு கடிதாசு வந்திருக்கு. அதை வாசிச்ச உடனே ஐயாவை முதலாளி கூட்டிக்கிட்டு வரச் சொன்னாங்க.

செறுசேரிநம்பூதிரி: சரி, புரிஞ்சிபோச்சி. நான் வர்றேன். உடுப்பை மாத்திக்கிடுறேன்.

என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போனார்.

செறுசேரிநம்பூதிரி அன்றைக்கு இருபது நாட்களுக்கு முன்பு கேசவன்நம்பூதிரியுடன் செம்பாழியோட்டுக்குப் போயிருந்தார். இந்துலேகாவுக்கும் மாதவனுக்கும் இடையேயான அன்னியோன்னிய நட்பு பற்றி செறுசேரி நம்பூதிரிக்கு அன்று தெரிய வந்தது. விரைவிலேயே மறுபடியும் வருவதாகத் தான் விடைபெற்று வந்திருந்தார். செறுசேரிநம்பூதிரி விடைபெற்றுக் கிளம்பியபோது மூர்க்கில்லாத்த சூரிநம்பூதிரிப்பாடுக்கும் இந்துலேகாவுக்கும் சம்பந்தம் பேசி முடித்தால் மிகவும் பொருத்தமாக இருக்குமென்றும், அதற்கு செறுசேரிநம்பூதிரி முயற்சி எடுக்க வேண்டுமென்றும் கேசவன்நம்பூதிரி குறிப்பிட்டார்.

தன்னால் அதற்கு இயலாதென்று செறுசேரிநம்பூதிரி பதில் சொல்லியிருந்தார்.

செறுசேரிநம்பூதிரி செம்பாழியோட்டிலிருந்து திரும்பி வீட்டுக்கு வந்த பின்னர் இந்துலேகாவைப் பற்றி சூரிநம் பூதிரிப்பாடின் தம்பியும் அதிபுத்திசாலியுமான நாராயண நம்பூதிரிப்பாடுடன் மட்டும் கொஞ்சம் பிரஸ்தாபித்ததுண்டு. சூரிநம்பூதிரியிடம் இந்துலேகாவைப் பற்றி செறுசேரி மூச்சுக்கூட விடவில்லை. இவ்வாறு இந்துலேகாவைப் பற்றி நம்முடைய செறுசேரிநம்பூதிரிக்கு முன்னதாகவே தெரிந் திருந்தது.

கோவிந்தன் வந்து அழைத்ததனால் செறுசேரி நம்பூதிரி புறப்படத் தீர்மானித்து வீட்டுக்குள் போய் ஒரு வெளுத்த முண்டுவேட்டி உடுத்திக்கொண்டு வெளியில் வந்தார். "கோவிந்தா, இனி போகலாம்" என்று சொல்லிப் புறப்பட்டார்.

போகும்வழியில் செறுசேரிநம்பூதிரியுடன்:

கோவிந்தன்: கூப்பிட்டனுப்பிச்ச விசயம் என் னன்னு அய்யாவுக்குப் புரிஞ்சிக்கு மின்னு அடியேன் நினைக்கிறேன். தெரியலேன்னா அடியேன் சொல் லுறேன்.

செறுசேரிநம்பூதிரி: சொல்லு.

கோவிந்தன்: செம்பாழியோட்டிலே ரொம்ப அழகான ஒரு பொண்ணு இருக்கும் போலே, கேசவன்நம்பூதிரி போய் வந்துக்கிட்டிருக்கிற பூவள்ளி வீட்டிலே. அங்கே முதலாளி சம்பந்தம் பண்ணத் தீர்மானிச்சி தான் கடுதாசு வந்திருக்குது. கூட அய்யா அவுகளும் வரணும்னு இருக்கும்போலத் தோணுது.

செறுசேரிநம்பூதிரி சிரித்தபடி கோவிந்தன் சொன் னதையெல்லாம் கேட்டார். கடைசியில்—

செறுசேரிநம்பூதிரி: கோவிந்தா! நீயும்தானே வருவே, நாங்க போகிறதா இருந்தா?

கோவிந்தன்: அடியேன் கட்டாயம் வருவேன். அய்யா அவுகளும் அந்தப் பொண்ணைப் பார்த்திருக்கிறதாக அந்தக் கடுதாசு கொண்டு வந்தவன் என்கிட்ட சொன்னான். பார்த் திருக்கீங்களான்னு எனக்குத் தெரியாது.

செறுசேரிநம்பூதிரி: நான் பார்த்திருக்கேன். கடுதாசு கொண்டு வந்தவன்தானா உன் கிட்ட இந்தக் கல்யாணம் பத்தின விவரமெல்லாம் சொன்னது?

கோவிந்தன்: இல்லே—அது முதலாளியே சொன்னது. கடுதாசியை அடியேன் படிக்கலே. முதலாளி அதுக்கு மேலேயும் சொன்னாங்க—இது மத்தக் கல்யாணம் போல இல்லை யாம். பொண்ணை (ஏதோ ஒரு பேரு சொன்னாங்க. சந்திரபானு அப்படீன்னோ, சித்திரலேகா அப்படீன்னோ, வேறே ஒரு பேரோ சொன்னாங்க) கல்யாணம் முடிச்சி ஒரு நாள் வீட்டுக்குக் கூட்டி வரணும்னு சொன்னாங்க. அதுக் காக இன்னிக்குப் பெரிய முதலாளி கிட்ட விவரத்தைச் சொல்லி சம்மதம் வாங்கணும்னு சொன் னாங்க.

இதைக் கேட்டபோது கோவிந்தன்நம்பூதிரிக்குச் சிரிப்பை அடக்க முடியாமல் போகவே உரக்கச் சிரித்தார். சிரிப்பிற்கான காரணம் தனக்குத் தெளிவாகத் தெரிய வில்லை என்ற போதிலும் கோவிந்தனும் சேர்ந்து சிரித்தான். இருவரும் வேகமாக நடந்தார்கள்.

செறுசேரிநம்பூதிரியை அழைத்துவர கோவிந்தனை அனுப்பிய உடனேயே நம்பூதிரிப்பாடு குளியலையும் சாப்பாட்டையும் முடித்து, இந்துலேகாவை மனதில் தீவிர

மாக நினைத்து ரசித்தபடி வெளியில் வாசலில் வந்து நின்றார். அப்போது வீட்டு விவகாரங்களை கவனிக்கும் தாசன்மேனோன் ஒரு கடிதக்கட்டுடன் நம்பூதிரிப்பாடின் அருகே போய் நின்றார்.

நம்பூதிரிப்பாடு: எனக்கு இன்னிக்கு எந்த வேலையும் பார்க்க நேரமில்லே.

தாசன்மேனோன்: இதைக் கட்டாயம் ஒரு தடவைப் பார்த்தே ஆக வேண்டியிருக்கு.

நம்பூதிரிப்பாடு: இன்னிக்கு நீ என்ன சொன்னாலும் எனக்கு நேரம் கிடையாது.

தாசன்மேனோன்: நாளன்னிக்கு நம்மது விசாரணைக்கு வருது. அடியேன் ஒரு விவரத்தைச் சொல்லணும்னு நினைக்கிறேன். அதை இப்போ சொல்லாம இருக்க முடியாது.

நம்பூதிரிப்பாடு: என்ன விசாரணையானாலும் தேவையில்லே— இன்னிக்கு எனக்கு எதையும் கேட்கிறதுக்கு நேரமில்லே.

தாசன்மேனோன்: ஒரு மனு ஃபைல் பண்ண வேண்டியிருக்கு. அதுக்கு ஒரு மகஜர் கொடுத்தாகணும். மகஜரை எழுதிக் கொண்டு வந்திருக்கேன். அதிலே ஐயா ஒரு கையெழுத்துப் போட்டாப் போதும்.

நம்பூதிரிப்பாடு: இன்னிக்கு சனிக்கிழமை—சனிக்கிழமை நான் எந்தக் கடுதாசியிலும் கையெழுத்துப் போட மாட்டேன்னு உமக்குத் தெரியுமில்ல? பின்னே எதுக்காக வந்து என்னைத் தொந்திரவு பண்றீரு?

தாசன்மேனோன்: மனுவை ஃபைல் பண்ண திங்கள் கிழமை மகஜர் கொடுக்கலேன்னா நம்ம கேசு தோத்துப் போயிடும்.

நம்பூதிரிப்பாடு: எப்படி தீர்ப்பானாலும் சரி—மேல் கோர்ட்டு இல்லே?

தாசன்மேனோன்: மனுவை ஃபைல் பண்ணலேன்னா மேல் கோர்ட்டிலேயும் தோத்துப் போகும்.

நம்பூதிரிப்பாடு: இது மகா அனர்த்தம்தான்— உம்ம கிட்ட ஒரு காரியத்தை ஒப்ப டைச்சா என்னை வந்து இப்படி சங்கடப்படுத்தறது எதுக்காக?

தாசன்மேனோன்: மனுவிலே அடியேன் கையெ ழுத்துப் போட முடியுங்களா?

நம்பூதிரிப்பாடு: இன்னிக்கு சனிக்கிழமை. நான் எந்த மனுவிலேயும் கையெழுத்துப் போட மாட்டேன். முன்னாலே ஒரு பிராதுலே சனிக்கிழமை கையெ ழுத்துப் போட்டு அது தோத்துப் போனது உமக்கு ஞாபகமில்லே?

தாசன்மேனோன்: இது பிராது இல்லே, மனுதானே?

நம்பூதிரிப்பாடு: என்னவானாலும் நான் இன் னிக்குக் கையெழுத்துப் போடறதா இல்லே. நிச்சயம். நீரு போயி குளியும்.

தாசன்மேனோன்: இந்த வழக்கிலே சாட்சியா ஐயா அவுங்களே வரவேண்டியிருக் கும்னு தோணுது.

நம்பூதிரிப்பாடு: நானா?

தாசன்மேனோன்: ஆமாங்க.

நம்பூதிரிப்பாடு: கருமம்—கருமம்! நான் ஒருக்காலும் போக மாட்டேன்—இதனாலே வழக்குத் தோத்தாலும் பரவா யில்லே. வரச்சொல்லி வந்திருக்கா?

தாசன்மேனோன்: அனுப்பியிருந்தாங்க. நீங்க இங்கே இல்லேன்னு பதில் எழுதி அனுப் பிச்சிட்டேன்.

நம்பூதிரிப்பாடு: என்னை சாட்சிக்குப் பேர் கொடுத்த அந்த அதிகப்பிரசங்கி யாரு?

தாசன்மேனோன்: உள்ளாட்டில் பஞ்சுமேனோன் மேலே போட்ட வழக்கு இது.

நம்பூதிரிப்பாடு: உள்ளாட்டில் பஞ்சுவா? கருமம்! அவன்மேலே வழக்குப் போட்டி ருக்கா என்ன?

தாசன்மேனோன்: சேர்ப்பட்டைக் களத்திலேருந்து வெளியேத்தறதுக்காக.

நம்பூதிரிப்பாடு: சரி—சரி—நான் மறந்து போயிட் டேன். அந்த வழக்கைப் பத்தித் தானே முன்னாலே ஒரு நாள் என் கிட்டச் சொன்னீரு?

தாசன்மேனோன்: அடியேன் அதைப்பத்தி எதுவும் சொன்னதில்லே. பஞ்சுமேனோன் வாரிசு உரிமை கொண்டாடுறாரு. களத்திலே நாலு, அஞ்சு பட்டாக் களை அவரு தன்னோடதுன்னு தர்க்கம் பண்றாரு.

நம்பூதிரிப்பாடு: பஞ்சுவா? அவ்வளவு போக்கிரியா அவன்? இது எனக்குத் தெரியவே இல்லையே! ஒரு ஆளை அனுப் பிச்சி பஞ்சுவை இங்கே வரச் சொல்லு.

அந்தப் போக்கிரியை நானே நேரிலே கேட்கிறேன். இவ்வளவு சேட்டை பண்ணினால் கொளம், கெணறு, கோயில், மத்த எல்லாத்தையும் உடனே ஒரு வழி பண்ணிட வேண்டியதுதான். அப்போ நாய் மாதிரி பஞ்சு ஓடி வருவான். நீரு இந்த விவரத்தை முன்னாலேயே என்கிட்ட சொல்லியிருக்கலாமில்ல?

தாசன்மேனோன்: இதனாலே எதுவும் பிரயோஜன மில்லேன்னு தோணுது. பஞ்சு மேனோன் ஒரு வெள்ளைக்கார பாரிஸ்டர் துரையை வரவழைச் சிருக்காரு.

நம்பூதிரிப்பாடு: துரை வந்தால் என்னவாம்?
தாசன்மேனோன்: அவர் ரொம்பக் கெட்டிக்காரருங்க.
நம்பூதிரிப்பாடு: நமக்கும் ஒரு துரையை ஏற்பாடு பண்ணனும். ஏலமலைக்கார மக்ஷாமன் துரையை நியமிச்சாலே போதும். அவருக்கும் எனக்கும் ரொம்ப சினேகமாக்கும். அவரு கிட்ட நேராகப் போய் விவரத்தைச் சொல்லும்.
தாசன்மேனோன்: மலையை வாரம் எடுத்திருக்கிற துமைமாருங்க இந்த மாதிரி வேலைங்களை ஏத்துக்க மாட்டாங்க.
நம்பூதிரிப்பாடு: அதிகப்பிரசங்கித்தனமா பேசா தீரும்—அந்த வார ஒப்பந்தக்கார துரை எனக்காக வேண்டி எதுவும் செய்வாரு.
தாசன்மேனோன்: அப்படி ஆகட்டும். அப்படீன்னா அடியேன் அதை அப்படியே ஏற்பாடு பண்றேன். இந்த மனுவிலே இப்போதைக்கு ஒரு கையெழுத்து போடலேன்னா திங்கள்கிழமை வழக்கு தோத்துப்போயிடும்.

இப்படித் தாசன்மேனோனும் நம்பூதிரிப்பாடுமாக கையெழுத்துப் போட வேண்டும் என்றும், கையெழுத்துப் போட மாட்டேன் என்றும் தர்க்கமும் சண்டையுமாகக் குழப்பம் நேர்ந்தபோது, நாராயணன்நம்பூதிரிப்பாடு வீட்டிலிருந்து வந்து எல்லாவற்றையும் விளக்கிச்சொல்லி வேண்டிக்கொண்டதனால் நம்பூதிரிப்பாடு ஒருவழியாக மனுவில் கையொப்பமிட்டார். கையெழுத்துப போட்டு முடித்தவுடன், "ஏன் செறுசேரி வரல்லே?" என்று விசாரித்தபடி நம்பூதிரிப்பாடு வாசல் முற்றத்து அறைக்குள் சென்று செறுசேரிநம்பூதிரியின் வரவை எதிர்நோக்கியும், இந்து லேகாவின் அழகைத் தீவிரமாக மனதில் தியானித்து ரசித்துக் கொண்டும் நின்றிருந்தார். அப்படி நின்றிருக்கும் போது செறுசேரிநம்பூதிரியும் கோவிந்தனும் வந்து

கொண்டிருப்பதைப் பார்த்தார். அவர்கள் படியேறி வருவதற்குள்ளாகவே நம்பூதிரிப்பாடு உரக்கக் கூவி வரவேற்கத் தொடங்கினார்.

நம்பூதிரிப்பாடு: (உரக்கக் கூவிச் சொல்கிறார்) செறுசேரி, சீக்கிரமா வாங்க— சீக்கிரமா வாங்க எவ்வளவு சாவகாசமா நடந்து வர்றீங்க, வேகமா நடக்க முடியலையா? விவரம் எல்லாத்தையும் கேட்கணுமில்ல? செம்பாழியோட்டிலேருந்து கறுத்தேடத்தோட கடுதாசு வந்திருக்கு. இந்துலேகா என்கிற பொண்ணைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கீங்களா? அன்னிக்கு போதாயிப்ரம் என் கிட்ட விவரம் சொல்லிக்கிட்டிருந்தப்போ நீங்களும் இருந்தீங்களா? இல்லே—ரொம்ப அழகியாக்கும்— தமயந்தியேதான். அந்தப் பொண்ணைக் கல்யாணம் பேசப் போகணும். முன்னே மாதிரிக் கல்யாணம் பண்றதில்லே இது. இங்கேயே அவளைக் கூட்டிக்கிட்டு வந்திடப் பேறேன். இங்கிலீசும் மத்ததும் அவளுக்குத் தெரியுமாம். இங்கிலீசு தெரிஞ்ச பொண்ணுங்களை நான் இதுவரைக்கும் பார்த்ததில்லே. ரொம்ப அழகியாம்— தமயந்தின்னே சொல்லக் கேள்விப் பட்டிருக்கேன்.

இதைச் சொல்லி முடிக்கும்போது செறுசேரிநம்பூதிரி அவருக்குப் பக்கத்தில் வந்து நின்றார்.

செறுசேரிநம்பூதிரி: அப்படீன்னா நளன்னு ஒருத்தர் வேணுமே. ஐயா நம்பூதிரிதான் அந்த நளன்.

நம்பூரிதிப்பாடு: செறுசேரி! கிண்டல் பேச்செல்லாம் போதும். நான் கிழவன் ஆக ஆரம்பிச்சாச்சி. அந்தப் பொண்ணுக்கோ பதினைஞ்சு வயசுதான் ஆகுது. எனக்கு என்ன அழகு இருக்குது? அதை விட்டுத் தள்ளுங்க—நாம புறப்பட வேண்டியதுதானே?

செறுசேரிநம்பூதிரி: என்ன விட்டுத்தள்றது? அதைச் சொல்லுங்க. நாப்பத்தஞ்சு வயசு ஒரு வயசா? இருபது வயசிலே அழகு இருந்திருக்கும்னா அது நாப்பத்தஞ்சு வயசிலே எங்கே போகும்? இந்த மாதிரி எதுவும் பேச வேண்டாம். உங்களுக்கு ஒரு எண்பது வயசு ஆகிற வரைக்கும் பொண்ணுங்களுக்கு உங்க மேலே இருக்கிற மோகம் தீரப்போறதில் லேன்னு நான் சொல்லுவேன். அப்படியிருக்க ஏன் இப்படியெல்லாம் பேசறீங்க?

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவைப் பார்த்திருக்கீங்களா? செறுசேரி அன்னிக்கு கறுத்தேடத்தோட போயிருந்தது அங்கேதானே?

செறுசேரிநம்பூதிரி: இந்துலேகாவைப் பார்த்திருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: அழகாத்தானே இருப்பா?

செறுசேரிநம்பூதிரி: ரொம்ப அழகான பொண்ணாக்கும்.

நம்பூதிரிப்பாடு: என்னமோ இங்கிலீசெல்லாம் தெரியும்னு சிலர் சொல்லிக்கிடுறாங்களே—அதெல்லாம் தெரியுமா?

செறுசேரிநம்பூதிரி: தெரியும்னு சொல்லக் கேட்டிருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: பொண்ணுங்க இங்கிலீசு படிச்சா ஒழுங்குமுறையா இருக்காது. அது தான் ஒரு குறை.

செறுசேரிநம்பூதிரி: இங்கிலீசு படிச்சா ஒழுங்குமுறை அதிகமாகும்னு எனக்குத் தோணுது. இந்துலேகாவைப் பார்த் தப்போ எனக்கு அப்படித்தான் தோணிச்சி.

நம்பூதிரிப்பாடு: என்னங்காணும் இந்துலேகா வோட ரொம்பப் பழக்கம் உண்டோ? உண்டுன்னா சொல் லும், நான் கட்டிக்கப் போறதுக்கு முன்னாலே இருக்கிறதுதானே— சொல்லறதிலே தப்பில்லே. என்ன வாம்—நீங்க சொல்றதைப் பார்த்தா பழக்கம் இருக்கிற மாதிரித் தோணுதே—உண்டோ?

செறுசேரிநம்பூதிரி: என்ன பழக்கம்?

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவோட இருக்கிற பழக்கம்தான்.

செறுசேரிநம்பூதிரி: இப்படியெல்லாம் பேசறது ரொம்ப மோசம். நான் ஒருக்காலும் அந்த மாதிரி நடவடிக்கைகளிலே ஈடு படுற நினைப்புக் கொண்ட வனில்லே. அதுவுமில்லாம, இந்து லேகா ரொம்பப் பதவிசான ஒரு பொண்ணாக்கும். இந்த சாதாரண நாயர் குடும்பத்துப் பொண்ணுங் களைப் போல இல்லை. அதை அங்கே போய்ப் பார்த்தால் தெரிஞ் சிக்கலாம். ஆனால் நம்பூதிரியோட உடம்பையும் தாட்டிகத்தையும் பார்த்தால் அந்தப் பொண்ணு மயங்கிப் போகும். வேறே எந்த

ஆளையும் கண்டால் அப்படி மயங்கிப்போக வழியில்லே.

நம்பூதிரிப்பாடு: சும்மா ஆளைக் குளிப்பாட்டத் தேவையில்லை. எனக்கு என்ன அவ்வளவு அழகா இருக்கு? எனக்கு அவ்வளவு இருக்கிறதாத் தோணலே.

செறுசேரிநம்பூதிரி: உங்களுக்கு அப்படித்தான் தோணும்—ஆனால் நான் அதுக்கு ஒத்துக்கிட மாட்டேன்.

நம்பூதிரிப்பாடு: நீலாட்டு லட்சுமியை நீரு பார்த் திருக்கீறா?

செறுசேரிநம்பூதிரி: பார்த்ததில்லே.

நம்பூதிரிப்பாடு: முயாட்டு பாருவைப் பார்த் திருக்கீறா?

செறுசேரிநம்பூதிரி: இல்லே.

நம்பூதிரிப்பாடு: ஆனால் கோப்பாட்டுக் கும்மி ணியைப் பார்த்திருக்கீறில்ல. அன் னிக்கு இங்கே வந்து பாட்டுப் பாடினப்போ நீரு இங்கே இருந் தீருல்ல. கோப்பாட்டு கும்மினி, இந்துலேகா—இதிலே யாரு ஒசத்தி அழகு?

செறுசேரிநம்பூதிரி: அன்னிக்குப் பாட்டுப் பாடின பொண்ணோட முகத்தை நான் சரியாயப் பார்க்கலே.

நம்பூதிரிப்பாடு: போகட்டும், நீரு இதுவரைக்கும் பார்த்த பொண்ணுங்களிலே. ரொம்ப அழகான பொண்ணு யாரு?

செறுசேரிநம்பூதிரி: இந்துலேகா.

நம்பூதிரிப்பாடு: சந்தேகம் இல்லேதானே?

செறுசேரிநம்பூதிரி: சந்தேகமில்லே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா இது என் அதிருஷ்டம்தான்.

செறுசேரிநம்பூதிரி: அதிருஷ்டம்தான்.

நம்பூதிரிப்பாடு: ஆம்பிளைக்கும் பொம்பளை சுகத்தைவிட மேலான சுகம் வேறே என்ன இருக்கு?

செறுசேரிநம்பூதிரி: பொம்பளை சுகம்தான் பெரி சின்னு தீர்மானிச்சிட்டா அதுக்கு மேலே ஒண்ணுமில்லே.

நம்பூதிரிபாடு: நீர் என்னென்று நினைச்சிருக் கிறீரு?

செறுசேரிநம்பூதிரி: நான் அப்படி நினைக்கலே.

நம்பூதிரிப்பாடு: பொம்பளை சுகம் உசத்தி இல்லேங் கிறது உம்ம எண்ணமாக்கும்.

செறுசேரிநம்பூதிரி: ஒசத்தியில்லேண்ணில்லே; பொம் பளை சுகத்தைக் காட்டிலும் வேறே சுகம் எதுவுமில்லேன்னு சொல்ல மாட்டேன்—அதுதான்.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா எதுக்காக இந்த ஜனங்களெல்லாம் இந்தப் பொம் பளை சுகத்துக்காக இவ்வளவு அலைஞ்சி திரியறாங்க?

செறுசேரிநம்பூதிரி: அலைஞ்சி திரியறது முட்டாள் தனம்னுதான் சொல்லணும்.

நம்பூதிரிப்பாடு: நீரு இப்போவெல்லாம் வேதாந்தி யாயிட்ட மாதிரித் தோணுது. எனக்குப் பொம்பளைங்க மேலே ரொம்ப மயக்கமாக்கும்.

செறுசேரிநம்பூதிரி: பொம்பளைகளுக்கும் உங்க மேலே அப்படித்தான் போலிருக்கு.

நம்பூதிரிப்பாடு: ஒரு வேளை அதனாலேதான் எனக்கு அப்படி ஒரு மயக்கமோ?

செறுசேரிநம்பூதிரி: அதனாலேதான்—அதிலே என்ன சந்தேகம்? அதனாலேதான்.

நம்பூதிரிப்பாடு: சமீபத்திலே ஒரு வேடிக்கை நடந்தது. கேட்கறீரா? சொல்றேன். நான் அன்னிக்கு ஒரு நாள்

மலையை வாரம் விடுற விஷயத்தைப் பத்திப் பேசறதுக்காக மக்ஷாமன் துரையைப் பார்க்கப் போயிருந்ததேன். அவரோட பொண்டாட்டி (பேருமேடம்தொரசாணின்னு கோவிந்தன் சொன்னான்) நான் போயிருக்கும்போது துரை இருந்த கொஞ்ச எட்டத்திலே நாற்காயிலே உட்கார்ந்துக்கிட்டு ஒரு பேப்பரைப் படிச்சிக்கிட்டு இருந்திச்சி. நான் அங்கே போய் துரைக்குப் பக்கத்திலே உட்கார்ந்ததிலேருந்து எழுந்திருச்சிக் கிளம்பற வரைக்கும் என்னை அந்தப் பொம்பளை திரும்பத் திரும்ப ஓரக் கண்ணாலே பார்த்துக் கிட்டே இருந்தா.

செறுசேரிநம்பூதிரி: மயங்கிப் போயிருக்கும். எனக்குச் சந்தேகமே இல்லே. நல்லா மயங்கி கிட்டதனாலேதான் அப்படி ஓரக் கண்ணாலே பார்த்திருக்கணும். கள்ளத்தனமா பார்க்கிறதை அடக்க முடியுமா என்ன?

நம்பூதிரிப்பாடு: கேளும்—கடைசியிலே இந்த மேடம் தொரசாணியோடத் திருட்டுப் பார்வையையும் மத்ததையும் பார்த்திட்டதனாலேயோ என்னவோ, மக்ஷாமன் என்னவோ இங்கிலீசிலே மேடம் தொரசாணிகிட்டே சிரிச்சிக் கிட்டுக் கேட்டாரு. மேடம் தொரசாணியும் சிரிச்சிக்கிட்டே மக்ஷாமன்கிட்ட ஏதோ பதில் சொன்னா. உடனே அப்பாவி

மக்ஷாமன் விவரம் புரியாம என்கிட்ட இப்படிச் சொன்னாரு. "என்னுடைய மனைவியை உங்களுக்கு அறிமுகப்படுத்தணும்னு விரும்பறேன்—இது உங்களுக்கு சந்தோஷமாக இருக்கும்னு நான் நம்பறேன்." எனக்கு அடிக்க முடியாத சிரிப்பு வந்திச்சி. ஆனாலும் சிரிக்கலே—உள்ளேயே அடக்கிக்கிட்டேன். "ஓ! எனக்கு ரொம்ப சந்தோஷம்" அப்படீன்னு நான் சொன்னேன். உடனே மக்ஷாமன் எழுந்து போய் அவளைக் கூட்டிக்கிட்டு வந்து என் பக்கத்திலே நிக்க வச்சாரு. நான் எழுந்திருக்கலே. அவ என் பக்கத்திலே உட்கார்ந்திட்டா. துரை நீட்டுகிற மாதிரி அவ என்னைப் பார்த்துக் கையை நீட்டினா. நானும் கையை நீட்டினேன். மேடம் தொரசாணி என் கையைப் பிடிச்சா—எனக்கு உடம்பெல்லாம் கொஞ்ச நேரம் சிலிர்த்துப்போச்சி."

செறுசேரிநம்பூதிரி: அவளுக்கும் அதைவிட சிலிர்திருக்கணும்.

நம்பூதிரிப்பாடு: கேளும், அப்படியே நான் கொஞ்ச நேரம் கையைப் பிடிச்சபடியே இருந்தேன். எனக்கு அவளோட ஸ்பரிசம் ரொம்ப சந்தோஷமா இருந்திச்சி. அப்பாவி மக்ஷாமன் இதையெல்லாம் பார்த்துக்கிட்டு சிரிச்சபடி பக்கத்திலேயே நின்னாரு. உடனே என்னோட சுண்டு விரல்லே போட்டிருந்த ஒரு வைர மோதிரத்தைக் கழட்டி நான்

கையிலே வச்சிருந்தேன். மக்ஷாமனுக்கு இது பிடிக்குமோ பிடிக்காதோன்னு எனக்கு ஒரு சந்தேகம். மக்ஷாமன் முகத்தை நான் ஒரு தடவை பார்த்தேன். உடனே அப்பாவி மக்ஷாமன், "ஓ! நம்ம மனைவிக்கு நீங்க ஒரு பரிசு கொடுக்கப் போறீங்களாக்கும்? எந்த மறுப்பும் இல்லை—கொடுக்கலாம்" அப்படீன்னு சொன்னார். அப்போ எனக்கு மனசுக்குள்ளே ரொம்ப தைரியம் வந்திரிச்சி; மேடம் தொரசாணி கையிலே மோதிரத்தைக் கொடுத்தேன். மேடம் தொரசாணி அதை வாங்கிக்கிட்டு என்னைப் பார்த்து ஒரு தரம் சிரிச்சா. ரொம்ப நல்ல மோதிரம்னு இங்கிலீசிலே சொன்னா. மக்ஷாமன்தான் மொழிபெயர்த்துச் சொன்னது. அப்போ எனக்கு உண்டான ஒரு போதையைச் சொல்லவே முடியாது.

செறுசேரிநம்பூதிரி: அவளுக்கு அதைவிட அதிகமா இருந்திருக்கும்—எனக்கு சந்தேகமே இல்லை.

நம்பூதிரிப்பாடு: கேளும்—அப்படீன்னு மேடம் தொரசாணி அங்கேயிருந்து எழுந்திரிச்சி நின்னபடி மறுபடியும் கையை நீட்டினா.

செறுசேரிநம்பூதிரி: அது மயக்கத்தோட முக்கியமான அடையாளமாக்கும். பார்த்துக்கிட்டு சும்மா உட்கார்ந்திருக்க முடியாதபடி ஆகியிருக்கணும். உடனே அந்த இடத்தை விட்டுப்

போயிருக்கணுமே, அப்படித் தானே?

நம்பூதிரிப்பாடு: அப்படித்தான்—கையை மறுபடியும் பிடிச்சிக் குலுக்கிட்டுத்தான் போனா.

செறுசேரிநம்பூதிரி: அதுக்குப் பிறகு நீங்க பார்க்கலே— அப்படித்தானே?

நம்பூதிரிப்பாடு: அதுக்குப் பிறகு பார்க்கவே இல்லே.

செறுசேரிநம்பூதிரி: ரொம்ப பாதிப்பாகி மயங்கிப் போயிருக்கணும். துரையும் பக்கத் திலே இருந்திட்டாருல்ல—அத னாலேதான் அவ்வளவு மோகம் உண்டாகியும் உடனே உள்ளே போயிருக்கணும்னு தோணுது. இல்லாட்டி கூடவே இருந்து சல்லாபங்கள் பண்ணியிருக்கும்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி, நீர் மகா புத்திசாலி தான். இதனாலேதான் உம்மை எனக்கு ரொம்பப் பிடிக்குது. நீர் சொன்னதுதான் சரி. அந்தப் பொம்பளை என் மேலேயும் நான் அந்தப் பொம்பளை மேலேயும் ரொம்ப மயங்கிட்டோம். ஆனால் அதுக்குப் பிறகு அதைப் பத்தி முயற்சி பண்ணாதது, அந்த இனத்துப் பொம்பளைங்களை நாடுறது சாஸ்திர விரோதம்னு இருக்கிறதனாலேதான். வேறே எந்த விதத் தடையுமில்லே.

செறுசேரிநம்பூதிரி: சாஸ்திர விரோதமானது எதையும் செய்யக்கூடாது. உங்க புத்திசாலித் தனத்தைப் பார்த்து நான் ஆச்ச ரியப்படறேன். இவ்வளவுக்கு அவ கிட்ட ஆசை ஏற்பட்டிருந்தும், அந்த

ஆசை சாஸ்திரத்துக்கு விரோதம்னு நினைச்சி ஒதுக்கி வச்சது உங்களோட மன உறுதி தான்.

நம்பூதிரிப்பாடு: சில சமயம் எனக்கு இதிலெல்லாம் ரொம்ப மன உறுதி வந்திடும். கோப்பாட்டு கும்மிணியை நான் நல்லா குழப்பிட்டேன். அந்தக் கதையைக் கேட்கணுமா?

செறுசேரிநம்பூதிரி: அதை அன்னிக்கு ஒரு நாள் நீங்க சொல்லக் கேட்டிருக்கேன். எனக்கு இப்பவும் நல்லா நினைவிருக்கு. நீங்க ரொம்ப தைரியசாலின்னு அன்னையிலிருந்துதான் எனக்கு நம்பிக்கை வந்தது.

நம்பூதிரிப்பாடு: என்ன இருந்தாலும் இந்த வெள்ளைக்காரப் பொம்பளைங்களோட நிறம் ரொம்பப் பிரமாதம் தான். இந்துலேகாவோட நிறம் எப்படி?

செறுசேரிநம்பூதிரி: நல்ல தங்க நிறம்.

நம்பூதிரிப்பாடு: என் நிறத்தைவிட அதிகமோ?

செறுசேரிநம்பூதிரி: அந்தக் கதையை ஏன் கேட்கறீங்க? நம்பூதிரியோட நிறம் எப்பவும் தனிப்பட்டதாக்கும்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி இப்போ பரிகாசமில்ல பண்றீரு. என்னோட நிறம் இந்துலேகாவோட நிறத்தைவிட அதிகமா?

செறுசேரிநம்பூதிரி: இப்படிச் கேட்கிறதுதான் எனக்கு ஆச்சரியமா இருக்கு—சந்தேகமே இல்லாத விஷயத்தில் திரும்பத் திரும்பக் கேட்கணுமா?

நம்பூதிரிப்பாடு: போகட்டும்—என்னையும் பார்த்திருக்கீரு, இந்துலேகாவையும் பார்த்திருக்கீரு—எங்க ரெண்டு பேரோட

சிருங்கார விவகாரங்களும் சாமர்த்தியமும் உமக்கு நல்லாவே தெரியும். எல்லாத்தையும் வச்சிப் பார்க்கிறப்போ அந்தப் பொண்ணுக்கு என்னைப் பிடிக்கும்னு நீர் நினைக்கிறீரா? நீர் என்ன முடிவு எடுக்கிறீரோ அதுதான் என் முடிவு.

செறுசேரிநம்பூதிரி: என்ன இப்படிக் கேட்கறீங்க? கஷ்டம்! அது நான் ஏற்கனவே முடிவு பண்ணினதுதானே. அந்தப் பொண்ணு உங்களைப் பார்த்திட்டா ஒரு நிமிஷம் பொறுத்திருப்பாளான்னு நான் சந்தேகப்படறேன். அவள் ரொம்ப இங்கித மானவ என்கிறதனாலே உங்களைக் கண்டவுடனேயே அவ உங்களைப் புரிஞ்சிக்குவா என்கிறதிலே எனக்குச் சந்தேகமே இல்லே. புரிஞ்சிக்கிட்டான்னா அப்புறம் என்ன நடக்கும்னு நான் சொல்லணுமா? பொண்ணுக்கு உங்களைப் பிடிக்குமான்னு கேட்கறீங்களா? நல்ல கேள்வி! எப்போ புறப்படலாம்னு நினைச்சிருக்கீங்க?

நம்பூதிரிப்பாடு: நாளைக்குக் காலையிலே. நீங்களும் கூட வந்தாத்தான் எனக்கு நல்லா இருக்கும். கூட ரெண்டு சின்னப் பட்டர்களும் வருவாங்க. காரியஸ்தன் நாராயணன். ஒரு ஆறு வேலைக்காரங்களும் கோவிந்தனும் மட்டும் போதும். என்கூட பல்லக்கிலே நீங்க துணைப் பல்லக்கிலே வந்திரலாம். இந்துலேகாவை இங்கே கூட்டிக்கிட்டு

வர்றதுக்கு ஒரு நல்ல பல்லக்கும் எட்டு ஆட்களும் கூடவே கூட்டிப் போகணும்.

செறுசேரிநம்பூதிரி: அதை அப்புறமா கொண்டு போனால் போதும். இப்பவே கொண்டு போகத் தேவையில்லே. பல்லக்கு இந்துலேகாவோட வீட்டிலே அஞ்சோ ஆறோ இருக்கு.

நம்பூதிரிப்பாடு: சரி—அப்படீன்னா கொண்டு போக வேண்டாம். நீங்க பெரி யவர்கிட்டப் போய் இந்த விவ ரத்தைச் சொல்லிடுங்க.

செறுசேரிநம்பூதிரி: ஆமா, நாளைக்கு எப்படிப் போறது—நாளைக்கு இங்கே ராமப் பணிக்கரோட கதகளி நடக்கிறதா சொல்லி இருக்கே?

நம்பூதிரிப்பாடு: நாளைக்கா? சரி—வேண்டாம். கத களி நடக்கிறது நடக்கட்டும். நாம கிளம்பிட வேண்டியதுதான். இள வட்டங்க பார்க்கட்டும். திரும்பி வந்த பிறகு ரெண்டு மூன்று போடச் சொல்லி பார்த்துக் கிடலாம். இந்துலேகாவும் பார்த்த மாதிரி இருக்குமில்ல.

செறுசேரிநம்பூதிரி: ராமப்பணிக்கர் நாளன்னிக்குத் திரும்பிடறதாக முடிவு செஞ்சிருக் கிறதாகப் பேசிக்கிட்டாங்க.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா பயணத்தை நாளன் னிக்கு வச்சிக்கிடலாமா?

செறுசேரிநம்பூதிரி: அதுதான் நல்லதுன்னு தோணுது.

நம்பூதிரிப்பாடு: வேண்டாம்—கதகளிக்கு அடுத்த வருஷமும் வருவாங்கல்ல.

செறுசேரிநம்பூதிரி: உங்க இஷ்டம். நான் இந்த விவரத்தை ஆட்டக்காரங்ககிட்டச் சொல்லிடுறேன்.

சூரிநம்பூதிரிப்பாடு கதகளியிலும் இந்துலேகா விடத்தும் கொண்டுள்ள இரண்டு விதமான ஈர்ப்புகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டு அவருக்குச் சிறிது நேரம் மிகுந்த வருத்தத்தையும் இடைஞ்சலையும் உண்டாக்கின. சற்று யோசித்ததன் முடிவில்:

நம்பூதிரிப்பாடு: நான் நாளைக்கு வர்றதாக கடுதாசு அனுப்பிச்சிட்டேன்.

செறுசேரிநம்பூதிரி: எப்போ அனுப்பிச்சது?

நம்பூதிரிப்பாடு: குளிப்பறையிலேருந்து உமக்காக ஆள் அனுப்பிச்ச உடனே கறுத் தேடத்துக்கு பதில் எழுதி அனுப்பிச் சிட்டேன்.

செறுசேரிநம்பூதிரி: அதனாலே என்ன கெட்டுப் போச்சி? இப்பவே ரெண்டாவதா ஒரு கடுதாசு அனுப்பிச்சா போச்சி, நாளன்னிக்கு வர்றதாக.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு முதல் முதலா புத்தரிசிச் சோத்திலே கல்லு கடிச்ச மாதிரி ஒரு மன வருத்தத்தையோ பிணக்கையோ உண்டாக்குறது-சரியா? அவ நாளை நான் வரு வேன்னு காத்துக்கிட் டிருப்பா.

செறுசேரிநம்பூதிரி: ஒருக்காலும் இந்துலேகாவுக்கு எந்த மனவருத்தமோ பிணக்கோ இதனாலே உண்டாகப் போற தில்லே. அதுக்கு நான் பொறுப்பு. நாளைப் பயணத்தை நாளன்னிக் குன்னு மாத்தினா என்ன கெடுதல்? நம்பூதிரி பல காரியங்களிலே ஈடு பட்டிருக்கிற ஒரு ஆளில்லையா, சொன்ன நாளிலேயே எல்லாக் காரியங்களும் ஒழுங்கா நடந்து முடிஞ்சிடும்னு எதிர்பார்க்க முடியுமா?

நம்பூதிரிப்பாடு: அதுவும் சரிதான்— அப்படீன்னா ராமர் வேஷம் பார்த்திட்டுப் போவோம். அப்படியே முடிவு பண்ணிடலாம். பெரியவர்கிட்ட இப்பவே தகவல் சொல்லிட்டு பதிலையும் வந்து சொல்லணும்.

செறுசேரிநம்பூதிரி: அது செய்திறலாம்.

என்று சொல்லி செறுசேரிநம்பூதிரி வீட்டுக்குள்ளே போனார். வீட்டுத் தென்புறத்தில் தன் சிநேகிதன் நாராயணன்நம்பூதிரிப்பாடு நின்றுகொண்டிருந்ததைக் கண்டு பரஸ்பரம் பார்த்து இருவரும் சிரித்துக் கொண்டார்கள். நாராயணன்நம்பூதிரிப்பாடுக்கு எல்லாம் தெரிந்ததுதான். இந்துலேகாவின் அழகைப் பற்றியும், அவளுடைய நல்ல குணம், தன்னம்பிக்கை, படிப்பு ஆகியவற்றைப் பற்றியும், அவளுக்கு ஏற்றவனான மாதவனின் தகுதியைப் பற்றியும் செறுசேரிநம்பூதிரி நாராயணன்நம்பூதிரியிடம் தெளிவாகச் சொல்லி விளக்கியிருந்தார். அதனால் தன்னுடைய அண்ணனின் இந்தத் தில்லுமுல்லுகளையெல்லாம் கண்டு அவருக்குக் கொஞ்சம் அங்கலாய்ப்புத் தோன்றியது.

நாராயணன் நம்பூதிரிப்பாடு: என்னவாம், நாளையா பயணம்?

செறுசேரிநம்பூதிரி: நாளை கதகளி, அதுக்கு மறுநாள் இந்துலேகா கல்யாணம்.

நாராயணன் நம்பூதிரிப்பாடு: நீங்க சொல்றதிலே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் வருது. இவரோட அமர்க்களத்தைப் பார்க்கிறப்போ கறுத்தேடத்தோட நிர்ப்பந்தத்தினாலேதான் இந்துலேகாவை இங்கே கூட்டிக்கிட்டு வரப்போறதாத் தெரியுது.

செறுசேரிநம்பூதிரி: அந்தப் பொண்ணையும் மாத; வனையும் நீங்க பார்க்காததனாலே உங்களுக்கு அப்படித் தோணுது.

சாதாரணமா அப்படித்தான் தோணும். இந்துலேகாவைப் போல இந்த மலையாள நாட்டிலே நான் ஒரு பொண்ணைக்கூடப் பார்த்ததில்லே. எனக்கு இந்த விஷயத்திலே கொஞ்சம்கூட சந்தேகமில்லே. அந்தப் பொண்ணு நம்பூதிரியை எந்த அளவுக்குக் கேலிக் கூத்தாக்குமோ என்கிறதுதான் தெரியலே.

நாராயணன் நம்பூதிரிப்பாடு: என்ன சொல்றீங்க—? கறுத்தேடம் உறுதியா எழுதியிருக்காரு. எதுவும் யோசிக்காம அப்படி எழுதுவாரா?

செறுசேரிநம்பூதிரி: போகட்டும். ரெண்டு மூணு நாளிலே முடிவு தெரியப்போகிற சங்கதியைப் பத்தி நாம எதுக்கு இவ்வளவு தர்க்கம் பண்ணணும்? எனக்கு பெரிய நம்பூதிரியைப் பார்க்கணும். எங்கே—?

நாராயணன் நம்பூதிரிப்பாடு: மாடியிலே படுத்திருக்காரு. எதுக்காக, இந்த விவரத்தையெல்லாம் சொல்றதுக்கா?

“ஆமாம்” என்று சொல்லிவிட்டு செறுசேரி மாடி ஏறிப் போய்ப் பெரியநம்பூதிரியிடம் சொல்லிவிட்டுத் திரும்பி வந்து, சூரிநம்பூதிரிப்பாடைச் சந்திக்க தானியக் கிடங்கு மாடிக்குச் சென்றார்.

நம்பூதிரிப்பாடு: நீருதான் இந்த அகடவிகடமெல்லாம் பண்றது. கதகளி என்ன வேண்டியிருக்கு? நாளையே போனால் என்னவாம்—?

செறுசேரிநம்பூதிரி: இப்போதானே நாளன்னிக்குப் புறப்படப் போறதாக நான் பெரியநம்பூதிரிகிட்ட விவரம்

சொல்லி அனுமதி வாங்கினது. இனிமே நாளைக்கே புறப்படறது சரியா இருக்குமா?

நம்பூதிரிப்பாடு: எனக்கு இந்துலேகாவைப் பார்க்கணும்னு தவிப்பு. என்ன சொல்லி என்ன லாபம்! நாளன்னிக்கு சாயங்காலம் வரைக்கும் காத்திருக்கிறதைத் தவிர வேறே வழியில்லே.

செறுசேரிநம்பூதிரி: இப்போதைக்கு இந்த சோகத்தைப் போக்குறதுக்கு இப்போதிலிருந்து நாளை கதகளி தொடங்கற வரைக்கும் ஆட்டத்தோட இனிமையைப் பத்தி நினைச்சால் அது வரைக்கும் இந்துலேகாவைப் பத்தின நினைப்பு வராது. கதகளி முடிஞ்சதும் உடனே புறப்பட வேண்டியதுதான். அதுக்குப் பிறகு இந்துலேகாவைப் பத்தி நினைச்சிக்கிட்டே இருக்கலாம். நினைச்சிக்கிட்டே இருந்தா நேரிலே பார்த்த மாதிரிதானே. அதுவுமில்லாம ஒரு காரியத்தைத் தீர்மானிச்சிட்டா அதைப் பத்தி வருத்தப்படக் கூடாது.

நம்பூதிரிப்பாடு: உமக்கு ராத்திரிச் சாப்பாடு இங்கேதான். நான் கொஞ்ச நேரம் படுத்துக்கிடக்கறேன்.

என்று சொல்லிவிட்டு நம்பூதிரிப்பாடு உறங்குவதற்காகப் படுக்கையறைக்குப் போக, செறுசேரிநம்பூதிரி நாராயணன்நம்பூதிரிப்பாடை நாடிக் களஞ்சியக் கூடத்திற்குப் போனார்.

# 8

# சென்னையிலிருந்து ஒரு வருகை

ஆறாம் அத்தியாயத்தில் கூறப்பட்ட கதை நடந்ததன் மறுநாள் காலை மூர்க்கில்லாத்தமனைக்கல் நம்பூதிரிப் பாடின் வருகைக்காகப் பஞ்சுமேனோன், கேசவன் நம்பூதிரி, வீட்டிலுள்ள காரியஸ்தர்கள் ஆகியவர் களெல்லாம் வாசல் முற்றத்திலேயே காத்துக் கொண்டு நின்றிருந்தார்கள். மடத்தில் பாலடைப்பிரதமன், அப்பள வகை, இனிப்புப் பலகாரம் என்பதாகப் பண்டங்கள் காலை உணவாகத் தயாரிக்கப்பட்டிருந்தன. ஒரு காரியத்தின் நிமித் தமாக மறுநாள் புறப்பட்டு வர வசதி இல்லையென்றும், அதனால் அதற்கடுத்த மறுநாள் சாப்பாட்டு வேளையை அனுசரித்து வந்து சேர்வதாகவும் தெரிவித்து இரண் டாவதாக அனுப்பப்பட்ட கடிதத்தை எடுத்துக் கொண்டு அன்றே மனைக்கல்லிலிருந்து புறப்பட்ட பணியாட்கள் வந்துசேர இரவு நேரமாகிவிட்டிருந்ததனால் வழியில் தங்கித் தாமதித்து காலையில் மேலே குறிப்பிட்டபடி பஞ்சு மேனோன் முதலானவர்கள் நம்பூதிரிப்பாடின் வருகைக் காகக் காத்திருக்கும்போதுதான் வந்து சேர்ந்தார்கள். கடிதத்தைப் படித்ததும் காரணவர் வீட்டுக்குள் போனார்; கேசவன்நம்பூதிரி குளிக்கச் சென்றார்; உடனிருந்த மற்ற வர்கள் அவரவர் காரியங்களைப் பார்க்கப் போனார்கள். சிறிது நேரம் கழித்து இந்துலேகா குளிப்பதற்காகப் புறப் பட்டு வாசல் முற்றத்துக்கு வந்தாள். இந்துலேகாவின் அம்மாவும் வாசல் முற்றத்துக்கு வந்தாள்.

லட்சுமிக்குட்டியம்மா: என்னடி பொண்ணு, நீ எவ்வளவு நேரம் மண்ணெண்ணெய் விளக்கு

பொருத்திக்கிட்டு ராத்திரி தூக்கம் முழிச்சே? நேத்து எவ்வளவு நேரம் படிச்சிக்கிட்டிருந்தே அப்பா போன பிறகு?

இந்துலேகா: இல்லே, நான் சீக்கிரமாவே படுத்துத் தூங்கிட்டேன். அம்மா, சின்ன மாமா இன்னும் வரவே யில்ல, நேத்தே வர்றதாகத்தானே எழுதியிருந்தாரு?

லட்சுமிக்குட்டியம்மா: சரிம்மா, இன்னிக்கு வர்றாப்பிலே இருக்கும். ஒருவேளை மாதவன் அங்கே பிடிச்சி நிறுத்தி வச்சி ருக்குமோ என்னவோ தெரியலே.

இப்படி அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது கோவிந்தன்குட்டிமேனோனும் வேலைக்காரர்களும் பெட்டியும் சுமையுமாக வந்துகொண்டிருந்ததை அவர்கள் பார்த்தார்கள். கோவிந்தன்குட்டிமேனோன் முந்தின நாள் வண்டியிறங்கி வழியில் பூவள்ளியைச் சேர்ந்த சத்திரத்தில் தங்கிவிட்டு அன்றையக் காலையில் சத்திரத்திலிருந்து புறப்பட்டு வீட்டை அடைந்திருக்கிறார்.

இந்துலேகா: அதோ சின்ன மாமா வர்றாங்க.

என்று சொல்லிக்கொண்டே மந்தகாசத்துடன் தாய் மாமனை வரவேற்று வாசலுக்கு இறங்கினாள். லட்சுமிக்குட்டியம்மாவும் சேர்ந்து இறங்கிப் போனாள்.

கோவிந்தன்குட்டிமேனோன்: இந்துலேகாவுக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லேலல்ல?

இந்துலேகா: ஒண்ணுமில்லே. நான் நல்லாத் தான் இருக்கேன். நேத்தே வர்றதா எழுதியிருந்தீங்களே, மாமா? வரல லேன்னதும் எங்களுக்குக் கொஞ் சம் வருத்தமாயிடிச்சி.

பின்னர் லட்சுமிக்குட்டியம்மாவும் கோவிந்தன்குட்டிமேனோனும் இந்துலேகாவும் ஆக எல்லோரும் உள்ளே போனார்கள். கோவிந்தன்குட்டிமேனோன் குளியல்,

சாப்பாடு ஆகியவற்றை முடித்துக்கொண்டு, அப்பாவைப் பார்த்து வர அவருடைய வீட்டுக்குப் போய்ப் பார்த்து விட்டுத் திரும்பி வந்தார். அம்மாவின் அறைக்குப் போய் அம்மாவையும் பார்த்துவிட்டு அக்காவையும் பார்த்துவிட்டு, இந்துலேகாவைப் பார்க்க மாடியேறிச் சென்றார்.

கோவிந்தன்குட்டிமேனோனைப் பற்றி என்னுடைய வாசகர்களுக்குக் கொஞ்சம் சொல்ல வேண்டும். கொஞ்சம் தான் சொல்ல வேண்டியிருக்கிறது. அவருடைய அறிவு மிகக் கூர்மையானதாக இருந்தது. ஆனால் சுபாவத்தில் சிறிது விநயம் போதாதோ என்று சந்தேகம். சுபாவத்தில் ஒரு நிலையில் நிற்காத சபலம் கொண்டவர் என்பதல்ல இதற்கு அர்த்தம். அவரைத் தெரிந்த எல்லோருக்குமே அவர் மீது மிகுந்த மரியாதை உண்டு, உடல்வாகு அழகாக இருந்தது. இறந்துபோன தன் மதிப்பிற்குரிய அண்ணனைப் போலவே பூமியிலுள்ள எல்லா ஜீவராசிகளையும் விட அதிகம் வாத்சல்யம் கொண்டிருந்தது இந்துலேகா மீதுதான். தாய்மாமன் வருவதைப் பார்த்தவுடன் இந்துலேகா எழுந் திருந்து உட்காரும் இருக்கையின் விரிப்பைத் தட்டிச் சரிப்படுத்தி அங்கே உட்காரக் கேட்டுக்கொள்ளும் பாவ னையில் நின்றாள். கோவிந்தன்குட்டிமேனோன் உட் கார்ந்தார். உடனே வெள்ளிப் பாத்திரத்தில் தன் கையா லேயே ஆசையுடன் தயாரித்த தேநீரையும், ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் கொஞ்சம் பலகாரங்களையும் ஒரு சின்ன மேசைமேல் வைத்து, அதைத் தாய்மாமன் பக்கத்தில் கொண்டுபோய் வைத்தாள். பின்னர் தாய்மாமன் சொன்ன படி பக்கத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

கோவிந்தன்குட்டிமேனோன்: மாதவன் சுகமாவே அங்கே வந்து சேர்ந்தான். இப்பவே செக்ரட்டரி யட்டில் நூற்றி ஐம்பது ரூபாய் சம்பளம் கிடைக்கும்னு தோணுது. நான் போறப்போ உன்கிட்ட கொடுத்த நாவலைப் படிச்சி முடிச்சாச்சா? நல்லாப் புரிஞ்சு தில்ல?

'மாதவன்' என்ற ஒலி தன்னுடைய வாயிலிருந்து புறப் பட்ட உடனேயும், அவனுக்கு வேலை கிடைக்கப் போகிறது என்று சொன்னபோதும் இந்துலேகாவின் செந்தாமரை போன்ற முகத்தில் வெட்கம் உண்டாகி வெளிப்படையாகச் செம்மை படர்ந்தது. புத்திசாலியான கோவிந்தன்குட்டி மேனோன் இவ்வாறு நிகழுமென்று முன்கூட்டியே தெரிந்து வைத்திருந்தார். இந்துலேகாவின் காதில்பட இவ்வளவு இஷ்டமான வார்த்தை வேறே எதுவும் இல்லை யென்றாலும், தான்கூட மாதவனைக் குறித்துப் பேசினால் அவளுக்கு வெட்கம் உண்டாகுமென்று தெரிந்து, தேவை யான விவரங்களைக் கண நேரத்துக்குள்ளாகச் சொல்லி முடித்தார். தொடர்ந்து உடனுக்குடன் வேறு பேச்சுப் பேசத் தொடங்கி இந்துலேகாவின் மனதை அமைதிப்படுத்தினார்.

இந்துலேகா: அந்த நாவல் பிரமாதம். அதை நான் முழுக்க வாசிச்சிகிட்டேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: நீ ராத்திரி நேரம் கொஞ்சம் அதிக மாவே வாசிக்கிறதா உங்கம்மா சொன்னா. ரொம்ப நேரம் படிச்சி அலட்டிக்கக் கூடாது.

இந்துலேகா: நான் அதிகமா அலுத்துப்போற தில்லே. எல்லா ராத்திரியும் நான் வழக்கமா படிக்கிறதில்லே. நேத்து ஒரு ராத்திரி தற்செயலாத நான் சாகுந்தலம் படிச்சிக்கிட்டிருந்தேன். அப்போ ஒரு சங்கதி பேசறதுக் காகத் தாத்தாவும் கேசவன்நம்பூ திரியும் இங்கே மாடிக்கு வந்தாங்க. அவங்க சொல்லித்தான் அம்மா சொல்றா. நான் ராத்திரி வழக்கமா படிக்கிறதே இல்லே.

பஞ்சுமேனோனின் சபதத்தைப் பற்றி மாதவன் மூலமாக கோவிந்தன்குட்டிமேனோன் தெரிந்துகொண்டி ருப்பார் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா? பஞ்சுமேனோன் இந்துலேகாவுக்கும் நம்பூதிரிப்பாடுக்கும்

கல்யாணம் செய்து வைக்க மேற்கொண்டிருக்கும் தீவிர முயற்சி பற்றி பஞ்சுமேனோனும் கோவிந்தப் பணிக்கரு மாகப் பேசி முடித்த மூன்றாம் நாள் கோவிந்தப்பணிக்கர் மாதவனுக்கு மதராசுக்கு எழுதியிருந்த கடிதத்தில் குறிப் பிட்டிருந்ததனால் கோவிந்தன்குட்டிமேனோன் கடிதத்தைப் படித்துத் தெரிந்துகொண்டிருந்தார். எனவே, இந்துலேகா மேலே குறிப்பிட்டபடி சொன்னதும் அவர் ஒருவகை நகைச்சுவை உணர்வோடு சிரித்தபடி, "எதுக்காக அவங்க அன்னிக்கு உன்னோட அறைக்கு வந்திருந்தாங்க?" என்று கேட்டார். இப்படிக் கேட்ட மாத்திரத்தில் குவளை நிகர்த்த இந்துலேகாவின் அகன்ற கண்களில் நீர் நிறைந்தது.

கோவிந்தன் குட்டிமேனோன்: என்ன இது, இவ்வளவு அசடா நீ—? கிண்டல் பண்ணினா சிரிக்கயில்ல வேணும்—? நீ எதுக்கு இப்படி அழு மூஞ்சியா இருக்கிறே? இதுக்கு அப் புறமும் அழுதேன்னா நான் இதைப் பத்தி எதுவும் கேட்கப் போறதில்லே.

இந்துலேகா: இல்லே, இனிமே நான் அழ மாட்டேன்.

அன்று இரவு நடந்த பேச்சுவார்த்தை பற்றி முழுவது மாக விவரித்தாள். கோவிந்தன்குட்டிமேனோன் உரக்கச் சிரித்தார்—மனதுக்குள் தன் மருமகளின் மன உறுதியை நினைத்து மிகவும் பெருமைப்பட்டு.

இந்துலேகா: நாளைக்கு இந்த நம்பூதிரிப்பாடு வர்றதாக இருக்காரு.

கோவிந்தன் குட்டிமேனோன்: (மீண்டும் உரக்கச் சிரித்து) நாளைக்கு வரட்டும். அப்பா என் கிட்ட இந்த விவரமெல்லாம் சொன் னாங்க.

இந்துலேகா: நீங்க என்ன சொன்னீங்க பதி லுக்கு?

கோவிந்தன்
குட்டிமேனோன்: நான் ஒண்ணும் சொல்லலே. எனக்கு இதிலே எந்த சிரத்தையும் இல்லாத மாதிரி கேட்டுக்கிட்டிருந்தேன். நான் மாதவனோட அப்பாவை இன்னும் பார்க்கலே. அவரைப் போய்ப் பார்க்கணும்.

என்று சொல்லி கோவிந்தன்குட்டிமேனோன் எழுந்தார்.

இந்துலேகா: இனி நாளைக்கு என்ன விபரீதம நடக்குமோ தெரியலே.

"ஒண்ணும் நடக்காது" என்று சொல்லிச் சிரித்தபடி கோவிந்தன்குட்டிமேனோன் கோவிந்தப்பணிக்கரின் வீட்டை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்.

9

# நம்பூதிரிப்பாடின் வருகையும் பிறவும்

கதகளி நிகழ்ச்சி பாதி முடிந்த நிலையில் சூரிநம்பூதிரிப்பாடு சோபாவிலிருந்து குதித்து எழுந்தபடி கோவிந்தனைக் கூப்பிட்டார்.

நம்பூதிரிப்பாடு: கோவிந்தா! நான் இப்பவே புறப் படுறேன். பல்லக்குத் தூக்கிங்க இங்கேதானே படுத்துக்கிடக் கிறாங்க? எல்லாரையும் கூப்பிடு! சீக்கிரம்—சீக்கிரம். செறுசேரி எங்கே இருக்காரு? கொஞ்ச நேரத் துக்கு முன்னே மேடைக்குப் பக்கத் திலே நாற்காலியிலே உட்கார்ந் திருக்கிறதைப் பார்த்தேன். போய்ப் பாரு—சீக்கிரமா கூட்டிக்கிட்டு வா.

கோவிந்தன் செறுசேரியைத் தேடிப்போனான். மாடி யில் தூங்கப் போயிருக்கிறார் என்று கேள்விப்பட்டு அங்கே போனபோது நம்பூதிரி படுத்துக் கிடந்தார். தூங்க வில்லை.

கோவிந்தன்: அங்கே கூட்டிவரச் சொல்லி உத்தரவு போட்டிருக்காரு. செம் பாழியோட்டுக்கு இப்பவே போக ணுமாம். பல்லக்குத் தூக்கறவங் களும் மத்தவங்களும் ஆயத்தமா இருக்கணும்னு சொல்லிட்டாரு. சீக்கிரமா எந்திரிச்சி வரணுமுங்க.

செறுசேரிநம்பூதிரி: கொடுமை! இந்த நடுராத்திரியிலே ரொம்ப ஆபத்தான பாதையிலே எப்படிப் போக முடியும்? இப்போ கண்டிப்பா புறப்பட முடியாது.

கோவிந்தன்: அது நீங்க சொல்லித்தான் அவரை சரிக்கட்டணும்.

செறுசேரி உடனே நம்பூதிரிப்பாடு இருந்த மாடிக்குச் சென்றார். நம்பூதிரிப்பாடு மிகுந்த உற்சாகத்துடன் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. உயர்ந்த தரத்தில் பட்டுச் சால்வைகளில் ஒரு பதினைந்து விதம், அகல ஜரிகையிட்டுப் பல மாதிரிகளிலான வேட்டிகளில் பத்திருபது, பல வகையான மோதிரங்கள் ஏராளம், தனி வெள்ளியில் செய்த தங்கக் குமிழி பொருத்திய விசேஷமான ஒரு கைப்பெட்டி, தங்க உருட்டுக் குடுவையில் மடித்துச் சுருட்டி வைக்கப்பட்ட வெற்றிலைச் சுருள்கள், பிடியிட்ட வெள்ளிச் செம்பு, வெள்ளிச் சங்கிலியிட்ட லாந்தல் விளக்கு, வெள்ளி வெற்றிலைப் பெட்டி, மாலையாகக் கழுத்தில் இட்டுக் கொள் வதான தங்க மாலையுடன் கூடிய தங்கக் கடியாரம், ஜரிகை யிட்ட ஆடையணிகள், தொப்பிகள், தங்கத்தாலான விபூதிச் சம்படம், தங்கக் கூடு கொண்ட கண்ணாடி, தங்கத்தாலான பன்னீர்ச்செம்பு, அத்தர்க் குப்பிகள் முதலான பலவித சாமான்கள் ஒரு மேசை மீது பரப்பி வைக்கப்பட்டிருந்தன. நம்பூதிரிப்பாடு அங்குமிங்குமாக நடந்தபடி, "ராகவா, சங்கரா, கோமா, ராமா, எல்லாத் தடியன்களும் தூங்கிட் டானுங்க—திருட்டுப் பசங்க—ஆட்டத்துக்கு ஒருத்தன்கூட வரல்லே" என்றும் பிறவும் சொல்லி அரற்றிக்கொண்டு கூண்டில் அடைபட்ட பூனை போல மாடியில் அங்கு மிங்குமாக நடந்து கூச்சலிட்டுக் கொண்டிருந்தபோதுதான் செறுசேரிநம்பூதிரி போய்ச் சேர்ந்தார்.

நம்பூதிரிப்பாடு: நல்ல கொடுமை! உம்மைத்தான்யா காரியஸ்தனா நியமிக்கணும்! புறப் பட வேண்டாமா? அங்கே போய்ச் சேர்ந்த பிறகு உமக்குத் தூங்கற துக்கு தாராளமா நேரம் இருக்கு மில்லை?

செறுசேரிநம்பூதிரி: இது என்ன கதை! இந்த நடு ராத்திரியிலே இந்தக் கேடுகெட்ட பாதையிலே மூணரைக் காத தூரம் பயணம் போறது மகா கஷ்டமில்லியா? விடிஞ்சதும் கிளம்பலாமின்னுதானே திட்டம் போட்டிருந்தோம்?

நம்பூதிரிப்பாடு: உம்மகிட்ட ஒரு சுப காரியத்தைப் பத்தி எவ்வளவு ஆர்வமாச் சொன்னாலும் அது அசுபமாகத்தான் முடியும். இப்பவே புறப்படணும்— இந்த நிமிஷமே புறப்படணும். நீரு துணைப்பல்லக்கிலேயே படுத்துத் தூங்கிக்கிடலாமில்ல? பாதை சரியில்லேங்கிறது பல்லக்குத் தூக்குறவங்க கவலையில்ல? நல்ல தீவட்டியா ஒரு நாலு ஆள் பிடிச்சிக்கிடட்டும். இப்பவே புறப்படணும். அதிலே சந்தேகமே இல்லே.

செருநேரிநம்பூதிரிக்கு அந்த நேரத்தில் புறப்படுவதற்குச் சம்மதமே இல்லை. பல குன்றுகளையும் இரண்டு ஆறுகளையும் கடந்து சென்றாக வேண்டும். இனி எதையும் இந்தப் பிடிவாதக்காரனிடம் பேசிப் பயனில்லை என்று செறுசேரிநம்பூதிரிக்குத் தோன்றியது. எப்படியும் இந்த இரவுப் பயணத்தைத் தடுப்பதற்குத் தக்கதான ஒரு வழியைக் கண்டுபிடிப்பதென்று சிறிது யோசித்தபோது சமர்த்தனான நம்பூதிரிக்கு ஒரு வழி தெரிந்தது. 'இருக்கட்டும், இந்த முரடனோட இந்த ராத்திரி புறப்பட சம்மதிக்கக் கூடாது' என்று தீர்மானித்து அவசரமாக நம்பூதிரியிடம் பதில் சொன்னார்.

செறுசேரிநம்பூதிரி: அப்படியே ஆகட்டும். இப்பவே புறப்பட்டிறலாம் அதுதான் சரி. நான் தயார்.

நம்பூதிரிப்பாடுக்கு மகிழ்ச்சி வந்து சேர்ந்தது. கூப்பாடும் கூச்சலும் நிறுத்தி, செண்டையும் கொட்டும்

முற்றத்தில் வைத்து அடித்து விளாசியதில் ஒருவர்க் கொருவர் பக்கத்தில் வந்து கூப்பிட்டாலும் பேசினாலும் காதில் கேட்காத அளவுக்கு இரைச்சல். ஆனால் அந்த நேரம் களஞ்சிய வீட்டு மாடியிலிருந்து இங்கும், இங்கிருந்து மாடி யறைக்குமாக வேலைக்காரர்களும் காரியஸ்தர்களும் பயணத்திற்கு ஆயத்தமாக ஓடுவதும் சாடுவதும் கண்டால் அந்த வீட்டில் எங்காவது தீப்பிடித்துக்கொண்டதோ என்று பார்ப்பவர்களுக்குச் சந்தேகம் தோன்றும். அவ்வாறு இருக்கும்போது செறுசேரிநம்பூதிரி இந்த விசேஷ சாமான் களை மேசைமேல் எடுத்து வைத்ததை மேற்பார்வையிட அருகில் சென்றார். நம்பூதிரிப்பாடுக்கு இது மிகவும் மகிழ்ச் சியாக இருந்தது. தன்னுடைய சால்வைகளையும் ஆபரணங் களையும் பெட்டிகளையும் மற்றவற்றையும் யாரேனும் பார்த்து ஆச்சரியப்படுவதும் பாராட்டுவதும் எப்போதும் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் திருப்தியையும் தரும்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி, அதைப் பாரும். அந்த வெள்ளி வெத்திலைச் செல்லம்— இதுக்கு முன்னே நீரு பார்த்திருக்க மாட்டீருன்ன தோணுது.

ஆயிரம் தடவை செறுசேரி இந்தப் பெட்டியைப் பார்த்ததுண்டு. ஆனாலும்—

செறுசேரிநம்பூதிரி: எனக்குப் பார்த்த மாதிரி நல்லா ஞாபகம் இல்லே. நல்ல வேலைப் பாடு. இந்தப் பக்கத்திலே செஞ்சதா?

பெட்டி உண்மையில் அங்கே பக்கத்தில் ஒரு தட்டான் செய்ததுதான். அது செறுசேரிக்குத் தெரியும். ஆனாலும் தான் கேட்ட கேள்வி நம்பூதிரிப்பாடுக்கு மிகவும் மகிழ்ச் சியைத் தருமென்று தெரிந்துதான் அந்தக் கேள்வியைக் கேட்டார்.

நம்பூதிரிப்பாடு: இல்லே—இங்கே செஞ்சதில்லே. இந்தப் பக்கத்திலே யார் இப்படிச் செய்வாங்க? மைசூர்க்காரனான ஒரு மொதல எனக்குப் பரிசாக்

கொடுத்தது—மலைக் காட்டை வார ஏலத்துக்குக் கொடுத்தப்போ.

செறுசேரிநம்பூதிரி: மைசூர்க்காரன் ஒரு மொதலையா?

நம்பூதிரிப்பாடு: ஆமாம்—ஒரு மொதலெ. மொத லேன்னுதான் அவனைச் சொல்லு வாங்க.

செறுசேரிநம்பூதிரி: முதலியாரா இருக்கும்.

நம்பூரிதிப்பாடு: முசலியார் அப்படீன்னும் சொல்லு வாங்க. அதோ அங்கே மேலே வச்சிருக்கிற சால்வையை ஒருதரம் பாரும்—ரொம்ப விசேஷமானது. பங்க்ராஸ் அப்படீங்கற இடத்திலே நெஞ்சதாக்கும். ரொம்ப விலை யாக்கும். எனக்கு அதை மேகதந்தன் என்கறவரு ஏலமலை குத்தகை எடுத்த ஒரு துரை மூலமா நெய்யச் சொல்லி வரவழைச்சிக் கொடுத் தாரு.

செறுசேரி சால்வையை எடுத்துப் பார்த்து ஆச்சர்ய பாவத்துடன்,

செறுசேரிநம்பூதிரி: இதை எங்கே நெஞ்சதா சொன்னீங்க?

நம்பூதிரிபாடு: பங்க்ராஸ் அப்படின்னு சொல்ற நாட்டிலே.

செறுசேரிநம்பூதிரி: அந்த நாடு எங்கே இருக்கு?

நம்பூதிரிப்பாடு: அது வெள்ளைக்காரன் நாட்டி லேருந்து ஒரு பதினாயிரம் கல்லு தென்கிழக்கிலே போகணும். அந்த நாட்டிலே ஆறுமாசம் பகல், ஆறு மாசம் ராத்திரின்னு மேகதந்தன் என்கிட்டே சொன்னாரு.

சால்வையைப் பார்த்துவிட்டு வைத்த பின்னர் செறு சேரி தங்கக் கண்ணாடியைப் பத்திரமாக எடுத்து அதிக ஆச்சரிய பாவத்துடன் பார்த்து, "பிரமாதமான கண்ணாடி" என்று சொன்னார்.

நம்பூதிரிப்பாடு: அது கொச்சி இளையராஜா திருச்சூரிலே போன வருசம் பூரத் திருநாள் அன்னிக்கு எனக்குப் பரிசாகக் கொடுத்தது.

சென்ற ஆண்டு பூரத் திருநாளுக்கு நம்பூதிரிப்பாடு அங்கே போகவில்லையென்று செறுசேரிக்கு நன்றாகவே தெரியும்.

செறுசேரிநம்பூதிரி: பிரமாதமான கண்ணாடிதான்.

என்று சொல்லி கண்ணாடியை அங்கே வைத்தார். கையால் மோவாயைத் தடவியபடி ஒரு புன்னகை செய்தார்.

நம்பூதிரிப்பாடு: என்ன செறுசேரி அப்படி சிரிக்கிறீரு?

செறுசேரிநம்பூதிரி: விசேஷமா ஒண்ணுமில்லே.

நம்பூதிரிப்பாடு: ஓய்—சொல்லும். எதுக்காக சிரிச்சீரு? சொல்லும், சொல்லும்.

செறுசேரிநம்பூதிரி: ஒண்ணுமில்லே—சொல்றாப்பிலே ஒண்ணுமில்லே. நேத்து க்ஷவரம் பண்ணிக்கலாம்னு இருந்தேன். அது முடியலே. ஆனால் என்னோட இந்தப் பயணத்திலே அதைப்பத்தி அவ்வளவு யோசிக்க வேண்டியதில்லைதானே! க்ஷவரமும் மத்ததும் செய்துக்கிட்டு அழகாப் புறப்பட வேண்டியது இந்து லேகாவுக்குப் புருஷனா ஆகப் போகிறவர்தானே? துணைக்குப் போறவங்க எப்படிப் புறப்பட்டுப் போனாலும் அதைப் பத்திக் கவலை இல்லைதானே? அப்படீன்னு நினைச்சதும் சிரிப்பு வந்தது. அவ்வளவுதான் விஷயம்.

செறுசேரியைவிட அதிக நாட்களாகிவிட்டன நம்பூதிரிப்பாடு க்ஷவரம் செய்து. அங்கங்கே நரைத்த ரோமங்களும் தெரிந்தன. அதைப் பார்த்துத்தான் செறுசேரி இந்தப்பிரச்னையைக் கிளப்பியது. நம்பூதிரிப்பாடு உடனே கண்ணாடியை எடுத்துப் பார்த்தார்.

நம்பூதிரிப்பாடு: கடவுளே—கொடுமை! விஷயம் ரொம்பக் கோளாறுதான். செறுசேரி ஞாபகப்படுத்தினது நல்லதாப் போச்சி. மோசம் போறதா இருந்தது. சிவ!—சிவ! நரைகூட உண்டாயிருக்கு. நான் கிழவனாயிட்டேன், செறுசேரீ!

செறுசேரிநம்பூதிரி: அதை மட்டும் நான் ஒத்துக்க மாட்டேன்.

நம்பூதிரிப்பாடு: அப்புடீன்னா க்ஷவரம் வேண்டாமா?

செறுநேரிநம்பூதிரி: அது உங்க பிரியம்.

நம்பூதிரிப்பாடு: விளக்கேத்தி இப்பவே செய்துக் கிட்டா?

செறுசேரிநம்பூதிரி: ராத்திரி க்ஷவரம் சாஸதிரப்படி சரியில்லே—அதுவும் குறிப்பா நாம ஒரு சுப காரியத்துக்குப் போய்க் கிட்டிருக்கோமில்ல? அதனாலே அது சரியில்லேன்னு எனக்குத் தோணுது. அதுக்கு க்ஷவரம் செய்யாமலே கிளம்பலாம்.

நம்பூதிரிப்பாடு: அது முடியாது. அதனாலே விடிஞ்சி க்ஷவரம் முடிச்சிக்கிட்டுப் புறப் படுறதுதான் சரி. க்ஷவரம் பண்ணிக்கிட்டா குளிக்காமக் கிளம்பக்கூடாதுல்ல?

செறுசேரிநம்பூதிரி: குளிக்காமக் கிளம்பக் கூடாது.

நம்பூதிரிப்பாடு: குளிச்சிட்டே கிளம்புவோம்.

செறுசேரிநம்பூதிரி: அப்படீன்னா காலைச் சாப்பாட் டையும் முடிச்சிடுறதுதானே நல்லது?

நம்பூதிரிப்பாடு: ஆமாம், அது தான் சரி.

செறுசேரிநம்பூதிரி: அப்படீன்னா நான் அதுக் கெல்லாம் ஏற்பாடு பண்றேன்.

என்று சொல்லி சேறுசேரி சந்தோஷமாகக் கீழே இறங்கிப் போனார். நம்பூதிரிப்பாடு சிறிது சோகத்துடன் தூங்குவதற்காக அறைக்குள் போனார்.

மறுநாள் காலையில் நிச்சயிக்கப்பட்டபடி காலை உணவை முடித்து, ஏறத்தாழ எட்டரை மணி அளவில் நம்பூதிரிப்பாடும் செறுசேரியும் பரிவாரங்களுடன் புறப் பட்டார்கள்.

காலையில் குளிப்பதற்கு வந்து சேர்வார்கள் என்று தெரிவிக்கப்பட்டபடி இரண்டாவது தடவையும் அமர்க் களமாகக் காலைச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்து பஞ்சு மேனோனும் கேசவன்நம்பூதிரியும் சேர்ந்து ஏறத்தாழ பன்னிரண்டு மணி வரை குளிக்காமல் காத்திருந்தார்கள். கடைசியில் பஞ்சமேனோனுக்குக் கொஞ்சம் கோபம் வரத் தொடங்கியது.

பஞ்சுமேனோன்: உங்க பெரியவராலே இது என்ன கூத்து! நான் குளிக்கப்போறேன்— இந்த நம்பூதிரிப்பாடு ஒரு நிலையா நிக்கிற ஆளாத் தெரியலே.

கேசவன்நம்பூதிரி: சீ—கஷ்டம்! இவ்வளவு ஸ்திரமான ஒரு ஆளை நான் பார்த்ததில்லே. அங்கே நிலமெ எப்படி இருக் குன்னு எதுவும் தெரியாம இப்படிச் சொல்லறது சரியில்லே. சிவ சிவ! அங்கே என்ன இடைஞ்சலோ! மனைக்குப் போய்ப் பார்த்தால் தான் விவரம் புரியும். மலை வாரக் குத்தகையைக் கவனிக்கணும், யானைகளை சரிபார்க்கணும், வாரம் குத்தகை கணக்குப் பார்க் கணும், மறு குத்தகை விடுகிற விவ காரம் இப்படிப் பல வகையான காரியங்கள் எத்தனை இருக்கு! பரமேஸ்வரா! அவர் ஒருத்தர் இல்லாம இதெல்லாம் யாரு கவனிக்க முடியும்? சமீபத்திலே

யானைக்கு ஒரு தங்கச் சங்கிலி பண்ணிப் போட்டிருக்காரு— பார்க்க ரொம்பப் பிரமாதம்.

பஞ்சுமேனோன்: தங்கச் சங்கிலியாலே கட்டிப் போட்டிருக்காரா?

கேசவன்நம்பூதிரி: தங்கச் சங்கிலியாலே கட்டிப் போட்டிருக்கு.

பஞ்சுமேனோன்: எல்லாம் பணத்தோட வேலை தான்.

கேசவன்நம்பூதிரி: பணத்தோட வேலைதான்.

பஞ்சுமேனோன்: இந்தப் பொண்ணு நம்மளை எப் படி ஏமாளியாக்கப் போறாள்னு தெரியலே.

கேசவன்நம்பூதிரி: அந்தச் சந்தேகமே வேண்டாம்— நம்பூதிரியோட அரை நாழிகை நேரம் பேசட்டும். அதுக்குப் பிறகு இந்துலேகாவே நம்மகிட்டே வந்து இந்தக் கல்யாணத்தை முடிக்க அவ சரப்படுத்தும்.

பஞ்சுமேனோன்: சரி—சரி. அப்படீன்னா ஒரு இக் கட்டும் இல்லே. சரி, உங்க பெரி யவர் வாயாலே இதைக் கேட்டாத் தான் எனக்கு சந்தோஷமா இருக்கும்—சரி. `இனி நான் குளிக்கப் போறேன். பெரியவரு இன்னும் கொஞ்சம் தாமதமா வர்றதுதான் நல்லது.

கேசவன்நம்பூதிரி: ஆகட்டும்.

கேசவன்நம்பூதிரி சொன்னது பஞ்சுமேனோனுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. "நம்பூமதிரிப்பாடுடன் அரை நாழிகை இந்துலேகா பேசினால் நம்பூதிரிப்பாடைக் கணவனாக ஆக்கிக் கொள்வாள்" சரி—இதுதான் நல்ல வழி, தனக்கு எந்த பாரமும் இல்லை. தனக்கும் கேசவன் நம்பூதிரிக்கும் இந்தக் காரியத்தை நடத்தி முடிக்க வேண்டு மென்ற தீர்மானம். பெண்ணுக்குக் கொஞ்சம் முரண்டு. அது

நம்பூதிரிப்படைப் பார்த்தால் சரியாவிடும் என்று கேசவன் நம்பூதிரி சொன்னார். அதனால் கடிதம் எழுதியது. பிடிவா தத்தை சரிபண்ணிப் பெண்டாட்டியாக அழைத்துப் போகட்டும். பிடிவாதம் போகவில்லையென்றால் தான் அதற்குப் பொறுப்பல்ல. அவளுடைய முரட்டுப் பிடிவா தத்தை நம்பூதிரிப்பாடால் சரிப்படுத்த முடியவில்லை என்று தான் சொல்ல வேண்டியிருக்கும் வேறென்ன! மாதவனுக்கு இந்தப் பெண்ணைக் கொடுக்க முடியாது என்றுதான் தான் சத்தியம் செய்தது—நம்பூதிரிப்பாடுக்குக் கொடுப்பேன் என்று சத்தியம் செய்யவில்லை. நம்பூதிரிப்பாடால் சாதிக்க முடியுமென்றால் அவர் மனைவியாக்கிக் கொள்ளட்டும். இல்லையென்றால் வேறு ஆளைத் தேட வேண்டும்—அல்லாமல் வேறென்ன! இப்படியெல்லாம் பஞ்சுமேனோன் குளிக்கப் போகும்போது மனதில் நினைத்துக் கொண்டும், தனக்குத் தானே பேசிக்கொண்டும் போனார். அதாவது கேசவன்நம்பூதிரிடம் இதைப்பற்றி வெளிப்படையாகப் பேசிவிட வேண்டும்—என்று தீர்மானித்து, பல் தேய்த்து முடிந்ததும் மறுபடியும் வாசல் முற்றத்துக்கு வந்தார். கேசவன்நம்பூதிரி பசியினால் பல்லைக் கடித்துக்கொண்டு நிற்பதைக் கண்டார்.

கேசவன்நம்பூதிரி: என்ன, குளிக்காமத் திரும்பிட்டீங்க?

பஞ்சுமேனோன்: ஒண்ணுமில்லே. ஏற்கனவே சொன்ன விஷயத்திலே எனக்கு இன்னும் கொஞ்சம் சொல்ல வேண்டியிருக்கு. குறிப்பா கோவிந் தன்குட்டிகிட்ட ஒண்ணு சொல் லணும்.

கோவிந்தன்குட்டிமேனோனுக்குக் கூப்பிட்டனுப்பி அருகில் நிறுத்திக் கொண்டார்.

பஞ்சுமேனோன்: உன்கிட்ட நான் நேத்து இந்து லேகாவோட கல்யாணத்தைப் பத்திச் சொன்னேனில்ல, அதைப் பத்தி கேசவன்நம்பூதிரிகிட்ட உன் முன்னாலேயே எனக்கு ஒண்ணு

சொல்ல வேண்டியிருக்கு. இந்து லேகாவை மாதவனுக்குக் கொடுக்க மாட்டேன்னுதான் நான் சத்தியம் செய்திருக்கேன். நம்பூ திரிப்பாடுக்குக் கொடுப்பேன்னு நான் சொல்லலே. நம்பூதிரிப்பாடு வந்து பார்த்து, அவளுக்குப் பிடிச் சால் மட்டும்தான் இந்தக் கல் யாணம் நடக்கும்; அப்படி இல்லாம இந்துலேகாவோட இஷ்டத்துக்கு மாறா நம்பூதிரிப்பாடுக்குக் கல் யாணம் செய்துவைக்க நான் தயாரில்லேன்னு முன்னாலேயே நான் கேசவன்நம்பூதிரிகிட்டச் சொல்லியிருக்கேன். அதனாலே காரியம் சரியா நடக்கலேன்னா நான் நம்பூதிரிப்பாடுக்குப் பொறுப்பில்லே. இதை நான் இப்பவே சொல்லிடுறேன்— உனக்கு எதிரிலேயே சொல்லி டுறேன்.

கேசவன்நம்பூதிரி: எல்லாத்துக்கும் நான் பொறுப்பு. நம்பூதிரிப்பாடு இங்கே வரவேண் டியதுதான் தாமதம், அவ்வளவு தான் எனக்குத் தெரியும்.

இப்படிச் சொன்னதைக் கேட்ட பின்னர் மகிழ்ச் சியுடன் கிழவனார் குளிக்கச் சென்றார்.

கோவிந்தன் குட்டிமேனோன்: (கேசவன்நம்பூதிரியிடம்) நேரம் ஒண்ணரை மணி ஆயிடுச்சே. எதுக்காகப் பெரியவரு இப்படிப் பட்டினி கிடக்கிறாரு?

கேசவன்நம்பூதிரி: இல்லே, இப்போ வந்தருவாங்க. அதோ கேட்குதே கொட்டு முழக்கு—இல்லே?

கோவிந்தன்
குட்டிமேனோன்: ஆமாம்.

என்று சொல்லிக்கொண்டே கோவிந்தன்குட்டி மேனோன் உள்ளே போனார்.

அப்போது அங்கே உண்டான அமளியைப் பற்றிச் சொல்வதென்றால் சிரமம். பல்லக்குக்கு எட்டுப் பேர், துணைப்பல்லக்கு தூக்க ஆறு பேர்; தூக்கிக்கொண்டு வருபவர்களும், தோள்மாற்றிக் கொடுப்பவர்களும், நடப்பவர்களும் ஆகச் சேர்ந்து கோஷமிட்டுக்கொண்டே வர வேண்டுமென்பது உத்தரவு. பதினான்கு பேர் ஒரே குரலில் முழக்கமிட, மூன்று நான்கு பேர் ஹெ—ஹூ—ஹோ—ஹோ—ஹூ—ஹூ என்று குரலிட்டபடி முன்னே நடந்து செல்வார்கள். இப்படி முழக்கமிட்டபடிதான் பல்லக்கு முற்றத்துக்கு வந்து சேர்ந்தது. செறுசேரிநம்பூதிரி வாசல் படிக்கட்டில் இறங்கினார். பல்லக்கைத் தூக்கி வந்தவர்கள் முற்றம் வரை முழக்கிக்கொண்டுதான் வந்தார்கள். பஞ்சு மேனோனின் நிர்வாகத்திலிருந்த வீட்டிலும் சொந்த வீட்டிலும் நிறைந்திருந்த சிறிசு முதல் கிழடு வரை (இந்து லேகாவும் கோவிந்தன்குட்டிமேனோனும் தவிர) எல்லோருமாக ஒரு படையெடுப்போ மற்றதோ வரும்போது ஏற்படும் நெரிசலைப் போலக் கூட்டம் கூடினார்கள். ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொருவருக்கும் கிடைத்த இடத்தைப் பிடித்துக்கொண்டு கண்கொட்டாமல் இந்த வருகையை எதிர்பார்த்து நின்றிருந்தார்கள். வீட்டுப் பெண்கள் மாடி முகப்புகளில் ஜன்னல்களின் வழியே நெருக்கியடித்துக் கொண்டு பார்த்தார்கள்; ஆண்கள், நாட்டாண்மைக் காரர்கள் என்பதாக எல்லோருமே கட்டுண்டவர்களாக சாப்பாட்டைக் கூடத் தவிர்த்துவிட்டு எதிர்கொண்டழைக்க வந்து கூடினார்கள். பஞ்சுமேனோனைச் சார்ந்து முற்றத்து வாசலில் ஒரு கூட்டம்; கேசவன்நம்பூதிரி முன்கூட்டியே ஆயத்தமாக வாசலில் இறங்கி நின்று பல்லக்கிலிருந்து நம்பூதிரிப்பாடை இறக்கிவிடத் தயாரானார். காரியஸ்தர்களும் வேலைக்காரர்களும் முற்றத்தில் குழுமினார்கள். அடுக்களைப் பணியாட்கள் அடுக்களை ஜன்னல்கள் வழியாகவும் சுவரில் ஏற்பட்டிருந்த சில துவாரங்கள்

வழியாகவும் கண்களை மட்டும் வெளியே செலுத்திப் பார்த்தபடி ஒரு புறம்; வேலைக்காரிகள் கூட்டம் வாழை மர இடுக்குகள் ஊடேயும், தடுப்பு வேலியில் மறைந்து நின்ற படியும் எட்டிப் பார்த்தபடி ஒரு புறம்; இந்த ஆரவாரச் சத்தத்தையும் ஆட்ட பாட்டத்தையும் கேட்டு சத்திரத்தில் சாப்பாட்டுக்கூடத்தில் சாப்பிட்டு முடித்துவிட்ட நிலையில், வெயில் தாழ்ந்ததும் புறப்படலாம் என்று தீர்மானித்து உடலைக் கிடத்திப் படுத்திருந்த யாத்ரீகப் பிராமணர்கள் பரபரப்பாக எழுந்து ஓடி குளக்கரையிலும் படித்துறை யிலும் ஏறி நின்று வேடிக்கை பார்ப்பதற்கான எல்லா இடங்களையும் நிரப்பிக்கொண்டு, அவிழ்ந்து விழுந்த குடுமி களைக் கட்டியபடி, "என்னடா இது! யாரடா இது!—ஒரே பூகம்பமா இருக்கே" என்று கேட்டபடி ஒரு கூட்டம் ஒரு புறம்—இப்படியாக செம்பாழியோட்டையும் பூவள்ளி கையும் சுற்றியிருந்த எல்லாருமே பூகம்பம் வந்தால் என்னாகுமோ அது போன்று திக்குமுக்காடினார்கள். பல்லக்கு முற்றத்தை வந்தடைந்ததும் கேசவன்நம்பூதிரி அதன் கதவைத் திறந்து விட்டார். அப்போது அதிலிருந்து ஒரு தங்க விக்கிரகம் வெளியில் இறங்கியது. அது தங்க விக்கிரகம்—தங்க விக்கிரகமேதான். தலையை முழுவதும் மூடிய தங்க நிறத் தொப்பி, உடம்பு முழுக்கத் தங்க நிற உடுப்பு, போட்டிருந்த பட்டுக்கரைத் துண்டு முழுக்கத் தங்கச் சரிகை, காலில் தங்கக் குமிழியிட்ட மிதியடி, கைவிரல் பத்திலும் தங்க மோதிரங்கள், போதாதென்று முழுக்க முழுக்கத் தங்க மயமான ஒரு சால்வை சட்டை மேலாகப் போர்த்தியபடி, கையில் அப்போதைக்கப்போது பார்த்துக் கொள்ள சிறியதொரு தங்கச் சட்டமிட்ட கண்ணாடி—தங்கம்—தங்கம்—எல்லாமே தங்கம்! ஒன்றரை மணி வெயிலில் நம்பூதிரிப்பாடு பல்லக்கிலிருந்து இறங்கி நின்ற போது உருவானதொரு சுடரொளியைப் பற்றி எப்படிச் சொல்வது! அவர் நின்றிருந்த பக்கம் ஒரு கஜ சுற்றளவில் வெயில் தங்க மயமாக மாயிறிருந்தது. இதெல்லாம் பார்த்த மாத்திரத்தில் பஞ்சுமேனோனின் மனதில் தோன்றியது—'அடடா! கேசவன்நம்பூதிரி சொன்னது ரொம்பச் சரி. இந்துலேகா இந்த நம்பூதிரிக்குப் பின்னாலே ஓடுவாள்;

நிச்சயம் ஓடுவாள்—சந்தேகமே இல்லை' என்பதாக. பல்லக்கிலிருந்து அவர் இறங்கிய பின் அரை நிமிட நேரம் அந்தத் தங்கப் பகட்டில் சுற்றியிருந்தவர்களின் கண்கள் சிறிது மங்கியதால் யாரும் எதுவும் பேச முடியாமல் திகைத்து நின்றார்கள். தன்னுடைய தோற்றத்தைக் கண்டு எல்லோரும் மலைத்து விட்டார்கள் என்று நிச்சயித்துக்கொண்ட நம்பூதிரிப்பாடு மேலும் அரை நிமிட நேரம் வெறுமனே அப்படியே நின்றிருந்தார். வெறுமனே நின்றிருந்தார் என்று சொல்ல முடியாது—முற்றத்திலோ வாசலிலோ இந்துலேகா அங்கே எங்கேயாவது வந்து நின்று கொண்டிருக்கிறாளா என்று தெரிந்து கொள்வதற்காக இரண்டு மூன்று தடவை தனக்கே உரிய பாணியில் நிமிர்ந்து பார்த்தார். அடுத்து பஞ்சுமேனோனும் கேசவன்நம்பூதிரியும் கைதாத்தி வழி காட்டியபடி அந்தத் தங்க விக்கிரகத்தை உள் முற்றத்திற்கு அழைத்துச் சென்று அங்கே தயாராக வைத்திருந்த பெரிய நாற்காலியில் உட்கார வைத்தார்கள்.

நம்பூதிரிப்பாடு: பஞ்சுவைப் பத்தி நான் கேள்விப் பட்டிருக்கேன்.

பஞ்சுமேனோன்: இங்கே எழுந்தருளினது அடியேன் பாக்கியம்.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் உட்காரும்—செறுசேரி எங்கே?

செறுசேரிநம்பூதிரி: நான் இங்கே இருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: இரும்—இரும். பரவாயில்லே. உட்கார்ந்துக்கும்—உட்கார்ந்துக்கும்.

செறுசேரிநம்பூதிரி: உட்கார்ந்துக்கிட்டேன்.

நம்பூதிரிப்பாடு: என்ன கறுத்தேடம், உட்காராமம? உட்கார்ந்துக்கும்.

பஞ்சுமேனோன்: பெரியவங்க வந்து சேரக் கொஞ்சம் தாமதமாயிடுச்சே, காரணத்தைத் தெரிஞ்சிக்கிடலாமா—பெரியவவங்க இன்னும் சாப்பிட்டிருக்க மாட்டீங்க.

நம்பூதிரிப்பாடு: சாப்பிட்டாச்சி, காலையிலேயே சாப்பிட்டாச்சி. மலைக்குத்தகை

விஷயமா ஒரு விவகாரம் பேச வேண்டியிருந்ததனாலே புறப்பட முடியலே. அதனாலே தாமதிச்சி காலையிலே சாப்பிட்டு முடிச்சிப் புறப்பட்டோம்.

என்ன, க்ஷவரம் பண்ணிக்கொண்டது மலைக் குத்தகை விவகாரமா என்று செறுசேரி நினைத்து உள்ளுக்குள் சிரித்துக்கொண்டார்.

பஞ்சுமேனோன்: வேலை நெருக்கடியாத்தான் இருக்கும்னு அடியேன் அப்பவே நினைச்சேன்.

கேசவன்நம்பூதிரி: நான் சொன்னேனில்ல?

பஞ்சுமேனோன்: குளிக்கிறதுக்கு இனியும் தாமதிக்க வேண்டாம்னு தோணுது. பெரியவங்க காலையிலே சாப்பிட்டு நேரமாச்சில்ல?

கேசவன்நம்பூதிரி: குளிக்கிறதுக்குத் தாமதப்படுத்த வேணாம்.

நம்பூதிரிப்பாடு: ஓகோ! கறுத்தேடம் இன்னும் குளிச்சி முடிக்கலேன்னு தெரியுது.

கேசவன்நம்பூதிரி: இல்லே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா குளிக்கப் போகலாம்.

என்று சொல்லி எல்லோரும் குளிக்கப் புறப்பட்டார்கள்.

நம்பூதிரிப்பாடு முற்றத்தில் உட்கார்ந்திருந்தபோது இடையிடையே ஏழெட்டுத் தடவை உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்படிப் பார்த்தபோது ஓரிரண்டு பேரை இந்துலேகாவோ என்று சந்தேகப் பட்டார். எல்லோரும் குளிக்கப் போன பிறகு பஞ்சு மேனோன் உள்ளே வந்து சாப்பிட உட்கார்ந்தார்.

பஞ்சுமேனோன்: (மனைவியிடம்) நம்பூதிரிப்பாடு பெரிய செல்வாக்கான ஆளுதான்.

குஞ்ஞிக்குட்டியம்மா: நான் இப்படி ஒரு ஆளை இதுவரை பார்த்ததில்லே. இந்துலேகாவோட

ஜாதகம் பிரமாதமான ஜாதகம்தான். அன்னிக்கு அந்த பணிக்கர் பார்த்து சொன்னது சரிதான். சீக்கிரத்திலேயே பெரிய பணக் காரனா புருஷன் கிடைப்பான்னு அவர் சொல்லியிருக்கார்.

பஞ்சுமேனோன்: நம்பூதிரிப்பர்டை இந்துலேகா பார்த்தாளா—கீழ்க்கட்டுக்கு வந்தா ளில்லே?

குஞ்ஞிக்குட்டியம்மா: கீழே இறங்கி வரல்லே. மேலே இருந்தே பார்த்திருக்கணும்.

பஞ்சுமேனோன்: நீதான் அதைத் தெரிஞ்சிக்கிட்டு வரணும். லட்சுமிக்குட்டி பார்த் தாளா?

குஞ்ஞிக்குட்டியம்மா: பார்த்தா. அவ என்கூட கொஞ்ச நேரம் உள்ளேயிருந்து பார்த்துக் கிட்டிருந்தா. பிறகுதான் அவ ளோட அறைக்குப் போனா.

பஞ்சுமேனோன்: இந்தக் கல்யாணம் நிச்சயம் நடக்கும்.

குஞ்ஞிக்குட்டியம்மா: இந்தக் கல்யாணம் நடக்கலேன்னா நாம புண்ணியம் பண்ணலேன்னு அர்த்தம்.

பஞ்சுமேனோன்: நடக்கும்னுதான் எனக்குத் தோணுது.

குஞ்ஞிக்குட்டியம்மா: நடக்கலேன்னா இதைவிட ஒரு கஷ்டம் நமக்கு இனிமே வர்றதுக் கில்லே.

பஞ்சுமேனோன்: எனக்கு இதிலே சந்தேகமே இல்லே—நடக்கும்.

குஞ்ஞிக்குட்டியம்மா: எனக்கும் கொஞ்சம்கூட சந்தேக மில்லே. அவ்வளவுக்குப் புத்தி யில்லாத பொண்ணில்லே இந்து லேகா.

பஞ்சுமேனோன்: சரி—உடனே தெரிஞ்சிக்குவோம். இந்துலேகா நிச்சயமா சம்மதிப்பா அப்படீன்னுதான் எனக்குத் தீர்மானமாகத் தோணுது. நீ சீக்கிரமா போய் இந்துலேகாகிட்டப் பேசிப் பாரு. பிறகு என்னண்ணு தெரிஞ்சிக்கலாம்.

குஞ்ஞிக்குட்டியம்மா: நான் இதோ போறேன்.

## 10

# சென்னையிலிருந்து ஒரு கடிதம்

பஞ்சுமேனோன் சாப்பிட்டு முடிந்தவுடன் இந்துலேகா நம்பூதிரிப்பாடைப் பார்த்தாளா இல்லையா என்புதையறிய குஞ்ஞிக்குட்டியம்மா இந்துலேகா இருந்த மாடிக்குப் போனாள். அப்போது இந்துலேகா ஒரு தொப்பியைப் பின்னிக்கொண்டு ஜன்னலை அடுத்திருந்த சாய்மானத்தில் உட்கார்ந்திருந்தாள். பாட்டியைப் பார்த்ததும் எழுந்து அருகில் சென்றாள். பாட்டி இந்துலேகாவைப் பற்றிப் பிடித்து மார்போடு அணைத்து முன்நெற்றியில் முத்தமிட்ட படி பேசினாள்.

குஞ்ஞிக்குட்டியம்மா: பொண்ணே, உனக்கு எல்லா அதிர்ஷ்டமும் கூடி வருது. ஊர் வலம் வந்ததைப் பார்த்தே இல்லே?

இந்துலேகா: என்ன, இன்னிக்கு கோயில்லே உற்சவம் நடக்குதா? அப்படீன்னா பாட்டி ஏன் என்னைக் கூப்பி டல்லே? யானை எத்தனை வந்தது? கொட்டுமேளம் எதுவும் கேட் கலியே!

குஞ்ஞிக்குட்டியம்மா: கோயில்லே ஒண்ணுமில்லே. நம் பூதிரிப்பாடு வந்த ஊர்வலமாக்கும்.

இந்துலேகா: (முகம் சுருங்க, பாட்டியின் ஆலிங் கனத்திலிருந்து விடுபட்டுத் தனித்து நின்றபடி) நான் பார்க்கலே.

குஞ்ஞிக்குட்டியம்மா: இந்தக் கும்மாளம் அமர்க்களப் பட்டதை நீ பார்க்கலே?

இந்துலேகா: என்ன கும்மாளம்? நான் ஒண்ணும் பார்க்கலையே!

குஞ்ஞிக்குட்டியம்மா: நீ மாடிக் கதவை அடைச்சிக்கிட்டு தையல்காரன் மாதிரி தைச்சிக் கிட்டிருந்தா பார்க்க முடியுமா? நம் பூதிரிப்பாடைப் பார்க்கணுமே—ரொம்ப அழகனாக்கும். வேட்டியும் சட்டையும் எல்லாமே தங்கத்தாலே தான். எனக்கு அறுபது வயசாயிருச் சில்ல, பொண்ணே, நான் இது வரைக்கும் இப்படி ஒரு ஆம் பிளையைப் பார்த்ததில்லே. காலைச் சாப்பாட்டுக்குப் போயி ருக்காரு—முடிச்சிட்டு உடனே வரு வாரு. உன்னைப் பார்க்க மாடிக்கு வருவார்னு தோணுது. அன்னிக்கு இங்கே வந்த செறுசேரி நம் பூதிரியும் கூடச் சேர்ந்து வருவாரு. அவரு நம்பூதிரிப்பாடுக்கு எதிரிலே உட்காரக்கூடத் தயங்குறாரு. நம்பூ திரிப்பாடு இருக்கிற இருப்பைச் சொல்லி முடியாது. அவங்க அரண் மனையிலே ஆனைச் சங்கிலிகூடத் தங்கத்தினாலேதான் செஞ்சிருக் காராம். இங்கே மாடியிலே எல்லாமே துப்புரவா இருக்கணும் அவரு வர்றப்போ.

இந்துலேகா: இங்கே மாடியிலே துப்புரவில்லாம ஒருபோதும் இருந்ததில்லே. எதுக் காக அவரு இங்கே மாடிக்கு வர்றாரு—என்னைப் பார்க் கணும்னு அவருக்கென்ன தேவை?

குஞ்ஞிக்குட்டியம்மா: அவரு வேறே எதுக்காக நம்ம வீட்டுக்கு விஜயம் செய்வாரு? என் பொண்ணோட சமாச்சாரம்

கேள்விப்பட்டு வந்தவராக்கும். பொண்ணே, ரொம்பப் பதவிசா அவருகிட்ட பேசணும். என் பொண்ணுக்குப் பெரிய புருஷனா வர்றதைப் பார்க்கணும்னு நான் எவ்வளவு காலமா காத்திருக்கேன்! இப்போ எனக்கு அது பலிச்சிருச்சி. இது மாதிரி இனிமே என் கண்ணுக்கு ஒரு அதிர்ஷ்டம் வரப் போறதில்லே. பொண்ணுங்க வளப்பமா இருந்தா அதனாலே அவங்க குடும்பங்களுக்கு நல்லது வந்து சேரணும். நல்ல புருஷனுக்கு வாழ்க்கைப்படணும். நான் சின்ன வயசிலே நல்லா இருந்தேன். எத்தனையோ. அழகான ஆம்பிளைங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டாங்க. எங்க அப்பாவும் அம்மாவும் அதுக்கெல்லாம் சம்மதிக்கலே. கடைசியிலே உங்க தாத்தாவுக்குத்தான் என்னைக் கொடுத்தாங்க. நான் தான் எங்க வீட்டுக்கு நாலு காசு சம்பாதிச்சிக் கொடுத்தேன். நாங்க சுகமா இருக்கிறதுக்குத் தேவையான பணமிருக்கு, பொண்ணே. லட்சுமிக்குட்டிக்குத்தான் அதிர்ஷ்டமில்லாமப் போயிடிச்சி. உன்னோட அப்பா இன்னும் கொஞ்ச காலம் இருந்திருந்தா, நாம இப்போ பெரிய பணக்காரங்களா இருந்திருப்போம். என்ன செய்யலாம்! அதுக்குக் கொடுத்து வைக்கலே. நம்ப குடும்பத்திலே பொண்ணுங்க

எப்பவும் நல்லாவே இருப்பாங்க. ஆனாலும் உன்னைப் போல இவ்வளவு அழகா இதுவரைக்கும் யாரும் இருந்ததில்லே. உனக்கு இப்போ வந்திருக்கிற புருஷன் மாதிரி நல்ல ஒரு சம்பந்தம் இது வரைக்கும் நம்ம குடும்பத்துக்கு வாய்ச்சதில்லே. அதனாலேதான் அதிர்ஷ்டம்னு சொன்னேன்.

இந்துலேகா: அப்படியா—நம்பூதிரிப்பாடுக்கும் எனக்கும் சம்பந்தம் பேசியாச்சா? எனக்கு அது தெரியவே தெரியாதே!

குஞ்ஞிக்குட்டியம்மா: இனி சம்பந்தம் முடிஞ்ச மாதிரி தான். இவ்வளவு பெரிய ஆளு இங்கே இதுவரைக்கும் வந்திட்டு இனி சம்பந்தம் முடிக்காமப் போவாங்களா? என்னடி உனக்கென்ன பைத்தியமா? இந்த நம்பூதிரிப்பாடு பொருத்தமில்லேன்னா வேறே யாருக்குப் பொருத்தம்?

இந்துலேகா: சரி—பாட்டி சொல்லறது எல்லாம் சரி. நான் கொஞ்சம் படுத்துத் தூங்கறேன்.

குஞ்ஞிக்குட்டியம்மா: பகல்லே தூங்கக் கூடாதுடி, கண்ணு. நான் அந்தப் பச்சைக் கல்லு அட்டியலும், கல்லு வெச்ச தோடுகளும் எடுத்துக்கிட்டு வர்றேன். நம்பூதிரிப்பாடு இங்கே மாடிக்கு வர்றப்போ என்கண்ணு அதெல்லாம் போட்டுக்கிட்டிருக்கணும் அவரு பார்க்கிற மாதிரி. நான் சீக்கிரமா எடுத்துக்கிட்டு வர்றேன்.

இந்துலேகா: வேண்டாம், நான் எந்த நகையும் போட்டுக்க மாட்டேன். தீர் மானமாச் சொல்றேன். எனக்குக் கொஞ்சமாவது தூங்கியாகணும்.

குஞ்ஞிக்குட்டியம்மா: என்கண்ணு போட்டுக்கிட்டாலும் சரி, போடாட்டாலும் சரி, நகை இல்லேன்னாலும் அழகாத்தான் இருப்பே. நம்பூதிரிப்பாடு வர் றப்போ நல்லா சந்தோஷமாப் பேசி அவருகிட்ட சுமுகமா நடந்துக் கிடணும்.

என்று சொல்லிவிட்டு குஞ்ஞிக்குட்டியம்மா கீழே இறங்கிப் போன உடனே லட்சுமிக்குட்டியம்மா மாடியேறி வந்தாள். இந்துலேகாவும் லட்சுமிக்குட்டியம்மாவும் நேருக்கு நேர் முகம் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

லட்சுமிக்குட்டியம்மா: நம்பூதிரிப்பாடு வந்தது படு அமர்க் களம். ஆள் மகா மூடன்னு தோணுது. இங்கே மாடிக்கு வந்தாலும் வரலாம்.

இந்துலேகா: வரட்டும்.

லட்சுமிக்குட்டியம்மா: கட்டிக்கிடணும்னு சொல்லுவாரு.

இந்துலேகா: யாரை?

லட்சுமிக்குட்டியம்மா: உன்னைத்தான்.

இந்துலேகா: படி ஏறின உடனேயா?

லட்சுமிக்குட்டியம்மா: (சிரித்துக்கொண்டு) ஒரு வேளை எடுத்த எடுப்பிலேயே கேட்பா ருன்னு தோணுது.

இந்துலேகா: அப்படி ஏதாச்சும் பேசினா அதுக்கு பதில் வேலைக்காரி அம்முவே சொல்லிடுவா.

லட்சுமிக்குட்டியம்மா: மாதவன்குட்டி இப்போ இங்கே இருந்திருந்தா நல்ல வேடிக்கையாக இருக்கும்.

'மாதவன்' என்ற ஒலி அலை காதில் எட்டியதும் இந்துலேகாவின் முகத்தில் வெளிப்படையாக உண்டான பல மாற்றங்களைக் கண்டு:

லட்சுமிக்குட்டியம்மா: அடடா! என் கண்ணு, உன்னோட உயிர் முழுக்க இப்போ சென்னை யிலேதான் இருக்கு, சந்தேகமே இல்லே. உனக்கு இங்கே இருக் கிறதிலே ரொம்ப மனசு சோர்ந்து போன மாதிரித் தெரியுது. கவலைப்படாதே, தெய்வம் சீக்கி ரமே எல்லாத்தையும் சரி பண்ணிடும்.

இந்துலேகா: மனசிலே சோர்வு ஒண்ணும் அதிகமில்லே. சென்னையி லேருந்து சமாச்சாரம் எதுவும் வரலையே?

லட்சுமிக்குட்டியம்மா: கோவிந்தன்குட்டி விசேஷமா எதுவும் சொல்லலே.

இந்துலேகா: செறுசேரிநம்பூதிரி வந்திருக்காரா?

லட்சுமிக்குட்டியம்மா: வந்திருக்காரு. அவரும் சாப்பிடப் போயிருக்காரு. நான் போறேன். நம்பூதிரிப்பாடோட சண்டை போடறதுக்குத் தயார் பண் ணிக்கோ.

என்று சொல்லிவிட்டு லட்சுமிக்குட்டியம்மா கீழே இறங்கிப் போனாள்.

செறுசேரி வந்திருக்கிறார் என்பதைக் கேட்டு இந்து லேகாவுக்கு மிக்க மகிழ்ச்சியாக இருந்தது. தங்களுக்குள் ஐந்தாறு தடவைகள் மட்டுமே பரிச்சயம் ஏற்பட்டிருந்தது என்ற போதிலும் இந்துலேகாவுக்கும் மாதவனுக்கும் இந்த நம்பூதிரி மகா கெட்டிக்காரர் என்றும், பழக்கத்திற்கு நல்லவர் என்றும் தெரிந்தது. ஆனால் இப்போது இந்து லேகாவுக்கு சிறிது மனக்கலக்கம் ஏற்பட்டது. அன்றைக்கு செறுசேரிநம்பூதிரியைப் பார்த்தபோது மாதவன் தன்னு டன் இருந்தான். தனக்கும் மாதவனுக்கும் இடையேயான உறவுமுறை பற்றி அவருக்குத் தெரியும் என்றும், அதில் அவருக்கு மகிழ்ச்சிதான் என்றும் இந்துலேகா தெரிந்து வைத்திருந்தாள். இந்த நம்பூதிரிப்பாடு இப்போது எதிர்

பார்த்து வந்திருக்கும் காரியமும் அவருக்குத் தெரியாம லிருக்க வழியில்லை. இதனால் அவருக்குத் தன்மீது அரு வருப்புத் தோன்றுமே என்ற எண்ணத்தினால்தான் அவளுக்கு மனக்கலக்கம் ஏற்பட்டது. நம்பூதிரிப்பாடு எதிர் பார்த்து வந்திருக்கும் திட்டத்தின் முடிவில் இந்த அருவருப்பு அகன்றுவிடும் என்று தனக்குத் தானே சமாதானப் படுத்திக் கொண்டு உள்ளறைக்குச் சென்று தூங்குவதற்காகப் படுத்தாள்.

நான்கைந்து நிமிடங்கள் கழித்து வேலைக்காரி அம்மு ஒரு கடிதத்தைக் கையில் ஏந்தியபடி படியேறி வருவதை அவள் பார்த்தாள்.

இந்துலேகா: என்ன அம்மு .அது?

அம்மு: இது கடுதாசு—பட்டணத்திலேருந்து வந்திருக்குது. கோவிந்தன்குட்டி எஜமான் உங்ககிட்ட கொடுக்கச் சொன்னாங்க.

என்று சொல்லியபடி கடிதத்தை இந்துலேகாவிடம் கொடுத்தாள்.

இந்துலேகா சற்றே பரபரப்புடன் கடிதத்தை வாங்கி எழுந்து நின்றபடி வாசித்தாள். இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்று திறந்தபடி இருந்தது. அதன் மொழி பெயர்ப்பைக் கீழே தருகிறேன்:

"கோவிந்தன்குட்டி இங்கிருந்து கிளம்பிப் போன அன்று இரவு எட்டு மணிக்கு என்னை செக்ரட்டேரியட்டில் நியமனம் செய்திருப்பதாக கில்ஹாம் துரையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. நான் இன்று அந்த வேலையில் சேர்ந்து விட்டேன். கோவிந்தன்குட்டியும் மற்றவர்களும் நலமாக இருப்பீர்கள். நான் மூன்று நான்கு நாட்கள் கழித்து ஒரு வாரம் விடுப்பு எடுத்துக்கொண்டு அங்கு வருகிறேன். இத னுடன் வைத்திருக்கும் கடிதங்களை அப்பாவிடமும் மாதவி யிடமும் சேர்பித்துவிடுமாறு கேட்டுக்கொள்கிறேன்."

இதைப் படித்தவுடன் இந்துலேகாவுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை நான் எப்படி விவரித்துச் சொல்ல முடியும்— கஷ்டம். ஆனந்தக் கண்ணீர் கண்களில் நிறைந்தது. பின்னர் தனக்கென்றிருந்த கடிதத்தைப் பிரித்துப் படித்தாள். அந்தக்

கடிதத்தை நான் வெளிப்படையாக விவரிக்க முடியாது. இந்துலேகா அந்தக் கடிதத்தைப் படித்த பிறகு, அவளிடம் தென்பட்ட சில மெய்பாடுகளை எழுத வேண்டாமென்று தான் முதலில் நினைத்தேன். பின்னர் யோசித்துப் பார்த்ததில், இந்துலேகாவின் மீதான ஈடுபாட்டின் காரணமாகக் கதையை முழுமையாகக் கூறாமல் இருப்பது சரியல்ல என்று கருதியதால் எழுதிவிட நிச்சயித்தேன். மாதவனுடைய கடிதத்தைப் படித்ததும் அந்தக் கடிதத்தை மூன்று நான்கு முறை இந்துலேகா முத்தமிட்டாள். சாவியை எடுத்து கடிதங்கள் வைத்திருந்த பெட்டியைத் திறந்து இரண்டு கடிதங்களையும் அதற்குள் வைத்துப் பூட்டிவிட்டு வெளியே வந்தாள். கோவிந்தன்குட்டிமேனோன் தேநீர் குடித்தாயிற்றா என்று தெரிந்து வரும்படி அம்முவை அனுப்பி வைத்தாள். அம்மு கோவிந்தன்குட்டிமேனோனின் அறைக்குச் சென்று விவரம் கேட்டாள். தேநீர் குடித்து விட்டதாக கோவிந்தன்குட்டிமேனோன் பதில் சொன்னார். "நான் அங்கே வர்றேன்னு இந்துலேகாகிட்டச் சொல்லு" என்று சொல்லியனுப்பினார்.

மாதவனுக்கு வேலை கிடைத்த விவரத்தை கோவிந்தன்குட்டிமேனோன் சொல்லக்கேட்டு லட்சுமிக்குட்டியம்மா மகிழ்ச்சியுடன் மாடியேறிப் போய் இந்துலேகாவைப் பார்த்தாள். மகளிடம் அப்போதிருந்த மகிழ்ச்சியைக் கண்டு அவளுக்கும் மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது.

லட்சுமிக்குட்டியம்மா: ஜெயிச்சிட்டே—இல்லே?

இந்துலேகா: கடவுள் செயல்தான்—இவ்வளவு சீக்கிரம் வேலை கிடைச்சது.

லட்சுமிக்குட்டியம்மா: அப்படீன்னா சபதம்?

இந்துலேகா: அது இருக்கட்டும். நான் இப்போ உடனே சென்னைக்குப் போறேம்மா—அம்மாவுக்கு ஆட்சேபணை இல்லைதானே?

லட்சுமிக்குட்டியம்மா: என் பொண்ணு மாதவனோட சேர்ந்து எந்தத் திசைக்குப் போனாலும் எனக்கு ஆட்சேபணை இல்லே. பாவம், நீங்க

ரெண்டு பேரும் எத்தனை நாளா அவஸ்தைப்பட்டுட்டீங்க! ஆனாலும் எங்கப்பாவோட கோபத்துக்கு ஆளாகணுமேன்னுதான் எனக்கு ஒரு பயம்.

இந்துலேகா: அதிலே அம்மாவுக்கு வருத்தமே தேவையில்லே. தாத்தா ரொம்ப நல்லவங்க. என் மேலே கொள்ளைப் பிரியம். நான் காலிலே விழுந்து அழுதா அவர் எனக்காக வேண்டி நான் நியாயமா கேட்கிறதை நிறைவேத்தாம இருக்க மாட்டாரு—எனக்கு அதிலே நல்லா நம்பிக்கை இருக்கு.

இவ்வாறு அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது மாதவனின் தாயார் (பார்வதியம்மா) மாடிப்படியேறி வந்தாள்.

பார்வதியம்மா: என்னடி பொண்ணே, மாதவனுக்கு வேலை கிடைச்சிருச்சா?

இந்துலேகா: கிடைச்சிருச்சின்னு கடுதாசி வந்திருக்கு. உங்க அதிருஷ்டம்—இவ்வளவு சீக்கிரம் இவ்வளவு நல்ல வேலை கிடைச்சிருக்கு.

பார்வதியம்மா: மாதவன் இனிமே சென்னையிலேதான் இருந்தாகணும். அதுதான் எனக்கு சங்கடமா இருக்கு.

இந்துலேகா: ரொம்பக் காலம் அங்கே இருக்க வேண்டியிருக்காது. சீக்கிரமா அவருக்குப் பெரிய வேலை கிடைச்சி இந்த ஊர்ப்பக்கம் வர்றதுக்கு வாய்ப்பிருக்கு.

பார்வதியம்மா: அப்படின்னா சரிதான். கடவுளே! எவ்வளவு காலத்துக்கு நான் என் பிள்ளையை விட்டு பிரிஞ்சு இருக்கணுமோ!

இந்துலேகா: நீங்க இனிமே சென்னைக்குப் போய் இருக்கலாமில்ல?

பார்வதியம்மா: நான் தனியாவா?

இந்துலாகா: நானும் வர்றேன்.

பார்வதியம்மா: கடவுளே! அப்படீன்னா அது நல்லதுதான். ஏற்கெனவே மாதவன் ஒண்ணுமில்லாததுக்கு பெரிய மாமனோட ஒரு சண்டையை உண்டாக்கி வச்சிருக்கானே.

இந்துலேகா: அதிருக்கட்டும், நீங்க என்கூட வர்றீங்களா?

பார்வதியம்மா: கடவுளே! அந்தப்படியே கடவுள் அனுக்கிரகிக்கட்டும். அதைவிட என் மகனுக்கு வேறே அதிருஷ்டம் தேவையில்லே. அதுக்கு மத்தியிலே இந்த சண்டை சச்சரவு இருக்கே.

இப்படி அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது கோவிந்தன்குட்டிமேனோன் படியேறி வருவதைக் கண்டு, லட்சுமிக்குட்டியம்மாவும் பார்வதியம்மாவும் கீழே இறங்கிப் போனார்கள். இந்துலேகாவின் முகத்தில் பிரத்தியட்சமாகத் தெரிந்த மகிழ்ச்சியைக் கண்டு கோவிந்தன்குட்டிமேனோனுக்கும் மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. பரஸ்பரம் எதுவும் பேசிக்கொள்ளாமல் சிறிது நேரம் நின்றிருந்தார்கள். பின்னர்:

கோவிந்தன்
குட்டிமேனோன்: இந்துலேகா, சென்னைக்குப் போக எல்லாத்தையும் தயார் பண்ணு. மாதவன் நாளைக்கோ நாளன்னிக்கோ புறப்பட்டு வர்றதாக எழுதியிருக்கிறதைப் பார்த்தே இல்லே?

இந்துலேகா எதுவும் பேசாமல் முகம் தாழ்த்தியபடி, முகத்தில் இடையிடையே சிவப்பும் வெளுப்புமாய் நிறம் மாறிக்கொண்டிருக்க, மகிழ்ச்சியில் மூழ்கியும் அலை பாய்ந்தும் நின்றிருந்தாள். ஆனால் கோவிந்தன்குட்டி மேனோனுக்கும் அதிக மகிழ்ச்சியாகத்தான் இருந்தது என்றாலும் அப்பாவின் சபதத்தை நினைத்து ஒரு சிறிது

வருத்தம் உண்டாயிற்று. மாதவன் அவளைத் திருமணம் செய்துகொண்டு அழைத்துப் போய்விடுவான் என்பதில் கோவிந்தன்குட்டிமேனோனுக்குக் கொஞ்சம்கூட சந்தேக மில்லை. அதனால் இந்துலேகாவைப் பொறுத்தவரை கோவிந்தன்குட்டிமேனோனுக்கு எந்த வருத்தமும் இல்லை. ஆனால் வயோதிகரான தன்னுடைய அப்பாவைச் சம்ம திக்க வைத்துக் காரியத்தை முடிக்காவிட்டால் எப்படிப்பட்ட இடையூறுகள் குறுக்கிடும் என்று நினைத்தபோதுதான் சிறிது வருத்தம் ஏற்பட்டது. ஆனால் இந்த மாதிரியான வருத்த உணர்வு மேனோனின் முகத்திலோ பேச்சிலோ தென்படவில்லை.

கோவிந்தன் குட்டிமேனோன்: நம்பூதிரிப்பாடு வந்திருக்காரே—கேள்விப்பட்டியா?

இந்துலேகா: கேள்விப்பட்டேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: அப்பா இதைப் பத்தி ரொம்ப சாதகமா இன்னிக்கு ஒரு வார்த்தை சொன்னாங்க—எனக்கு அது ரொம்ப சந்தோஷமா இருந்திச்சி.

இந்துலேகா: என்ன சொன்னாங்க?

கோவிந்தன் குட்டிமேனோன்: இந்த நம்பூதிரிபாடோட சம்பந்தம் இந்துலேகாவுக்குப் பிடிச்சிருந்தாத் தானே தவிர நிர்ப்பந்தப்படுத்தி செய்யமாட்டேன்னாங்க. இதைத் திட்டவட்டமா என்கிட்டேயும் கேச வன்நம்பூதிரிகிட்டேயும் சொன் னாங்க. அதனாலே நீ இனிமே கொஞ்சம்கூட வருத்தப்பட வேண்டாம்.

இந்துலேகா: அதுதான் தாத்தாவோட எண் ணம்னா வலுக்கட்டாயமா அவரை வரவழைச்சதுக்கு எதுக்கு?

கோவிந்தன்
குட்டிமேனோன்: அது நீ அவரைப் பார்த்ததும் மனசு மாறி சம்மதிப்பியான்னு சோதிச்சிப் பார்க்கத்தான்.

என்று சொல்லிவிட்டு கோவிந்தன்குட்டிமேனோன் தன்னுடைய அறைக்குச் சென்றார். படி இறங்கியபோது, "பட்டணத்துக்கு கடுதாசு இருந்தா ஒட்டி கீழே அனுப்பி வை. என் கடுதாசியோட சேர்த்து வச்சி அனுப்பிடறேன்" என்று சொன்னார்.

எனக்கு இந்துலேகாவைக் கேலி செய்வது என்பது பிராண அவஸ்தையாகும். ஆனால் கதையில் நான் எதையும் மறைத்து வைக்கப் போவதில்லை. இவ்வளவு புத்திசாலியான இந்துலேகா எதற்காகப் பேதைமையை வெளிபடுத்த வேண்டும்? நான் சொல்லாமல் இருக்கப் போவதில்லை. கோவிந்தன்குட்டிமேனோன் கீழே இறங்கிப் போனவுடன் இந்துலேகா கடிதங்கள் அடங்கிய பெட்டியைத் திறந்து கடிதத்தை எடுத்துப் படித்து அசட்டு வலிப்புச் சைகைகளைக் காண்பித்துவிட்டு கடிதத்தை மறுபடியும் பெட்டியில் வைத்துப் பூட்டினாள். அதிக மகிழ்ச்சி ஆட்கொள்ளவே படுக்கவும் முடியாமல், உட்கார்ந் திருக்கவும் முடியாமல், நிற்கவும் முடியாமல் மகிழ்ச்சிக் காட்டாற்றில் அடித்துச் செல்லப்பட்டாள்.

கோவிந்தன்குட்டிமேனோன் சென்னைக்குக் கடிதம் எழுதி மேசை மீது வைத்துவிட்டு மாதவனின் தந்தையைப் பார்ப்பதற்காக அவருடைய வீட்டிற்குச் சென்றார். சென்ற டைந்தபோது அவர் வாசல் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார். கோவிந்தன்குட்டிமேனோனைப் பார்த்ததும் சிரித்தபடி வரவேற்றார்.

கோவிந்தன்
குட்டிமேனோன்: அண்ணாச்சி, நம்பூதிரிப்பாடு வந்ததைப் பார்த்தீங்களில்லே?

கோவிந்தன்குட்டிமேனோன் சாதாரணமாக கோவிந் தப்பணிக்கரை அண்ணாச்சி என்றுதான் கூப்பிடுவது வழக்கம்.

கோவிந்தப்பணிக்கர்: நான் பார்க்கலே. பல்லக்குத் தூக்குறவங்களோட கூப்பாடும் கும்மாளமும்தான் கேட்டன். நான் இப்போ பொல்பாயிப் பண்ணைக்குப் புறப்பட்டுக்கிட்டிருக்கேன். இப்போதைக்கு இங்கே நிற்கிறது மானக்கேடு. உங்கப்பா ஒருவேளை எனக்கு ஆள் அனுப்பலாம். நம்பூதிரிப்பாடுக்கான கல்யாண விஷயம் பத்தி ஆலோசனை கேட்கறதுக்கும் மத்ததுக்கும் பேச வேண்டியிருக்கும். எனக்கு இந்த ஆவலாதிகள் ஒண்ணும் பிடிக்கலே—நான் இன்னிக்கும் நாளைக்கும் பண்ணையிலேயே தங்கியிருந்திட்டு நாளன்னிக்குத் தான் திரும்பி வர்றதா இருக்கேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: நானும் வர்றேன். எனக்கும் நம்பூதிரிப்பாடோட அலட்டல்களைப் பார்க்கச் சகிக்கலே—நானும் வர்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: சரி, போகலாம். விவரத்தை அப்பாகிட்ட சொல்லிட்டு வந்திரு. இல்லாட்டி பின்னாலே அதுக்கு என்னைத்தான் கோவிச்சிக்கு வாரு.

உடனே கோவிந்தன்குட்டிமேனோன் வீட்டுக்கு ஆளனுப்பி; தன்னுடைய உடுப்புக்களையும் பிறவற்றையும் எடுத்துவரச் செய்து, கோவிந்தப்பணிக்கருடன் பொல்ப்பாயிப் பண்ணைக்குப் புறப்பட்டார். தன்னைப் பற்றிக் கேட்டால் அப்பாவுக்கு விவரத்தைச் சொல்ல ஆளை ஏற்பாடு செய்தார். கோவிந்தப்பணிக்கரும் கோவிந்தன் குட்டிமேனோனும் பொல்ப்பாய்ப் பண்ணைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

## 11

# நம்பூதிரிப்பாடைப் பற்றி மக்கள் பேசிக்கொண்டது

முத்து: (சாப்பாட்டு அறையில் வைத்து) இது என்ன அமர்க்களம்! அடடா, நான் நம்பூதிரிப்பாடு அலங்காரம் மாதிரி ஒரு அலங்காரத்தைப் பார்த்ததில்லே. என்ன குப்பாயச் சட்டை! என்ன தொப்பி! குப் பாயத்து மேலே போட்டிருந்த அந்த சால்வை விலை ஒரு ஆயிரம் ரூபா யாவது இருக்கும்னு தோணுது. லட்சாதிபதி—ரொம்ப அழகன்!

சங்கரசாஸ்திரி: எங்கே நீ அழகைப் பார்த்தே? சால்வையிலும் குப்பாயத்திலுமா? அவரோட மூஞ்சி ஒரு குதிரை யோட மூஞ்சி மாதிரி எனக்குத் தோணிச்சி.

மானு: உங்களுக்குப் பொறாமையிலே பேசறதே வழக்கம். நம்பூதிரிப் பாடோட முகம் குதிரை முகம் போலவா இருக்கு? கஷ்டம். நீங்க எங்கேயிருந்து பார்த்தீங்க. நான் பக்கத்திலேயே இருந்தேன்—பல்லக்குப் பக்கத்திலேயே இருந் தேன். தங்க நிறமாக்கும் நம்பூ திரிப்பாடு! ரொம்ப அழகன்! கழுத்

திலே ஒரு தங்க மாலை போட்டி ருந்தாரு. அது மாதிரி ஒரு கழுத்து மாலையை நான் பார்த்ததில்லே.

சுப்புக்குட்டி: ஓ! அது கழுத்து மாலையில்லே. கடிகாரத்தைச் சேர்ந்த சங்கிலி யாக்கும். கடிகாரத்தை இடுப்பிலே எங்கேயாச்சும் மறைச்சி வச்சி ருப்பாரு.

சங்கரசாஸ்திரி: என்ன நிறமானாலும், எத்தனை மாலை போட்டிருந்தாலும் அவ ருக்குக் குதிரை மூஞ்சிதான்.

மானு: சாஸ்திரிகளுக்குப் பைத்தியம் பிடிச்சிருக்குன்னு தோணுது. இவ்வளவு அழகா ஒரு ஆளு கிடையாதுன்னதான் எங்க எல்லா ருக்கும் தோணுது. இல்லையா சீனு! சுப்புக்குட்டி! என்ன சொல்றீங்க— உங்க எல்லாருக்கும் என்னண்ணு தோணுது?

சுப்புக்குட்டி: எங்க எல்லாருக்கும் தோன்றது அவரு நல்ல அழகுன்னுதான்.

சங்கர சாஸ்திரி: உங்களுக்கு எப்படித் தோணி னாலும் அக்கறையில்லே. அவ ரோட மூஞ்சி குதிரை மூஞ்சி தான். சந்தேகமில்லே.

அப்போது ஒரு யாத்திரீகப் பட்டர்: கல்யாணம் என்னிக்குன்னு தெரியலே.

சுப்புக்குட்டி: நாளைக்குன்னு கேள்விப் பட்டேன்.

சங்கரசாஸ்திரி: யாரு சொன்னாங்க?

சுப்புக்குட்டி: யாரோ சொன்னாங்க.

சங்கரசாஸ்திரி: அந்த யாத்திரீகரோட பயணத்தை முடக்கிப் போட்டிடாதே. (பயணி யிடம்) ஓய், நீரே சத்திரத்துக்குப் போயி நேரிலே விசாரிச்சித்

தெரிஞ்சிக்கிடும். இவ சொல்றது எதையும் நம்ப வேண்டாம்.

அப்போது சாப்பாட்டறைக்குள் வந்த ஒரு பட்டர்: கல்யாணம் இன்னிக்கேதான். கால் கால் ரூபா பிராமணங் களுக்கும், அரை அரை ரூபா நம்பூதிரிகளுக்கும் உண்டாம்.

சங்கரசாஸ்திரி: உன்கிட்ட யாரு சொன்னது?

வந்த பட்டர்: யாரோ குளக்கரையிலே சொன் னாங்க.

சங்கரசாஸ்திரி: (வழிப்பயணியிடம்) நீங்க போயி விசாரிச்சிக்கிடுங்க.

வழிப்பயணி: இன்னிக்கே அப்படீன்னா விருந் துக்கு இப்பவே ஏற்பாடு நடக் கணுமே? ஒண்ணும் நடக்கற மாதிரி தெரியலையே.

சங்கரசாஸ்திரி: இன்னிக்கு இருக்காது.

கிருஷ்ணஜோசியர்: ஜாதகமும் மத்ததும் பார்க்க வேண்டாமாக்கும்?

சுப்புக்குட்டி: பணத்துக்கு மேலே என்ன ஜாதகம்? எல்லாம் பணம். பணம்தான் ஜாதகம். ஒத்துப் போகாமப் போயி ருமாக்கும்?

கிருஷ்ணஜோசியர்: நமக்கு நாலு காசு கிடைச்சாச் சரிதான். சகலமும் சரிதான்னும் விசேஷமா எல்லாம் பொருந்தி யிருக்குன்னும் நான் சொல்லிரு வேன். நாயர்களுக்கு எதுக்கு ஜாதகம் பார்க்கணும்! நம்பூதிரிப் பாடு சும்மா வந்து பார்த்திட்டுப் போகத்தான் வந்தாரு. அவருக்கு நூறு திசையிலே நூறு பொம்ப ளைங்க இருக்காங்க.

சங்கரசாஸ்திரி: அப்படி சும்மா வந்திட்டுப் போறதா இருந்தா அவரு வேறே ஆளைப் பார்க்க வேண்டியதுதான்.

சுப்புக்குட்டி: சரி, சரி, சாஸ்திரிகள் அன்னிக்கு ஒரு நாள் பூவரங்கிலே மாடிப்படி ஏறி சாகுந்தலம் முதலானது வாசிச்சதாகக் கேள்விப்பட்டேன். அப்போ அந்தப் பொண்ணோட எண்ணம் என்னன்னு தெரிஞ்சிருக்கும்—சாஸ்திரம் படிச்சவங்க எல்லாரும் ஒரு வகையிலே வெகுளிங்கதான்.

முத்து: நம்பூதிரிப்பாடு ஒரு மோதிரம் கொடுத்தா நூறு இந்துலேகாக்கள் சம்மதிப்பாங்க.

சங்கரசாஸ்திரிகள் இதற்கு எதுவும் பதில் சொல்லாமல் எழுந்து கோயிலுக்குச் சென்றார். இந்த சாஸ்திரிகள் மாதவனுக்கு நெருங்கிய சிநேகிதர்; நல்ல வித்துவான். இந்துலேகாவை நன்கு தெரிந்து வைத்திருந்தவர் இவர். அவளுடைய அறிவு மிக விசேஷமானது என்பதையும் அறிந்தவர். அதனால் இவற்றையெல்லாம் கேட்டபோது இவருக்கு மனதில் கொஞ்சம்கூடத் திருப்தி ஏற்படவில்லை. சாஸ்திரிகளின் அபிப்பிராயத்தில் இந்துலேகாவுக்கு மாதவன்தான் பொருத்தமான கணவன். "இப்படியெல்லாம் நடப்பது கஷ்டம்தான்! பணத்தோட செல்வாக்கினால் ஒருசில சமயங்களில் இப்படியெல்லாம் நடக்கும்தான்—என்னசெய்வது! இந்த உலகத்தில் பணத்தைத் தோற்கடிக்க எதற்கும் சக்தி கிடையாது." இப்படியெல்லாம் நினைத்து வருந்தியபடி சாஸ்திரிகள் கோயிலுக்குச் சென்று வாசல் மாடத்தில் அங்கவஸ்திரத்தை விரித்து உறங்குவதற்காகப் படுத்தார். சாஸ்திரிகளுக்கு அங்கேயும் கிரகப்பிழைதான்—அவர் படுத்த இரண்டு மூன்று நிமிடங்களில் வாசல் மாடத்தில் கூட்டம் கூடிவிட்டது. கோவிலை நிர்வாகம் செய்த வாரியாரும் மாரானும்தான் உள்ளேயிருந்து முதலில் வெளியே வந்தார்கள்.

வாரியார்: (சாஸ்திரிகளிடம்) என்னங்க சாஸ்திரிகள் சாமி! இன்னிக்கு பூவரங்கிலே நாடகம், பாராயணம்,

மத்தது எதுவும் இல்லேன்னு தோணுது. குழப்பம்தான். குளத்தங் கரையிலே ஏகக் கூட்டம். நம்பூ திரிப்பாடு மத்தியானச் சாப்பாடு சாப்பிட்டுக்கிட்டிருக்காரு. சம் பந்தம் இன்னிக்கே நடக்குமான்னு சாஸ்திரிகளுக்கு ஏதாவது தெரியுமா?

சாஸ்திரிகள்: எனக்கு ஒண்ணும் தெரியாது. நான் கொஞ்சம் தூங்கிக்கிடுறேன்.

அப்போது பூசாரி எம்பராந்திரியும் இரண்டு மூன்று நம்பூதிரிகளும் ஓரிரண்டு பட்டர்களும்கூட ஒரு கொள்ளைக் கூட்டம் கொள்ளையடிக்கப் புறப்பட்டது போல் வடக்கு வாசல்புறத்தின் வடக்குப் பக்கத்திலிருந்து கூச்சலும் கும்மாளமுமாக வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார். பேச்செல்லாம் நம்பூதிரிப்பாடை பற்றியதாக இருந்தது.

பூசாரி: நம்பூதிரிப்பாடு ரொம்ப அழகு. நான் பார்த்தேன். எத்தனை வயசி ருக்கும்?

ஒரு நம்பூதிரி: வயசு ஐம்பது இருக்கும்னு தோணுது.

மற்றொரு நம்பூதிரி: சீ! அவ்வளவு ஒண்ணுமில்லே. நாற்பது, நாற்பத்தஞ்சுதான் இருக் கும்னு தோணுது.

ஒரு பட்டர்: எவ்வளவு வயசானாலும் இந்து லேகாவுக்குப் பிடிச்சிப்போகும். என்ன மாதிரியான குப்பாயங் கள்—என்ன மாதிரியான மிடுக்கு— சொல்றாப்பிலே இல்லே. நான் திருவனந்தபுரத்து ராஜாகிட்டக்கூட இந்த மாதிரி குப்பாயம் பார்த்த தில்லே.

மற்றொரு நம்பூதிரி: அந்தக் குப்பாயமும் மிடுக்கும் தான் மிச்சம். பரம்பரைச் சொத்தும்

ஏராளமா இருக்கு. ஆனா ஆளு ஒரு கோமாளி. முதுகெலும்பில்லாத, ஸ்திரமில்லாத ஆளு. அந்த இந்து லேகாவை இந்தக் கோமாளிக்குக் கொடுக்கப் போறாங்களாமா? சம்பந்தம் இன்னிக்கேவா?

பூசாரி: அப்படித்தான். சாஸ்திரிகள் கிட்டக் கேட்டுத் தெரிஞ்சிக்கலாம். சாஸ்திரிகள் இந்துலேகாவுக்கு ரொம்ப வேண்டியவரு. ஒய்! சாஸ் திரிகளே, பகல்லே தூங்குறீ ராக்கும்? தூங்காதேயும், எழுந் திரும்.

சாஸ்திரிகள் தூங்குவது போலக் கண்களை மூடிப் படுத்துக் கிடந்தார். பூசாரியின் கூப்பாடு கேட்டு வேறு போக்கில்லாமல் எழுந்து உட்கார்ந்தார்.

பூசாரி: இந்துலேகாவுக்கு சம்பந்தம் இன்னிக்கேவா?

சங்கரசாஸ்திரி: எனக்கு ஒரு சம்பந்தமும் தெரியாது.

என்று சொல்லிவிட்டு சாஸ்திரிகள் கோயிலிலிருந்து வெளியேறிப் போனார்.

நம்பூதிரிப்பாடு வந்து சேர்ந்தவுடன் பூவள்ளி மனையில் இருந்தவர்கள் தங்களுக்குள் அன்னியோன்னியமாகப் பலவாறாகப் பேசிக்கொண்டார்கள்.

கும்மிணியம்மா: சாத்தரே, இவ்வளவு வாட்ட சாட்டமா ஒரு ஆளை நான் பார்த்தில்லே. அவரைப் பார்த்ததிலே என் கண்ணு கூசிப்போச்சி.

சாத்தாரமேனோன்: அவருடைய குப்பாயத்தைப் பார்த்துன்னு சொல்லு.

கும்மிணியம்மா: அதென்னமோ, என் வயசுக்கு இந்த மாதிரியான அட்டகாசமான ஊர் வலத்தைப் பார்த்ததில்லே. திவான் பெரிய மாமனைப் பார்த்த ஞாபகம் வருது. அவருகிட்டகூட இந்த

மாதிரியான தாட்டிகத்தை நான் பார்த்ததில்லே. இந்துலேகாவிற்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பாரேன்! அவ சரியான அதிர்ஷ்டகாரிதான். இருந்தாலும் மாதவனைப் பற்றி நினைச்சால் எனக்கு வருத்தமாக இருக்கு.

சாத்தாரமேனோன்: எதுக்கு வருத்தம்?

கும்மிணியம்மா: வருத்தப்படுறதுக்கு ஒண்ணு மில்லே. இவ்வளவு செல்வாக்கான ஆளு வந்தா மாதவனாலே என்ன பேச முடியும்? அப்படித்தானே? இருந்தாலும் எனக்கு அவனைப் பத்தி நினைச்சி ஒரு வருத்தம்.

சாத்தரமேனோன்: அம்மாவுக்குப் பைத்தியம்தான். இந்த நம்பூதிரிப்பாடுக்கு இந்த ஜன் மத்திலே இந்துலேகா கிடைக்க மாட்டா. இந்துலேகா மாதவனுக்குத் தான். இதெல்லாம் பெரிய மாம னோட ஒரு கேலிக்கூத்து.

கும்மிணியம்மா: உனக்குத்தான் ஏதோ பைத்தியம்.

சமையலறை, குளிப்பறை, குளக்கரை என்று எல்லா இடங்களிலும் பேச்சுக்கள் பலவாறாக இருந்தன.

குளக்கரைக்கு அருகில் இருந்த ஓர் இளைஞனிடம் மற்றோர் இளைஞன்: டேய், இந்த நம்பூதிரிப்பாடோட பேரு என்னடா?

மற்றவன்: கண்ணில் மூக்கில்லாத வைசூரி நம்பூதிரிப்பாடுன்னு சொல்றாங்க.

" பேரு நல்லா இல்லே, நிச்சயமா."

"பேரிலே என்ன இருக்கு, எல்லாம் பணம்தான். அவங்க மனையிலே ஆனையைக் கட்ற சங்கிலியே தங்கத் தினாலேதானாம். அப்படீன்னா மூக்கு இருந்தா என்ன, இல்லாட்டி என்ன...வைசூரியானாலும்தான் என்ன?"

"என்ன பணமிருந்தாலும் இந்துலேகா மாதவனை ஒதுக்கிடுவான்னா நான் அவமேலே வச்சிருக்கிற

மரியாதை போயிரும். மாதவன்தான் அவளுக்கேத்த புருஷன்."

"மாதவனுக்கு தங்கத்தாலே ஆனைச்சங்கிலி பண்ண முடியுமா? நீ என்ன இவ்வளவு கிறுக்குத்தனமா பேசறே! பொம்பளைகளுக்குப் பணத்தை மீறி ஒண்ணுமில்லே."

"இவளைக் கொச்சுகிருஷ்ணமேனோன் கூட்டிப்போய் இங்கிலீஷ் படிக்க வச்சதும் மத்ததும் வீண்தான். இங்கிலீஷ் படிச்சதனாலே இப்போ என்ன பெரிசா கண்டிட்டா! இங்கிலீஷ் படிக்கிறதும் பணத்துக்காகத்தான் போலிருக்கு."

"மாதவன் இதையெல்லாம் கேள்விப்பட்டா என்ன சொல்வானோ?"

"மாதவன் சிசுபாலன் மாதிரி பொங்கிக் கொதிப்பான். ஆனா என்ன லாபம்? இந்துலேகா மூக்கில்லாத வைசூரி நம்பூதிரிப்பாடோட சுகமா இருப்பா."

"இந்த நம்பூதிரிப்பாடு குடும்பப் பேரு பத்தித் தெரியுமா? கொஞ்சம் முன்னாலே குளிச்சிட்டுப் போறப்போ நான் பக்கத்திலே போய் பார்த்தேன். மூக்கு தட்டுப்படவே இல்லே. மூஞ்சி ஒரு பாத்திரத்தைக் கவிழ்த்தின மாதிரி இருந்திச்சி. சீ! இந்துலேகாவுக்கு இப்படி ஒரு கதி வந்திரிச்சே! இந்த ஆளோட பணமும் புல்லும் எனக்கு ஒரே மாதிரி. அந்த கோவிந்தன்குட்டிமேனோனுக்கு பதிலா நான் இந்துலேகாவோட தாய்மாமனா இருந்திருந்தா நான் அவளை ஒருக்காலும் இந்த வைசூரிக்காரனுக்குக் கொடுக்க மாட்டேன்."

"இந்துலேகாவுக்குப் பிடிச்சிப்போச்சின்னா?"

"அப்படீன்னா வேறே போக்கில்லே. இந்துலேகா வுக்குப் பிடிச்சிப்போகுமா? பஞ்சுமேனோனோட நிர்பந்தத் தினாலேதான் இதெல்லாம் நடக்குதுன்னு கேள்விப் பட்டேன்."

"அந்தப் பஞ்சுமேனோன் இன்னும் செத்துத் தொலைக் கலையே! எதுக்காக அந்தப் பூவள்ளிக் குடும்பத்திலே இருக்கிற எல்லாரையும் திட்டித் தீர்த்துக்கிட்டு உபத்திரவம் பண்ணிக்கிட்டுக் கிடக்கணும்? கஷ்டகாலம்! இந்துலேகா வுக்கு இப்படி ஒரு ராட்சசன் வந்து சேர்ந்திட்டானே!"

"தீர்மானமா சொல்றதுக்கில்லேடா. இந்துலேகா சம்மதிப்பாளா? என்ன நிச்சயம்? ஒருவேளை சம்மதிக்கலேன்னா?"

"பஞ்சுமேனோன் உதைச்சி வெளியே தள்ளுவாரு. மாதவனும் இங்கே இல்லே. அப்படியிருக்க இந்துலேகாவுக்கு இந்த ஜன்மத்திலே நம்பூதிரிப்பாடுக்கு சம்மதப்படுறதைத் தவிர வேறே வழியில்லே. இந்த வட்டாரத்திலேயே இது மாதிரி பணக்காரங்க யாரும் இல்லேன்னு பேசிக்கிடுறாங்க. ரொம்ப செல்வாக்கான ஆளாம்—வேறே என்ன வேணும்? மாதவன் இப்பவும் ஸ்கூல்லே படிக்கிற பையன் மாதிரித்தானே இருக்கான்?"

"மாதவனும் இந்துலேகாவும் ரொம்ப நெருக்கம்னு நான் கேள்விப்பட்டிருக்கேன்."

"அதெல்லாம் இனிமே கண்டுக்க முடியாது. மாதவனுக்கு சுக்கிர தசை இருந்திருந்தா அது கழிஞ்சிபோச்சி. நிச்சயம்தான். சந்தேகமே இல்லே."

"எந்தக் குழப்படியும் ஆகட்டும்" என்று பேச்சை முடித்துக்கொண்டு ஒருவன் குளிக்கவும், மற்றவன் தன் வீடு நோக்கியும் புறப்பட்டுப் போனார்கள்.

பூவரங்கில் நம்பூதிரிப்பாடைக் குறித்துப் பலரும் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். சென்னையிலிருந்து கடிதம் கிடைத்த பிறகு இந்துலேகாவுக்கு மிகவும் மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்பட்டன என்று முன்பே கூறப்பட்டதல்லவா—இந்த மகிழ்ச்சிக்கும் உற்சாகத்திற்குமான காரணம் அறியாத சில வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் இதற்கெல்லாம் காரணம் நம்பூதிரிப்பாடின் வருகைதான் என்பதாக நிச்சயித்துக் கொண்டார்கள். குஞ்ஞிக்குட்டியம்மாவின் வேலைக்காரி பாரு மாடிக்கு எதற்காக வேண்டியோ போயிருந்தாள். அப்போது இந்துலேகாவைப் பார்த்தாள். இந்துலேகா சிரித்தபடி:

"என்ன பாரு! உன்னோட வீட்டுக்காரர் இப்பவெல்லாம் வர்றதில்லையா?"

பாரு: அவரு ஆறேழு மாசமா பண்ணையிலேயே தங்கிட்டாரு. அங்கே வேறே யார்கூடவோ தொடுப்பு

வச்சிருக்காராம்— கண்டர் நாயர் சொன்னாரு.

இந்துலேகா: போகட்டும். நீ வேறே ஒரு ஆளை முடிச்சிக்க வேண்டியதுதானே?

பாரு: எனக்கு யாரும் தேவையில்லே. என் கழுத்துத் தாலி உடைஞ்சி போச்சிம்மா. நாலு மாசமா நான் கழுத்திலே ஒண்ணும் இல்லாமத் தான் இருக்கேன். பெரியம்மாகிட்ட நான் ரொம்பத் தடவை சொல் லிட்டேன்—அதைச் சரி பண்ணித் தரமாட்டேங்கறாங்க. நான் என்ன செய்றது!

வேலைக்காரியின் இந்த சங்கடத்தைக் கேட்டதும் இந்துலேகா தன்னுடைய பெட்டியைத் திறந்து அதிலிருந்து ஒரு எட்டு-பத்து ரூபாய் விலைபெறும் ஒரு தாலியை எடுத்து ஒரு சரடு கோத்து பாருவின் கையில் கொடுத்தாள்.

இந்துலேகா: இந்தா, இந்தத் தாலியைக் கட்டிக்கோ. தாலி இல்லேன்னு சங்கடப்பட வேண்டாம்.

பாரு மகிழ்ச்சியால் நெகிழ்ந்துபோனாள். தாலியை வாங்கிக்கொண்டு கீழே இறங்கிப் போய் எல்லோரிடமும் தனக்குக் கிடைத்த வெகுமதியைப் பற்றி ஆர்ப்பாட்டமாகச் சொல்லலானாள். குஞ்ஞிக்குட்டியம்மா பாருவைக் கூப் பிட்டபோது பாரு புதிதாக ஒரு தாலியை அணிந்திருந் ததைப் பார்த்தாள்.

குஞ்ஞிக்குட்டியம்மா: உனக்கு இந்தத் தாலி எங்கேருந்து கிடைச்சது?

பாரு: நான் மாடிக்குப் போனப்போ சின்னம்மா கொடுத்தாங்க.

குஞ்ஞிக்குட்டியம்மா: இந்துலேகாவா?

பாரு: ஆமாம்.

குஞ்ஞிக்குட்டியம்மா: என்னடி, இந்துலேகாவுக்கு ரொம்ப சந்தோஷம் வந்திரிச்சா இன்னிக்கு? எப்படி இருக்கு அவ போக்கு?

பாரு: ரொம்பச் சந்தோசமா இருக்காங்க. சந்தோசம் இல்லாம இருக்குமா பெரியம்மா, இங்கே எசமான் சம்பந்தம் பேச வந்திருக்கிறப்போ?

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, இந்துலேகாவைப் பார்த்து வரவேண்டுமென்று திட்டமிட்டு சங்கரசாஸ்திரிகள் இந்துலேகா இருந்த மாடிக்குப் போக எண்ணிப் பூவரங்கில் உள்கூடத்திற்கு வந்ததைக் குஞ்ஞிக்குட்டியம்மா பார்த்துவிட்டு சாஸ்திரிகளைக் கூப்பிட்டாள்.

குஞ்ஞிக்குட்டியம்மா: சாஸ்திரிகள் என்ன காரியமா இப்போ வந்திருக்கிறாப்பில?

சாஸ்திரிகள்: குறிப்பா ஒண்ணுமில்லே. இந்துலேகாவை கொஞ்சம் பார்த்திட்டுப் போகலாம்னு வந்தேன்.

இந்த சாஸ்திரிகள் மாதவனுக்கு மிகவும் வேண்டியவர் என்று குஞ்ஞிக்குட்டியம்மாவுக்குத் தெரியும்.

குஞ்ஞிக்குட்டியம்மா: இப்போ அங்கே போக வேண்டாம். நம்பூதிரிப்பாடும் மத்தவங்களும் மதியச் சாப்பாடு முடிச்சி எழுந்திருக்கிற நேரம். கோயிலுக்குப் போய் அங்கே இருக்கிறதுதான் நல்லது.

சாஸ்திரிகள்: அப்படியே ஆகட்டும். நம்பூதிரிப்பாடு சம்பந்தம் பேசி முடிச்சாச்சி போலிருக்கு.

குஞ்ஞிக்குட்டியம்மா: அதிலென்ன சந்தேகம்? என்ன, சாஸ்திரிகளுக்கு அதிலே இஷ்டமில்லையா? இதைவிட மேன்மையா இந்துலேகாவுக்கு இனி யாரு பொருத்தமான புருஷனா வரப்போறாங்க?

சாஸ்திரிகள்: சரிதான்—சரிதான்.

குஞ்ஞிக்குட்டியம்மா: இந்துலேகாவும் ரொம்ப சந்தோஷமா இருக்கிறா. நம்பூதிரிப்

பாடை பார்க்கணும்னு காத்துக் கிட்டிருக்கிறா. பொண்ணுக்கு எவ்வளவோ உற்சாகம். இந்தப் பாரு தாலிகட்டாம இன்னிக்கு மாடிக்குப் போயிருக்கா; நல்ல உசந்த தாலி ஒண்ணை அவ பாரு வுக்கு எடுத்துக் கொடுத்திருக்கா. ரொம்ப உற்சாகம். நான் முதல்லே ஏதோ கொஞ்சம் பயந்தேன். கடவுள் அருளாலே எல்லாமே சரியா நடந்து வருது. பெரியவங்க அனுக்கிரகத்தினாலேயும் எல்லாம் சரியா நடந்துக்கிட்டிருக்குது.

சாஸ்திரிகள்: எதுக்காக முதல்லே பயந்தீங்க—பயப்படுறதுக்கு என்ன காரணம்?

குஞ்ஞிக்குட்டியம்மா: அதுவா—உங்களுக்குத் தெரியாது? மாதவனுக்கும் இந்துலேகாவுக்கும் ரொம்ப சினேகமில்லையா? அதைச் சரிப்படுத்தறதுக்குக் கஷ்ட மாயிருமோன்னு நான் பயந்தேன். கோவிந்தன்குட்டியோட அப்பா வும் பயந்துக்கிட்டுதான் இருந்தாரு. இனிமே அந்த பயம் எதுவும் எங்க ளுக்கு இல்லே. மாதவனுக்கும் நம் பூதிரிப்பாடுக்கும் எவ்வளவு வித்தி யாசம் இருக்கு! சாஸ்திரிகளே நீங்களே சொல்லுங்க.

சாஸ்திரிகள்: ரொம்ப வித்தியாசம் இருக்கு. ரொம்ப ரொம்ப வித்தியாசம் இருக்கு. சந்தேகமே இல்லே. நான் போய்ட்டு வர்றேன்.

என்று சொல்லிவிட்டு சாஸ்திரிகள் மிகுந்த மன வருத்தத்துடன் அங்கிருந்து சென்றார். போகும் வழியில் பூவரங்கில் தங்கியிருந்த நம்பூதிரிப்பாடின் ஆரவாரக்

கும்பலைப் பார்த்தார். தங்கப்பகட்டு இளவெயிலில் சாஸ்திரிகளின் கண்களைச் கூசச் செய்தது. சாஸ்திரிகள் ஆலமரத்துத் திண்டில் ஏறி உட்கார்ந்தபடி யோசனையில் ஆழ்ந்தார்.

'கஷ்டம்! இனி இந்த விஷயத்திலே சந்தேகப் படுறதுக்கில்லேன்னுதான் தோணுது. மாதவன் எவ்வளவு வருத்தப்படுவான்! இந்த மகாபாவி இந்துலேகா இப்படிக் கல்நெஞ்சக்காரியாயிட்டாளே, என்ன கொடூரம்! பணம் யாருக்கு அதிகமோ அவன்தான் புருஷன்னு தீர்மானிக்கிற இந்த முரட்டு நாயர் பொண்ணுங்களுக்கு என்னதான் செய்ய முடியாது! அந்த மாதவனோட புத்திசாலித் தனத் துக்கு இவளோட புத்திசாலித்தனம் பொருத்தம்னு நான் நினைச்சிருந்தேன். கஷ்டம்! என்ன செய்றது? அந்தப் பையன் கொடுத்து வச்சது அவ்வளவுதான்!'

இப்படி ஒவ்வொன்றாக நினைத்துக் கொண்டிருந்த போது நம்பூதிரிப்பாடுடன் பூவரங்கில் வந்திறங்கிய வெற்றிலைப் பெட்டி அடைப்பக்கார கோவிந்தனும் ஒரு சின்னப்பட்டருமாகச் சேர்ந்து ஆலமரத்து மேடைக்கு வந்து சேர்ந்தார்கள்.

சாஸ்திரிகள்: நீங்க நம்பூதிரிப்பாடுகூட வந்தவங்களோ?

கோவிந்தன்: ஆமாம்.

சாஸ்திரிகள்: நம்பூதிரிப்பாடு இங்கே எத்தனை நாள் தங்கப்போறாரு?

கோவிந்தன்: இன்னிக்கும் நாளைக்கும் நிச்சயமா இங்கே இருப்பாரு. நாளை மறுநாள் கிளம்புவார்னு தோணுது. போறப்போ கூடவே கொண்டுக் கிட்டுப் போயிருவாரு.

சாஸ்திரிகள்: என்னத்தைக் கொண்டு போறது?

கோவிந்தன்: பொண்டாட்டியை.

சாஸ்திரிகள்: சம்பந்தம் இன்னிக்கா?

கோவிந்தன்: ஒருவேளை இன்னிக்கே. அப்படி இல்லேன்னா நாளைக்கு ஆனாலும் ஆகும்.

சாஸ்திரிகள்: நம்பூதிரிப்பாடுக்கு இன்னும் சொந்தத்திலே கல்யாணம் ஆகலையா?

கோவிந்தன்: தம்பிங்க ரெண்டு தம்புரான்மாரும் சொந்தத்திலே கல்யாணம் முடிச்சிருக்காங்க.

சாஸ்திரிகள்: நம்பூதிரிப்பாடு ஆள் நல்ல காரியஸ்தரோ?

கோவிந்தன்: முதல் தரமான காரியஸ்தர். இது மாதிரி அந்தக் குடும்பத்திலே இது வரைக்கும் யாரும் இருந்ததில்லே. ரொம்பக் கெட்டிக்காரரு. தம்புரான் இங்கே விஜயம் பண்ணி இந்த சம்பந்தம் முடிக்கிறது இந்தக் குடும்பமும் பஞ்சுமேனோனும் செஞ்ச பெரும் புண்ணியம். இப்படி நாயர் வீடுகளுக்கு எங்கேயும் தம்புரான் விஜயம் பண்ணினதே இல்லை.

இப்படிச் சொல்லிவிட்டு கோவிந்தன் அங்கிருந்து கோயிலுக்கோ வேறெங்கோ புறப்பட்டுப் போனான். சின்னப்பட்டர் அதற்குப் பின்னரும் அங்கேயே இருந்தான்.

சாஸ்திரிகள்: (சின்னப்பட்டரிடம்) உன்னோட கிராமம் எது?

சின்னப்பட்டர்: கோவிந்தராஜபுரம்.

சாஸ்திரிகள்: எவ்வளவு காலமா நம்பூதிரிப் பாடோட இருக்கிறது?

சின்னப்பட்டர்: ஆறு வருஷமாச்சி. இது வரைக்கும் ஒரு காசு சம்பளமாத் தந்ததில்லே. ஒரு தடவை நச்சரிப்புத் தாங்காம அம்பது ரூபா கொடுத்தாரு. அதையும் ரெண்டு நாள் கழிச்சித் திரும்ப வாங்கிட்டாரு. அதுக்குப் பிறகு இது வரைக்கும் எதுவும் தந்ததில்லே.

ஏதாச்சும் அவர்கிட்டேருந்து கிடைச்சிருந்தா என்னிக்கோ அவரைவிட்டுப் போயிருந்திருப் பேன். பணம் வேணும்னு கேட்டா வட்டி சேர்த்து பின்னாலே தர்ற தாகச் சொல்லிடுவார். இவர் மகா ஏமாத்துப் பேர்வழி. ஒரு இருபது பொம்பளைக்களோட இப்போ தொடர்பு உண்டு. இந்த ரெண்டு மாசத்திலேயே ரெண்டு பொம் பளைங்க. குடும்பத்துப் பொறுப்பா இந்த ஆள் ஒரு வேலையும் பார்க் கிறதில்லே. அந்தப் பய கோவிந் தன் இப்போ சொன்னானே, இந்த ஆளு நாயருங்க வீட்டுக்குப் போனதே இல்லேன்னு. எவ்வளவு பெரிய புளுகு! பொண்ணுங்க இருக்கிற எல்லா வீட்டுக்கும்தான் போவாரு. சமயத்திலே கையிலே ஒரு காசுகூட இல்லாமப் போற துண்டு. ரெண்டு மூணு மாப்பிள மார் கடன் கொடுக்க எப்பவும் தயாரா இருப்பாங்க. அஞ்சு வட்டி வசூலிச்சிக்கிடுவாங்க. இந்தத் தறுதலை பணம் கிடைக்கிற பட்சத் திலே என்ன வேணும்னாலும் எழுதிக் கொடுப்பாரு. கடைசி யிலே சொத்தை விற்க வேண்டி வரும். இப்படி இவரு சொத்தை அழிச்சதுக்குக் கணக்கே இல்லே! இப்போ வர்றப்போகூட முந்நூறு ரூபா அஞ்சு வட்டிக்குக் கடன் வாங்கிட்டுத்தான் கிளம்பினாரு. மகா மகா மூடத்தனம்.

*சாஸ்திரிகள்:* போகட்டும், எஜமானுக்குத் துரோகமா பேச வேண்டாம். ஆள் எந்த மாதிரியாவது இருந்திட்டுப் போகட்டும். நான் இதையெல்லாம் உன்கிட்டக் கேட்கவேயில்ல. நான் குளிக்கப் போறேன்.

என்று சொல்லிவிட்டு *சாஸ்திரிகள்* குளத்தை நோக்கியும், *சின்னப்பட்டர்* சத்திரத்தை நோக்கியும் போனார்கள்.

# 12

# நம்பூதிரிப்பாடுக்கும் இந்துலேகாவுக்கும் இடையே முதல் சம்பாஷணை

நம்பூதிரிப்பாடு குளியலும் சாப்பாடும் முடிந்தவுடன் கேசவன்நம்பூதிரி தன்னிடம் பஞ்சுமேனோன் தெரிவித்த விவரத்தைச் சொன்னார். சொல்லும்போது செறுசேரி நம்பூதிரியும் உடனிருந்தார். தன்னில் எழுந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு கேசவன்நம்பூதிரியின் பேச்சு முடிந்ததும் சொன்னார்:

செறுசேரிநம்பூதிரி: அதுதானே வேண்டியது. "கவிதையும் பொண்ணும் தானாக வரணும்" அப்படீன்னுதானே சொலவடை. அப்படியிருக்க இந்துலேகா வருவாளா என்கிறதிலே எனக்கு அணுவளவுகூட சந்தேகமில்லே.

கேசவன்நம்பூதிரி: அதிலே மறுபேச்சில்லே. இனி அங்கே நேராகப் போறது நல்லதுன்னு தோணுது. இப்பவே மணி நாலு தாண்டிரிச்சி.

நம்பூதிரிப்பாடு: ஓ—போகலாம். செறுசேரி! நான் குப்பாயம் போட்டுக்கிடுறேன். குப்பாயம் எனக்குப் பொருத்தமாத் தெரியுது. பல்லக்கிலேருந்து இறங்கினப்போ பிரமாதமா ஒளி வீசினது எனக்கே தெரிஞ்சது.

செறுசேரிநம்பூதிரி: அதிலென்ன சந்தேகம்? கஜத்துக்குத் தொண்ணூத்தஞ்சி ரூபா விலையான தங்க ஜரிகை வச்சதில்ல? அந்தக் குப்பாயத்தைத்தான் போட்டுக்கிடணும்.

குப்பாயமும் தொப்பியும் சால்வையும் மோதிரங்களும் தங்கக் குமிழ் மிதியடியும் பிறவும் இட்டுக்கொண்டு நம்பூதிரிப்பாடு செறுசேரியுடனும் கேசவன்நம்பூதிரியுடனும் வேலைக்காரர் குழுவுடனும் வழியில் அங்கங்கே சேர்ந்து கொண்ட ஆட்களோடும் பூவரங்கு வாசலுக்குப் போய்ச் சேர்ந்தார். உடனே பஞ்சுமேனோன் இறங்கி வந்து நம்பூதிரிப்பாடை அழைத்துக்கொண்டு சதுரச் சதுக்க மாடத்திற்கு இட்டுச் சென்று ஒரு பெரிய நாற்காலியில் உட்காரச் செய்து எல்லா அங்கங்களும் ஒடுங்க நின்றார்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா இருக்கிற இடம் இதுக்கு அடுத்துதானோ?

பஞ்சுமேனோன்: சித்தம்—அப்படித்தான். இப்படித் தென்புறத்திலே மேற்கு வாசல் பக்கமாகப் போனால் அந்த இடம் தான்.

"அப்படீன்னா அந்த மாடத்துக்கு விஜயம் செய்யலாம்" என்றும் "கேசவன்நம்பூதிரி எங்கே?" என்றும் பஞ்சுமேனோன் சொல்லிக்கொண்டிருக்கும்போது, கேசவன் நம்பூதிரி வெளியிலிருந்து ஓடி வந்து, "நான் இந்துலேகா கிட்ட முன்கூட்டியே தகவல் சொல்லிட்டு வந்திடுறேன்" என்று சொல்லிக்கொண்டே ஓட்டமாக அவளிருந்த மாடிக்குச் சென்றார். அப்போது இந்துலேகா ஒரு கடிதம் எழுதிக்கொண்டிருந்தாள். நம்பூதிரியைப் பார்த்ததும் குழப்பமான கலவரத்துடன் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டு எழுந்து நின்று "என்ன வந்த விஷயம்?" என்று கேட்டாள்.

கேசவன்நம்பூதிரி: சாப்பிட்டு வந்திட்டாங்க. இந்துலேகாவைப் பார்க்கணும்னு விரும்புறாங்க. தாத்தாவும் அவரும் கீழே இருக்காங்க—வரச் சொல்லவா?

இந்துலேகா: வரட்டுமே.

கேசவன்நம்பூதிரி: அவரு பெரிய நம்பூதிரிப்பா டாக்கும். அவருகிட்ட எப்படிப் பேசணும்னு உனக்குத் தெரிஞ் சிருக்குமில்ல?

இந்துலேகா: எனக்கு எப்படிப் பேசணும்னு கொஞ்சம்கூடத் தெரியாது.

கேசவன்நம்பூதிரி: சீ! வர வேண்டாமா? உனக்கு எப்படித் தோணுதோ அப்படிப் பேசிக்கலாம்.

இந்துலேகா: அப்படித்தான் நானும் நினைச் சிருக்கேன்.

கேசவன்நம்பூதிரி நம்பூதிரிப்பாடை அழைத்துவரக் கீழே போனார்.

நம்பூதிப்பாடைப் பார்த்த பின்னர் தங்களுக்குள் பேசிக்கொண்ட விவரங்களையும் சேர்த்து பொழுது போக்காகப் பலவற்றையும் மாதவனுக்கு எழுதலாமென்று இந்துலேகா தீர்மானித்து பாதி எழுதிய கடிதத்தையும் பிற வற்றையும் பெட்டியிலிட்டுப் பூட்டினாள். பூட்டிவிட்டு அறையைவிட்டு வெளியேறி முற்றத்திற்கு வந்து பரீட்சை எழுதப் போகும் ஒரு மாணவிக்குரிய நிலைகொள்ள மை யுடன் திண்ணையைப் பற்றியபடி நின்றிருந்தாள். கேசவன் நம்பூதிரி கீழே இறங்கி வந்த நிலையில் "மாடிக்குப் போகலாம்" என்று தெரிவித்தார். நம்பூதிரிப்பாடு எழுந்து நடந்தார். தெற்கு புறத்து அறை வரைக்கும் பஞ்சு மேனோனும் தொடர்ந்து வந்தார். அதற்குப் பிறகு அவர் திரும்பிவிட்டார். அப்போது,

கேசவன்நம்பூதிரி: இந்துலேகா தனக்கு நாகரிகமாப் பேசறதுக்கும் மத்ததுக்கும் பழக்க மில்லேன்னு சொல்றா.

நம்பூதிரிப்பாடு: இவ்வளவுக்கு இங்கிலீசும் மத்ததும் படிச்சவ இது படிக்கலையாக்கும்? என்னோட மேகதந்தன் துரைகூட நாகரீகமாப் பேசுவாரே! இருக் கட்டும். என்னோட பெண் டாட்டியா ஆன பிறகு அதை

யெல்லாம் சொல்லித் தர்றேன். இப்போதைக்கு எப்படி வேணு மானாலும் பேசிக்கட்டும்.

கேசவன்நம்பூதிரி: சரி—அதுதான் இப்போ வேண்டியது. உங்களுக்கு எப்பவும் பெருந் தன்மைதான்!

நம்பூதிரிப்பாடு: என் பெண்டாட்டியான உட னேயே எனக்கேத்த மாதிரியா எல்லாத்தையும் மாத்திடுவேன்.

இப்படிச் சொல்லிக்கொண்டே தங்கக் குமிழ் மிதியடி யிட்டு மாடிப்படியில் கடா-புடாச் சத்ததுத்துடன் நடந்து மாடியேறி முற்றத்தை அடைந்தபோது திண்ணையை ஒட்டியபடி இளமை பொங்க நின்றிருந்த இந்துலேகாவைப் பார்த்தார். அந்தக் கணமே ஒரு மின்னல் பளீரிட்டுக் கண்ணைத் தாக்கியது போலிருந்தது. கண்ணை விழித்து மறுபடியும் பார்த்தார். அதியழிகியான இந்துலேகாவை உள்ளங்கால் முதல் உச்சி வரை அசைவற்று உற்று நோக்கினார்; பிரமித்துப்போய்த் திக்கித் திணறிய நிலை யில் ஓரிரண்டு நிமிடங்கள் தடுமாற்றமாய் நின்றிருந்தார். 'இப்படி ஒரு அழகை இதுவரைக்கும் பார்த்ததில்லே— என்னோட அதிருஷ்டம்தான். என்னை இவ விரும்பாம இருக்கமாட்டா. எனக்கு இனிமே மத்த பொம்பளைங்க சகவாசம் தேவையில்லே. இந்துலேகாவைத் தவிர நான் வேறே எவளையும் நினைக்கக்கூட மாட்டேன். இதுக்கு மறுபேச்சு கிடையாது'. இந்துலேகாவின் உருவ அழகைக் கண்டு நிலை மறந்து மீண்டும் தன் நினைவுக்கு வந்த பின்னர் பேச்சை ஆரம்பிப்பதற்கு முன்பு நம்பூதிரிப்பாடு மனதில் இவ்வாறுதான் தோன்றியது. இந்தத் தீர்மானங் களை உறுதிப்படுத்திக் கொண்டார்.

இந்துலேகா எவ்வித மாறுபாடுமின்றி நம்பூதிரிப் பாடின் முகத்தை நோக்கியவாறு நின்றிருந்தாள். உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தாள் என்று சொல்வதற கில்லை. உற்றுப் பார்ப்பதற்கு இந்துலேகாவுக்குத் தெரிந் திருக்கவும் இல்லை. கேசவன்நம்பூதிரி உடனே ஒரு நாற்கா லியைத் தூக்கி வந்து வைத்து அதில் நம்பூதிரிப்பாடை

உட்கார வைத்துவிட்டுக் கீழே இறங்கிப் போய்விட்டார். நம்பூதிரிப்பாடு நாற்காலியில் உட்கார்ந்த பின்னரும் இந்துலேகாவின் முகத்தைத்தான் கண்வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். இந்துலேகாவும் பார்த்தபடியே தான் நின்றிருந்தாள். கடைசியில்—

நம்பூதிரிப்பாடு: நான் வந்தப்போ கீழே வந்திருந்தே—இல்லே? பார்த்த மாதிரி இருந்தது.

என்று சொல்லி கன்னம் கவிந்து நீண்டதாக ஒரு புன்னகை புரிந்தார்.

இந்துலேகா: நான் அப்போ கீழே இல்லை.

'நான்' என்று பேசத் தொடங்கியதும் நம்பூதிரிப்பாடு விதிர்த்துப்போனார். ஒரு நாயர் பெண் தன்னுடன் இப்படி சரிக்குச்சரி இதுவரை பேசியதில்லை. ஆனால் இந்த ஆத்திர உணர்வு கண நேரம்கூட தங்கவில்லை. இந்துலேகாவின் அழகைக் கண்டு நம்பூதிரிப்பாடு அயர்ந்துபோய் தன்மானம் போன்ற பிறவற்றை மறந்துபோனார்.

நம்பூதிரிப்பாடு: கீழே வரவே இல்லே?

இந்துலேகா: வரவே இல்லே.

நம்பூதிரிப்பாடு: அது ஏன்?

இந்துலேகா: வரணும்னு தோணலே.

நம்பூதிரிப்பாடு: முதல்லே வரணும்னு தீர்மானிச்ச அன்னிக்கு வேலை இருந்ததனாலே புறப்பட முடியாமப் போச்சி. அந்த விவரத்தை எழுதி அனுப்பிச்சிருந்தேனே—கடுதாசியைப் பார்க்கலையா?

இந்துலேகா: நான் பார்க்கலே.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் காண்பிக்கலையா?

இந்துலேகா: நம்பூதிரி என்கிட்ட காண்பிக்கலே.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் மகா அசடு. அன்னிக்கு நான் புறப்பட்டப்போ ஒரு ஏல மலைக் குத்தகைக்கார மக்ஷாமன் துரை வந்திருந்தாரு. எண்பதினாயிரம் ரூபாய்க்கு மலையைக் குத்த-

கைக்கு விட்டிருக்கு—அந்த வேலை யினாலேதான் அன்னிக்கு வரல்லே. இந்துலேகாவைப் பார்க் கிறதுக்குத் தவிச்சிக்கிட்டி ருந்தேன். ரொம்பப் பேர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கேன். கேட்டுக் கேட்டு நல்லா பரிச்சயமாயிரிச்சி. கறுத்தேடத்துக்கும் உங்கம்மா வுக்கும் உறவுமுறை உண்டாகிற துக்கு முன்னாடியே பொறந் திருப்பேன்னு நினைக்கிறேன்.

இந்துலேகா: யாரோட மகள்? கறுத்தேட நம்பூ திரியோட மகளா? இல்லே, நான் நம்பூதிரியோட மகளில்லே, ராம வர்ம ராஜாவோட மகளாக்கும்.

நம்பூதிரிப்பாடு: அதுதான், அதுதான்—அதைத்தான் நான் சொல்றேன்.

இந்துலேகா: அப்புடீன்னா சரி.

இனி தான் என்ன சொல்ல வேண்டும், தனக்குச் சொல்ல வேண்டிய விஷயம் ஒன்று உண்டென்றாலும், அதை எப்படிச் சொல்வது என்று நம்பூதிரிப்பாடு சிறிது நேரம் மறுகிவிட்டு—

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவோட அழகைப் பத்திக் கேட்டுக் கேட்டு எனக்கு இருப்புக் கொள்ளலே.

இந்துலேகா: என் அழகினாலே உங்களுக்கு எதுக்காக இருப்புக் கொள்ள லேன்னு எனக்குப் புரியலே.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவைப் பத்தி நிறையக் கேள்விப்பட்டு குடும்பக் காரி யங்கள் எதையும் நான் ஒழுங்காகப் பார்த்துக்க முடியலே.

இந்துலேகா: இது மகா கொடுமை! நான் குடும்பக் காரியங்களுக்கு அவ்வளவு வேண்டாதவளா? இதுக்கு என்ன காரணம்?

நம்பூதிரிப்பாடு: நேத்து செறுசேரி ஒரு சுலோகம் சொன்னாரு. அதை இந்துலேகா கிட்டச் சொல்லணும்னு ஒரே ஆசை. இந்துலேகா சமஸ்கிருதத்திலே கெட்டிக்காரிதானே, இங்கிலீசுப் படிப்பிலேதான் கெட்டிக்காரின்னு கேள்விப்பட்டிருக்கேன். சமஸ்கிருத சுலோகம் சொன்னா அர்த்தம் புரியுமில்ல?

இந்துலேகா: அவ்வளவு நல்லாப் புரியுமான்னு தெரியலே.

நம்பூதிரிப்பாடு: கொஞ்சம் படிச்சி அதிலேயும் கெட்டிக்காரி ஆயிரணும்.

இந்துலேகா: சரி.

நம்பூதிரிப்பாடு: நான் ஒரு சுலோகம் சொல்றேன். அர்த்தம் புரியுதான்னு பாரு. புரியலேன்னா நான் சொல்றேன்.

இந்துலேகா: அர்த்தம் புரியும்கிறது சந்தேகம் தான்.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா நான் சொல்றேன்.

இந்துலேகா: அப்படியே ஆகட்டும்.

நம்பூதிரிப்பாடு ஒரு சுலோகம் சொல்ல நினைத்தார். சுலோகத்தின் ஒன்றிரண்டு அடிகள் நினைவுக்கு வந்தன. தேர்ச்சி அதிகமில்லாததனால் மகா அபத்தமாக நினைவுக்கு வந்ததையெல்லாம் சொன்னார். நினைவுக்கு வந்ததிலும் சில சொற்களும் தொடர்களும் இடையிடையே மறந்து போயின. கொஞ்சம் கழித்து நினைவுக்கு வரும். இப்படி இருந்தது நிலைமை. சுலோகம் சொல்லத் தீர்மானித்து நம்பூதிரிப்பாடு கொஞ்சம் நினைவுக்குக் கொண்டுவந்தார். ஒரு சுலோகத்தில் பாதிதான் நினைவுக்கு வந்தது. அதைச் சொன்னார்:

'ஆஸ்தாம் பீயூஷபாவஹ சுமதிகரஜரன ஹாரீ ப்ரசித்தஹ'

அதுக்குப் பிறகு என்ன—நினைவுக்கு வரலே. செறுசேரிக்காவது தெரியுமா? தெரியும்னுதான் அவரு சொல்லியிருக்காரு. அவரு என் கூடவே இருப்பாரு, எனக்குத்

தேவைப்படற போதெல்லாம் அவருதான் சுலோகம் சொல்வாரு. எனக்கு இதையெல்லாம் நினைவிலே வச்சிக்கிடுறதும் மத்ததும் மகாத் தொல்லை. வேறென்னவாம், வேலை நெருக்கடியிலே என்ன சுலோகம் வேண்டிக் கிடக்கு! ஆனாலும் நான் சொன்ன சுலோகம் ரொம்ப அருமையானதாக்கும். என்னது—எப்படி முடிஞ்சது—பார்க்கலாம்.

'ஆஸ்தாம் பீயூஷபாவஹ சுமதிகரஜரளா இதி ப்ரசித்த:'

இந்துலேகா: (சிரித்தபடி) கஷ்டப்பட வேண்டாம். சுலோகம் பின்னாலே ஞாபகத்துக்கு வர்றப்போ சொல்லிக்கிடலாம்.

நம்பூதிரிப்பாடு: சீ! அது கூடாது. அது கூடாது! நான் முதலாவதா இந்துலேகாகிட்ட சொல்ற சுலோகம் அரைகுறையா இருக்கக் கூடாது—பார்க்கிறேன்.

'ஆஸ்தாம் பீயூஷபாவ: சுமதிகரஜரளா இதி ப்ரசித்த:
ஓ—கோ—வந்திரிச்சி வந்திரிச்சி—
'தல்லாபோபாயகின்னாபிச கரளஹரோ ஹேதுருல்லாஸபாவ:'

இதுக்கு மேலே ரெண்டு அடி கொஞ்சம் நினைவிலே இல்லே. ஏற்கெனவே ஞாபகமில்லே. ஞாபகப்படுத்திப் பார்க்கிறதிலே புண்ணியமில்லே. 'ஆஸ்தாம் பீயூஷபாவ:..' ஓ—மறுபடியும் மறந்துபோச்சி—இதோட பெரிய தொல்லை.

ஓ—கோ—இல்லே, ஞாபகம் வந்திரிச்சி.

ஆஸ்தாம் பீயூஷபாவ: சுமதிகரஜரளா இதி ப்ரசித்த:
தல்லாபோபாயகின்னாபிச கரளஹரோ ஹேதுருல்லாஸபாவ:'

இவ்வளவும் சொல்லி மீதி உள்ளது நினைவுக்கு வரவில்லை என்று சொல்லியவாறு நம்பூதிரிப்பாடு எழுந்து கறுத்தேடத்தைக் கூப்பிடுவதற்காக மாடிப்படிப் பக்கம் போனார். "கறுத்தேடம்! கறுத்தேடம்!" என்று உரக்கக் கூப்பிட்டார். கேசவன்நம்பூதிரி பிரசன்னமாகி மாடிப்படி அருகில் வந்து நின்றார். ஓடி வந்து படியேறினார்.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம், செறுசேரிகிட்டப் போய் 'ஆஸ்தாம்' என்கிற

சுலோகம் முழுசையும் ஒரு ஓலை யிலே எழுதச் சொல்லி இங்கே கொண்டு வாரும். சீக்கிரமா வேணும்.

கேசவன்நம்பூதிரி ஓடிப் போனார். செறுசேரி நடுக் கூடத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த் தார். அங்கு போய்ச் சேர்ந்தபோது கேசவன்நம்பூதிரி 'ஆஸ்தாம்' என்ற சொல்லை மறந்துவிட்டிருந்தார்.

கேசவன்நம்பூதிரி: செறுசேரியை ஒரு சுலோகம் எழுதித் தரச் சொல்றார் நம்பூதிரிப் பாடு. அதை சீக்கிரமா எழுதித் தாரும். ஓலையும் எழுத்தாணியும் இந்தாரும்—என்ன அந்த சுலோகம்? என்னவோ —ஓ—மறந்து போச்சி— சனியன்—சரி, சரி—ஞாபகம் வந்தி ரிச்சி. சுலோகத்தோட தொடக்கம் ஆஸீத் என்கிறது. சீக்கிரமா எழுதித் தாரும்.

செறுசேரி வேகமாக ஓலையை வாங்கினார்.

"ஆஸீத்தசரதோ நாம சூர்யவம்சேத பார்த்திவ:
பார்யாஸ்திஸ்ரோபி லப்த்வாஸௌ தாஸு லேப ந ஸந்ததீம்"

என்ற சுலோகத்தை எழுதிக் கொடுத்தார்.

கேசவன்நம்பூதிரி ஓலையை எடுத்துக்கொண்டு மாடிக்கு ஓடிச் சென்றார். நம்பூதிரிப்பாடுக்குக் கண்ணாடி யில்லாமல் ஓர் எழுத்துக்கூடப் படிக்க முடியாது. ஆனால் இந்துலேகாவுக்கு எதிரில் கண்ணாடி அணிந்து கொள்வது தன்னுடைய வாலிபத்தைக் குறித்து இந்துலேகாவின் எண்ணத்தில் குறைவு வந்துவிடும் என்று எண்ணி தானே ஓலையை வாங்கிக் கொள்ளாமல் கேசவன்நம்பூதிரியையே அதைப் படிக்கச் சொன்னார். கேசவன்நம்பூதிரிக்கும் கண் ணாடி இல்லாமல் சரியாகப் படிக்க முடியாது. ஆனாலும் ஆணைப்படி தட்டுத்தடுமாறிப் படிக்கத் தொடங்கினார்.

கேசவன்நம்பூதிரி: ஆஸீ—தச—ரதோ—நாமஸூ— ர்ய வம்சே—தபார்த்திவஹ.

இவ்வளவு படிக்கும் முன்பாகவே இந்துலேகா பலமாகச் சிரிக்கத் தொடங்கினாள்.

நம்பூதிரிப்பாடு: சீ! அபத்தம்! கறுத்தேடத்துக்குப் படிப்பறிவு கொஞ்சம்கூட இல்லேன்னு தோணுது. தொடக்க அடி எனக்கு தெரியும். எழுதிக்கிடும்.

என்று சொல்லி கேசவன்நம்பூதிரியைத் தான் முன்பு சொல்லியபடி எழுதிக்கொள்ளச் செய்தார். ஓலையை எடுத்துக்கொண்டு கேசவன்நம்பூதிரி செறுசேரியை நாடி இரண்டாவது தடவையாகச் சென்றார்.

கேசவன்நம்பூதிரி: செறுசேரிக்கு எப்பவும் கிண்டல் தான். நம்பூதிரிப்பாடு கேட்டனுப்பிச்ச சுலோகமில்ல எழுதித் தந்தது. இதோ நான் ஓலையிலே எழுதிக்கிட்டு வந்திருக்கேன். இதை முழுக்க எழுதித் தாரும்.

செறுசேரி ஓலையை வாங்கிப் பார்த்து, "ஓ—கோ! இந்த சுலோகமா? இப்படீன்னு சொல்ல வேண்டாமா? 'ஆஸீத்' அப்படீன்னுல்ல முதல்ல கறுத்தேடம் சொன்னது?" என்று சொல்லிவிட்டு, ஓலையில் எழுதிக் கொடுத்திருந்ததில் இருந்த பிழைகளைத் திருத்தி மீதிப் பாதியையும் எழுதிக் கொடுத்தார். அதை எடுத்துக்கொண்டு கேசவன்நம்பூதிரி மாடியேறிச் சென்றார். சுலோகத்தைப் படிக்கும்படி நம்பூதிரிப்பாடு கேசவன்நம்பூதிரியிடம் சொன்னார்.

கேசவன்நம்பூதிரி: இது ஒரு பெரிய சுலோகம். நான் படிச்சா சரியா வராது. இந்துலேகா இங்கே இருக்கிறாளில்ல. நல்ல படிப்பாளியாக்கும். இதைக் கொஞ்சம் படிம்மா.

இந்துலேகா: எனக்கு நல்லாப் பழக்கமில்லே. இல்லாததெல்லாம் சொல்லாதீங்க. ஆனால் இந்த சுலோகம் எனக்கு ஞாபகம் இருக்கு. கவலைப்படாதீங்க. நான் சொல்றேன்—

"ஆஸ்தாம் பீயூஷலாபஸ்ஸு கரஜரா—
ம்ருத்யுஹாரீ ப்ரசித்த—
ஸ்தல்லாபோபாயசிந்த்தாபி ச கரளஜூஷோ
ஹேதுருல்லாகாதாயா:
நோசதாலோலத்ருஷ்டிப்ரதிபலபுஜகீ
துஷ்டகர்ம்மா முஹுஸ்தே
யாமேவாலம்ப்ய ஜீவே கதமதரஸுதா—
மாதுரீமப்யஜானன்."

நம்பூதிரிப்பாடு: ரொம்பப் பிரமாதமான சுலோகம், இல்லையா?

இந்துலேகா: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் போய்க் கீழே இரும்.

கேசவன்நம்பூதிரி, "நான் போயி வெத்திலைச் சுருள் கொண்டு வர்றேன்" என்று சொல்லிவிட்டுக் கீழே இறங்கிப் போனார்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு ஆட்டத்திலே நாட்டம் உண்டா?

இந்துலேகா: என்ன நாட்டம்?

நம்பூதிரிப்பாடு: ஆட்டத்திலே—கதகளி ஆட்டத்திலே.

இந்துலேகா: எனக்கு எந்த வகையிலும் இது வரைக்கும் பைத்தியம் பிடிச்சதில்லே.

நம்பூதிரிப்பாடு: எனக்கு நல்ல பைத்தியம்—பயங்கரப் பைத்தியம்.

இந்துலேகா: (சிரித்துக்கொண்டு) சரிதான், சந்தேகமில்லே.

நம்பூதிரிப்பாடு: என்ன, இந்துலேகா இந்த விவரத்தை முன்னமேயே கேள்விப்பட்டதுண்டோ?

இந்துலேகா: இல்லே. இப்போதான் தெரியுது.

நம்பூதிரிப்பாடு: நான் சொல்லித்தான் தெரியும், இல்லே?

இந்துலேகா: ஆமாம். நீங்க பேசற பேச்சை வச்சித் தீர்மானிச்சேன்.

நம்பூதிரிப்பாடு: நேத்து எங்க ஊர்லே ஆட்டம் நடந்தது. ராமன் நடத்துற நாடகம் ரொம்ப நல்லா இருக்கும். நீ ராமனைப் பத்திக் கேள்விப்பட்ட துண்டா? ராமன், அதுதான் அந்த ராமன். சூத்திரங்க அவனை ராமப் பணிக்கர்னு சொல்லுவாங்க. ரொம்பக் கெட்டிக்காரன். மேடை நடிப்பு அபாரம். உடம்பு அழகும் அப்படி. நீ இனிமே தினமும் ஆட்டம் பார்க்கலாம். எனக்கு நல்ல பைத்தியம். வாரத்திலே எல்லா நாளும் ஆட்டம் இருக்கும். நேத்து ஒரு ஸ்திரீ பார்ட் வேஷமும் பார்த் தேன். நீ அதையெல்லாம் இங்கே பார்த்திருக்க முடியாது. ராகவன், ராகவன்னு ஒரு இளவட்டம் ராக வனை உனக்கு தெரியுமா? அவ னோட முகத்தை அலங்கரிச்சால் இந்துலேகா முகம் மாதிரியே இருக்கும். அப்படியே—ஒரு வித்தி யாசமும் இருக்காது. இங்கே ஆட்டம் அப்பப்போ நடக்குமா?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: எத்தனை வருஷமாச்சி நீ கதகளி பார்த்து?

இந்துலேகா: நாலஞ்சி வருஷமிருக்கும்.

நம்பூதிரிப்பாடு: சிவ—சிவ! நாலஞ்சி வருஷமா? இவ்வளவு பணம் கொழிக்கிற இந்த வீட்டிலே கதகளி நடத்தி நாலஞ்சி வருஷமாச்சா? ஆச்சரியம் தான்! அதனோட தாத்பரியம் தெரி யாததனாலேதான் அப்படி. பஞ்சு வுக்கு அதைப் பத்தின ஞானம்

கொஞ்சம் இல்லாமலிருக்கும். அப்படியிருக்க நீ என்ன செய்ய முடியும்?

இந்துலேகா: அதேதான்; அப்படித்தான்.

நம்பூதிரிப்பாடு: உனக்கு இங்கிலீசு ரொம்ப நல்லாத் தெரியுமோ?

இந்துலேகா: கொஞ்சம் படிச்சிருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: துரைமார்களோடப் பேச முடியுமோ?

இந்துலேகா: படிச்சதை வச்சி யாரோடவும் பேச முடியும்.

நம்பூதிரிப்பாடு: உன்னைப் பத்தி நான் முன்னமேய நிறையக் கேள்விப்பட்டிருக்கேன். நேரிலே பார்க்கிறப்போ அதெல்லாம் விட அதிகம்தான்—என்னோட அதிருஷ்டம்தான்.

இந்துலேகா: என்ன அதிருஷ்டம்—தெரியலையே.

நம்பூதிரிப்பாடு: உன்னைப் பார்த்ததே அதிருஷ்டம் தான்.

இந்துலேகா: என்னைப் பார்த்தது ஒரு அதிருஷ்டம்கிறது ஏன்னு எனக்குப் புரியலையே.

நம்பூதிரிப்பாடு: இவ்வளவு சொல்லியும் புரியலையா?

இந்துலேகா: சொன்னதெல்லாம் புரிஞ்சது. சொல்லாதது எப்படிப் புரியும்? உங்க அதிருஷ்டம்னு சொன்னது புரிஞ்சது, என்ன அதிருஷ்டம் உங்களுக்கு வந்திருக்குன்னுதான் நான் கேட்டேன். அதுக்கு பதில் சொல்லலே—சொல்லாததனாலே அந்த விஷயம் புரியவும் இல்லே.

நம்பூதிரிப்பாடு: அதுதான் என்னோட அதிருஷ்டம்—என் அதிருஷ்டம்தான்.

இந்துலேகாவோட வாக்குச் சாதுர்யம் அபாரம். நான் தம்பட்டம் அடிச்சிக்கிட்டே இருக்கணும்னு நினைக்கிறே போலிருக்கு.

இந்துலேகா: இங்கே தம்பட்டம் எதுவும் இல்லே. நீங்க தம்பட்டம் அடிச்சிக் கேட்க ணும்னு எனக்கு எண்ணமும் இல்லே.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா ரொம்ப ஜாலக்காரி தான். இப்படியில்ல இருக்கணும் வாக்கு சாமர்த்தியம்! என்னைப் பத்தி உனக்கு ஏற்கெனவே தெரிஞ் சிருக்கும்.

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: கேள்விப்பட்டதில்லே?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: என்னைப் பத்தி எதுவுமே கேள்விப்படலையா?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா நான் வரப்போற தகவலும் தெரியாதா?

இந்துலேகா: வரப்போறீங்கன்னு இங்கே யாரோ நேத்தோ எப்பவோ சொல்லிக்கிட்டாங்க?

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா என்னைப் பத்தி இந்துலேகா யார்கிட்டவும் விசாரிச்சிக்கிடலே?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: அது ஏன்?

இந்துலேகா: ஒண்ணும் தோணலே, கேட்டுக் கலே—அவ்வளவுதான்.

நம்பூதிரிப்பாடு: நான் வந்த காரியம் என்னன்னு புரிஞ்சிருக்குமில்ல?

இந்துலேகா: இல்லே. புரியலையே.

நம்பூதிரிப்பாடு: என்ன, அதுவும் புரியலையா?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: நான் இந்துலேகாவைப் பார்க்கணும்னுதான் வந்தது.

இந்துலேகா: சரி. அப்படியாகவே இருக்கட்டும்.

நம்பூதிரிப்பாடு: அங்கே குடும்பப் பொறுப்பு சகலமும் என்னோடதுதான்.

என்று சொல்லிவிட்டு நேரம் பார்ப்பதற்காகத் தங்கக் கடிகாரத்தை மடியிலிருந்து எடுத்துத் திறந்து பார்த்தார். ஐந்து மணி என்று காட்டியது.

இந்துலேகா: ஓ, சந்தியாவந்தனத்துக்கு நேரமாயிருக்கும்.

நம்பூதிரிப்பாடு: ஊஹூம்—அதுக்கு இன்னும் நேரமாகலே. இந்த கடிகாரத்தைப் பார்க்கணுமா?

என்று சொல்லி கடியாரத்தையும் சங்கிலியையும் கழுத்திலிருந்து கழற்றிக் கொடுக்க முனைந்தபோது இந்துலேகா வாங்கி, "இது நேர்த்தியான கடியாரம்" என்று சொன்னாள்.

நம்பூதிரிப்பாடு: இது எனக்கு மேகதந்தன் துரை பரிசாகப் போன வருஷம் ஏலமலைக் குத்தகை எழுபத்தையாயிரம் ரூபாய்க்கு விட்டப்போ கொடுத்தது.

மேகதந்தன் துரை என்று சொன்னபோது இந்துலேகா பலமாக வெடித்துச் சிரித்தாள். அதைத் தொடர்ந்து கடிகாரத்தைத் திருப்பிக் கொடுத்தாள். இந்துலேகாவின் இந்தச் சிரிப்பையும் போக்கையும் கவனித்தபோது அவளுக்குத் தன்மீது காதல் உண்டாகிவிட்டது என்ற நம்பூதிரிப்பாடும், இந்த மேகதந்தன் துரையைப் பற்றி மாதவனுக்குக் கடிதம் எழுத வேண்டுமென்று இந்துலேகாவும் ஒரே சமயத்தில் தீர்மானித்துக் கொண்டார்கள்.

நம்பூதிரிப்பாடுக்கு மோகம் அதிவேகமாக வளர்ந்தது. எனவே பொறுமையிழந்த அப்பாவி சொன்னார்:

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவோடதான் எப்பவும் இருக்கணும்னு எனக்கு ஆசை.

இந்துலேகா: அது நிறைவேறாத ஆசைன்னு எனக்குத் தோணுது.

இதைச் சொல்லிக் கொண்டிருந்தபோது கேசவன் நம்பூதிரி வெள்ளித் தட்டில் வெற்றிலைச் சுருளும் பிறவும் எடுத்துக்கொண்டு மாடியேறி வந்தார்.

இந்துலேகா: நான் இனிமே குளிச்சி முடிச்சி கோயிலுக்குப் போகணும். கேசவன்நம்பூதிரி இங்கே இருங்க.

என்று சொல்லிவிட்டு வேகமாகக் கீழே இறங்கிப் போய்விட்டாள்.

போகும்போது இந்துலேகா கேசவன்நம்பூதிரியின் முகத்தை முறைத்துப் பார்த்தாள். தன் உடம்பின் மீது இரும்புக் கம்பி ஒன்றைப் பழுக்கக் காய்ச்சி சூடு போட்டது போல கேசவன்நம்பூதிரிக்கு அந்தப் பார்வை இருந்தது. கேசவன்நம்பூதிரி வெற்றிலைத் தட்டுடன் அங்கே இளிச் சவாயனாக நின்றிருந்தார். நம்பூதிரிப்பாடுக்கும் மொத் தத்தில் நல்ல சூழ்நிலையாக இல்லை—ஆனாலும் அங்கேயே இருந்து வெற்றிலை போட்டபடிச் சிறிது நேரம் இந்து லேகாவின் அறையிலுள்ள சாமான்களையும் பிறவற் றையும் நடந்தபடியே பார்த்துக் கொண்டிருந்தார். ஆங்கிலப் புத்தகங்கள் நிறைய இருந்ததைப் பார்த்தார்—பெண்களை ஆங்கிலம் படிக்க வைத்தால் பெரும் கோளாறு என்று முடிவு கட்டினார்.

கேசவன்நம்பூதிரி: (நம்பூதிரிப்பாடுடன்) இந்துலேகா அந்திப் பொழுதுகளிலே கோயி லுக்குத் தவறாமப் போயிருவா. அதுக்கான நேரத்தையும் மத்த தையும் தவற விடுறதில்லே—அதனாலேதான் இப்போ போயிட்டா.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா சீக்கிரமா இங்கே வந்திருவாளில்ல. வர்றவரைக்கும் நாம இங்கேயே இருப்போம்—அப்படித்தானே?

கேசவன்நம்பூதிரி: அது வேண்டாம்னு தோணுது—சாப்பாடு முடிச்சி ஒன்பது மணிக்கு இங்கே வந்து இந்துலேகாவோட பாட்டும் மத்ததும் கேட்போம். அது தானே நல்லது?

நம்பூதிரிப்பாடு: அப்படித்தான் செய்வோம்—அது தான் சரி.

என்று சொல்லிக்கொண்டு இருவரும் கீழே இறங்கிப் போனார்கள்.

நம்பூதிரிப்பாடு மாடியில் கேசவன்நம்பூதிரியுடன் சேர்ந்து இந்துலேகாவின் மாடியறையில் சாமான்களைப் பார்த்துக்கொண்டிருந்த போது கீழே இந்துலேகாவுக்கும் செறுசேரிக்குமிடைய ஓர் உரையாடல் இடம்பெற்றது. இந்துலேகா மேலிருந்து பார்த்தவாறு மாடியிலிருந்து இறங்கித் தெற்குப் பக்கத்து அறை வழியாக நடுக்கூடத்தைக் கடந்து சென்ற போது செறுசேரிநம்பூதிரி தென்புறத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். இந்துலேகாவைப் பார்த்தவுடன் நம்பூதிரி நாற்காலியிலிருந்து எழுந்து அவளுக்கு அருகில் சென்று புன்னகைத்துக் கொண்டு நின்றார். அவளுக்கு நம்பூதிரியைப் பார்த்ததும் மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனாலும் முதலில் எப்படிப் பேச்சைத் தொடங்குவது என்று எதுவும் தோன்றவில்லை. அப்போதைய நிலைமை அப்படித்தானே இருந்தது! ஆயினும் அதிபுத்திசாலியான செறுசேரிநம்பூதிரி இந்துலேகாவின் ஆற்றாமையைக் கணப்பொழுதில் தீர்த்தார்.

செறுசேரிநம்பூதிரி: இன்னிக்கு உன்னைப் பார்க்க வேண்டியிருக்கும்னு நான் நினைக்கவே இல்லே. எனக்கு இதிலேயெல்லாம் ஒரு பங்குமில்லே— என் மேலே குத்தமில்லே. என் மேலே சந்தேகப்படாதே.

இந்தப் பேச்சைக் கேட்டதும் இந்துலேகாவின் மனம் சமாதானமடைந்தது. தாராளமாகப் பேச ஆரம்பித்தாள்.

இந்துலேகா: ஏன் மாடிக்கு வரல்லே? நாமதான் ஏற்கெனவே அறிமுகமாகிப் புரிஞ்

சிக்கிட்டவங்கதானே? நீங்களும் வந்திருக்கீங்கன்னு கேள்விப்பட்டு நான் ரொம்ப சந்தோஷப் பட்டேன்.

செறுசேரிநம்பூதிரி: நம்பூதிரிப்பாடு மேலே வர்றப்போ என்னைக் கூப்பிடலே. நான் இப்போ அவங்க கூட்டத்திலே ஒருத்தனாத்தானே வந்திருக்கேன்; அப்படி இருக்கிறப்போ கூப் பிடாம வரவேண்டாம்னு நினைச் சேன். நாளைக் காலையிலே எப்படியும் வரணும்னு நினைச் சிருந்தேன். இப்பவே பார்க்க முடிஞ்சது என்னோட அதிருஷ்டம். மாதவனுக்கு நூற்றைம்பது ரூபாய் சம்பளத்திலே வேலை கிடைச் சிருக்குன்னு கேள்விப்பட்டேன். ரொம்ப சந்தோஷமா இருந்தது.

மாடியிலிருந்து இறங்கியபோதே இந்துலேகாவுக்கு ஏற்பட்டிருந்த சோகம் எல்லாமே தீர்ந்துவிட்டிருந்தது. மாதவனுடைய பெயர் காதில் விழுந்ததும் ஒரு புல்லரிப்பும் நாணமும் உண்டாயின. முகத்தைச் சிறிதே தாழ்த்திப் புன்னகை புரிவதை செறுசேரி பார்த்து மிகவும் மகிழ்ந்து உள்ளுக்குள் இந்துலேகாவுக்கு உரிய மரியாதையைத் தந்தார். தொடர்ந்து—

இந்துலேகா: ரெண்டு நாள்லே சென்னையி லேருந்து வர்றதாகக் கடுதாசு வந்திருக்கு. ஒருவேளை இந்தத் தடவை திரும்பிப் போறப்போ.....

அதற்குப் பிறகு எதுவும் பேசாமல் சற்றே வெட்கப் பட்டுக்கொண்டு நின்றாள்.

செறுசேரிநம்பூதிரி: திரும்பிப் போறப்போ நீயும் சேர்ந்து போகப் போறே— அப்படித்தானே?

இந்துலேகா: (புன்னகையுடன்) ஆமாம். உங்க கிட்ட பேசறப்போ மனசைப் புரிஞ்சிக் கிட்டவங்ககிட்ட பேசினா உண்டாகிற நிம்மதி ஏற் படுது. சில சமயங்களிலே இதுதான் பெரிய உபகாரம்.

செறுசேரிநம்பூதிரி: உங்க ரெண்டு பேரோட நானும் பட்டணத்துக்கு வர்றேன். நீயும் மாதவனும் கல்யாணம் பண்ணிக் கிட்டு ரொம்பக் காலம் எல்லா பாக்கியத்தோடவும் இருக் கணும்னு என்னோட ஆசையும் ஆசீர்வாதமும்.

இந்த வார்த்தைகளைச் சொன்னபோது நம்பூதிரியின் கண்களில் நீர் நிரம்பியது. பேரழகியான இந்துலேகாவுக்கு பேரழகனான மாதவன்தான் கணவனாக அமைய வேண்டு மென்று அவர்கள் இருவரையும் பார்க்கும்போது இயல் பான அறிவுள்ள எல்லோருக்கும் அபிப்பிராயமும் ஆர்வமும் உண்டாகும். இவர்கள் இருவருடைய உருவ அழகுக்கும் அப்பால் இவர்களுடைய படிப்பு, புத்திகூர்மை, நல்ல குணம், அன்னியோன்னியமான அனுராகம் ஆகிய வற்றை கிரகித்து மனதில் ஏற்றுக்கொண்டுவிட்ட அதி புத்திசாலியும் படிப்பாளியுமான செறுசேரிநம்பூ திரிக்கு இவர்களுடைய இணைப்பிலும் முன்னேற்றத்திலும் மிகுந்த மகிழ்ச்சியும், அதை வெளிப்படுத்தும் ஆனந்தக் கண்ணீரும் உண்டானதில் வியப்பு எதுவும் இல்லை அல்லவா!

நம்பூதிரி மேற்கூறியவாறு பேசியபோது இந்துலேகா வுக்கும் கண்ணீர் தானாகத் துளிர்த்து தளுதளுத்தாள்.

இந்துலேகா: உங்க ஆசீர்வாதத்தை நாங்க எப்பவும் பக்திபூர்வமா மதிச் சிருப்போம்.

செறுசேரிநம்பூதிரி: எந்தத் தேதியிலே வந்து சேர்ற துன்னு திட்டவட்டமா ஏதும் எழுதி யிருக்கா?

இந்துலேகா: இந்த வாரத்திலேன்னு எழுதியிருக்காங்க. எழுதி இன்னிக்கு ரெண்டு மூணு நாளாச்சி. இன்னும் மூணு நாலு நாள்லே வர்றதாயிருக்கும்.

செறுசேரிநம்பூதிரி: நான் இங்கேருந்து எப்போ கிளம்புவேன்னு தெரியலே—புறப்படுறதைப் பத்தி நம்பூதிரிப் பாடு எதுவும் சொல்லவே இல்ல. இங்கே இருக்கணும்னுதானே வந்தாரு.

என்று சொல்லிவிட்டுச் சிரித்தார். இந்துலேகாவும் சிரித்தாள்.

இந்துலேகா: என்ன அப்படி ஒரு சுலோகத்தை எழுதி அனுப்பிவச்சீங்க?

செறுசேரிநம்பூதிரியும் இந்துலேகாவும் உரக்கச் சிரித்தார்கள்.

இந்துலேகா: நீங்களும் இவங்களோட சேர்ந்து வந்தது என் அதிருஷ்டம்தான். நான் கோயிலுக்குப் போயிட்டு வர்றேன். காலையிலே கிளம்பிப் போகலேன்னா நிச்சயமா காலைச் சாப்பாட்டை முடிச்சதும் மாடிக்கு வந்து போகணும்.

செறுசேரிநம்பூதிரி: காலையிலே புறப்படறதாத் தோணலே.

இந்துலேகா சிரித்துக்கொண்டே குளியலறைக்குப் போனாள்.

செறுசேரிநம்பூதிரி மீண்டும் நாற்காலிக்குச் சென்று அமர்ந்தார். அப்போது மிதியடி ஓசை கேட்டது. இந்துலேகா சொன்ன வார்த்தைகளும், இடையே புறப்பட்டுப் போய் விட்டதும் நம்பூதிரிப்பாடுக்கு அப்போதைக்குக் கொஞ்சம் கூடத் திருப்தியில்லை என்ற போதிலும், இரவு ஒன்பது மணிக்கு மீண்டும் மாடிக்குப் போகலாம் மற்றும் பாட்டுக் கேட்கலாம் என்பதான தீர்மானங்கள் தற்போதைக்கு மகிழ்ச்சியைத் தந்தன. அதைத் தொடர்ந்து சிரித்தபடி நடுக் கூடத்திற்கு வந்து செறுசேரியைச் சந்தித்தார்.

நம்பூதிரிப்பாடு: என்ன செறுசேரி, இங்கேயே சோர்ந்துபோய் உட்கார்ந்திட்டீரு? ஏன் மாடிக்கு வரல்லே? இந்துலேகா ரொம்ப அழகுதான்—ரொம்ப ரொம்ப அழகுதான். இப்படி ஒரு பொண்ணை நான் பார்த்ததில்லே. சிவ—சிவ! அழகுன்னா அப்படி ஒரு அழகு! இப்படியும் உண்டுமா—அதிசயம்தான்!

செறுசேரிநம்பூதிரி: உங்களை மாதிரி ஒரு ஆம்பிளை யையும் இந்துலேகா இதுவரைக்கும் பார்த்திருக்க மாட்டா. இந்து லேகாவும் பிரமிச்சிப் போயி ருப்பா. நான் முன்னாலேயே எதிர் பார்த்ததுதான்.

நம்பூதிரிப்பாடு: என்னங்காணும் செறுசேரி, அன் னிக்கு ஒரு சுலோகம் சொன் னீரே—ரம்பையைப் பார்த்து ராவணன் பிரமிச்ச மாதிரி—அந்த சுலோகத்தை ஒரு தடவை சொல்லும்.

செறுவேரி சுலோகத்தைச் சொன்னார்:

“இயம் பாலா லீலாதரகமனலோலாளகரபரா
சலச்சேலாசோளா பிஹிதகுசசைலா விதுமுகீ—
லஸல்பலா மாலா நிபததளிஜாலா விஷமித—
ஸ்மரஜ்வாலா வ்ரீளாமபஹரதி நீலாப்ஜநயனா.”

நம்பூதிரிப்பாடு: அந்த சுலோகத்தை ஒரு ஓலையிலே எழுதி என்கிட்ட தாரும்.

கேசவன்நம்பூதிரி உடனே ஓலையும் எழுத்தாணியும் கொண்டு வந்தார். செறுசேரி சுலோகத்தை எழுதி நம்பூ திரிப்பாடிடம் கொடுத்தார். அந்த ஓலையைக் கையில் பிடித்தபடி நடுக்கூடத்தில் நாற்காலியில் உட்கார்ந்தார். அப்போது ஏதோ ஒரு வேலையாக இந்துலேகாவின் அம்மா (லட்சுமிக்குட்டியம்மா) நடுக்கூடத்தின் வடக்கு அறை

யிலிருந்து வெளியே போனதை நம்பூதிரிப்பாடு பார்த்தார். இந்துலேகாவின் தாயான லட்சுமிக்குட்டியம்மா நல்ல அழகான பெண்மணி என்பதை நான் சொல்ல வேண்டிய தில்லை அல்லவா? வயதும் முப்பத்தைந்துதான் ஆகியி ருந்தது. நம்பூதிரிப்பாடு அந்தப் பெண்மணியைக் கண்டதும் கேசவன்நம்பூதிரியிடம்—

"இப்போ கடந்து போன பொம்பிளே யாரு கறுத் தேடம்?"

கேசவன்நம்பூதிரிக்கு உள்ளுக்குள் ஒரு பெரிய பயம் உண்டாயிற்று. லட்சுமிக்குட்டியம்மா தனக்கு மிகவும் மரியாதைக்குரிய மனைவியாக வாழ்க்கை நடத்துபவள். இந்த நம்பூதிரிப்பாடின் சுபாவம் தனக்கு நன்றாகத் தெரிந்ததுதான். கேசவன்நம்பூதிரி மொத்தத்தில் மிகவும் திகைத்துப் போனார்.

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவோட அம்மா.

நம்பூதிரிப்பாடு: ஓ—கோ—! கறுத்தேடத்தோட வீட்டுக்காரம்மா, அப்படித்தானே?

கேசவன்நம்பூதிரி: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: நான் பார்த்துப் பேசணும், இங்கே கூப்பிடும்.

கேசவன்நம்பூதிரி: அதிலே ஒண்ணும் கஷ்டமில்லே. பாட்டு கேட்க வர்றப்போ இந்து லேகாவோட மாடியறையிலே பார்த்துப் பேசிக்கிடலாம்—அது தானே நல்லது?

செறுசேரிநம்பூதிரி: இல்லே, இப்போ பேசறதுதான் நல்லது. ராத்திரி பாட்டுக்கு மத்தி யிலே எப்படிப் பேச முடியும்?

நம்பூதிரிப்பாடின் கேள்வியையும் கேசவன்நம்பூ திரியின் திகைப்பையும் கண்டு செறுசேரிநம்பூதிரி மொத் தத்தில் மிகவும் ரசித்தார். 'அப்படி வரட்டும்; ஏமாந்த சோண கிரி கேசவன்நம்பூதிரிக்கு இப்பவாவது புத்தி வரட்டும்' என்ற செறுசேரிநம்பூதிரி எண்ணித்தான் மேற்குறிப்பிட்ட வாறு கூறினார். இப்படிப் பேசியது ஊர்சுற்றியான நம்பூதிரிப்பாடுக்கு மிகவும் பிடித்துப் போயிற்று.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி சொன்னது சரி. எனக்கு இப்பவே பார்த்துப் பேசணும். நாம எல்லாரும் கறுத்தேடத்தோட அறையிலே போய் இருப்போம். கறுத்தேடம் மொத்தத்திலே கொஞ் சம்கூட லௌகிகம் இல்லாத ஆளு. இதுக்கு முன்னாலேயே நம்மளை அறைக்குக் கூட்டிக்கிட்டு போயி ருக்கணுமில்ல, செறுசேரி!

செறுசேரிநம்பூதிரி: சந்தேகமென்ன, அப்படித்தானே செய்திருக்கணும்? போகட்டும், இப்போவாவது போகலாம் தானே—இல்லையா கறுத்தேடம்?

கேசவன்நம்பூதிரி: ஆகட்டும், போகலாம், போகலாம். அதிலென்ன சந்தேகம்?

என்று சொல்லிக் கொண்டே கேசவன்நம்பூதிரி மிகுந்த வருத்தத்துடன் எழுந்திருந்தார். அவருடன் சேர்ந்து நம்பூதிரிப்பாடும் எழுந்திருந்தார்.

நம்பூதிரிப்பாடு: என்ன, செறுசேரி வரலையா?

செறுசேரிநம்பூதிரி: நான் இங்கேயே இருக்கேன். இல்லே, தேவைப்பட்டா வரணும் னாலும் வர்றேன்.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா செறுசேரி இங் கேயே இருக்கட்டும். நானும் கறுத் தேடமும் போயிட்டு வர்றோம்.

செறுசேரிநம்பூதிரி: அப்படியே ஆகட்டும்.

நம்பூதிரிப்பாடும் கேசவன்நம்பூதிரியும் சேர்ந்து கேசவன்நம்பூதிரியின் அறையைச் சென்றடைந்தார்கள். லட்சுமிக்குட்டியம்மாவை அறையில் காணோம். இந்து லேகாவின் வேலைக்காரி அம்மு அறையிலிருந்தபடி வெற்றிலைச் சுருளை மடித்துக் கொண்டிருந்தாள். இந்த அம்மு என்பவளும் பார்ப்பதற்கு நல்ல லட்சணமான பெண் தான். ஏறத்தாழ இருபத்தைந்து வயதிருக்கும் சாதாரண வீட்டு வேலை செய்யும் வேலைக்காரிகள்போல் தெரியாது. காதில் வேலைப்பாடு இல்லாத சாதாரண தோடுகளும்,

கழுத்தில் வெள்ளை நூல்கயிற்றில் சிவப்புக் கல் வைத்த ஒரு பதக்கமும் அணிந்து, எப்போதும் வெளுத்த உடையும் உடுத்தி இருக்க வேண்டுமென்பது இந்துலேகாவின் கட்டளை. இந்துலேகாவுடன் உள்ள பழக்கத்தினால் இவளுக்கும் துப்புரவாக இருக்க வேண்டுமென்ற குணம் சிறப்பாக அமைந்திருந்தது என்று நான் சொல்ல வேண்டிய தில்லை அல்லவா? நம்பூதிரிப்பாடு உள்ளே நுழைந்ததும் அம்முவைத்தான் பார்த்தார். இந்துலேகாவின் அம்மாதான் அவளென்று முடிவுகட்டிக் கொண்டுவிட்டார்.

நம்பூதிரிப்பாடு: இவ்வளவு இளவட்டமா அமைஞ்சது கறுத்தேடத்தோட அதிருஷ்டம் தான். கறுத்தேடம் மகா பாக்கிய சாலிதான். இந்துலேகாவோட அம்மாதானே இது? இந்து லேகாவைவிட இளவட்டமாத் தெரியுது. கொடுத்து வச்சிருக் கணும்! ஒரு கன்னிப்பொண்ணு மாதிரியே தோணுது. அற்புதம்! எவ்வளவு வயசாச்சி? இப்படித் திரும்பி நில்லும்மா. ஏன் திரும்பிக் கிட்டு நிக்கறே? லட்சமீ! இப்படி பக்கத்திலே வாம்மா. மகளுக்கு இவ்வளவு வெட்கமில்லையே, கறுத்தேடத்தைப் பார்த்ததனாலே இவ்வளவு வெட்கமாக்கும்! இப்படி வா.

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவோட அம்மா இல்லே இவ—இந்துலேகாவோட வேலைக் காரி. இந்துலேகாவோட அம்மா வெளியே எங்கேயோ போயி ருக்கா.

நம்பூதிரிப்பாடு: நான் மலைச்சிப் போயிட்டேன். அப்படீன்னா கறுத்தேடம் போயிக் கூட்டிக்கிட்டு வாரும்.

கேசவன்நம்பூதிரி: நான் போய்க் கூட்டிக்கிட்டு வர்றேன்.

என்று சொல்லிவிட்டு கேசவன்நம்பூதிரி வெளியே போனார். பின்னாலேயே வேலைக்காரி அம்முவும் வெளியே செல்ல முயன்றபோது—

நம்பூதிரிப்பாடு: அப்படியே நில்லு. அங்கேயே நில்லு—ஒரு விவரம் கேட்கணும். இந்துலேகாவோட வேலைக்காரி தானே நீ? நீ ரொம்ப அழகு. நீ வேலைக்காரியா இருக்க வேண்டியவ இல்லே. நீ ரொம்ப ரொம்ப அழகா இருக்கே. போகாதே. நில்லு. நில்லு.

அம்மு: அடியேன் மாடிக்குப் போற நேரமாச்சி.

நம்பூதிரிப்பாடு: உனக்கு யாரோடேயாவது சம்பந்தம் இருக்கா?

அம்மு: இல்லே.

நம்பூதிரிப்பாடு: கஷ்டம்! இப்படி வீட்டு வேலையெல்லாம் செஞ்சி இந்த அற்புதமான உடம்பைக் கஷ்டப்படுத்திக் காலத்தை ஓட்டிக்கிட்டிருக்கே, இல்லே? இங்கே வா—என்ன அது கையிலே, வெத்திலைச் சுருளா?

அம்மு: வெத்திலை இல்லே, பாக்கை வெட்டி வச்சிருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா வெத்திலை போடுவாளா?

அம்மு: சில சமயத்திலே போடுவாங்க.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு யாராச்சும் நெருக்கமா இருக்காங்களா? ரகசியமா என்கிட்ட சொல்லு.

அம்மு: நெருக்கமாவா?

நம்பூதிரிப்பாடு: கள்ளத் தொடர்பு—கள்ளத் தொடர்பு.

அம்மு: கள்ளத் தொடர்பா?

நம்பூதிரிப்பாடு: மெள்ள—மெதுவாப் பேசு.
அம்மு: எனக்கு ஒண்ணும் தெரியாது.
நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவை நான் கூட்டிக்கிட்டுப் போறப்போ நீயும் கூட வரணும்.
அம்மு: வர்றேன்.

என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே அம்மு வெளியே போனாள்.

கேசவன்நம்பூதிரி மிகவும் கலங்கிப் போய் லட்சுமிக்குட்டியம்மாவைத் தேடிப் போனார். கோயிலுக்குப் போய்க் கும்பிட்டுவிட்டுத் திரும்பிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். ஓர் அசட்டுச் சிரிப்புடன் பக்கத்தில் சென்றார்.

கேசவன்நம்பூதிரி: பார்க்கணும்னு சொல்லிக்கிட்டு அறையிலே இருக்காரு. நீ பெரிசா எடுத்துக்கிடலேன்னா, வா சீக்கிரம் போகலாம்.
லட்சுமிக்குட்டியம்மா: அடக் கஷ்டமே! இப்போ என் பக்கமா திரும்பியிருக்காரா?
கேசவன்நம்பூதிரி: அதெல்லாமில்லே. இந்துலேகாவுக்கு அம்மாவாச்சே; நேரே பார்க்கணும்னு ஒரு எண்ணம்—அது இருக்கத்தானே செய்யும்? நம்பூதிரிப்பாடு பார்க்கணும்னு சொன்னதிலே என்ன தப்பு?
லட்சுமிக்குட்டியம்மா: ஒண்ணுமில்லே; அப்படியே நடக்கட்டும். முன்னாலே நீங்க நடங்க. நான் வர்றேன்.

என்று சொல்லி லட்சுமிக்குட்டியம்மா கேசவன்நம்பூதிரிக்குப் பின்னால் நடந்தாள். அறையைச் சென்றடைந்தபோது அம்மு சிரித்தபடி போய்க்கொண்டிருந்தாள். வாசல் படியில் லட்சுமிக்குட்டியம்மா நின்று கொண்டாள். கேசவன்நம்பூதிரி உள்ளே போனார்.

நம்பூதிரிப்பாடு: என்ன, வரல்லியா?
கேசவன்நம்பூதிரி: வந்தாச்சி; இங்கேதான் நிக்கறா.

நம்பூதிரிப்பாடு: இங்கே வரட்டுமே. தாராளமா உள்ளே வரலாமே. இந்துலேகாவைப் பார்த்தேன். இந்துலேகாவோட அம்மாவையும் பார்க்கணும்னு ஆசை. இங்கே வரலாமே. உள்ளே வரலாமே.

லட்சுமிக்குட்டியம்மா உள்ளே வந்து கதவுக்குப் பின்னால் உடம்பைப் பாதி மறைத்தபடி நின்றாள்.

நம்பூதிரிப்பாடு: என்ன கறுத்தேடம், இன்னும் விளக்கு வைக்கலையா? விளக்கு கொண்டுவரச் சொல்லுங்க.

விளக்கைக் கொண்டுவந்து வாசலுக்குப் பக்கத்தில் வைக்கச் சொன்னார்; வைத்தாள். நம்பூதிரிப்பாடு நேராகவும் பின்பக்கமாகவும் பக்கவாட்டிலும் பார்த்து, லட்சுமிக்குட்டியின் உடம்பு முழுவதையும் பார்த்துத் திகைத்தார்—விதிர்ப்புற்றுத் திகைத்தார். கேசவன்நம்பூதிரியின் குழப்பமும் எரிச்சலும் மிகவும் அதிகரித்தன.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் கொடுத்து வச்சவர்—ரொம்பக் கொடுத்து வச்சவர். இந்துலேகாவைவிட அழகுன்னு சொன்னாலும் தப்பில்லே. லட்சுமிக்குட்டின்னு பேரு, அப்படித்தானே?

லட்சுமிக்குட்டியம்மா: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: லட்சுமிதேவிதான்—லட்சுமிதேவி அப்படீன்னுதான் இனிமே நான் கூப்பிடுறதா நினைச்சிருக்கேன். என்ன, கறுத்தேடம் எதுவும் பேசலே?

கேசவன்நம்பூதிரி என்னவென்று பேச முடியும்! கேசவன்நம்பூதிரிக்கு மிகவும் இக்கட்டான நிலைமை என்றுதான் சொல்ல வேண்டும். இனி சனி தன் காரியத்தைத் தொடங்கிவிடும் என்ற கவலை அப்பாவியான இந்தக் கேசவன்நம்பூதிரிக்கு ஏற்பட்டது. லட்சுமிக்குட்டியம்மாவின் மன உறுதியையும் நேர்மையையும் கேசவன்நம்பூதிரி புரிந்து கொண்டிருப்பாரேயானால் இந்த சோகம் அவருக்கு

வந்திருக்காது. இந்த அப்பாவிக்கு அதெல்லாம் புரிய வில்லை. என்ன செய்வார்! கவலைப்படத் தொடங்கினார்.

நம்பூதிரிப்பாடு: சாட்சாத் லட்சுமிதேவியே தான்— என்ன கறுத்தேடம்? நீர் ரொம்பக் கொடுத்து வச்சவர்தான். இவ் வளவு பெரிய பணக்காரனும் செல்வாக்கும் ஆன எனக்கு இந்த மாதிரி இதுவரைக்கும் அமைஞ்ச தில்லையே. நீர் ரொம்பக் கொடுத்து வச்சவர்தான்.

கேசவன்நம்பூதிரி: சாயந்தரப் பூஜைக்குப் போக லாம்னு தோணுது.

நம்பூதிரிப்பாடு: இன்னும்நேரமாகலே. லட்சுமிக் குட்டி, அந்த விளக்கைக் கொஞ்சம் இப்படிக் காண்பிக்கணும். நான் கடியாரத்தை ஒரு தடவை பார்த்துக் கிடுறேன்.

கேசவன்நம்பூதிரி விளக்கை எடுத்து வந்து காண் பித்தார். நம்பூதிரிப்பாடுக்கு இது கொஞ்சமும் பிடிக்க வில்லை. லட்சுமிக்குட்டியம்மா விளக்கை எடுத்து வந்து காண்பிக்க வேண்டும் என்பதுதான் உள்ளக்கிடக்கை. ஆனாலும் எதுவும் பேசவில்லை. கடிகாரத்தைப் பார்த்து ஆறரை மணிதான் ஆகியிருக்கிறது என்று சொல்லிவிட்டு மீண்டும் பேசத் தொடங்கினார்.

நம்பூதிரிப்பாடு: லட்சுமிக்குட்டிக்கு வயசு என் னாச்சி?

லட்சுமிக்குட்டியம்மா: முப்பத்தஞ்சாவது வயசு நடக்குது.

நம்பூதிரிப்பாடு: கொஞ்ச வயசுதான். கறுத்தேடத் தோட அதிருஷ்டம். கறுத்தேடம் எப்படி இங்கே வந்து சேர்ந்தீரு?

கேசவன்நம்பூதிரிக்கு நெஞ்சு துடிக்க ஆரம்பித்தது. 'கடவுளே! என் பெண்டாட்டியெ இந்தப் போக்கத்தவன் தட்டிப் பறிச்சுக்குவானோ? இந்த உபத்திரவத்தை நானாத் தான் உண்டாக்கிக்கிட்டேன். இந்துலேகா இந்த ஆளுக்குக் கிடைக்கலேன்னா - என் பெண்டாட்டியெக் கொண்டு

போயிடுவானோ? ஒரு வேளை நடந்தாலும் நடக்கும்னு தான் தோணுது' என்ற கவலையும் பிறவும் கேசவன் நம்பூதிரியைக் குழப்பத்தில் ஆழ்த்தத் தொடங்கின.

நம்பூதிரிப்பாடு: முன்னாலே லட்சுமிக்குட்டிக்கு கிளிமானூர் ராஜாவோட சம்பந்தம் இருந்திச்சில்ல?

லட்சுமிக்குட்டியம்மா: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: பின்னாலேதான் கறுத்தேடத்துக்கு சுக்கிரதசை அடிச்சதாக்கும்? என்ன, கறுத்தேடம் எதுவும் பேசலே?

கேசவன்நம்பூதிரி: பூஜை பண்ற நேரம் வந்திருச்சில்ல.

நம்பூதிரிப்பாடு: அதெல்லாமில்லே. ஏழு மணிக்குக் குளிச்சாப் போதும். என் வெள்ளிப்பெட்டியை இங்கே கொண்டு வரச் சொல்லும் கோவிந்தன்கிட்ட.

கோவிந்தன் வெள்ளிப்பெட்டியைக் கொண்டு வந்து நம்பூதிரிப்பாடுக்கு எதிரில் வைத்தான்.

நம்பூதிரிப்பாடு: லட்சுமிக்குட்டி இந்த வெள்ளிப் பெட்டியை ஒரு தடவை எடுத்துப் பார்க்கணும்.

லட்சுமிக்குட்டியம்மா வெள்ளிப்பெட்டியை எடுக்க வந்தபோது அவளது உடம்பை வெளிச்சத்தில் நம்பூதிரிப் பாடு நன்றாகவே பார்த்தார்.

நம்பூதிரிப்பாடு: அற்புதம்—அற்புதம்! அதிசயம்—அதிசயம்தான்! ஆச்சரியம்தான்! கறுத்தேடத்தோட அதிருஷ்டம் தான்—அபார அழகி! என்ன, கறுத்தேடம் மலைச்சிப் போய் இருந்திருப்பீரே, அப்படித்தானே? அதிலே சந்தேகமா? யாருதான் மலைக்க மாட்டாங்க? சாட்சாத் லட்சுமிதேவிதான். அந்த வெள்ளி வெத்திலைப் பெட்டி நல்லா இருக்கில்ல?

லட்சுமிக்குட்டியம்மா: நல்ல முதல் தரமானது.

நம்பூதிரிப்பாடு: வேணுமின்னா எடுத்துக்கிடலாம்.

லட்சுமிக்குட்டியம்மா: இது கிடைக்கும்னு எதிர்பார்க்கவே இல்லே.

நம்பூதிரிப்பாடு: சரி—சரி. பேச்சு சாமர்த்தியம் பிரமாதம்—பிரமாதமா சொன்ன வார்த்தை. இப்படித்தான் இருக்கணும் பேச்சு சாமர்த்தியம். கறுத்தேடத்தோட அதிருஷ்டம். இந்துலேகாவுக்கு அழகு இருக்குங்கிறதிலே ஆச்சரியமில்லே. ஆனால் பேச்சு சாமர்த்தியம் இவ்வளவு இல்லே. அது நிச்சயம். இந்துலேகாவுக்கு வயசு என்னாச்சி?

லட்சுமிக்குட்டியம்மா: பதினெட்டாவது வயசு நடந்துக்கிட்டிருக்கு.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா பதினேழாவது வயசிலே பிரசவிச்சிருக்கணும். அப்படித்தானே?

லட்சுமிக்குட்டியம்மா: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: அதுக்குப் பிறகு குழந்தைங்க எதுவும் உண்டாகலே போலிருக்கு.

லட்சுமிக்குட்டியம்மா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: முன்னைப்போல மனசிலே சந்தோஷம் இருக்க வழியில்லே.

லட்சுமிக்குட்டியம்மா: மனசிலே வருத்தப்படுறதுக்கு ஒண்ணுமில்லே.

நம்பூதிரிப்பாடு: ராஜா நல்ல மாதிரியான ஆளு தானே, இல்லே?

லட்சுமிக்குட்டியம்மா: நல்ல மாதிரியான ஆளு.

நம்பூதிரிப்பாடு: என்னவோ—கஷ்டம்! ஒவ்வொரு பொண்ணுக்கும் பொருத்தமான புருஷனும், ஆணுக்குப் பொருத்தமான பெண்டாட்டியும் அமையறது துர்லபம். ஒருத்தொருக்கொருத்தர்

பொருத்தமா அமையணும்—அதுதான் பெரிசு. அப்படிப் பொருந்தாம அமைஞ்சிட்டா அது மகா சங்கடம். என்ன, கறுத்தேடம் ஒண்ணும் பேசலே?

கேசவன்நம்பூதிரி: ஏழு மணி ஆயிரிச்சின்னு தோணுது.

நம்பூதிரிப்பாடு: ஆகலே. எத்தனை வருஷமாச்சி கறுத்தேடம் சம்பந்தம் தொடங்கி?

கேசவன்நம்பூதிரி: ஆறு வருஷமாச்சி.

நம்பூதிரிப்பாடு: இருந்தும் குழந்தைங்க உண்டாகலே, அப்படித்தானே?

கேசவன்நம்பூதிரி: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடத்தோட அதிருஷ்டத்தை நினைச்சி எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு. அன்னிக்கு செறுசேரி ஒரு சுலோகம் சொன்னாரு. அதிலே ஒருத்தன் மற்றொருத்தனோட பெண்டாட்டியைப் பார்த்துப் பொறாமைப்பட்ட மாதிரி சொல்லியிருக்கும். சுலோகம் எனக்கு ஞாபகத்திலே இல்லே. செறுசேரியை இங்கே கூப்பிடும்.

கேசவன்நம்பூதிரி செறுசேரியைக் கூப்பிடப் போனார். செறுசேரி சாயந்திரப் பூஜைக்காகப் புறப்பட்டு நம்பூதிரிப்பாடுக்காகக் காத்திருந்தார். கேசவன்நம்பூதிரி வந்து செறுசேரியைக் கூப்பிட்டார்.

செறுசேரிநம்பூதிரி: என்னய்யா இது விவகாரம்—நேரம் ஏழு மணி ஆயிரிச்சில்ல.

கேசவன்நம்பூதிரி: என்னத்தைச் சொல்ல செறுசேரீ! என் முட்டாத்தனத்தை என்னன்னு சொல்ல! அதைவிட்டு நம்பூதிரிப்பாடு இந்த ஜன்மத்திலே வெளியே வர்றதாத் தெரியலே. நான் என்

ணத்தைச் செய்ய! என்னோட கிகச்சாரம்னுதான் சொல்லணும்.

செறுசேரிநம்பூதிரி: இப்போ என்னை எதுக்காகக் கூப் பிடுறாரு?

கேசவன்நம்பூதிரி: என்னமோ ஒரு சுலோகம் சொல்ல ணுமாம்—புத்தி மோசம்.

செறுசேரிநம்பூதிரி: கொடுமை! இப்ப என்ன சுலோகம் வேண்டிக்கிடக்கு? சரி, நான் வர்றேன்.

என்று சொல்லி செறுசேரிநம்பூதிரி கேசவன் நம்பூதிரியுடன் அறைக்குப் போனார்.

நம்பூதிரிப்பாடு: அன்னிக்கு ஒரு நாள் செறுசேரி ஒரு சுலோகம் சொன்னீரே, ஒருத்தன் இன்னொருத்தன் பெண் டாட்டியைப் பார்த்து வருத்தப்படுற மாதிரி—அதை ஒரு தடவை சொல்லும்.

செறுசேரிநம்பூதிரி: ஒருத்தன் அடுத்தவன் பெண்டாட் டியைப் பார்த்து வருத்தப்பட்டதா? எந்த சுலோகம்? எனக்கு ஞாபகம் இல்லையே.

நம்பூதிரிப்பாடு: சீ! புளுகாதீரும். நான் சொல்றேன். ஒரு பொண்ணோட முகத்தைப் பார்த்துவிட்டு சந்திரன் உதிச்சி வந்தப்போ சந்திரனுக்கு வெட்க மில்லேன்னும், அந்தப் பொண் ணோட புருஷனுக்கு எதிரிலே நிற்கிற ஒரு ஆளுக்கு வெட்கமில் லேன்னும் வருமே. அதைச் சொல்லும்.

செறுசேரிநம்பூதிரி: (சிரித்துக்கொண்டே சுலோகத் தைச் சொல்கிறார்)

"கிம் ப்ரூவஸ்தவ பூர்ணசந்த்ரமஹதீம்
நிர்லஜ்ஜதாமீத்ரசீம்
யத்வஸ்யாமுகமண்டலே ஸதி பவா—

நப்யஜ்ஜிஹூதே புர:
ஆவிஸ்ம்ருத்ய கிமேததுக்தமதுநா
யத்தாத்ருசீம் சுந்தரீம்
புங்ஜானஸ்ய புரோ வயஞ்ச புருஷா
இத்யாஸ்மஹே நிஸ்த்ரபா:"

நம்பூதிரிப்பாடு: சரி, இந்த சுலோகம்தான். லட்சுமிக் குட்டிக்கு சமஸ்கிருதம் தெரியுமோ?

லட்சுமிக்குட்டியம்மா: ரெண்டு மூணு காவியங்க சின்ன வயசிலே வாசிச்சிருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி பெரிய வித்துவான்— பெரிய ரசிகர். கறுத்தேடத்துக்கு சமஸ்கிருத வாசனையே இல்லே. அது இப்போதான் புரியுது. ஒரு சுலோகம்கூடச் சொல்ல வராது. ஆனாலும் ரொம்ப அதிருஷ்ட சாலி.

கேசவன்நம்பூதிரி: எனக்கு சமஸ்கிருதம் தெரியாது தான். சாயந்தரப் பூஜைக்கு நேர மாச்சி; ரொம்ப நேரமாச்சி.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா இனி புறப்படலாம். ஒன்பது மணிக்கு மகளோட பாட்டுக் கேட்க இங்கே வருவேன். அப்போ லட்சமிக்குட்டியையும் எதிர்பார்க்கலாமில்ல?

என்று சொல்லி மீண்டும் லட்சுமிக்குட்டியம்மாவின் முகத்தை ஏக்கத்துடன் பார்த்துவிட்டு நம்பூதிரிப்பாடு வெளியே சென்றார். பின் தொடர்ந்து நம்பூதிரிகளும் சென்றார்கள். குளத்தை நோக்கிப் புறப்பட்டவர்கள், நடுக்கூடத்திலிருந்து முற்றத்தை அடைந்தபோது பஞ்சுமேனோனைப் பார்த்தார்கள்.

நம்பூதிரிப்பாடு: பஞ்சு ரொம்பக் கொடுத்து வச்சவர் தான். இந்துலேகாவையும் பஞ்சு வோட மகள் லட்சுமிக்குட்டியையும் பார்த்தேன். தங்களுக்குள்ளே

அழகு நீயா நானான்னு போட்டி போடறாப்பிலே அழகைப் பார்த்தேன். கறுத்தேடத்தோட அதிருஷ்டம், ரெண்டு பேருமே ரொம்ப அழகு.

பஞ்சுமேனோனுக்கு இந்த வார்த்தைகள் அறவே பிடிக்கவில்லை. கொஞ்சம் கோபம்கூட ஏற்பட்டதுபோல் தெரிந்தது. ஆனாலும் அதையெல்லாம் உள்ளுக்குள் அடக்கிக் கொண்டார்.

பஞ்சுமேனோர்ன்: இப்போ சாயந்தரப் பூஜைக்காகப் போய்க்கிட்டு இருக்கீங்களாக்கும்.

நம்பூதிரிப்பாடு: ஆமாம்; பூஜை முடிச்சி சாப்பிட்டு முடிச்சி சீக்கிரமா வந்திடறோம்.

நம்பூதிரிப்பாடும் நம்பூதிரிகளும் சேர்ந்து வாசலை விட்டு இறங்கியபோது பஞ்சுமேனோன் கேசவன்நம்பூதிரியைக் கையைப் பிடித்து பின்னுக்கு இழுத்தார். கேசவன் நம்பூதிரி திரும்பிச் சென்றார். பஞ்சுமேனோனும் கேசவன் நம்பூதிரியும் நடுக்கூடத்தை அடைந்தார்கள்.

பஞ்சுமேனோன்: என்ன, இந்துலேகாவுக்கு பிடிச்சிப் போச்சா?

கேசவன்நம்பூதிரி: பிடிச்சிருக்கும். பிடிக்காம இருக்காது.

பஞ்சுமேனோன்: அதைப் பத்திப் பின்னாலே பேசிக்கிடலாம்—இப்போ பிடிச்சிருக்கா இல்லையா?

கேசவன்நம்பூதிரி: அதை இப்போ திட்டவட்டமா சொல்றதுக்கில்லே. பிடிச்சிப் போகும்; அதிலே சந்தேகமில்லே.

பஞ்சுமேனோன்: அவரோட வார்த்தையிலே எனக்கு நம்பிக்கை இல்லே. வந்து இறங்கினப்போ எனக்கு எவ்வளவோ மலைப்பா இருந்திச்சி. நம்பூதிரிப்பாடு மொத்தத்திலே ஒரு சுத்த உதவாக்கரைன்னு இப்போ தோணுது எனக்கு.

கேசவன்நம்பூதிரி: பெரிய பணக்காரரில்ல; அதைப் பார்க்கணுமில்ல?

பஞ்சுமேனோன்: இந்துலேகா அதையெல்லாம் பார்க்கிற பொண்ணில்லே. நம்மோட இந்த ஆசையெல்லாம் வெட்டித் தனம்னு தோணுது. நம்பூதிரிப்பாடு எதையும் குறிப்பிட்டுச் சொல்றாப்பில இல்லே. இந்துலேகாவோட, லட்சுமிக்குட்டியோட அழகைப் பத்தி இப்படி என்கிட்ட எதுக்காக வர்ணிக்கணும்—பிடி கொடுக்காதபடி அவரு பேசிக்கிட்டிருக்காரு.

கேசவன்நம்பூதிரி: பெரிய இடமில்ல; அவரு என்ன வேணும்னாலும் பேசலாமில்ல?

பஞ்சுமேனோன்: எதையும் பேசலாம்னு இருந்தா, எதையும் கேட்டுக்கிடுறதுக்கும் தயாரா இருக்கணும். எனக்கு இதெல்லாம் பிடிச்சிக்கிடல்லே. இந்துலேகா என்ன சொன்னா?

கேசவன்நம்பூதிரி: குறிப்பா ஒண்ணும் சொல்லலே.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா மாடிக்குப் போய் நம்பூதிரிப்பாடு என்ன செஞ்சாரு?

கேசவன்நம்பூதிரி: குறிப்பா ஒண்ணும் செய்யலே. எனக்கு பூஜை பண்ற நேரமாச்சி. நான் சாப்பிட்டு முடிச்சிட்டு வந்து எல்லாம் சொல்றேன்.

பஞ்சுமேனோன்: ஒண்ணும் சொல்ல வேண்டாம். இந்தக் காரியம் இந்த ஜன்மத்திலே நடக்கப் போறதில்லே. பின்னே எதுக்காக இந்த ஆர்ப்பாட்டமெல்லாம் காண்பிச்சிக்கிட்டிருக்காரு?

என்று சொல்லிவிட்டு பஞ்சுமேனோன் வீட்டுக்குள்ளும், கேசவன்நம்பூதிரி குளியலறைக்கும் போனார்கள்.

பஞ்சுமேனோனும் கேசவன்நம்பூதிரியும் தங்களுக்குள் மேற்கூறியவாறு உரையாடிக் கொண்டிருந்தபோது, நம்பூதிரிப்பாடுக்கும் செறுசேரிக்குமிடையே குளியலறைக்குப் போகும் வழியில் சின்னதாக ஓர் உரையாடல் இடம் பெற்றது.

நம்பூதிரிப்பாடு: செறுசேரீ எனக்கு இந்துலேகாவை விட அதிகம் பிடிச்சது அவ அம்மாவைத்தான். பேச்சுப் பழக்கம் பிரமாதம். பார்த்திருப்பீருல்ல?—செறுசேரி பார்த்ததில்லே?

செறுசேரிநம்பூதிரி: நான் பார்த்தேன். நல்ல அழகு. வயசும் நல்ல பொருத்தம்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு நான் பொருத்தம் இல்லேங்கறீரா?

செறுசேரிநம்பூதிரி: சே, அதை நான் சொல்ல மாட்டேன். அது ஒரு பக்கம் இருக்கட்டும்—அதெல்லாம் உங்க பிடிக்குள்ளே. அப்படியிருக்க இந்துலேகா பொருத்தமா இல்லையான்னு பேசிக்கிட்டிருக்கத் தேவையில்லே.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா விஷயம் முடிவாயிரிச்சா? பஞ்சு ஏதாச்சும் உங்ககிட்ட சொன்னாரா?

செறுசேரிநம்பூதிரி: பஞ்சு என்ன சொல்வாரு? அது முடிஞ்சி போன விஷயம்தானே? அந்தப்படிதானே நடக்கும்!

நம்பூதிரிப்பாடு: அப்படித்தான் நடக்கும்னாலும் ஒரு சந்தேகம்—சந்தேகம் இல்லேன்னுதான் சொல்லணும்.

செறுசேரிநம்பூதிரி: சந்தேகத்துக்கு என்ன காரணம்?

நம்பூதிரிப்பாடு: எனக்கென்னவோ ஒரு பிரமை. அவ்வளவுதான், சந்தேகம்னு இல்லே.

செறுசேரிநம்பூதிரி: அது சரி—எல்லாம் உங்க பிரமை தான். சந்தேகப்படவே தேவை யில்லாத விஷயத்திலே ஒரு பிரமை. அவ்வளவுதான் சொல்ல லாம்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவோட விஷயம் அப்படி இருக்கட்டும். லட்சுமிக் குட்டியம்மாவோட நிலைமையை நினைச்சிப்பாரும் — கறுத்தேடத் தோட அதிருஷ்டத்தைப் பாரும்.

செறுசேரிநம்பூதிரி: அதைத்தான் நானும் சொல்ல நினைச்சேன். கறுத்தேடத்துக்குக் கிடைச்ச அதிருஷ்டம் ரொம்பத் தான்.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் முறையா சொந்தத் திலே கல்யாணம் செஞ்சிருக்காரா?

செறுசேரிநம்பூதிரி: இல்லே.

நம்பூதிரிப்பாடு: இந்த அசடுக்கு அப்படி ஒரு கல்யாணம் வேண்டாமா?

செறுசேரிநம்பூதிரி: அந்த அசடு அப்படி ஒண்ணு பண்ணிக்க மாட்டார்னு தோணுது.

நம்பூதிரிப்பாடு: லட்சுமிக்குட்டியோட பக்கத் திலேயே கெடக்கணும்னு எண்ண மிருக்கும்.

செறுசேரிநம்பூதிரி: அப்படித்தான் இருக்கும்.

நம்பூதிரிப்பாடு: ஆனால் லட்சுமிக்குட்டிக்கு இவரு மேலே கொஞ்சம்கூட ஒட்டுதல் இல்லே. அதை நான் நிமிஷத்திலே கண்டுபிடிச்சிட்டேன்.

செறுசேரிநம்பூதிரி: உங்க புத்திசாலித்தனத்தைப் பத்தி விவரம் தெரிஞ்ச என்கிட்ட இவ் வளவு சொல்லணுமா? நான் அதை அப்பவே புரிஞ்சிக்கிட்டேன். உங்க அழகு மேனியைக் கண்

முன்னாலே வச்சிக்கிட்ட ஒரு பொண்ணுக்கு தனக்கு எவ்வளவு மேன்மையான புருஷன் வாய்ச்சிருந்தாலும் அவன்கிட்ட கொஞ்சம்கூடக் காதல் உணர்வு ஏற்படாதுன்னு எனக்கு நல்லாவே தெரியும்.

நம்பூதிரிப்பாடு: லட்சுமிக்குட்டி என்னைப் பார்த்து அப்படியே அசந்திட்டா.

செறுசேரிநம்பூதிரி: அதிலே எனக்கு சந்தேகமில்லே.

நம்பூதிரிப்பாடு: ஆனால் அதுக்கு என்ன செய்யறது?

செறுசேரிநம்பூதிரி: எதுக்கு?

நம்பூதிரிப்பாடு: அந்த பிரமையை சரிபண்றதுக்கு.

செறுசேரிநம்பூதிரி: அதுக்குப் பல வழிகள் இருக்கே! இனிமே லட்சுமிக்குட்டியைப் பார்க்கிறதில்லேன்னு முடிவெடுக்கணும்.

நம்பூதிரிப்பாடு: என்ன கதை பேசறீரு, செறுசேரி?

செறுசேரிநம்பூதிரி: இங்கே வந்தது இந்துலேகாவைப் பார்க்கத்தானே?

நம்பூதிரிப்பாடு: அப்படித்தான். வந்ததுக்குப் பிறகுதான் லட்சுமிக்குட்டி மேலே நோக்கம்.

செறுசேரிநம்பூதிரி: அப்படீன்னா அம்மாவையும் மகளையும் ஒண்ணாத் தொடுப்பு வச்சிக்க முடியுமா? அது சரிப்படுமா?

நம்பூதிரிப்பாடு: தொடுப்பு இந்துலேகாவோடதான். ஆனா—

இப்படிச் சொல்லிக்கொண்டிருந்தபோது கேசவன் நம்பூதிரி குளியலறையில் நம்பூதிரிப்பாடுக்கு அருகில் வந்தார். அதற்குப் பிறகு இந்த விஷயம் பற்றி நம்பூதிரிப்பாடு எதுவும் பேசவில்லை. பூஜை முடிந்து கோயில் வாசலில் நிலவொளியில் நின்றார். நம்பூதிரிப்பாடுக்கு லட்சமிக்குட்டியம்மாவின் நினைவு அகன்றது. மனதில்

ஆழப் பதிந்திருந்த நினைவுதான் மேலோங்கியது. இந்து லேகாவைப் போன்ற ஒரு பெண்ணை நம்பூதிரிப்பாடு பார்த்ததில்லை. இதற்கு முன்னதாகத் தான் சந்தித்த ஒவ்வொரு பெண்ணைக் குறித்தும் நினைத்து மோக வசப்பட்ட போதிலும், தற்போது நிலவொளியில் மன ஒய்வுடன் நிற்கும்போது காமுகனான நம்பூதிரிப்பாடுக்கு இளமை பூத்துக் குலுங்கும் இந்துலேகாவின் நினைவுதான் நிலைத்தது. இந்துலேகாவை நினைத்து நினைத்து கோவிந் தனை அழைத்தார். ரம்பையைக் கண்டு மோகித்த விவரம் அடங்கிய சுலோகம் எழுதியிருந்த ஓலையை கோவிந்தனின் கையில் கொடுத்து—

நம்பூதிரிப்பாடு: இந்த ஓலையை நான் கொடுத் தேன்னு சொல்லி இந்துலேகா வோட மாடிக்குப் போய் இந்து லேகாகிட்ட கையிலே கொடுத் திட்டு வா.

கோவிந்தன் உடனே அதை எடுத்துக்கொண்டு இந்து லேகா இருந்த மாடிக்குச் சென்றான். அப்போது இந்துலேகா சாப்பிட்டு முடித்து மாடியேறி வந்தாள்.

கோவிந்தன்: ஒரு கடுதாசு ஓலை கொடுத்தனுப் பிச்சாங்க எஜமான். இங்கே கொடுக்கச் சொல்லி உத்தரவு.

இந்துலேகா: (விவரம் புரிந்து கொண்டாள் என்ற போதிலும் மிகுந்த வெறுப் புடன்) எந்த எஜமான்? என்ன கடுதாசி?

இந்துலேகாவின் முகத்தில் அப்போது உண்டான கோபத்தைக் கண்டிருந்தால் அந்த நிலையிலும் அந்த முகம் கவர்ச்சியானதுதான் என்று எல்லோருமே சொல்லி யிருப்பார்கள்.

கோவிந்தன்: மூர்க்கில்லாத்த மனய்க்கல் எஜமா னோட கடுதாசு.

இந்துலேகா: எனக்கு எழுதி அனுப்ப அவருக்குத் தேவையில்லே. நான் வாங்கிக்க மாட்டேன்னு போய்ச் சொல்லு.

என்று சொல்லிவிட்டு மறுகணமே தன்னுடைய அறைக்குள் சென்றுவிட்டாள்.

கோவிந்தன் அசடுதட்ட ஓலையை மடியில் மறைத்து மூடிக்கொண்டு நம்பூதிரிப்பாடின் அருகில் சென்றான். அப்போது அவர் பல ஆட்களுடன் சேர்ந்து கோயில் வாசலில் நின்றிருந்தார். கோவிந்தனைப் பார்த்ததும் அப்படி நின்ற இடத்திலிருந்தபடியே கோவிந்தனுடன் உரத்த குரலில் பேசத் தொடங்கினார்:

"கோவிந்தா, அந்தக் கடுதாசியை இந்துலேகாகிட்டக் கொடுத்தாச்சா?"

கோவிந்தன் மிகவும் மலைத்துப்போய் என்ன பதில் சொல்வது என்று சிறிது தயங்கினான். கடைசியில் கோவிந்தன் "கொடுத்திட்டேன்" என்று சொல்லிவிட்டு உடனே அங்கிருந்து போய்விட்டான். அதற்குப் பிறகும் அங்கேயே நின்றிருந்தால் வேறு ஏதேனும் கேள்விகள் எழும் என்று எண்ணி கோவிந்தன் ஓடி மறைந்தான். நம்பூதிரிப்பாடு ஒன்பது மணி ஆகிவிட்டது என்று நினைத்துக் கொண்டு குளியலறையில் எண்ணெய் தேய்த்துக்கொள்ளப் போனபோது கோவிந்தனும் கூடவே போய் ஓலையை மடியிலிருந்து எடுத்து ரகசியமாகச் சொன்னான்.

கோவிந்தன்: அடியேன் அப்போ கடுதாசியைக் கொடுத்திட்டதாச் சொன்னது பொய்தான். ஓலை இந்தாருக்கு. அந்தக் குந்துலேகா இதை வாங்கிக் கிடலே. எஜமான் குந்துலேகாவுக்கு எதுவும் எழுதத் தேவை இல்லேன்னும், எந்தக் கடுதாசியையும் வாங்கிக்க மாட்டேன்னும் சொல்லிட்டாங்க. அப்போ பார்த்தப்போ மத்த ஆளுங்களும் இருந்ததனாலே அடியேன் கொடுத்திட்டதாப் பொய் சொல்லிட்டேன்.

நம்பூதிரிப்பாடு: அசடு! குந்துலேகா இல்லே—இந்துலேகான்னு பேரு. அப்போ நீ ஓலை கொடுத்திட்டதாப் பொய்

சொன்னது நல்லதுதான். அப்படி சாமர்த்தியமாப் பேசணும்—அதனாலேதான் கோவிந்தன்னா எனக்கு இஷ்டம்.

கோவிந்தன்: அந்த குந்துலேகா....

நம்பூதிரிப்பாடு: முட்டாள்—மறுபடியும் குந்து லேகான்னு சொல்லாதே. 'இந்து லேகா' — இந்துலேகா 'அப்ப மன்னு சொல்லு.

கோவிந்தன்: எஜமான்—அடியேன் தப்பு. அந்த இந்திரலேகா...

நம்பூதிரிப்பாடு: உதவாக்கரை! மூதேவி! இந்திர லேகா இல்லே, 'இந்துலேகா'ன்னு சொல்லு.

கோவிந்தன்: எஜமான்—அந்த இந்துலேகா ரொம்பக் குறும்புக்காரின்னு அடி யேனுக்குத் தோணுது.

நம்பூதிரிப்பாடு: போகட்டும். நீ இந்துலேகாவோட அம்மாவைப் பார்த்தியா? அதிசய மான முகமில்லே? ரொம்ப அழகு. அவளுக்கு என்னை ரொம்பப் பிடிச்சிருக்கு. கறுத்தேடத்தோட பெண்டாட்டி.

கோவிந்தன்: அப்போ இந்துலேகாவுக்கு எஜ மானைப் பிடிக்கலையா?

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா இங்கிலீசும் மத்ததும் படிச்சி ரொம்பவும் ஒரு மாதிரியா இருக்கா. இந்துலேகாவோட அம்மா அப்படியெல்லாம் இல்லே. ரொம்ப பேச்சு சாமர்த்தியம். நீ அந்த வெள்ளி வெத்திலைப் பெட்டியை இங்கே எடுத்துக்கிட்டு வந்திட்டேயில்ல?

கோவிந்தன்: அடியேன் அப்பவே இங்கே எடுத் துக்கிட்டு வந்து மடத்திலே வச் சிட்டேன்.

நம்பூதிப்பாடு: சபாஷ்! புத்திசாலிடா! இதனாலே தான் எனக்கு கோவிந்தன் மேலே இவ்வளவு பிடிப்பு. நான் வெள்ளிச் செல்லத்தை லட்சமிக் குட்டியை எடுத்துக்கச் சொல்லிச் சொன்னேன். அதை மறுக்க லேன்னு லட்சுமிக்குட்டியும் சொன்னா. ஒருவேளை நீ அதை அங்கேயே வச்சிட்டு வந்திட்டா லட்சுமிக்குட்டி தன்னோடதா எடுத்து வச்சிக்கிடுவாளோன்னு நான் கவலைப்பட்டேன்.

கோவிந்தன்: அடியேன் கொஞ்ச காலமா எஜ மான் சாப்பாட்டைச் சாப்பிடு றேன். அதனாலே அடியேன் என்னென்ன செய்யணும்னு நல்ல தெரிஞ்சிவச்சிருக்கேனில்ல?

இப்படி கோவிந்தனுடன் சல்லாபித்துக்கொண்டே நம்பூதிரிப்பாடு எண்ணெய் தேய்த்துக் குளிக்கத் தொடங்கினார்.

நம்பூதிரிப்பாடு குளியலறையில் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தபோது கேசவன்நம்பூதிரியும் செறுசேரிநம்பூ திரியும் மடத்தின் வெளிமுற்றத்தில் உட்கார்ந்தபடி பேசிக் கொண்டிருந்தார்கள். கேசவன்நம்பூதிரிக்குப் பல காரணங் களால் மனதில் சோகம் ஏற்பட்டிருந்தது. போதாத கால மாகத் தன்னுடைய மனைவியை நம்பூதிரிப்பாடு பார்க்க நேர்ந்துவிட்டது. தன்னுடைய மனைவி அழகி என்பதில் சந்தேகமில்லை. தன்னுடைய அபிப்ராயத்தில் நம்பூதிரிப் பாடும் நல்ல அழகன்தான். மேலும் நம்பூதிரிப்பாடு பெரும் பணக்காரர்—குபேரன். லட்சுமிக்குட்டிக்கு அவர் மீது நாட்டம் ஏற்படுமானால்? பஞ்சுமேனோன் சம்மதிப்பாரா மாட்டாரா என்பதல்ல விவகாரம். நம்பூதிரிப்பாடு சம்பந்தம் நடக்கட்டும் என்று சொல்வார். அவர் செல்வாக்கான ஆளல்லவா! அதனால் அவருடைய கோபத்திற்கு ஆளாகக் கூடாதென்று பஞ்சுமேனோன் தன்னைக் கூப்பிட்டுச்

சொன்னால் தான் என்ன செய்ய முடியுமா, கடவுளே! தான் சம்மதித்தால் என்ன, சம்மதிக்காவிட்டால் என்ன? காரியம் நடக்கத்தான் போகிறது. தன் குடும்பத்தை நாடிப் போக வேண்டியதுதான். சூத்திரப் பெண்களைப் பெண்டாட்டி யாக ஆக்கிக் கொண்டால் இப்படித்தான் ஒவ்வொன்றாக ஆபத்து வந்து சேரும். இவ்வாறெல்லாம் சிறிது நேரம் இந்த அப்பாவி கேசவன்நம்பூதிரி நினைத்துக் கொள்வார். அதைத் தொடர்ந்து லட்சுமிக்குட்டியின் முகமும் உடம்பும் எல்லாமாகச் சேர்ந்து நினைவுக்கு வரும். 'கஷ்ட காலமே, பெரிய ஆபத்து ஏதாச்சும் நமக்கு வந்து சேருமோ?—இல்லே, எனக்கு அதெல்லாம் வராது. இந்துலேகாவோட சம்பந்தம் பேச வந்திட்டு அவ அம்மாவைத் தொடுப்பு வச்சிக்கும் படியாவா வரும்? அப்படியெல்லாம் நடக்க முடியாது' என்று நினைத்து தைரியம் அடைவார். இப்படிக் குறுக்கும் நெடுக்கும் எண்ணங்கள் பாயும். மருகி மருகி இந்த வெகுளிக்கு இந்த நினைப்புப் போய் மற்றொரு நினைப்பு தொடங்கியது: 'ஒன்பதுமணிக்கு பாட்டு இருக்குன்னு இந்த நம்பூதிரிப்பாடுகிட்டச் சொல்லிட்டேனே, ஒருவேளை இந்துலேகா பாட மாட்டேன்னு சொல்லிட்டா? அது வினையாப் போயிடுமே! இப்படியெல்லாம் வந்து சேர்ந்தா என்ன செய்றது?'—என்ற சிந்தனைதான் கடைசியில் ஏற்பட்டது. நினைத்து நினைத்து ஒரு வழியும் தோன்றாமல் முகட்டைப் பார்த்துக்கொண்டிருந்தபோது செறுசேரி பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.

செறுசேரிநம்பூதிரி: கறுத்தேடத்துக்கு ஏதோ வருத்தம் இருக்கிறாப்பில தெரியுதே, ஏன்?

கேசவன்நம்பூதிரி: (ஒரு வறட்டுச் சிரிப்புடன்) வருத்தம் ஒண்ணுமில்லே. என்ன வருத்தம்?—வருத்தத்துக்கு ஒரு காரணமும் இல்லே.

செறுசேரிநம்பூதிரி: பின்னே எதுக்காக இப்படி ஒரே யடியா யோசனை?

கேசவன்நம்பூதிரி: ஒண்ணுமில்லே, இன்னிக்குப் பாடப்போறதைப் பத்தி யோசிச்சிக்கிட்டிருக்கேன். நேரம் எட்டு மணி தாண்டிடுச்சி.

செறுசேரிநம்பூதிரி: பாடுறதுக்குத் தடங்கல் எதுவும் உண்டாகலேயில்லே?

கேசவன்நம்பூதிரி: என்ன தடங்கல்—ஒண்ணுமில்லே. ஒரு தடங்கலும் இல்லே. இன்னிக்கு ராத்திரி ஒன்பது மணிக்குப் பாட்டு இருக்கு. செறுசேரியும் மாடிக்கு வரணும். இந்துலேகா எப்பவாவது ராத்திரி நேரங்களிலே பாடுறதுண்டு. சில சமயங்களிலே பியானோப்பெட்டியும் வாசிப்பா. பாடாம இருக்கிற நாள் பெரும்பாலும் இருக்காது. எல்லாரும் போய்க் கேட்கலாம். அதிலே இந்துலேகாவுக்கு வருத்தம் எதுவும் இருக்காது. நம்பூதிரிப்பாடும் மத்தவங்களும் இருக்காங்கல்ல?

செறுசேரிநம்பூதிரி: பாட்டு இருந்தா நானும் கேட்க வர்றேன்.

கேசவன்நம்பூதிரி: பாட்டு இருக்கும்; சந்தேகமில்லே.

கேசவன்நம்பூதிரிக்கு தீவிரமான சந்தேகம் உண்டு தான். ஆனாலும் நியமப்படியான நடைமுறைகள் நடக்காமல் இருக்காது என்று இந்த அப்பாவிக்கு அப்போதும் ஒரு சஞ்சலமான நம்பிக்கை. இந்துலேகாவிடம் கேள்வி கேட்பதற்கோ, இந்துலேகாவின் முகத்தை நேருக்கு நேராகப் பார்ப்பதற்கோ அவருக்கு தைரியம் கிடையாது. கேசவன்நம்பூதிரி மிகவும் குழம்பிப்போய் இவ்வாறு ஒவ்வொன்றாக யோசித்துக் கொண்டிருந்தார். கடைசியில்—

கேசவன்நம்பூதிரி: இன்னிக்குப் பாட்டு இருக்கும்; இல்லாம இருக்காது. நம்பூதிரிப்பாடும் மத்தவங்களும் இருக்காங்கல்ல?

செறுசேரிநம்பூதிரி: எதுக்காக இப்படி ஒரு மலைப்பு கறுத்தேடத்துக்கு? பாட்டு இருக்கும், அதை நாம கேட்கத்தான்

போறோம்—அப்படித்தானே தீர் மானிச்சிருக்கோம்?

கேசவன்நம்பூதிரி: செறுசேரிக்கு அதிலே ஏதும் சந்தேகம் தோணுதா?

செறுசேரிநம்பூதிரி: கொடுமை! எனக்கு எதுக்கு சந்தேகம் உண்டாகணும்—கறுத் தேடம்தானே எல்லா ஏற்பாடும் செய்தது?

கேசவன்நம்பூதிரி: சீ! சீ! நான் ஒண்ணும் ஏற்பாடு செய்யலே. நான் என்ன ஏற்பாடு செய்றது! இந்துலேகா ராத்திரி வழக்கமா பியானோப்பெட்டி வாசிக்கிறது போல இன்னிக்கும் வாசிப்பா. அப்போ கேட்டுக் கிடலாம்தான் நான் நம்பூதிரிப் பாடுகிட்டச் சொன்னேன்.

செறுசேரிநம்பூதிரி: எப்படியாவது ஆகட்டும். இப்போ நீங்க எதுக்காக அதைப் பத்தி மலைக்கணும்?

கேசவன்நம்பூதிரி: மலைப்பு ஒண்ணுமில்லே—அதெல்லாமில்லே. ஆனால் நான் சொன்னதை நம்பூதிரிப்பாடு தப்பா எடுத்துக்கிட்டிருப்பா ரோன்னு ஒரு சந்தேகம். இன்னிக்குப் பாட்டு இல்லாம இருக் காது. பின்னே எதுக்காக சந்தேகப் படணும்? சந்தேகத்துக்கு இடமே இல்லேன்னு எனக்குத் தோணுது.

செறுசேரிநம்பூதிரி: இருக்கட்டும். நம்பூதிரிப்பாடைப் பார்த்த பிறகு இந்துலேகாவுக்குக் காதல் ஏற்பட்டிருக்கா? அந்த விவரத்தைச் சொல்லும்.

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்கா?

செறுசேரிநம்பூதிரி: ஆமாம்; இந்துலேகாவுக்கு.

அப்போது கேசவன்நம்பூதிரியின் முகம் பார்க்க முடி

யாததாக இருந்தது. முகத்தில் ஒரு கட்டாரிக் கத்தியால் குத்தினால் ஒரு துளி ரத்தம்கூடத் தென்பட்டிருக்காது. சிறிது நேரம் ஏதும் பேசாமல் கழிந்தது. கடைசியில்—

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்குக் காதல்—காதல்— என்னவோ எனக்கொண்ணும் புரியலே. இங்கிலீசு படிச்ச பொம் பளைங்க போக்கு, பார்வை எதுவும் புரியலேன்னு எனக்கு இப்போதான் தெரியுது. பஞ்சு மேனோன் இந்த உலகத்திலே ஒருத்தருக்கும் பயப்படுகிற வரில்லே. அவரு தன் பேத்தியான இந்தச் சின்னப் பொண்ணுக்கு நடுநடுங்கறாரு. நம்பூதிரிப்பாடு ரொம்ப செல்வாக்கான ஆளில் லியா! அவரைப் பார்த்ததும் மசிஞ்சிருவான்னு நினைச்சிருந் தேன். அது தப்பான நினைப் புன்னு எனக்கு இப்போதான் கொஞ்சம் புரிய ஆரம்பிச்சிருக்கு. என்னமோ, தீர்மானமா சொல்ற துக்கில்லே. எனக்கு இங்கிலீசு பழக்க வழக்கம் எதுவும் தெரியாது, செறுசேரி. சர்க்கார் ஆளுங் களிலே நூல் கம்பெனி நடத்தற ஒரு துரையை மட்டும் தான் நான் பார்த்திருக்கேன்.

செறுசேரி இதைக் கேட்டு உரக்கச் சிரித்தார். ஒரு நிமிஷம் தொடர்ந்து சிரித்த பிறகு:

செறுசேரிநம்பூதிரி: நம்பூதிரிப்பாடுக்கு இந்துலேகா கிடைப்பாளா, மாட்டாளா? அதைச் சொல்லும்.

கேசவன்நம்பூதிரி: அதைச் சொல்ல முடியாது— இன்னிக்கு ராத்திரி தாண்டினாத் தான் சொல்ல முடியும். இந்தப்

பொண்ணோட வஞ்சனை எதுவும் தெரியலே, செறுசேரி.

செறுசேரிநம்பூதிரி: பொண்ணுக்கு வஞ்சனையா! வஞ்சனை எதுவும் இல்லே.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது நம்பூதிரிப்பாடு குளித்து முடித்து வந்தார். சுலோகம் திருப்பி அனுப்பப்பட்டதை முன்னிட்டு நம்பூதிரிப்பாடுக்கு மனதில் நல்ல உற்சாகம் இல்லை. ஆனாலும் இந்துலேகாவின் உருவத்தை மனதுக்குள் தியானித்துக் கொண்டுதான் இருந்தார். பிணங்கினால் பிணங்கிக் கொள்ளட்டும். ஒன்பது மணிக்குப் பார்த்துக் கொள்ளலாம். பார்த்துக் கொண்டிருந்தாலே போதும், பேசக் கூட வேண்டாம்— நம்பூதிரிப்பாடுக்கு இந்த எண்ணம்தான். சாப்பாடு முடிந்த பிறகு நம்பூதிரிப்பாடும் மற்றவர்களும் பூவரங்கு நோக்கிப் புறப்பட்டார்கள்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரீ! இப்பா குப்பாயம் வேண்டாம், துப்பட்டி போதும், இல்லே?

செறுசேரிநம்பூதிரி: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: கோவிந்தா, அந்தத் தங்கக் குமிழ் பதிச்ச வெள்ளிச் செல்லம், தங்கப் பன்னீர்ச் செம்பு எல்லாத்தையும் எடுத்து வா. கச்சேரி நடக்கறப்போ வைக்கணும்.

கேசவன்நம்பூதிரி: பாட்டு பியானோப்பெட்டி வச்சி தான். ஒரு நாற்காலியிலே உட்கார்ந்துக்கிட்டு, கையை வச்சிப் பாடுறது. வழக்கம்போல பாய் விரிச்சி உட்கார்ந்து பாடுறதில்லே இது.

நம்பூதிரிப்பாடு: பொண்ணுங்களை இங்கிலீசு படிக்க வச்ச கோளாறுதான் இதெல்லாம். நாற்காலியிலே உட்கார்ந்து பாடுவாங்களா? என்ன விவகாரம் இதெல்லாம்? பஞ்சு

கிட்ட சொல்லும்—கீழே கோரம் பாயிலே உட்கார்ந்துதான் இன்னிக்கு இந்துலேகா பாடணும்னு கறுத்தேடம் சொல்லும்.

கேசவன்நம்பூதிரி: சொல்றேன்.

இந்த உரையாடல் முடிந்தவுடன் நம்பூதிரிப்பாடும் பரிவாரங்களும் பூவரங்குக்குப் புறப்பட்டார்கள். நடுக்கூடத்திற்கு வந்து நம்பூதிரிப்பாடு ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். கேசவன்நம்பூதிரி ஓசைப்படாமல் இந்துலேகாவின் மாடிக்கு ஏறிப்போய் அறைக் கதவைத் தட்டியபோது அது தாழிட்டிருக்கக் கண்டார். இன்ன வகையில் சஞ்சலப் பட்டார் என்று சொல்வதற்கில்லை. குரல் கொடுத்துக் கூப்பிடலாமா என்று முதலில் நினைத்தார். அப்பாவி பிராமணருக்கு தைரியம் வரவில்லை. உடனே உள்கூடத்திற்குப் போய்த் தன் மனைவி இருந்த அறையைச் சென்றடைந்தார். மனைவி உறங்கும் நிலையிலிருந்தாள்.

கேசவன்நம்பூதிரி: லட்சுமிக்குட்டீ! லட்சுமிக்குட்டீ! நான் பெரிய அவமானத்திலே சிக்கிக்கிட்டிருக்கேன்.

லட்சுமிக்குட்டியம்மா எழுந்து நின்றாள்.

லட்சுமிக்குட்டியம்மா: என்ன அவமானமாப் போச்சி?

கேசவன்நம்பூதிரி: இன்னிக்கு வழக்கம்போலப் பாட்டு இருக்கும்னு நினைச்சி நான் நம்பூதிரிப்பாடை வரச் சொல்லி கூட்டி வந்திருக்கேன். இந்துலேகா அறைக்கதவை தாழ்போட்டுப் பூட்டிக்கிட்டுத் தூங்கிக்கிட்டிருக்கா. நான் நம்பூதிரிப்பாடுகிட்டே இனிமே என்ன சொல்றது?

லட்சுமிக்குட்டியம்மா: உள்ள விவரத்தைச் சொல்ல வேண்டியதுதான். வேறே எப்படி? வழக்கம்போல பாட்டு இருக்கும்னு நினைச்சிதான் சொன்னது—இன்னிக்குப் பாட்டு இல்லேன்னு தோணுது; இந்துலேகா அறைக்

கதவு அடைச்சி அவ தூங்கிப் போயிட்டா. அதனாலே பாட்டு நாளைக்கு வச்சிக்கிடலாம்னு சொல்ல வேண்டியதுதான். இதிலே என்னங்க அவமானம்?

கேசவன்நம்பூதிரி: கொஞ்சம் சிக்கல் இருக்கு. நான் நம்பூதிரிப்பாடுகிட்ட நேரிலே சொல்றதிலே கொஞ்சம் சங்கடம் இருக்கு. அதுதான் இப்போ சிக்கல்.

லட்சுமிக்குட்டியம்மா: என்ன சொல்றீங்க?

கேசவன்நம்பூதிரி: கொஞ்சம் சங்கடம் சொன்னேன். இந்துலேகா மாடியிலேருந்து எரிச்சலோட இறங்கிப் போனப்போ நம்பூதிரிப்பாடு வருத்தப்படக் கூடாதுன்னு கொஞ்சம் வேறே விதமா சொல்லி வச்சேன். பாட்டு இருக்கும்—ஒன்பது மணிக்குப் பாட்டு இருக்கும்னு சொல்லி வச்சேன். அதை நிறைவேத்தி வைக்கணும். லட்சுமிக்குட்டி கொஞ்சம் மாடிக்கு வந்து இந்துலேகாவைக் கூப்பிடணும்.

லட்சுமிக்குட்டியம்மா: நல்ல கொடுமை! நான் ஒருக்காலும் கூப்பிட மாட்டேன். என்னங்க, அவளோட குணம் நல்லாத் தெரியுமில்ல? நம்பூதிரிப்பாடுக்கு தலைவாசல் அறையிலே படுக்கிறதுக்கு விரிச்சிக் கொடுத்திட்டு சீக்கிரமா இங்கே வந்து தூங்கறதுக்கு வழி பாருங்க. எதுக்காக இப்படியெல்லாம் குழப்புறீங்க?

கேசவன்நம்பூதிரி: சே! அப்படிச் செய்ய முடியாது. அப்படீன்னா நான் பஞ்சுமேனோன்கிட்ட சொல்லிப் பார்க்கிறேன்.

லட்சுமிக்குட்டியம்மா: அப்படி வேணும்னா செய்யுங்க.

கேசவன்நம்பூதிரி பஞ்சுமேனோனைத் தேடியபோது அவர் நடுக்கூடத்தில் நம்பூதிரிப்பாடுடன் பேசிக்கொண்டிருந்தார். கேசவன்நம்பூதிரி தெற்கு அறையில் நம்பூதிரிப்பாடு பார்க்க முடியாதபடி நின்றுகொண்டு பஞ்சு மேனோனைக் கைச்சாடையாய் அழைத்தார். பஞ்சு மேனோன் உள்ளே போனார். விவரங்கள் சொன்ன போது தான் எதுவுமே செய்வதற்கில்லை என்று கோபத்தோடு சொல்லிவிட்டு, பஞ்சுமேனோன் மறுபடியும் நடுக்கூடத்துக்குப் போய்விட்டார்; நம்பூதிரிப்பாடுடன் பேசத் தொடங்கி விட்டார். கேசவன் நம்பூதிரி தெற்கு அறையிலேயே முடங்கிக் கிடந்தார். அப்படியே கொஞ்ச நேரம் கழிந்த பிறகு—

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் எங்கே போனாரு, தட்டுப்படலியே. நேரம் பத்து மணி தாண்டிரிச்சே. கச்சேரி ஒன்பது மணிக்குன்னுதானே முதல்லே ஏற்பாடாகியிருந்தது?

இந்த வார்த்தையைக் கேட்டதும் கேசவன்நம்பூதிரி "நான் இங்கே இருக்கேன்" என்று சொல்லிக்கொண்டு ஒரு பிசாசைப் போல வெளியே ஓடி வந்தார்.

பஞ்சுமேனோன்: படுக்கிறதுக்கானதெல்லாம் தலைவாசல் அறையிலே ஏற்பாடு செய்திருக்கு. அடியேனுக்கு வயசாயிடிச்சி. நிக்கிறதுக்குக் கஷ்டம். காலையிலே பெரியவங்களை வந்து பார்க்கிறேன்.

என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டார்.

தலைவாசல் அறையிலே எனக்குப் படுக்கை என்று நினைத்து நம்பூதிரிப்பாடுக்குச் சிறிது எரிச்சில் உண்டாயிற்று. போகட்டும், பாட்டும் மற்றதும் முடிந்த பிறகுதானே தூங்க வேண்டும். அப்போது இரண்டு மூன்று மணியாகிவிடும். அதுவரைக்கும் இந்துலேகாவுடன் சேர்ந்திருக்கலாமல்லவா—என்று எண்ணி மகிழ்ந்தார்.

நம்பூதிரிப்பாடு: என்ன கறுத்தேடம், தாமதம்?

கேசவன்நம்பூதிரி: தாமதம் ஒண்ணுமில்லே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா மாடிக்குப் போகலாம். செறுசேரி வாங்க. செறுசேரி கொஞ்சம் பாட்டு கேட்டிட்டுத் திரும்பி வந்து தூங்கிக்கலாம்.

கேசவன்நம்பூதிரி சிறிது நேரம் எதுவும் பேச முடியாமல் நின்றிருந்தார். கடைசியில்:

கேசவன்நம்பூதிரி: இந்துலேகாவுக்கு உடம்புக்குக் கொஞ்சம் முடியலேன்னு தோணுது. தூங்கிக்கிட்டிருக்கா. அறைக் கதவு அடைச்சிக் கிடக்குது.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம் போய்க் கூப்பிடலாமில்ல? போய்க் கூப்பிடும்.

கேசவன்நம்பூதிரி: கூப்பிட்டுப் பார்த்திட்டேன்.

நம்பூதிரிப்பாடு: பலமாக் கூப்பிட்டுப் பாரும்.

கேசவன்நம்பூதிரி: பலமாத்தான் கூப்பிட்டேன்.

நம்பூதிரிப்பாடு: அப்புறம்?

கேசவன்நம்பூதிரி: கதவு திறக்கலே.

நம்பூதிரிப்பாடு: உடம்புக்குச் சரியில்லேன்னு சொன்னாளா?

கேசவன்நம்பூதிரி: சொன்னா.

நம்பூதிரிப்பாடு: பாட முடியாதுன்னு சொன்னாளா?

கேசவன்நம்பூதிரி: சொன்னா.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா மாடியிலே சும்மா பேசிக்கிட்டிருக்கலாமே. கதவைத் திறக்கலாமில்ல?

கேசவன்நம்பூதிரி: திறக்க முடியாதுன்னு சொல்லிட்டா.

நம்பூதிரிப்பாடு: மறுபடியும் போய்ப் பாரும்.

செறுசேரிநம்பூதிரி: அது சரியில்லே. உடம்பு நாளைக்கு சரியாயிடும். கடுமையான தலைவலி, இல்லாட்டி வேறே ஏதாவது இருக்கும். நாளைக் காலையிலே சாப்பிட்டு முடிச்சதும் கச்சேரி வச்சிக்கலாம். அதுதான் நல்லது.

கேசவன்நம்பூதிரி: அதுதான் நல்லது, சந்தேகமில்லே.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடத்தோட வீட்டுக்காரம்மா பாடமாட்டாங்களா?

கேசவன்நம்பூதிரி: இல்லே, அவளும் தூக்கத்திலே இருக்கா.

நம்பூதிரிப்பாடும் செறுசேரிநம்பூதிரியும் தலைவாசல் அறைக்குப் போனார்கள். நம்பூதிரிப்பாடுக்குக் கொஞ்சம் கூடத் தூக்கம் வரவில்லை. இந்துலேகாவைப் பற்றி நினைத்து மருகி ஒரு பைத்தியம்போல் நடந்துகொண்டார். கடைசியில் கோவிந்தனைக் கூப்பிட்டு வெற்றிலை மடித்துத் தரச் சொன்னார்.

கோவிந்தன் வெற்றிலை மடித்து எடுத்துக் கொண்டு வந்து நம்பூதிரிப்பாடிடம் சொன்னான்:

"நேத்தும் தூங்கலே. கொஞ்ச நேரத்துக் முன்னாலே பன்னிரண்டு அடிச்சதைக் கேட்டேன். எஜமான் உடம்புக்கு முடியாமப் போயிருமோன்னு அடியேனுக்குக் கவலை."

நம்பூதிரிப்பாடு: அசடு! அந்த இந்துலேகா அங்கே மாடியிலே படுத்திருக்கறப்போ இப்படிப் பக்கத்திலேயே இருந்துக் கிட்டு எனக்கு எப்படித் தூக்கம் வரும்?

கோவிந்தன்: அப்படீன்னா படுக்கை ஏற்பா டெல்லாம் அந்த மாடியிலே இருக் கணும்னு சொல்லியிருக்கலா முங்களே?

நம்பூதிரிப்பாடு: அதைச் சொல்லிப் பிரயோஜன மில்லே. இந்துலேகா இங்கிலீசுக் காரி மாதிரி நடந்துக்கிடுறா. நேரம் பார்த்துத்தான் போக வேண்டி யிருக்கு. ரொம்பக் கோளாறு! அந்தப் பொண்ணுக்கு இவ்வளவு அழகு இல்லாம இருந்திருந்தா நான் அந்த மூஞ்சியைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டேன். என்ன மாதிரி அகம்பாவம்! மரியாதையாக் கூடப்

பேசுறதில்லே. சமதையானவங்க கிட்ட பேசுற மாதிரியே என்கிட்டவும் பேசுறா. என் முன்னாலேயே உட்கார்ந்து பேசணும்னுகூட அவளுக்கு எண்ணம் இருக்கும் போலத் தோணுது. ஆனால் அதுக்கு நான் சம்மதிக்க மாட்டேனில்ல. ஆனாலும் எனக்கும் ஒரு அசட்டுத் தனம் · வந்திருச்சி. நேரிலே அவளைக் கண்டதும் ரொம்ப மலைச்சிப் போய் என்னோட அந்தஸ்து எதுவும் பார்க்காம கொஞ்சம் பிகுவை விட்டுச் சில சல்லாபங்களைப் பேசிட்டேன். அதனாலே என்னை இளக்காரமா நினைச்சிப் பணம் பறிக்கலாம்னு நினைப்பிருக்குமோ என்னமோ தெரியலே. நான் தங்கக் கடியாரத்தைக் கொடுத்தப்போ அது மேலே பேராசை இருக்கிறது தெரிஞ்சது. வேகமா நான் அதைத் திருப்பி வாங்கிட்டேன். அவ்வளவு சீக்கிரத்திலே என்கிட்டேருந்து எதையும் பறிச்சிற முடியாது. தங்கக் கடியாரத்தைத் திருப்பி வாங்கிட்டதனாலேதான் நீ கொண்டு போய்க் கொடுத்த சுலோகத்தை வாங்கிக் கிடலேன்கு எனக்கு ஒரு சந்தேகம். ஆனா, அந்தக் கடியாரத்தைக் கொடுக்கிறதுக்குக்கூட நான் தயார்தான். எனக்கு ரொம்ப மோகம், கோவிந்தா. இப்படி ஒரு மோகம் இதுவரைக்கும் உண்டானதில்லே. இருந்தாலும் நாளை நான் பார்க்கிறப்போ நல்லா வீறாப்பா

இருக்கணும்னு தீர்மானிச்சிட்டேன். ஒரு சுகமும் இல்லே—மனசிலே கொஞ்சம்கூட சுரத்தே இல்லே. வந்திருக்கவே வேண்டாம்னு தோணுது. திரும்பிப் போறப்போ இந்துலேகா இல்லாமப் போறது பெருத்த அவமானம். படு அசமந்தம் கறுத்தேடத்தோட கடுதாசியை நம்பி வந்தேன்; இப்போ சிங்கி அடிக்கிறாப்பிலே ஆச்சுது. மோசம், மோசம்—மகா மோசம்.

இப்படியெல்லாம் பேசியதை கோவிந்தன் நிதானமாகக் கேட்டான். வெற்றிலையை மடித்துக் கொடுத்த பின்னர் வழக்கம்போல நம்பூதிரிப்பாடுக்குப் பக்கத்தில் வந்து நின்றபடி பேசினான்.

கோவிந்தன்: அடியேன் ஒண்ணு சொல்லணும்னு நினைக்கிறேன். சம்மதம்னா சொல்றேன்.

நம்பூதிரிப்பாடு: சொல்லு—சொல்லு. எனக்கும் தூக்கம் கொஞ்சம்கூட வரமாட்டேங்குது. சொல்லு.

கோவிந்தன்: இந்துலேகாவுக்கு கள்ளத்தனமா வேறே ஒரு ஆள் பழக்கமிருக்கு. அவனோட ரொம்ப நெருக்கமாம். இவ நடத்தை சரியில்லாதவள்னு அடியேனுக்குத் தோணுது. கூடவே குறும்புத்தனமும் சேர்ந்திருக்கு. இங்கிலீசும் மத்ததும் மெத்தப் படிச்சிருக்கிறதனாலே அந்தப் பழக்க வழக்கதோட நம்ம ஊருப்பக்கம் கூட்டிப்போனா அங்கே கட்டுக்குள்ளே வச்சிருக்கிறது கஷ்டம். பழக்கவழக்கத்தை இனிமே மாத்தறதும் கஷ்டம். இங்கே-பூவள்ளிக்

குடும்பத்திலே பஞ்சுமேனோ னோட மருமகளா நேர்த்தியான ஒரு பொண்ணிருக்கு. அவ சாயந் தரம் கோயிலுக்கு வந்து போனதை அடியேன் பார்த்தேன். அதுக்கு இங்கிலீசும் எதுவும் தெரியாது. நல்ல மாதிரியானவள்னு எல் லாரும் சொல்றாங்க. அந்தப் பொண்ணை எஜமான் பார்த்தாப் பிடிச்சிப்போகும். வழிக்குக் கொண்டு வர்றது கஷ்டமும் இல்லே. அதனாலே அதைப்பத்தி நினைக்கிறது நல்லதுன்னு அடியே னுக்குத் தோணுது. இனிமே எஜமான் மனசுபோல.

நம்பூதிரிப்பாடு: ஆ—சபாஷ்! கோவிந்தா! கில்லா டிடா நீ. கில்லாடின்னா கில்லாடி! எனக்குக் குறையெல்லாம் தீர்ந்து போச்சி. இந்தப் பொண்ணுக்கு இங்கிலீசு தெரியாது. நிச்சயமாத் தெரியுமில்ல?

கோவிந்தன்: கொஞ்சம்கூட சந்தேகமில்லே. ஏழைப்பட்டது—நல்ல குணம். இன் னிக்குக் காலைச் சாப்பாட்டிலே ரெண்டு நேரமும் நம்மளை கவனிச்சிக்கிட்ட சீனுப்பட்ட ரோட மகள்தான் அவ.

நம்பூதிரிப்பாடு: அப்படியா, பார்க்க ரொம்ப அழகோ?

கோவிந்தன்: ரொம்ப அழகு.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா எனக்கு அது சம்மதம். இந்த அதிகப்பிரசங்கி இந்துலேகாவைக் கட்டி இழுத்துக் கிட்டுப் போனாலும் ரெண்டு நாள்கூட ஒழுங்கா இருக்க மாட்டா.

கோவிந்தன்: எஜமான் சொல்றது சரிங்க.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா சீனுப்பட்டரை இப்பவே கூப்பிடு.

கோவிந்தன்: இருங்க, அவசரப்பட வேணாம். விடியட்டும்.

நம்பூதிரிப்பாடு: அப்போ பொண்ணைக் காலையிலே ஒரு தடவை பார்த்துக்கிடுவோமா?

கோவிந்தன்: தாராளமாப் பார்க்கலாம்.

கோவிந்தனுடனான இந்த உரையாடல் முடியும்போது விடிந்துவிட்டது என்றாலும் நம்பூதிரிப்பாடு அயர்ந்து போய்க் கொஞ்சம் தூங்கிவிட்டார்.

## 13

# நம்பூதிரிப்பாடுக்கும் இந்துலேகாவுக்கும் இடையே இரண்டாவது உரையாடல்

அரை மணி நேரம் மட்டுமே நம்பூதிரிப்பாடு தூங்கியிருப்பார். அப்போது இருந்த தூக்கத்தைத் தூக்கம் என்று சொல்லக் கூடாது—ஒரு மயக்கம் என்றுதான் சொல்ல வேண்டும். அந்த மயக்கம் கலைந்ததும் எழுந்திருந்து கோவிந்தனைக் கூப்பிட்டு இரவு சொன்னதையெல்லாம் இரண்டாவது தடவையாகச் சொன்னார். மனதில் கொஞ்சம் சுகம் தோன்றியது.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி எங்கே படுத்திருக்காரு; எந்திரிச்சிட்டாரா?

கோவிந்தன்: குளிக்கப் போயிட்டாரு. இங்கே தெற்கு அறையிலேதான் தூங்கிட்டிருந்தாரு. செறுசேரிநம்பூதிரி கிட்ட நான் சொன்னது எதையும் இப்போ சொல்ல வேண்டாமுங்க.

நம்பூதிரிப்பாடு: ஏன் கூடாது?

கோவிந்தன்: நிலைமை எப்படிப் போகுதுன்னு தெரிஞ்சிக்கிடலாம்னு அடியேனுக்குத் தோணுது.

நம்பூதிரிப்பாடு: கில்லாடி! நீ மகா கில்லாடிதாண்டா. அப்படீன்னா இந்த விஷயம் ரகசியமாகவே இருக்கட்டும். நான் இந்துலேகாவை ஒரு தடவை பார்க்கணும். அப்படியும் அவ ஒத்து வரல்லேன்னா உடனே அடுத்த

விவகாரத்தை நடத்தி முடிச்சிகிட்டு விடிஞ்சதும் அவளைக் கூட்டிக் கிட்டுப் போயிட வேண்டியது தான். இந்துலேகாவைக் கூட்டிக் கிட்டுப் போறதாகத்தான் இங்கே இருக்கிற மத்தவங்க நினைச்சிக் கிட்டிருக்காங்க. நாம போன பிறகு விவரத்தைத் தெரிஞ்சிக்கிடட்டும். பின்னாலே தெரிஞ்சிக்கிடுற தனாலே நமக்கு எந்த அவமானமும் இல்லே. அதனாலே இந்த விஷயம் ரகசியமாகவே இருக்கட்டும். இந்து லேகாவைத்தான் சம்பந்தம் பேசிக் கூட்டிப்போறதாக நீ எல்லார் கிட்டேயும் போய்ச் சொல்லிடு. இன்னிக்கு நான் இந்துலேகாகிட்ட காண்பிக்கிற சாமர்த்தியத் தினாலே அவ வசத்துக்கு வந் திட்டா அவளையே கூட்டிக்கிட்டுப் போயிரலாம். இல்லையா?

கோவிந்தன்: சொன்னதுதான் சரி. அப்படித் தான் செய்யணும்.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா அந்தப் பொண்ணை நான் ஒரு தடவை பார்க்கணும். அதுக்கு என்ன வழி?

கோவிந்தன்: அடியேன் போய்ப் பார்த்திட்டு வர்றேன். கோயிலுக்குக் கும்பிடுற துக்கு வருவா. அப்போ பார்த் திரலாம்.

நம்பூதிரிப்பாடு: சபாஷ்டா! சமர்த்து! அதுதான் நல்ல சமயம். நீ போய்ப் பார்த்திட்டு வா.

கோவிந்தன் உடனே போய் விசாரித்துப் பார்த்த போது கல்யாணிக்குட்டி பெண்கள் குளிக்கும் குளத்தில் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். உடனே ஓடி வந்து நம்பூதிரிப்பாடிடம் தெரிவித்தான். நம்பூதிரிப்பாடு

அவசர அவசரமாகக் குளத்தை நோக்கிப் புறப்பட்டார். நம்பூதிரிப்பாடின் அப்போதைய உடுப்பு சர்வ சாதாரண மானதாக இருந்தது. ஒரு பட்டுக்கரைத் துண்டை மார்பைச் சுற்றிப் போர்த்துக்கொண்டு மிதியடி மட்டுமே போட்டுக் கொண்டபடி சென்றார்.

கல்யாணிக்குட்டியை பற்றி அறிமுக அத்தியாயத்தில் அவளுடைய பெயர் குறிப்பிடப்பட்டதை மட்டுமே எனது வாசகர்கள் அறிவார்கள். இந்தப் பெண் சீனுப்பட்டரின் மகள்; பதின்மூன்று வயதுப் பருவம் என்பதும் தெரிந்தது தான். அவள் நல்ல முகத்தோற்றம் கொண்ட கன்னிப் பெண்தான் என்றாலும் இந்துலேகாவுடன் ஒப்பிடும்போது அதில் நூற்றில் ஒரு பங்காவது இருக்குமென்று சந்தேகப் படக்கூடாது. அந்தக் கதை வேறு. இது வேறு. கல்யாணிக் குட்டி முழுக்க முழுக்க மலையாள சம்பிரதாயப்படி வளர்ந்த ஒரு பெண். எழுதவோ படிக்கவோ தெரியாது. கொஞ்சம் பாடுவாள். அந்த அளவுக்கு மட்டுமே பயிற்சி இருந்தது. பார்ப்பதற்கு நன்றாயிருப்பாள். பதின்மூன்று வயதில் மலையாள நாட்டில் சில பெண்கள் தாய்மை நிலைகூட எய்திவிடுவதுண்டு என்றாலும் கல்யாணிக்குட்டியின் உடல்வாகு வாலிபம் அப்போதுதான் தொடங்கியிருக்கிறது என்பது போல இருக்கும். மொத்தத்தில் நாணம் அதிகமாகத் தென்படும் ஒரு வெகுளிப் பெண்ணாக மட்டுமே என்னால் சொல்ல முடியும். அவள் குளித்துத் துவட்டி, தலைமுடியை சிக்கெடுத்துக்கொண்டு குளியலறையிலிருந்து வெளியே வரும்போதுதான் நம்பூதிரிப்பாடு எதிரே வந்தார். அவரைப் பார்த்தவுடன் அவள் குளியலறைக்குத் திரும்பிப் போய் மறைவில் நின்று கொண்டாள். அவர்தான் நம்பூதிரிப்பாடு என்று அவளுக்குச் சந்தேகப்பட இடமில்லை. அது தங்க விக்கிரகமாக அல்லவா முந்தின நாள் தென்பட்டது! ஏதோ ஒரு முன்பின் தெரியாத ஆணென்று நினைத்து கல்யாணிக் குட்டி அறையினுள் மறைந்து நின்றாள். நம்பூதிரிப்பாடு அப்படியே விட்டு விடுகிற ஆளா என்ன? ஒருக்காலும் இல்லை. நேராகச் சென்று குளியலறைக்குள் நுழைந்து எட்டிப் பார்த்தார். திரும்பி கோவிந்தனைப் பார்த்து சரியான உருப்படி என்று சொன்னார். அப்போது

செறுசேரி குளித்துவிட்டு வருவதைக் கண்டு சீக்கிரம் திரும்பிவிட வேண்டுமென்று கோவிந்தன் நம்பூதிரிப் பாடைக் கேட்டுக் கொண்டான். நம்பூதிரிப்பாடு குளிய லறையிலிருந்து வெளியே வந்து செறுசேரிக்கு எதிரில் நின்றது துப்பாக்கிக் குண்டு பாய்ந்து வந்து விழுந்தது போலிருந்தது.

செறுசேரிநம்பூதிரி: இதென்ன கதை! குளிக்கப் போறீங் களா?

நம்பூதிரிப்பாடு: ஆமாம்.

செறுசேரிநம்பூதிரி: இவ்வளவு சீக்கிரமாவா?

நம்பூதிரிப்பாடு: ஆமாம்.

செறுசேரிநம்பூதிரி: அப்படீன்னா எதுக்காக குளிப் பறையிலேருந்து இப்படி வெளியே வந்திட்டீங்க?

நம்பூதிரிப்பாடு: ஒண்ணுக்குப் போகணும்.

கோவிந்தன்: குளிக்கிறதுக்கு அடுத்த குளிப்பறை தான் நல்லது.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா அங்கேதானே போவோம். செறுசேரி கோயி லுக்குப் போய்க் கும்பிட்டு வாரும்.

என்று சொல்லிவிட்டு பெரிய குளிப்பறை நோக்கி நம்பூதிரிப்பாடு மிகவும் ஆத்திரத்துடன் கோவிந்தனுடன் சென்றார்.

நம்பூதிரிப்பாடு சொன்னதிலெல்லாம் செறுசேரிக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. நம்பூதிரிப்பாடு சாதாரணமாக எட்டு மணிக்குத்தான் எழுந்திருப்பது வழக்கம். குளியல் வழக்கமாகப் பத்து மணிக்குத்தான் இருக்கும். குளிக்க வருவதற்கு முன்னதாகப் பல் தேய்ப்பதும் மற்றதும் நடந்து முடியும். இன்றைக்கு அந்த வழக்கமெல்லாம் காணோம். படுக்கை அறையிலிருந்து தூக்கம் கலைந்து எழுந்து அவசரமாகக் கிளம்பி வந்தது போலிருந்தது. அதுவும் தவிர பெண்கள் குளிக்கும் குளிப்பறையிலிருந்து வெளியே வந்தார். முந்தின நாள் குளித்த குளிப்பறையை விட்டுவிட்டு இந்தக் குளிப்பறைக்கு வருவானேன்? சிறுநீர் கழிப் பதற்காகவென்று குளியலறையை விட்டு வெளியே

வந்ததும் கோவிந்தன் அடுத்த குளியலறைக்குப் போக வேண்டுமென்று சொன்னானே! இதையெல்லாம் நினைத்துப் பார்த்து இதில் ஏதோ விவகாரம் இருக்கிறது என்றும், அது என்னவென்று தெரிந்து கொள்ள வேண்டு மென்றும் எண்ணியபடி செறுசேரிநம்பூதிரி கொஞ்ச தூரம் நடந்தார். திரும்பிப் பார்த்தபோது இளவயதுப் பெண் ஒருத்தி அந்தக் குளியலறையிலிருந்து வெளியேறிக் கோயிலை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். சரி, செறுசேரிக்குப் புரிந்துவிட்டது. உடனே பக்கத்தி லிருந்த ஒருவரை விசாரித்தபோது அந்தப் பெண் பஞ்சு மேனோனின் மருமகளென்று தெரிய வந்தது. அதிபுத்தி சாலியான செறுசேரி உடனே எல்லாவற்றையும் கிரகித்துக் கொண்டார். இதில் ஏதோ ஒரு விவகாரம் இருக்கிறது. 'இந்துலேகாவுக்கு பாபவிமோசனம் கிடைத்துவிட்டது என்று தோன்றுகிறது' என்று எண்ணி மனதுக்குள் ஒரு முறை சிரித்துக்கொண்டு கோயில் மண்டபத்தில் பாரா யணம் செய்ய உட்கார்ந்தார்.

நம்பூதிரிப்பாடு: (கோவிந்தனிடம்) எனக்கு முழுச் சம்மதம். ரொம்ப சந்தோஷம். இந்து லேகா எனக்கு வேண்டாம். பசு மாமிசம் சாப்பிடுறவங்க பாஷை படிச்ச அந்த அதிகப்பிரசங்கி எனக்கு வேண்டாம். இது நல்ல பொண்ணு. வயசும் ரொம்பப் பிரமாதம். எனக்கு இந்த வயசுப் பொண்ணுங்களைத் தான் ரொம்பப் பிடிக்கும். கோவிந்தா! உடனே போய் ஆக வேண்டி யதைச் செய். இந்துலேகாவைப் பார்க்க வேண்டாம்னு ஆனாத் தான் என்ன?

கோவிந்தன்: என்ன எஜமான் இப்படிச் சொல் லிட்டீங்க? கொஞ்ச முன்னாடி சொன்னதை மறந்திட்டீங்களா? இந்துலேகாவைத்தான் சம்பந்தம்

பேசிக் கூட்டிக்கிட்டுப் போறதாக எல்லாரும் எழுந்திருக்கிற வரைக்கும் தெரியணும்னுதானே சொன்னீங்க? இப்போ இப்படிச் சொல்றீங்களே.... இது ரொம்ப ரகசியமா இருக்கணும்னுதானே சொன்னீங்க?

நம்பூதிரிப்பாடு: அடாடா—என்ன சமர்த்து—கெட்டிக்காரன்டா! நீதாண்டா கில்லாடி. நான் கொஞ்சம் அசந்திட்டேன். ஒரு வார்த்தைகூட நான் இனிமே பேச மாட்டேன். எல்லாம் நீ சொன்னது போலத்தான். போ. போய் எல்லா ஏற்பாடும் செய். இந்துலேகாவைப் பார்க்கலாம். ஆனால், ஒரு தடங்கல் இருக்கு. அவளைப் பார்க்கிறப்போ எனக்கு வேறே எந்தப் பொம்பளையும் வேண்டாம்னு எண்ணம் வந்து கிறுக்குப் பிடிச்சிருது. என்ன செய்யறது! போகிற வரைக்கும் இனிமே பார்க்காம இருந்தா மனசுக்கு ரொம்ப நிம்மதியா இருக்கும். அதனாலேதான் நான் சொன்னேன்.

கோவிந்தன்: எஜமான் நல்ல தைரியத்தோட சமாளிக்கணும். எத்தனை பொண்ணுங்க இருக்காங்க உலகத்திலே, உங்க திருமேனியை ஒரு தடவைப் பார்த்தாப் போதும்னு ஏங்கிக்கிட்டு.

நம்பூதிரிப்பாடு: ஆமாண்டா—கில்லாடி! நான் தைரியமா இருப்பேன். இந்துலேகா எனக்குப் புல்லுக்குச் சமம். நீ போய் ஆகவேண்டியதைப் பாரு. ரொம்ப ரகசியமா இருக்கட்டும்.

கோவிந்தன் அங்கிருந்து போனான். இந்தக் காரியத்தைச் சாதிப்பதற்கு யாரோடு பேசுவது—என்ன பேசுவது—என்று சிந்தித்தபடி அங்குமிங்குமாக அலைந்தான். யாரோடும் வெளிப்படையாகப் பேசுவதற்கு தைரியமில்லை. கோவிந்தனுக்குப் போக்கிரித்தனம் உண்டென்றாலும் நல்ல சாமர்த்தியமும் உண்டு. இந்தக் காரியம் நம்பூதிரிப்பாடு போய்விட்ட பிறகு ஊராருக்குத் தெரிந்தால் போதும் என்பது அவனுடைய எண்ணம். அதனால் கேசவன்நம்பூதிரியிடம் கூடச் சொல்வதற்கு தைரியம் வரவில்லை. நம்பூதிரிப்பாடு காலைச் சிற்றுண்டியையும் மற்றதையும் முடித்துக்கொண்டு இந்துலேகாவைப் பார்ப்பதற்காகப் பூவரங்குக்குச் சென்றார். இங்கே நம்பூதிரிப்பாடு குறித்து ஒரு வார்த்தை நான் நல்லதாகச் சொல்லியாக வேண்டும். செறுசேரிநம்பூதிரி எப்படியெல்லாமோ முயன்றும் கோவிந்தனின் அறிவுரையின்படி இந்தக் கல்யாணிக்குட்டியை சம்பந்தம் செய்துகொள்ளும் ஆலோசனையைப் பற்றி இதுவரை செறுசேரிநம்பூதிரியிடம் சிறிதுகூட வெளிப்படுத்தவில்லை. ஒரு காரியத்தைப் பற்றி அறிவுரை கிடைத்தால் அதன்படி நடந்துகொள்வார். சாப்பாடு முடிந்து சத்திரத்து முற்றத்தில் உலாத்தலாக நடந்து கொண்டிருந்தபோது வேலையாள் போல அடங்கி ஒடுங்கி கூடவே நடந்துகொண்டிருந்த சீனுபட்டருக்கும் நம்பூதிரிப் பாடுக்கும் இடையே கீழே குறிப்பிட்டபடி உரையாடல் ஒன்று நடந்தது.

நம்பூதிரிப்பாடு: என்னங்காணும் சீனு, வேலையெல்லாம் இன்னிக்கே முடிஞ்சிட்டா நாளைக் காலையிலே புறப்படறதா இருக்கு.

சீனுபட்டர்: அதிலே என்ன தடங்கல்! எல்லாமே சரியாயிருக்கும்.

பூவரங்கில் உள்ளோட்டமாக நடந்துகொண்டிருக்கும் விவரங்கள் எதையும் சீனுபட்டர் அறிந்திருக்கவில்லை. அன்றையத் தகராறு முடிந்த பின்னர் "பட்டரைப் பூவரங்கிலோ பூவள்ளியிலோ எங்கேயும் பார்க்கக் கூடாது; பார்த்தால் அந்தக் கோமுட்டியை அடிச்சி விளாசுங்க"

என்று பஞ்சுமேனோன் சொல்லியிருந்ததனால் கொஞ்ச நாட்களாகப் பூவள்ளி வட்டாரத்திற்குப் போகவே இல்லை. அதனால் அவருக்கு அங்கே நடந்த எந்த விவகாரமும் சரியாகத் தெரிந்திருக்கவில்லை.

நம்பூதிரிப்பாடு: எல்லாம் ஏற்பாடாயிரிச்சின்னு தான் சொல்லணும். நடக்க வேண்டியது இன்னிக்குதானா என்கிறதை மட்டும் தெரிஞ்சிக்கிடணும். இன்னிக்கு நடக்கிற மாதிரியாகச் செய்யணும்.

சீனுபட்டர்: அதுதான் நல்லது. சுபஸ்ய சீக்ரம்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவை ஏத்திக்கிட்டுப் போக இங்கே பல்லக்கு இருக்கில்ல?

சீனுபட்டர்: நாலஞ்சி பல்லக்கு இருக்கு.

சீனுபட்டருடன் இவ்வளவெல்லாம் பேசி முடித்த பின்னர்தான் நம்பூதிரிப்பாடு பூவரங்கு நோக்கிப் புறப் பட்டார். காக்கையின் கழுத்திலே மணியைக் கட்டியது போல, நம்பூதிரிப்பாடு சொன்ன விவரத்தைக் கோயி லிலும் குளக்கரையிலும் சத்திரத்திலும் வழி நெடுகிலுமாக சீனுபட்டர் பத்தைப் பதினாறாக்கிச் சொல்லிக்கொண்டு திரிந்தார். அன்று கோயிலில் ஒரு பூஜை விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. அதில் சில நம்பூதிரிகளும் பட்டர் களும் கலந்துகொண்டார்கள். அங்கேயும் சீனுபட்டர் இந்து லேகாவின் பாணிக்கிரகனம் அன்றைய இரவு நடக்கப் போவதாகப் பறைசாற்றிக் கொண்டிருந்தார். அந்தக் கூட்டத்தினிடையே அப்போது இருந்த சங்கரசாஸ்திரிக்கு மட்டும்தான் அதைக் கேட்டபோது அதிக வருத்தம் ஏற்பட்டது. இந்துலேகாவுக்குக் கடிதத்தைக் கொடுத் தாயிற்றா என்று முந்தின நாள் சாயங்காலம் நம்பூதிரிப் பாடின் கேள்விக்கு கோயிலில் கோவிந்தன் உரக்கச் சொல்லிய பதிலைக் கேட்டபோதே குஞ்ஞிக்குட்டியம்மா தன்னிடம் முந்தின நாள் சொன்னபடியே ஏற்பாடுகள் நிச்சயமாகிவிட்டன என்று சாஸ்திரிகள் முடிவுக்கு வந்திருந்தார். இப்போது சீனுபட்டர் அன்றிரவு விருந்து

நிச்சயிக்கப்பட்டிருப்பதைக் கூறியபோது சாஸ்திரிகளுக்கு சந்தேகமெல்லாம் தீர்ந்து அங்கலாய்ப்பான ஒரு பெருமூச்சு வந்தது.

'கஷ்டம்! இவ்வளவு தான்தோன்றித்தனமான ஒருத்தியை நான் இவ்வளவு புத்திசாலின்னு இத்தனை நாளும் நினைச்சிருந்தேனே! அஞ்சு நிமிஷம் பேசினாலே இந்த நம்பூதிரிப்பாடு படுபோக்கிரின்னும், கேவலம் பொம்பளைப் பொறுக்கியான மரியாதை கெட்டவன்னும் அடிமட்ட புத்தி இருக்கிறவங்களுக்குக் கூடப் புரியுமே! இந்துலேகாவுக்கு இது புரிஞ்சிருக்காதுன்னு சந்தேகப்படவாவது முடியுமா? ஆக இந்துலேகா மன்மதத் தோற்றம் கொண்டவனும், அதிபுத்திமானும், தன்னிடம் மிகுந்த அனுராகத்துடன் இருப்பவனுமான மாதவனை விலக்கிவிட்டுப் படுபோக்கிரியான குதிரை மூஞ்சிக்காரனான நம்பூதிரிப்பாடின் மனைவியாக இருக்கத் தீர்மானித்துவிட்டாளே! கஷ்டம்! பணத்தின் மேலுள்ள மோகம்தான் இதற்குக் காரணம் என்பதைத் தவிர வேறே எதையும் சொல்ல முடியாது' என்பதாகவும், பிறவற்றைப் பற்றியும் நினைத்துக் கொண்டே சங்கரசாஸ்திரி சாப்பாட்டை முடித்துக் கொண்டு மாதவனின் தகப்பனாரை ஒரு முறை பார்த்து வரலாமென்று தீர்மானித்து கோவிந்தப்பணிக்கரின் வீட்டிற்குச் சென்றார். அங்கு அவர் சென்றபோது கோவிந்தப்பணிக்கர் முந்தின நாள் சாயங்காலம் பொல்பாய்ப் பண்ணைக்குப் போயிருப்பதாகவும், மறுநாள் காலையில்தான் திரும்பி வருவார் என்றும் விவரம் தெரிந்துகொண்டார். அது அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. சாஸ்திரிகள் அந்த வீட்டு மாடி முற்றத்தில் படுத்து உறங்கிப் போனார்.

நம்பூதிரிப்பாடு சாப்பிட்டு முடித்து பூவரங்குக்குச் சென்றார் என்று கூறப்பட்டதல்லவா? செறுசேரிநம்பூதிரியும் கேசவன்நம்பூதிரியும் அவருடன் சென்றிருந்தார்கள். நடுக்கூடத்தைச் சென்றடைந்ததும் நம்பூதிரிப்பாடு ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொள்ள, கேசவன்நம்பூதிரி நம்பூதிரிப்பாடு வந்திருக்கும் விவரத்தைத் தெரிவிக்க இந்துலேகாவின் மாடியறைக்குப் போனார்.

இந்துலேகாவின் மாடியறைக்கு ஏறிச் செல்லவே கேசவன்நம்பூதிரிக்கு தைரியம் வரவில்லை. மாடிப்படியில் பாதி ஏறுவார். பின்னர் திரும்பி இறங்குவார். மறுபடியும் ஏறுவார். மறுபடியும் இறங்குவார். தன் அறையிலிருந்து ஜன்னல் வழியாக அவருடைய இந்தச் செயலைப் பார்த்த அவருடைய மனைவி லட்சுமிக்குட்டியம்மாவுக்கு சங்கடமாக இருந்தது. உடனே மாடிப்படி அருகே சென்று நம்பூதிரியைக் கூப்பிட்டாள்.

லட்சுமிக்குட்டியம்மா: ஏன் இப்படித் தடுமாறுறீங்க? இந்துலேகாவுக்கு பயந்துக்கிட்டு தானே, இல்லே? நான் போய்ச் சொல்றேன். பகல் நேரத்திலே இந்துலேகாவை நம்பூதிரிப்பாடு வந்து பார்க்கிறதுக்கு அவளுக்கு எந்த மறுப்பும் இல்லேன்னு தோணுது. நான் போய்க் கொஞ் சம் சொல்லிப்பார்க்கிறேன்.

என்று லட்சுமிக்குட்டியம்மா சொன்னபோது கேசவன் நம்பூதிரிக்குப் பெருத்த நிம்மதி ஏற்பட்டது. மனைவியை அவ்வாறே செய்யச் சொல்லிவிட்டு மாடிப்படியின் கீழ் நின்றுகொண்டார்.

லட்சுமிக்குட்டியம்மா மாடியைச் சென்றடைந்தபோது இந்துலேகா மாதவனின் கடிதத்தைப் படித்து மகிழ்ந்தபடி நின்றிருந்தாள். அம்மா வருவதைப் பார்த்தபோது,

இந்துலேகா: என்னம்மா, நம்பூதிரிப்பாடு வந்தி ருப்பாரு. அதைச் சொல்ல வந்திருப் பீங்க, அப்படித்தானே?

லட்சுமிக்குட்டியம்மா: அதேதான் கண்ணு. அந்தப் படு பாவி நம்பூதிரிப்பாடு பத்தி நீ இனிமே பயப்படவே வேண்டாம். நேத்து என்னோட அறைக்கு வந்து எப்படிப்பட்ட கித்தாய்ப்பெல்லாம் காண்பிச்சாரு! அப்பாவுக்கும் அந்த ஆளைப் பத்தி நல்ல அபிப் பிராயம் இல்லே. ஆனாலும் நமக்கு

வெளக்கம் வேண்டியிருக்கில்ல? அந்த ஆளு இன்னிக்கோ நாளைக்கோ போயிருவாரு. இப்போ வந்தா நல்ல வார்த்தையாப் பேசு, கொஞ்சம் பியானோ வாசிச்சிக் காட்டு. அந்த ஆளு பிராமணனாச்சே, கேவலப் படுத்தி அவமானப்படுத்தி அனுப்பிச்சதாக எதுக்காகப் பேச்சு வரணும்? அவரு வரட்டுமா?

இந்துலேகா: எனக்கு அவரையோ, இந்த பூ மண்டலத்திலே இருக்கிற வேறே யாரையுமோ எந்த விதத்திலும் அவமானப்படுத்தணும்கிற எண்ணமில்லே. ஆனால் என்னை ஒருத்தர் அவமானப்படுத்த நினைச்சா அதைத் தடுக்காம இருக்க மாட்டேன். அந்த நம்பூதிரிப்பாடு நேத்து என்கிட்ட மரியாதையாப் பேசியிருந்தா நான் நேத்தும், அவருக்குத் தேவையான எல்லா சமயத்திலேயும் பாடவோ பியானோ வாசிக்கவோ சம்மதிச்சிருப்பேனில்ல? அம்மா, எனக்கு கர்வம் இருக்குன்னு நினைக்காதீங்க. தேவையில்லாத விதத்திலே என்னைத் தொந்திரவு படுத்தினாரு. நானும் மனுஷ ஜன்மந்தானே, காமக்குரோதலோபாதிகள் இல்லாத ஒரு ஜடமில்லையே! இன்னிக்கு நம்பூதிரிப்பாடு நல்லா மரியாதையாப் பேசறதா இருந்தா அவரு வரட்டும். பாட்டோ பியானோவோ நான் பாடிக் காட்ட

றேன். அப்படி யில்லாம என்னைப் பெண்டாட்டி ஆக்கிக்கிடணும் கிற எண்ணத் தோட இந்த மாடிக்கு அப்படி இப்படின்னு சம்பந்த மில்லாமப் பேசினா நேத்தைவிட மோசமாப் போக வேண்டி யிருக்கும்.

லட்சுமிக்குட்டியம்மா: நம்பூதிரிமார்களோட குணத்திலே கொஞ்சம் சங்கடம் இருக்கு. குறிப்பா இந்த நம்பூதிரிப்பாடு ஒரு படுக்காளின்னு எல்லாருமே சொல்றாங்க. பைத்தியக்காரங்க கிட்ட யாராவது கோவிச்சிக்கு வாங்களா, கண்ணு?

இந்துலேகா: எல்லா ஜாதிகளிலேயும் இருக்கிற மாதிரி நம்பூதிரிகளில் ரொம்பக் கெட்டிக்காரங்களும் இருக்கி றாங்க. செறுசேரிநம்பூதிரியோட அரை நாழிகை நேரம் பேசிப் பாருங்க—அப்போ சொல்வீங்க இந்த நம்பூதிரிகளெல்லாம் ரொம்ப சாமர்த்தியசாலிங்கன்னு. பைத் தியக்காரங்களோட கோவிச்சிக் கிடணும்னு எனக்கொண்ணும் எண்ணமில்லே. பைத்தியக்காரங்க வரைமுறை இல்லாமப் பேசினா நான் அதைக் கேட்டுக்கிட்டு சும்மா நின்னுக்கிட்டு இருக்க மாட்டேன், அது மட்டும் நிச்சயம்.

லட்சுமிக்குட்டியம்மா: சரி, நான் அவரு வரலாம்னு சொல்லி அனுப்பிடுறேன்.

இந்துலேகா: தொந்திரவுதான். சரி, வரட்டும். என்கிட்ட நேத்து மாதிரி பேச ஆரம்பிச்சா நான் நேத்து மாதிரியே நடந்துக்குவேன்.

லட்சுமிக்குட்டியம்மா: சரி. அவரு ஒரு தடவை வந்திட்டுப் போகட்டும், அப்படித்தானே?

இந்துலேகா: ஆமாம்.

லட்சுமிக்குட்டியம்மாசிரித்தபடி கீழே இறங்கிப் போன போது வெகுளி கேசவன் நம்பூதிரி முன்பு நின்றிருந்த இடத்திலேயே தலையை நிமிர்த்தி மேலே நிலைகுத்திப் பார்த்தபடியே ஒரு சிலையை நிறுத்தி வைத்ததுபோல் நின்றிருந்தார்.

கேசவன்நம்பூதிரி: சம்மதம்தானே, வரச் சொல்லட்டுமா?

லட்சுமிக்குட்டியம்மா: சரி, வரட்டும். ஆனால் நேத்து மாதிரி இந்துலேகாகிட்ட தேவையில்லாம எதுவும் பேசக்கூடாதுன்னு நம்பூதிரிப்பாடுகிட்டச் சொல்லிடணும். இல்லாட்டி நேத்து மாதிரிதான் எல்லாம் நடக்கும்.

கேசவன்நம்பூதிரி: சரி, இப்போ வரச் சொல்லட்டுமா?

லட்சுமிக்குட்டியம்மா: சொல்லிடுங்க.

கேசவன்நம்பூதிரி இந்துலேகாவிடம் விவரம் தெரிவிக்கப் போன பின்னர் நம்பூதிரிப்பாடு செறுசேரியைத் தன்னருகில் உட்காரும்படிக் கூறவே, அவரும் உட்கார்ந்தார். அதன் பிறகு கீழே குறிப்பிடப்படும் ஒரு சிறிய உரையாடல் அவர்களிடையே நடந்தது.

கேசவன்நம்பூதிரி மாடிக்குச் சென்றுவிட்டுத் திரும்பி வராததனால் நம்பூதிரிப்பாடுக்கு நேற்றைப் போல இந்தத் தடவை கொஞ்சம்கூட வருத்தம் ஏற்படவில்லை. தான் இந்துலேகாவின் மாடிக்குச் சென்றால் எப்படி கம்பீரயமாக நடந்துகொள்ள வேண்டுமென்று நினைக்கத் தொடங்கினார். 'நான் நேத்துப் பார்த்தப்போ திகைச்சிப் பரவசமாயிட்டேன்னு இந்துலேகாவுக்குத் தோணியிருக்கு. இன்னிக்கு அதுக்கு நேர் மாறாக நடந்துக்கிடணும். கொஞ்சங்கூட மயங்கிடலேன்னு தெரிய வைக்கணும். அப்போதான் தெரியும் சூக்குமம். எதுக்காக இவளைப் பார்த்து அவ்வளவு மயங்கணும்? பணம் கொடுத்தா எந்தப் பொண்ணுதான் கிடைக்கமாட்டா? எத்தனை பொம்ப

ளைங்களை நான் பொண்டாட்டியாக்கியிருக்கேன்! எத்தனை பேரைப் பார்த்திருக்கேன்! இனியும் எத்தனை பேரைப் பார்க்கப்போறேன்! இந்த ஒருத்திக்கு ஆசைப்பட்டு அசடு வழியறது மகா கேவலம். இன்னிக்குப் பார்த்திடலாம். இன்னிக்கு விட்டுக்கொடுக்கப் போறதில்லே. ரொம்ப வீராப்பா இருக்கணும். வீராப்பு! எல்லாமே வீராப்புதான். நிற்கிற போதும் உட்கார்ந்திருக்கிறபோதும், பேசறபோதும் பேசாம இருக்கிறபோதும், பார்க்கிறபோதும் பார்க்காம இருக்கிறபோதும் எப்போதும் வீராப்புதான். இந்துலேகா பயப்படணும்—தெரிஞ்சிக்கிடட்டும். இவ்வளவு அழிச் சாட்டியம் அவளுக்கு இருக்கும்னா நானும் அதுக்குக் குறைஞ்சவனில்லே. யாரு தோத்துப்போறது, பார்த்திரலாம். பொண்ணு பயந்து நடுங்கி கால்லே வந்து விழுந்திடுவா, சந்தேகமென்ன?' என்பதாக நினைவிலாழ்ந்து வெற்றி அடைந்துவிட்டதாகவே எண்ணி நம்பூதிரிப்பாடு சிரித்துக் கொண்டார்.

செறுசேரிநம்பூதிரிக்கு இந்த நம்பூதிரிப்பாடின் பலவித மான கோமாளித்தனங்களையெல்லாம் பார்த்தும், இந்து லேகாவின் மனதில் ஏற்பட்டிருக்கும் வருத்தத்தை நினைத் தும், தன்னுடைய ஜாதியில் செல்வாக்கும் செல்வமும் கொண்ட ஒரு நபர் இந்த விதமாகப் படுபோக்கிரியும் அசடுமாக இருக்க நேரிட்டுவிட்டதே என்று எண்ணிய போது நம்பூதிரிப்பாடைப் பற்றி எள்ளல் உணர்வு ஏற்ப டாமல் கோபம் கலந்த ஒரு துக்க உணர்வுதான் ஏற்பட்டது. 'ஆ, கஷ்டம்! இவ்வளவு செல்வத்தோடும் குலப்பெருமை யோடும் இருக்கிற இவருக்குப் பூரண யௌவனம் கழிகிற வரைக்கும் யோக்கியமான ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணி வைக்காம கேடுகெட்ட விபச்சாரிகள்கிட்டப் போய் அறிவு இப்படி மழுங்கிப்போச்சி; எந்த சுகத்துக்காக இவர் இவ்வளவு தேடி அலைகிறாரோ அந்த சுகத்தை முறைப்படி அனுபவிக்கிற சக்தியும் சுத்தமான ருசியும் கெட்ட நடத்தைகள் காரணமாக மோசமா அழிஞ்சிபோச்சி; இந்த நிலைமையிலே இவரைப் பார்க்க வேண்டிய தாகிப்போச்சே.' இவ்வாறெல்லாம் நினைத்து செறுசேரி மிகவும் வருந்தினார். அவர் இப்படி நினைத்துக்

கொண்டிருந்த சமயத்தில்தான் நம்பூதிரிப்பாடு மேற்கூறிய வாறு வீராப்புச் சிந்தனையில் இருந்தார். வீராப்பாய் இருக்க முடிவு செய்தவுடன் தன்னுடைய இந்த வீராப்புத் தீர்மா னத்தை செறுசேரியிடம் தெரிவிக்க வேண்டுமென்று நிச்சயித்து நம்பீரிப்பாடு கீழே குறிப்பிட்டவாறு பேசினார்.

நம்பூதிரிப்பாடு: எனக்குப் பொம்பளைங்க மேலே ரொம்ப மயக்கம்னு செறுசேரிக்கு எண்ணம் இருக்குமோ?

இந்தக் கேள்வியைக் கேட்டதும் செறுசேரிநம்பூ திரிக்குச் சிறிது கோபம்தான் ஏற்பட்டது. ஆனாலும் அறி வாளியான அவர் அதை சரிப்படுத்திக்கொண்டு கீழே கூறியவாறு சிறிது கௌரவமாக பதில் அளித்தார்.

செறுசேரிநம்பூதிரி: பொம்பளைங்ககிட்ட ஆம்பிளை களுக்கு மயக்கம் உண்டாகும்னு எனக்கும் தெரியும். ஆனால் அந்த மயக்கம் அரையும் குறையுமாக்ச் சில சமயங்களிலே அபத்தமாகவும் ஏற்படுதுன்னு எனக்குத் தோணுது.

நம்பூதிரிப்பாடு: மயங்கறதிலே என்ன அபத்தமும் மத்ததும்?

செறுசேரிநம்பூதிரி: ரொம்ப இருக்கு. ஆணுக்கும் பெண்ணுக்கும் அன்னி யோன்னிய உணர்வு சமமாக ஏற்பட்டு ஒருத்தருக்கொருத்தர் மயங் கினால் அது முறையான காதல்னு நான் சொல்வேன். ஆணுக்கும் பெண்ணுக்கும் பரஸ்பரமா ஏற் படாம ஒருத்தருக்கு மட்டும் அன்னி யோன்னிய உணர்வு ஏற்பட்டு அடுத்தவருக்கு ஏற்படலேன்னா அந்தக் காதலை அபத்தம்னு நான் சொல்வேன்.

நம்பூதிரிப்பாடு: ராவணனுக்கு ரம்பை மேலே ஏற்பட்ட காதல் அபத்தமோ?

செறுசேரிநம்பூதிரி: அதை ரம்பைகிட்டதான் கேட்கணும். ரம்பை ராவணனோட காதலை ஏத்துக்கிட்டு அவளும் காதலிச்சாளான்னு எனக்குத் தெரியலே.

நம்பூதிரிப்பாடு: ராவணன் ரம்பையை அடைஞ்சிட்டானே.

செறுசேரிநம்பூதிரி: அடைஞ்சிருக்கலாம்.

நம்பூதிரிப்பாடு: அப்படியானால் அதை எப்படி சாதிக்க முடிஞ்சது?

செறுசேரிநம்பூதிரி: முறைகேடான காதல் ஒருக்காலும் நிறைவேறாதுன்னு நான் சொல்லலே. ஒரு பொம்பளையோட சகவாசம் ஏற்படுறதுக்கு அந்தப் பொம்பளைக்கும் அந்த எண்ணம் உண்டானால் மட்டுமே நடக்கும்னு சொல்றேன்.

நம்பூதிரிப்பாடு: அப்படியெல்லாம் இல்லே.

செறுசேரிநம்பூதிரி: இல்லே.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி சொன்னது எனக் கொண்ணும் புரியலே. முறைகேடான காதல் நிறைவேறாதுன்னுதானே இப்போ சொன்னது?

செறுசேரிநம்பூதிரி: அப்படி நான் சொல்லலே. திருடங்களும் கொள்ளைக்காரங்களும் சில சமயங்களிலே அவங்க நினைச்சதுபோல கெவிச்சி கொண்டு போறதில்லையா? அது மாதிரி விருப்பமில்லாத பொண்ணையோ ஆணையோ கைப்பத்தறதுன்னு வச்சிக்கலாம். ஆனால் ஒரு பக்கம் சம்மதிக்காம இருக்கிறப்போ அப்படி வலுக்கட்டாயப் படுத்திக் கைப்பத்தறது சாரமில்லாத நடவடிக்கைதான்.

நம்பூதிரிப்பாடு: எது சாரமில்லே?

செறுசேரிநம்பூதிரி: சாரமில்லாததுதான். அப்படிச் சாதிக்கிறதிலே ஒரு சாரமுமில்லே. அப்படி நடந்துக்கிடுற ஆணோ பெண்ணோ மிருகத்துக்குச் சமம். மாடுகள், பன்றிகள் இதெல்லாம் மாதிரி.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா ராவணன் ஏன் சீதையைக் காதலிச்சான்? சீதைக்கு ராவணன்கிட்ட நாட்டம் இல்லேன்னுதானே ராமாயணத்திலே சொல்லியிருக்கு?

செறுசேரிநம்பூதிரி: அதுதான்; அதேதான். ராவணனுக்கு சீதைமேலே விருப்பம் இருந்தது. சீதைக்கு ராவணனிடத்திலே காதல் கொஞ்சம்கூட இல்லேன்னு ராவணன் தெரிஞ்சிக்கிட்டதனாலே அப்படி ஒரு நாட்டத்தை உண்டாக்குறதுக்காக எப்படியெல்லாமோ ராவணன் முயற்சி பண்ணினான்—பலிக்கலே. பின்னாலே சீதையோட கோபத்துக்கு ஆளானான். ராவணன் அதனாலேயே அழிஞ்சி முடிஞ்சான். ஆனாலும் சீதைக்குத் தன்மேலே பிடிப்பு உண்டாகிறதுக்கு முன்னாலே சீதையைத் தொடுறதுக்கு ராவணனுக்கு விருப்பமில்லே. ராவணன்கிட்ட பல குறைபாடுகள் இருந்தாலும், ராமாயணத்திலே உள்ளபடி சீதைகிட்ட அவன் பேசின பேச்சிக்களிலேருந்து அறிவிலே தெளிவு குறைவானவன்னு எனக்குத் தோணலே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா ஒரு பொண்ணைப் பார்த்து ஆசைப்பட்டா ராவணன் செஞ்ச எல்லா வேலைகளையும் செய்யலாம்தானே?

செறுசேரிநம்பூதிரி: ராவணன் அனுபவிச்ச மாதிரி கஷ்டங்களை அனுபவிக்க முடிவு பண்ணிட்டாலும், ராவணனைப் போல சக்தி படைச்சிருந்தாலும் அப்படியெல்லாம் செய்யலாம்.

நம்பூதிரிப்பாடு: சரி, சம்மதம். ஆனால் ஒரு ஆம் பிளைக்கு ஒரு பொம்பிளையைப் பார்த்துத் தீராத மோகம் உண்டா யிரிச்சி. அந்தப் பொம்பிளைக்கு அந்த ஆள்மேலே மோகம் உண்டா கலே. இப்படி இருந்தா அந்த ஆம் பிளைக்கு மோகத்தைத் தீர்த்துக்கிட என்ன வழி இருக்கு?

செறுசேரிநம்பூதிரி: 'மோகம்' 'மோகம்'னு நீங்க சொல்ற தோட தாத்பரியம் எனக்கு சரியாப் புரியலே. 'பலவந்தம்' என்கிறது தான் இந்த வார்த்தைக்கு அர்த் தம்னு ஆகும்னா, பொம்பிளைக்கு அப்படிப்பட்ட நாட்டம் இல் லேன்னு தெரிஞ்சா ஆம்பிளை மன உறுதியோடத் தன்னோட நாட் டத்தை அடக்கி ஜெயிச்சி அந்தப் பொம்பிளை மூலமா கிடைக்க இருக்கிற சுகானுபவ ஆசையை விட்டொழிக்கணும்.

நம்பூதிரிப்பாடு: எதுக்காக ஆசையை விடணும்? கிடைக்குமான்னு சோதிச்சிப் பார்த்திர வேண்டாமா?

செறுசேரிநம்பூதிரி: கிடைக்குமான்னு சோதிக்க வேண்டாம். நாட்டம் இருக்கு

தான்னுதான் சோதிக்கணும். அது இல்லேன்னா அப்படியே விட்டிரணும்.

நம்பூதிரிப்பாடு: நாட்டம் இல்லேன்னாலும் வசப்படுத்த முடிஞ்சா?

செறுசேரிநம்பூதிரி: அப்படி பலவந்தப்படுத்தி இச்சைக்குள்ளாக்கினா அது மிருக குணம்னு நான் சொன்னேனில்ல?

நம்பூதிரிப்பாடு: நீங்க இப்படிச் சொல்றது அசட்டுத்தனம்னு எனக்குத் தோணுது. ஆம்பிளை விருப்பத்துக்கு ஒரு பொம்பிளையை வசப்படுத்தின பிறகு அவளுக்கு அவன்கிட்ட நாட்டம் இருக்கா இல்லையான்னு எதுக்காக யோசிக்கணும்?

செறுசேரிநம்பூதிரி: நான் சொல்றதைப் புரிஞ்சிக்குங்க. பொம்பிளை சுகத்தை ஆம்பிளை அடைஞ்சான்னு சொல்லணும்னா அந்தப் பொம்பிளையை அவள் காதலிக்க வச்சி சுகத்தை அனுபவிக்கணும். ஒரு பொம்பிளையைத் தான் விரும்பி அடையறது என்கிறதைவிட அவ தன்னை விரும்பி வந்து சுகத்தை அனுபவிக்கிறான்னு இருக்கிறதுதான் ஆம்பிளைக்கு சுகானுபவத்தை உண்டாக்கும். அப்படி தான் ஒருத்தனுடன் சுகம் கண்டதாக ஒருத்தி சொல்றது அவனை அவ காதலிச்சி சுகம் அனுபவிச்சா மட்டும்தான். அந்த சுகானுபவம் பரஸ்பரம் பூர்த்தியடையணும்னா பரஸ்பரம் தீவிரமான காதல் உண்டாகணும். அப்படி இல்லாம பொம்பிளை சுகம் அடைய விரும்புறவங்க

மிருகங்கதான்—பலவந்தப்படுத்தி சாதிச்சா அது சும்மா பேருக்கு இணைஞ்ச மாதிரிதான்.

நம்பூதிரிப்பாடு: கொடுமை! இது மகா ரோதனை. இப்படியெல்லாம் இருந்தா ஒருத்தன் பொம்பிளைங்க பலபேர்கிட்ட சுகத்தைக் காணவே முடியாது, நிச்சயமா.

செறுசேரிநம்பூதிரி: சரி. சுருக்கமாச் சொன்னா ஒரு ஆம்பிளைக்கு ஒரு பொம்பிளை—ஒரு பொம்பிளைக்கு ஒரு ஆம்பிளை. அப்படித்தான் சிருஷ்டி இயற்கையா அமைஞ்சிருக்கு.

நம்பூதிரிப்பாடு: ஸ்ரீகிருஷ்ணனுக்கு எத்தனை மனைவிங்க இருந்தாங்க?

செறுசேரிநம்பூதிரி: எனக்குத் தெரியாது.

நம்பூதிரிப்பாடு: பதினாறாயிரத்தெட்டு மனைவிங்க இருந்தாங்க. ஸ்ரீகிருஷ்ணனுக்கு ரசிகத்தன்மை இல்லேன்னு நீங்க நினைக்கிறீங்களா?

செறுசேரிநம்பூதிரி: பதினாறாயிரத்தெட்டு மனைவிங்க இருந்தாங்க என்கிறது சரிதான்னாலும், ஸ்ரீகிருஷ்ணன் நம்ம மாதிரி ஒரு மனுஷனா இருந்தாருன்னாலும், அவரோட புத்தியிலே ரசிகத்தனம் இல்லேன்னும், அவரு பெரிய விடலையா இருந்தார்னும் நான் சொல்வேன். ஆனால் எந்த கிரந்தங்களிலிலேருந்து நாம அவருக்கு இவ்வளவு அதிகமா மனைவிங்க இருந்தாங்கன்னு தெரிஞ்சிக்கிட்டோமோ அதுங்களிலேருந்துதான் அவரு மனுஷன் இல்லேங்கறதையும் தெரிஞ்சிக்கிடுறோம். ஸ்ரீகிருஷ்ணன் கோவர்த்தன

மலையைக் கையிலே தூக்கி ஏழு நாள் குடை மாதிரி பிடிச்சி பசுக்களையும் இடையர்களையும் காப்பாத்தினதாயும், விஷ நீரினாலே செத்துப்போன பல ஜீவராசிகளைத் தன்னோட ஒரு கடைக்கண் பார்வையாலே உயிர்ப்பிச்சதையும், மற்றும் மனித சக்திக்கு அசாத்தியமான பல காரியங்களைச் செய்ததாயும் இந்த கிரந்தங்களிலேருந்து தெரிஞ்சிக்கிடுறோம். இந்த மாதிரியெல்லாம் செய்றதுக்கு சக்தியுள்ள ஒருத்தருக்கு இப்போ சொன்னபடி சாதாரண மனுஷங்களுக்குள்ள கட்டுப்பாடும் நியதிகளும் பொருந்துமான்னு நான் சந்தேகப்படுறேன்.

நம்பூதிரிப்பாடு: ஆம்பிளைக்கு ஒரு பக்கம் நாட்டம் உண்டாயிரிச்சின்னா பொம்பிளைக்கு அந்த மாதிரி உண்டாகாம இருக்காது. நான் பல பொம்பிளைங்ககிட்ட சுகம் அனுபவிச்சிருக்கேன். எல்லாப் பொம்பிளைகளுக்கும் என்மேலே நாட்டம் உண்டு—செறுசேரிக்கு இதெல்லாம் தெரியாதாக்கும்? என்னவாம் இன்னிக்கு ஒரு புது மாதிரியாப் பேசறீர்? எல்லாப் பொம்பிளைகளுக்கும் என்னைப் பிடிக்குமாக்கும்.

நம்பூதிரிப்பாடின் பேச்சைக் கேட்டு செறுசேரி சிரித்தார். நம்பூதிரிப்பாடைப் பற்றி எப்போதும் இருந்த பரிகாச உணர்வுதான் மீண்டும் தோன்றிக் கஷ்டப்படுத்தியது.

நம்பூதிரிப்பாடு: என்ன செறுசேரி எதுவும் பேசலே? எல்லாப் பொம்பிளைகளுக்கும் என்னைப் பிடிச்சிருக்குங்கிறதிலே சந்தேகமா, யோசனையா?

செறுசேரிநம்பூதிரி: உங்களைப் பத்தி நான் எதுவும் யோசிக்கலே. நான் சாதாரண மனுஷங்களோட விவகாரத்தைப் பத்தித்தான் சொன்னேன்.

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருந்தபோதுதான் கேசவன்நம்பூதிரி ஓடி வந்து, "இனி மாடிக்குப் போகலாம்" என்று சொன்னார்.

நம்பூதிரிப்பாடு: ஆகட்டும்—கொஞ்சம் நில்லும். ஏன் இவ்வளவு அவசரம்? என்னோட நேரத்தையும் அனுசரிக்க வேண்டாமா?

கேசவன்நம்பூதிரி: நேரமாயிரிச்சின்னுதான்.

கேசவன்நம்பூதிரி வியப்பிலாழ்ந்தார்—இதென்ன விவகாரம்? இவர் ஒரு பசப்புக்கார ஆசாமிதான்! இவ்வளவும் மனதுக்குள் நினைக்கத்தான் முடிந்தது. அப்போது,

நம்பூதிரிப்பாடு: சரி, இப்போ போகலாம். கறுத்தேடம் வர வேண்டாம், நான் மட்டும் போறேன். செறுசேரி இங்கேயே படுத்துத் தூங்கும்.

என்று சொல்லிவிட்டு நம்பூதிரிப்பாடு அதிகாம்பீர்யத்துடன் துப்பட்டா முதலியன அணிந்து இந்துலேகாவின் மாடிக்குச் சென்றார். இந்துலேகா முந்தின நாளைப் போலவே குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்ட கைதியைப் போல நாற்காலியைப் பிடித்தபடி நின்றிருந்தாள். நம்பூதிரிப்பாடு அறைக்குள் சென்று இந்துலேகாவைப் பார்த்தார். பார்த்த மாத்திரத்திலேயே அந்த இளிச்சவாயனின் உறுதிப்பாடு காம்பீர்யமும் ஆக எல்லாமே ஓடி ஒளிந்தன. பல்லை இளித்தார். 'சிவ—சிவ! அழகியான உன்கூட வாழாமல் என்னால் இந்த ஜன்மத்திலே இருக்க முடியாது. என்ன முகம்! என்ன நிறம்! என்ன கூந்தல்! என்ன கண்கள்! சிவ சிவ!

நாராயணா! தொலைஞ்சேன், தொலைஞ்சேன். எனக்கு தைரியமும் இல்லே, மனத்திடமும் இல்லே. இந்திரனுக்கு முனிவரோட மனைவியைப் பார்த்ததும் மனத்திடம் எங்கே போச்சி?—ராவணன் ரம்பையைக் கண்டபோது?' இந்து லேகாவைப் பார்த்தவுடன் இப்படியெல்லாம் நம்பூதிரிப் பாடுக்குத் தோன்றினாலும் இரண்டு மூன்று நிமிடங்கள் நாற்காலியில் உட்கார்ந்த பின்னர் ஒரு வழியாக தைரி யத்தை வரவழைத்துக்கொண்டு பேசினார்.

நம்பூதிரிப்பாடு: "வீரர்களுக்குப் புல்லும் மகளிரும் சமம்" என்கிற சொலவடையை இந்துலேகா படிச்சதுண்டா?

இந்துலேகா: (அடிக்க முடியாமல் சிரித்துக் கொண்டு) நான் அதை வாசிச்சதில் லேன்னாலும் இப்போ நீங்க சொல்லிக் கேட்டிட்டேனே. பிர மாதமான சொலவடை.

இந்துலேகா உள்ளுக்குள் அடிக்க முடியாத வண்ணம் மனோகரமான குரலில் குலுங்கிக் குலுங்கிச் சிரித்த நேர்த் தியைப் பார்த்த மாத்திரத்தில் நம்பூதிரிப்பாடு மிகவும் முயன்று ஏற்படுத்தி வைத்திருந்த மனோதிடம் எங்கேயோ போய்விட்டது. ஏற்கெனவே கோவிந்தனுடன் பேசி முடி வெடுத்த தீர்மானங்களும் ஆலோசனைகளும் எல்லாமே மறந்து மனது இந்துலேகாவின் மீது படிந்து இலயித்தது.

எனவே, இவ்வாறு கூறினார்:

நம்பூதிரிப்பாடு: இந்துலேகா மறுபடியும் உரக்கச் சிரிக்கணும். சிரிக்கிறதுக்குக் கூட இங்கிலீசிலே சொல்லித் தர்றாங் களா? அப்படிச் சிரிக்கிறது ரொம்ப அழகா இருக்கு. இன் னொரு தடவை சிரிக்கணும்.

இந்துலேகா சிரித்துப் பரவசப்பட்டுக் கண்ணீர் துளிர்த்ததால் அதைத் துடைத்துக் கொள்ள உள்ளே போனாள்.

நம்பூதிரிப்பாடு: வேண்டாம்—ஐயய்யோ! உள்ளே போய்ட்டியா? நேத்து மாதிரி ஆற

அமரப் பேச இன்னிக்கு முடியாது போலிருக்கு. பின்னே எதுக்காக என்கிட்ட வரச்சொல்லிச் சொன்னது?

இந்துலேகா: இல்லேல்லே—இதோ நான் வந்திர்றேன்.

என்று சொல்லிவிட்டு முகத்தைக் கழுவிக்கொண்டு மீண்டும் வெளியே வந்தாள்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு எவ்வளவு வயசாச்சி?

இந்துலேகா: பதினெட்டு.

நம்பூதிரிப்பாடு: எனக்கு எவ்வளவு வயசாயிருக்கும்னு உனக்குத் தோணுது?

இந்துலேகா: பார்த்தவுடனே வயசை கணிச்சிச் சொல்றதுக்கு எனக்கு சாமர்த்தியம் உண்டுன்னு தோணலே. அதனாலே என்னாலே சொல்ல முடியலே.

நம்பூதிரிப்பாடு: இருந்தாலும் உத்தேசமா சொல்லலாமில்ல?

இந்துலேகா: உத்தேசமாச் சொன்னா சரியாயிருக்காது.

நம்பூதிரிப்பாடு: பரவாயில்லே, உத்தேசமாச் சொல்லு.

இந்துலேகா: எப்படியிருந்தாலும் சொன்னாப் போதும்னா சொல்றேன். ஒரு அம்பது வயசு தாண்டியிருக்கும்னு எனக்குத் தோணுது.

நம்பூதிரிப்பாடு: சீ! அபத்தம்! எனக்கு வாலிப வயசு கடந்து போச்சின்னா தோணுது? கஷ்டம்! இதென்ன கதையாயிருக்கு! அம்பது வயசாயிடுச்சா? நிறைஞ்ச வாலிபமா இருக்கிறவங்களை அடையாளம் கண்டு பிடிக்க முடியாதா, என்ன?

இந்துலேகா: நான் ஏற்கெனவே சொன்னே னில்ல, எனக்கு வயசு கணிக்கத் தெரியாதுன்னு.

நம்பூதிரிப்பாடு: நிறைஞ்ச வாலிப வயசுள்ள ஒரு ஆம்பிளையைப் பார்த்தா இன்னுமா தெரிஞ்சிக்க முடியாது? பதினெட்டு வயசான பிறகும் தெரிஞ்சிக்க முடியாதா?

இந்துலேகா: எனக்குத் தெரிஞ்சிக்க முடியலே. நிறைஞ்ச வாலிப வயசுன்னு சொன்னாலும் என்னன்னு எனக்குப் புரியலே.

நம்பூதிரிப்பாடு: இங்கிலீசு படிச்சதனாலேதான் இதெல்லாம் உனக்குப் புரியலே. சந்தேகமே இல்லே.

இந்துலேகா: அதனாலேதானிருக்கும்.

நம்பூதிரிப்பாடு: நான் சொந்தத்திலே இன்னும் கல் யாணம் பண்ணிக்கிடல்லே.

இந்துலேகா: சரி, நல்ல காரியம்தான்.

நம்பூதிரிப்பாடு: வீட்டுச் சந்ததிக்காக வேண்டி தம்பி மாருங்க சொந்தத்திலே முறைப்படி யாகக் கல்யாணம் பண்ணிக் கிட்டாங்க. நான் எப்பவும் ரொம்ப சந்தோஷமா காலம் கழிச்சிக்கிட் டிருக்கேன். சொந்த ஜாதியிலே முறைப்படிக் கல்யாணம் பண்ணிக்கிட்டா நம்பூதிரிமார் களுக்கு சுகமெல்லாம் கைவிட்டுப் போன மாதிரிதான். நான் இது வரைக்கும் நிலையா யாரையும் பெண்டாட்டியா வைச்சிக்கிட்ட தில்லே. இந்துலேகா ஏன் எதுவும் பேசல்லே?

இந்துலேகா: நீங்க உங்க சொந்த விவகாரங் களைச் சொல்லிக்கிட்டிருக்

கறப்போ நான் குறுக்கே என்ன சொல்றது?

நம்பூதிரிப்பாடு: நான் நேத்து அனுப்பிவச்ச சுலோகம் கேட்கறியா? நான் சொல்றேன்.

இந்துலேகா: வேண்டாம்—சங்கடப்படாதீங்க.

நம்பூதிரிப்பாடு: என்ன சங்கடம்? சுலோகம் சொல்றது ஒரு ரசணையில்லே?

இந்துலேகா: அதெப்படி?

நம்பூதிரிப்பாடு: அப்படி நினைக்கிறது இங்கிலீசு படிச்சதனாலேதான்.

இந்துலேகா: இருக்கலாம்.

நம்பூதிரிப்பாடு: இங்கிலீசு படிச்சாலே சிருங்கார ரசம் வராது, நிச்சயம்.

இந்துலேகா: ஆமாம், வரவே இல்லே.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவுக்கு நல்ல சிருங்கார ரசம் இருக்கு.

இந்துலேகா: இல்லேன்னு எனக்குத் தோணுது.

நம்பூதிரிப்பாடு: நைடதம் படிச்சதுண்டா?

இந்துலேகா: இல்லே.

நம்பூதிரிப்பாடு: நைடதம்தானே பொண்ணுங்க படிக்க வேண்டியது? நைடதத்திலே ஒரு சுலோகம் சொல்லட்டுமா?

இந்துலேகா: வேண்டாம். சும்மா சங்கடப்படா தீங்க.

நம்பூதிரிப்பாடு: இதென்ன விவகாரம்! சுலோகம் சொல்லணும்னு நினைக்கிறப்போ வெல்லாம் எதுக்காக சங்கடப்படா தீங்கன்னு சொல்றே?

இந்துலேகா: சங்கடம் ஏற்படறதனாலேதான்.

நம்பூதிரிப்பாடு: உனக்குக் கல் பதிச்ச தோடுதான் நல்ல பொருத்தம்.

இந்துலேகா: சரி.

நம்பூதிரிப்பாடு: உன்கிட்ட கல் பதிச்ச தோடு இருக்கா?

இந்துலேகா: என் கைவசம் இல்லே.

நம்பூதிரிப்பாடு: நான் உனக்காக ஒரு ஜோடி செய்யச் சொல்லியிருக்கேன். விசேஷமான கல்லுங்க என்கிட்ட இருக்கு.

இந்துலேகா: எனக்காகச் செய்யச் சொல்றதுக்குக் காரணமும் தேவையும் இல்லையே.

நம்பூதிரிப்பாடு: நான் இங்கே வந்ததே எனக்குக் கடுதாசு வந்ததாலேதான்.

இந்துலேகா: சரி.

நம்பூதிரிப்பாடு: சம்பந்தம் பண்ணிக்க வரச் சொல்லி எழுதியிருந்தது.

இந்துலேகா: யாரை? கேசவன்நம்பூதிரியை சம்பந்தம் பண்ணிக்கவா?

நம்பூதிரிப்பாடு: விளையாட்டெல்லாம் வேண்டாம். எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு.

இந்துலேகா: சரி.

நம்பூதிரிப்பாடு: என்னது, வருத்தமா இருக்கிறது சரிதான்னு சொல்றியா?

இந்துலேகா: அப்படித்தானே சொன்னீங்க?

நம்பூதிரிப்பாடு: இதோ இருக்கே ஒரு பெரிய பெட்டி, அது என்ன? சங்கீதப் பெட்டியா?

இந்துலேகா: ஆமாம்.

நம்பூதிரிப்பாடு: இது எப்படின்னு ஒருதடவை வாசிச்சிக் காட்டறயா?

இந்துலேகா "அப்படியே" என்பதாகச் சொல்லிவிட்டு பியானோவை இசைக்கத்தொடங்கினாள்.

நேற்றையதும் இன்றையதும் ஆன உரையாடல்களில் இந்துலேகாவின் போக்கு இரண்டு விதங்களாக இருப்பதாக என்னுடைய வாசகர்களுக்குத் தோன்றலாம். நேற்றைய இந்துலேகாவுக்கு இவருடைய சுபாவமும் நிலைமையும் இன்றுபோல் புரிந்திருக்கவில்லை. தன்னைத் தட்டிப் பறித்துக்கொண்டு போக அதிகுபேரனான ஒரு மனிதர்

வந்திருக்கிறார். சோதித்துப் பார்ப்பதிலான எரிச்சலும் கோபமும் நேற்றையக் குழப்பத்தில் இருந்தன. இன்றைக்கு அந்த நிலை மாறிவிட்டது. தன்னுடைய தாத்தாவுக்கு இவர் மீது நல்ல அபிப்ராயம் இல்லையென்றும், இனி இவரைத் தன்னெதிரில் கொண்டு வந்து சோதிக்க மாட்டார் களென்றும் இந்துலேகாவுக்கு தெரிந்துவிட்டது. மேலும், இந்துலேகா தனக்குக் கிடைக்க மாட்டாள் என்பதாகவே இவருக்கே ஒரு நம்பிக்கை வரத் தொடங்கிவிட்டது என்பதாக இவருடைய பேச்சிலிருந்தே புரிந்துகொண்டு விட்டாள். எனவே இன்று மொத்தத்தில் நம்பூதிரிப்பாடின் கதை பரிகாசத்துக்குரியதாகிவிட்டது. அது மட்டுமல்ல, இவருடைய அறிவாற்றல் குறைவும் சபல புத்தியும் கண்டு இந்துலேகாவுக்குப் பரிதாப உணர்வும் ஏற்பட்டது. எந்த விதத்திலும் இந்துலேகாவுக்கு நம்பூதிரிப்பாடின் புத்தி சுபாவம் கண்டு கழிவிரக்கம்தான் இன்றைய உரை யாடலுக்குப் பின்னர் ஏற்பட்டது. 'பாவம்! இவர் இவ்வளவு அறிவில்லாதவராயிருக்கிறாரே' என்ற தோன்றிற்று.

பியானோ வாசிக்கத் தொடங்கியபோது மாடியின் கீழே முற்றத்திலும் மதிலின் மேலும் குளக்கரையிலும் ஆட்கள் குழுமத் தொடங்கினர்கள். வழக்கப்படியாகச் சில பட்டர்களும் பிறரும் மாடியறை முற்றத்தில் உட்கார்ந்து வாசிப்பைக் கேட்பதற்காகப் படியேறச் சென்றபோது கேசவன்நம்பூதிரி மாடிப்படியில் ஒரு பாராக்காரனைப் போல நின்றுகொண்டு, "யாரும் ஏறாதீங்க, ஏறாதீங்க" என்று சொல்லித் தடுத்து நிறுத்தினார். வழி மறிக்கப்பட்டுத் திரும்பியவர்கள் குளக்கரையில் வந்து நின்று கேசவன் நம்பூதிரியையும் மற்றவர்களையும் நிந்திக்கத் தொடங் கினார்கள்.

ஒரு பட்டர்: பகல் நேரத்திலே புருஷனும் பொண்டாட்டியும் இருக்கிற அறை யிலே பாட்டு கேட்கப் போறதிலே என்ன தப்பு?

ஒரு நாயர்: நம்பூதிரிப்பாடுக்கு வேறே ஆள் யாரும் உள்ளே இருக்கிறது பிடிக்காது. அப்படியிருக்க

எதுக்காக நாம அவரைத் தொந்திரவு பண்ணணும்?

ஒரு பட்டர்: என்னங்காணும், மத்தவங்க இந்துலேகாவோட பாட்டு கேட்கப் போனால் நம்பூதிரிப்பாடுக்கு என்ன நஷ்டம்?

ஒரு நம்பூதிரி: புதுப் பெண்டாட்டியில்ல, அப்படித்தானிருக்கும்.

இப்படி ஆளுக்கு ஆள் புறம் பேசிக்கொண்டிருந்த போது சங்கரசாஸ்திரிகள் விழித்தெழுந்து கோவிந்தப் பணிக்கரின் வீட்டிலிருந்து இறங்கி மெதுவாகக் கோயிலை நோக்கிப் புறப்பட்டார். போகும் வழியில் ஆட்கள் மேற் குறிப்பிட்டபடிப் பேசுவதையும் கூப்பாடு போடுவதையும் கேட்டார். இந்துலேகாவின் மாடி அறையிலிருந்து பியானோ வாசிக்கப்படுவதையும் கேட்டார். எதுவும் பேசாமல் நேராகக் கோயில் நோக்கி நடந்தார். போகும் வழியில் கோவிந்தன்குட்டிமேனோனைத் தேடினார். கோவிந்தப் பணிக்கருடன் சேர்ந்து அவரும் பொல்பாயிப் பண்ணைக்குப் போயிருப்பதாகக் கேள்விப்பட்டு சாஸ்திரிகள் மிகுந்த வருத்த மேலீட்டால் நிலைகுலைந்து கோயிலுக்குப் போய்ப் படுத்தார். அன்றைக்கே ஊர் திரும்பிவிட வேண்டுமென்று தீர்மானித்தார்.

ஒரு பத்து நிமிட நேரம் பியானோ வாசிப்பு முடிந்த நேரம்.

நம்பூதிரிப்பாடு: இனிமே போதும். வலிக்கும் மிருதுவான கையாலே எவ்வளவு நேரம் வாசிக்கிறது!

இந்துலேகா எகத்தாளமாக ஒரு முறை பார்த்தாள்.

நம்பூதிரிப்பாடு தன்னுடைய வெள்ளிச் செல்லத்தையும் தங்கப் பன்னீர்ச் செம்பையும் கொண்டு வருமாறு பணித்தார். கொண்டு வந்ததும் இந்துலேகாவிடம்:

நம்பூதிரிப்பாடு: இந்தப் பெட்டியைப் பாரு. நல்லா இருக்கா?

இந்துலேகா பெட்டியை வாங்கிப் பார்த்தாள். பன்னீர்ச் செம்பையும் வாங்கிப் பார்த்தாள். "ரொம்ப நல்லா இருக்கு" என்று சொல்லிக் கீழே வைத்தாள்.

நம்பூதிரிப்பாடு: இது தேவைப்பட்டா எடுத்துக்கோ.

இந்துலேகா: எனக்குத் தேவை இல்லே.

நம்பூதிரிப்பாடு: எடுத்துக்கோ. ஒண்ணும் நினைக்க மாட்டேன்.

இந்துலேகா: எனக்குத் தேவை இல்லே.

நம்பூதிரிப்பாடு: நான் இந்துலேகாவைத் தவிர வேறே எந்தப் பெண்ணையும் விரும்பலே.

இந்துலேகா: அப்படியா!

நம்பூதிரிப்பாடு: அதை ஒப்புத்துக்கிடுறியா?

இந்துலேகா: ஒப்புத்துக்கிடுறேன்.

நம்பூதிரிப்பாடு சிரித்தபடி எழுந்து நின்றார். மேலே எழும்பிக் குதித்தார்.

இந்துலேகா: இது என்ன கூத்து,

நம்பூதிரிப்பாடு: கூத்தா? மகா பாக்கியம் கிடைச்சிருக்கு எனக்கு. நான் நாட்டியமில்ல ஆடணும்! எனக்கு இந்துலேகா கிடைச்சிடாளில்ல, என்னோட வேலை செலிச்சிருச்சில்ல?

இந்துலேகா: இந்த மாதிரி ஏடாகூடமாப் பேசக் கூடாது. நான் இந்த ஜன்மத்திலே உங்களுக்குப் பெண்டாட்டியா இருக்க மாட்டேன். என்னை நீங்க வசப்படுத்த நினைச்சிருந்தா அதுக்கு நான் பொறுப்பில்லே. நீங்க இனிமேலே என்கிட்ட இது மாதிரி ஒரு வார்த்தை பேசினாலும் நான் உங்களை ஒருக்காலும் பார்க்கக்கூட மாட்டேன். எனக்கு வேறே வேலை இருக்கு.

என்று சொல்லிவிட்டு இந்துலேகா உள்ளே போய் விட்டாள். நம்பூதிரிப்பாடு மறு கணமே படியிறங்கிப் போய்விட்டார்.

படி இறங்கி முடிக்கும் வரை பாதிப்பினால் சங்கடப் பட்டாரா—சந்தேகம். அப்போது மனதில் முதலாவதாக

லட்சுமிக்குட்டியம்மாவும், இரண்டாவதாக காலையில் பார்த்த பெண்ணும் நினைவுக்கு வந்தார்கள். மாடிப்படி கீழே வந்து சேர்ந்ததும் கோவிந்தனைத் தேடினார். கோவிந்தன் வந்ததும் ரகசியம் பேசிக் கொண்டார்கள். அதன் விவரம்:

நம்பூதிரிப்பாடு: என்ன கோவிந்தா, எல்லாம் ஏற்பாடு பண்ணியாச்சா?

கோவிந்தன்: அடியேன் இதுவரைக்கும் யார் கிட்டேயும் சொல்லலே. அப்படிப் பேச முடியலே. அடியேன் நினைக்கிறது, எஜமானே பஞ்சு மேனோனைக் கூப்பிட்டு இதைப் பத்தி ரகசியமா ஒரு தடவை பேசினா எந்த இடைஞ்சலும் இருக்காதுன்னு.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா பஞ்சுவைப் கூப்பிடு, சொல்லிறலாம். இந்துலேகாவோட சங்கதி முடிவாயிரிச்சி. இந்த ஜன்மத்திலே அவ என் பெண்டாட்டியா இருக்க மாட்டா.

கோவிந்தன்: சிவ சிவ! என்ன கேவலம் இது! இப்படியாக அடாவடிப் பொண்ணுங்களை நான் கேள்விப் பட்டதே இல்லே. அவ கண் முன்னாலேயே கல்யாணியை நாளைக் காலையிலே எஜமான் கூட்டிக் கிட்டுப் போகணும்கிறதுதான் அடியேனோட பிரார்த்தனை.

நம்பூதிரிப்பாடு: சரி! கில்லாடி! சரி, பஞ்சுவைக் கூப்பிடு.

கோவிந்தன்: எஜமான் உங்க மாடியிலே போய் இருக்கிறதுதான் நல்லது. பஞ்சு மேனோனை அடியேன் அங்கே கூட்டிக்கிட்டு வர்றேன். பஞ்சு மேனோன் வர்றப்போ செறுசேரி

நம்பூதிரியும் கேசவன்நம்பூதிரியும் அங்கே இருக்கக் கூடாது. எல்லாமே ரகசியமா இருக்கணும்.

என்று சொல்லி கோவிந்தன் பஞ்சுமேனோனைத் தேடிச் சென்றான்.

நம்பூதிரிப்பாடு கேசவன்நம்பூதிரியைப் கூப்பிட்டு, தான் இருக்கும் அறைக்குத் தென்புறத்தில் இருக்கிற அறையில் இருக்க வேண்டும்; சில காரியங்களைப் பற்றிப் பேச வேண்டியிருக்கும்; தான் கூப்பிடும் வரை எங்கேயும் போகக் கூடாது என்று சொல்லி அங்கே இருக்கச் செய்தார். இதுவும் கோவிந்தனுடைய ஒரு வேலையாகத் தான் இருந்தது. கேசவன்நம்பூதிரி மிகவும் சோகத்துடன் கடவுள் பெயரை உச்சரித்துக்கொண்டு தெற்கு அறையில் உட்கார்ந் திருந்தார். சிறிது கழித்துத் தூங்கியும் போனார்.

கோவிந்தன் பஞ்சுமேனோனைத் தேடிச் சென்ற போது நேரம் மூன்று மணி ஆகியிருந்தது. பஞ்சுமேனோன் சாப்பிட்டு முடித்துத் தூங்கிக்கொண்டிருந்தார். கோவிந்தன் பஞ்சுமேனோன் படுத்திருந்த அறை வாசலில் போய் நின்று கொண்டு குஞ்ஞிக்குட்டியம்மாவைப் பார்த்தான். பஞ்சு மேனோனை நம்பூதிரிப்பாடு கூப்பிடுகிறார் என்று சொன்னான். குஞ்ஞிக்குட்டியம்மா உள்ளே போய்க் கணவனைக் கூப்பிட்டு எழுப்பினாள். எழுந்த எரிச்ச லுடன்:

பஞ்சுமேனோன்: சனியன், எதுக்கு என்னைத் தொந்தரவு பண்றே?

குஞ்ஞிக்குட்டியம்மா: நம்பூதிரிப்பாடு கூப்பிடுறாப்பில இருக்கு.

பஞ்சுமேனோன்: நம்பூதிரிப்பாடு! முட்டாப் பய நம்பூ திரிப்பாடு! சும்மாவே ஆளைப் பாடாய்ப் படுத்துவான். இந்தச் சனியன் போய்த் தொலையக் கூடாதா? ஒண்ணுக்கும் உதவாத மனுஷன். அந்தக் கேசவன்நம்பூ திரியைப் போல ஒரு கழுதையை நான் பார்த்ததில்லே.

குஞ்ஞிக்குட்டியம்மா: அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. இந்துலேகாவும் நம்பூதிரிப்பாடும் ஒருத்தருக்கொருத்தர் இன்னிக்கு ரொம்ப இணக்கமா இருக்காங்க. இன்னிக்கு இவ்வளவு நேரம் மாடியிலே பாட்டும் சிரிப்புமா உல்லாசமா இருந்தாங்க. ரொம்ப உற்சாகம். இந்துலேகாவுக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும் போலிருக்கு.

பஞ்சுமேனோன்: (மெதுவாக எழுந்து உட்கார்ந்தபடி) பாட்டு இருந்திச்சா? எப்போ?

குஞ்ஞிக்குட்டியம்மா: நீங்க கிழக்கே வயலுக்குப் போயிருந்த சமயம்.

பஞ்சுமேனோன்: என்னவோ, எனக்கொண்ணும் கேட்கலே. நான் போய் என்னன்னு பார்க்கறேன்.

என்று சொல்லிவிட்டு கிழவர் சற்றே மகிழ்ச்சியுடன் எழுந்து புறப்பட்டு கோவிந்தனுடன் மாடிப்படி ஏறிச் சென்றார்.

14

## நம்பூதிரிப்பாடுக்குக் கல்யாணம்

நம்பூதிரிப்பாடு: உங்ககிட்ட ரகசியமா ஒரு காரியம் எனக்குச் சொல்ல வேண்டியிருக்கு.

பஞ்சுமேனோன்: என்னன்னு தெரியலையே. தயவு செஞ்சி சொல்லுங்களேன்!

நம்பூதிரிப்பாடு: நீங்க அதை எனக்கு முடிச்சித் தரணும்.

பஞ்சுமேனோன்: செய்யக்கூடியதா இருந்தா செய்து முடிக்கிறதிலே அடியேனுக்கு என்ன கஷ்டம்?

நம்பூதிரிப்பாடு: செய்யக்கூடியதுதான்.

பஞ்சுமேனோன்: சொன்னீங்கன்னா நிச்சயமா செஞ்சிடறேன்.

நம்பூதிரிப்பாடு: உங்க மருமகள் கல்யாணிகூட எனக்கு இன்னிக்கு ராத்திரி சம்பந்தம் தொடங்கிவச்சி நாளைக்கு விடிகாலையிலே நாலு, அஞ்சு மணிக்கு அவளையும் கூட்டிக்கிட்டு எங்க ஊருக்குப் போகும்படிச் செய்யணும். இந்துலேகாவுக்கு என் மேலே கொஞ்சம்கூட ஆசை இல்லே. இந்துலேகா என்னோட பெண்டாட்டியா இருக்க மாட்டேன்னு இன்னிக்குத் திட்டவட்டமா சொல்லிட்டா. கல்யாணிக்குட்டியை நான் இன்

னிக்குக் காலையிலே பார்த்தேன். எனக்குப் பிடிச்சிப் போச்சி. நீங்க இதுக்கு சம்மதிக்கணும். இல் லேன்னா நான் ரொம்பவும் வருத்தப்படவும் அவமானப்படவும் வேண்டியிருக்கும். சம்பந்தம் இன் னிக்கு ராத்தியே நடக்கணும். அதிலே சந்தேகமில்லே.

பஞ்சுமேனோன் இதைக் கேட்டதும் மிகவும் வியப்பி லாழ்ந்தார். சிறிது நேரம் எதுவும் பேசாமல் நின்றிருந்தார். பின்னர் ஒரு முறை சிரித்தார். தொடர்ந்து இவ்வாறு சொன்னார்:

பஞ்சுமேனோன்: இதை இவ்வளவு அவசரத்திலே நிச்சயிக்கிறது தப்பில்லையா? அடி யேன் யோசிச்சிச் சொல்றேன்.

நம்பூதிரிப்பாடு: தேவையில்லே. அதெல்லாம் தேவையில்லே. நீங்க என்னை அவ மானப்படுத்தக்கூடாது. நீங்க என்னை மரியாதையோட அனுப்பி வைக்கணும். இனி கொஞ்சம்கூடத் தாமதிக்க வேண்டாம். நான் ரொம்ப அவ மானப்பட்டு இருக்கேன். நீங்கதான் அதைச் சரிபண்ணி வைக்கணும்.

பஞ்சுமேனோன்: அடியேன் கேட்டு விசாரிச்சி ஆலோசனை பண்ணிச் சொல் றேன்.

நம்பூதிரிப்பாடு: விசாரிக்கிறதுக்கு ஒண்ணுமில்லே. நீங்க சம்மதிச்சா எல்லாமே நடக்கும்.

பஞ்சுமேனோன்: அடியேன் சீக்கிரமாப் போய்ட்டு வந்திர்றேன்.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா அது ரகசியமா இருக்கட்டும். நான் இதைவிட்டுக் கிளம்பிப் போன பிறகுதான்

ஊருக்கு இதைப் பத்தி வெளியே தெரியணும்.

பஞ்சுமேனோன்: ரகசியமாவே அடியேன் வச்சி ருக்கேன்.

மாடியிலிருந்து பஞ்சுமேனோன் மெதுவாகக் கீழே இறங்கினார். இதென்ன கதை! இனிமேல் என்ன செய்வது என்று யோசித்துக்கொண்டு தன்னுடைய அறைக்குப் போய் சிந்தனையில் ஆழ்ந்ததைக் கீழே குறிப்பிடுகிறேன்:

'இந்துலேகாவை சம்பந்தம் பண்ண வந்திட்டு கல்யாணிக் குட்டியை சம்பந்தம் முடிச்சிக் கூட்டிப் போறாரு. இது ஒரு பரிகாசமா முடியுமோ? பரிகாசமா என்ன முடி யறது? அப்படிப் பரிகாசமாப் பேசினா அது நம்பூதிரிப் பாடைப் பத்தித்தான் இருக்கும். இந்துலேகா இந்தப் படுக்காளி நம்பூதிரிப்பாடு வேண்டாம்னு சொல்லிட்டா. அதனாலே நம்பூதிரிப்பாடு கல்யாணிக்குட்டியை சம்பந்தம் செய்துக் கிட்டுப் போவாரு. இதில இந்துலேகாவுக்கு எந்த அவமானமும் இல்லே, கல்யாணிக்குட்டிக்கும் எந்த அவ மானமும் இல்லே. அசடானாலும் அவர் பெரிய இடத்து ஆளில்லையா? பெரும் பணக்காரர்! இந்துலேகா ஒத்துப் போயிருந்தா இந்த ஜன்மத்திலே கல்யாணிக்குட்டிக்கு இப்படியொரு சம்பந்தம் அமைஞ்சிருக்காது. இந்தக் குடும் பத்திலே நம்பூதிரிப்பாடு சம்பந்தம் பண்ணிக்கிடுறது பெரிய கௌரவமில்லையா! அதனாலே இதுக்கு சம்மதிக் கிறதுதான் நல்லதுன்னு தோணுது. எதுவானாலும் தம்பி சங்கரன்கிட்ட ஒரு வார்த்தை கேட்டுக்கிடணும்' என்று யோசித்துத் தீர்மானித்து மனைவியைக் கூப்பிட்டார்.

குஞ்ஞிக்குட்டியம்மா: என்னங்க, நான் சொன்னது சரிதானே?

பஞ்சுமேனோன்: (சிரித்துக்கொண்டு) சரிதான், சரி தான், சங்கரனை வரச்சொல்லி ஒரு ஆளை அனுப்பு.

குஞ்ஞிக்குட்டியம்மா: அனுப்பறேன், சம்பந்தம் இன் னிக்கு நடக்குமா?

பஞ்சுமேனோன்: (சிரித்துக்கொண்டு) இன்னிக்குத் தான், அதிலே என்ன சந்தேகம்?

உடனே குஞ்ஞிக்குட்டியம்மா சங்கரமேனோனைக் கூப்பிட ஆள் அனுப்பினாள். பஞ்சுமேனோன் மறைமுகமாகச் சொன்ன வார்த்தையால் இந்துலேகாவை சம்பந்தம் முடிப்பதாக அர்த்தம் செய்துகொண்டு, இந்துலேகாவுக்கு அன்றைய இரவு சம்பந்தம் நடப்பதாக அங்கே இருந்த எல்லா வேலைக்காரர்களிடமும் வேலைக்காரிகளிடமும் மற்றவர்களிடமும் குஞ்ஞிக்குட்டியம்மா சொன்னாள். செய்தி உடனுக்குடன் எங்கும் பரவியது. சங்கரமேனோனைத் தேடியும் கண்டுபிடிக்க முடியாததனால் பஞ்சுமேனோனே அவரைத் தேடிக்கொண்டு பூவள்ளிக்குப் போனார். அந்தச் சமயம் சங்கரசாஸ்திரி பஞ்சுமேனோனைப் பார்ப்பதற்காகப் போயிருந்தார். சொந்த ஊருக்குத் திரும்பிப் போவதைச் சொல்லிக் கொண்டு போவதற்காக அங்கே சென்றிருந்தார். சங்கரசாஸ்திரி தினசரி ராமாயணப் பாராயணத்துக்காகப் பஞ்சுமேனோனால் நியமிக்கப்பட்ட சாஸ்திரிகளாவார். சங்கரசாஸ்திரி இந்துலேகாவின் சம்பந்தம் குறித்த செய்தியைக் கேட்டதனால் ஏற்பட்ட கடும் வெறுப்பினாலோ—அல்லாமல், முக்கிய வேலை இருந்ததோ தெரியவில்லை—அன்றைக்கே ஊர் திரும்ப வேண்டுமென்று நிச்சயித்து, பயணம் சொல்லிக் கொள்ளத்தான் பூவரங்குக்குச் சென்றார். சென்றபோது அங்கே காண முடிந்தது குஞ்ஞிக்குட்டியம்மாவைத்தான்.

சாஸ்திரிகள்: பெரியவர் எங்கே?

குஞ்ஞிக்குட்டியம்மா: அவங்க பூவள்ளிக்குப் போயிருக்காங்க. இந்துலேகாவோட சம்பந்தம் இன்னிக்கு ராத்திரி நிச்சயம் பண்ணியிருக்கு. சாஸ்திரிகள் என்ன ஒண்ணும் சுதாரிப்பா இல்லே? உங்களை இன்னிக்குப் பார்க்கவே இல்லையே.

சாஸ்திரிகள்: எனக்கு உடம்புக்கு நல்லா இல்லே. நான் இப்பவே ஊருக்குப் போகணும். அமாவாசை வரைக்கும் நம்ம சத்திரத்திலே போய்க் கிடக்கணும்னு நினைக்கிறேன்.

குஞ்ஞிக்குட்டியம்மா: இன்னிக்கு இந்துலேகாவுக்கு சம்பந்தம் பண்ற நாள்; போக வேண்டாம்.

சாஸ்திரிகள்: அப்படிச் சொன்னா சரிப்படாது. எனக்கு இப்பவே போயாகணும். பெரியவர்கிட்ட நீங்களே சொல்லிட்டீங்கன்னா போதும். நான் ஏழெட்டு நாளிலே திரும்பிடுறேன். இங்கே நான் வர்ற வரைக்கும் பாராயணத்துக்கும் மத்ததுக்கும் அண்ணாத்துரை வாத்தியாரை ஏற்பாடு பண்ணியிருக்கேன். நான் போய்ட்டு வர்றேன்.

குஞ்ஞிக்குட்டியம்மா: அப்படீன்னா சரிதான். நான் சொல்லிடுறேன்.

சாஸ்திரிகள் பூவரங்கிலிருந்து திரும்பிக் கோயிலுக்கு வந்து, மறுநாள் புகைவண்டி ஏற வசதியாக, ஒரு வழக்குத் தொடர்பாகக் கோர்ட்டுக்குப் போவதற்காக சாப்பாடு முடித்துக் கொண்டு கிளம்புவதாக இருந்த இரண்டு நம்பூதிரி மார்களுடன் இரவு ஏழு மணிவாக்கில் புறப்படுவதற்குத் தீர்மானித்தார். செம்பாழியோட்டிலிருந்து புகைவண்டி நிலையத்திற்குப் போய்ச் சேர சரியாக நாலரைக் காத தூரம் இருக்கும். நிலா நன்கு காய்ந்து கொண்டிருந்ததனால் பாதி வழியை இரவிலேயே நடந்து முடித்துவிடலாமென்று தீர்மானித்திருந்தார்கள்.

பஞ்சுமேனோன் சங்கரமேனோனைத் தேடிக் கண்டு பிடித்துப் பார்த்தபோது நேரம் ஏறத்தாழ ஆறு மணியாகி யிருந்தது.

பஞ்சுமேனோன்: நீ எங்கே போயிட்டே சங்கரா?

சங்கரமேனோன்: புதுசா தென்னங்கண்ணு வைக்கிறதுக்குத் தோட்டத்துக்குப் போயிருந்தேன். அந்த உண்ணிக்கிட்டனைத் தோட்டத்துப் பொறுப்பா வச்சது சரியில்லே.

குழிகளைத் தோண்டியிருக்கிற திலே பெரிய குழப்படி. கண்ணுங் களை ரொம்பப் பக்கத்திலே பக்கத்திலே வச்சிருக்கு.

பஞ்சுமேனோன்: அதெல்லாம் பின்னாலே பேசிக் கலாம். உன்கிட்ட ஒரு விஷயம் சொல்லணுமே!

சங்கரமேனோன்: என்னன்னு சொல்லுங்களேன்.

பஞ்சுமேனோன்: அந்த நம்பூதிரிப்பாடுக்கு நம்ம கல்யாணிக்குட்டியை சம்பந்தம் செய்துகிட்டுக் கூட்டிப் போகணுமாம்.

சங்கரமேனோன்: இதென்ன கதை!

பஞ்சுமேனோன்: என்னை இப்போ கூப்பிட்டு வச்சிச் சொன்னாரு.

சங்கரமேனோன்: நீங்க என்ன பதில் சொன்னீங்க?

பஞ்சுமேனோன்: நான் ஒண்ணும் முடிவாச் சொல் லலே. உன்னைக் கலந்துக்கிட லாம்னு தீர்மானிச்சேன். கோவிந் தப்பணிக்கரைக் கொஞ்சம் வரச் சொல்லணும்—ஆளை அனுப்பு.

சங்கரமேனோன்: கோவிந்தப்பணிக்கர் நேத்து பொல்பாயிப் பண்ணைக்குப் போயிருக்காரு. கோவிந்தன் குட்டியும் கூடப் போயிருக்கான். அங்கே பக்கத்திலேயே வேட்டை யாடற திட்டமும் போட்டிருக்காங்க. நாளைக்குத்தான் அவங்க திரும்பு வாங்க.

பஞ்சுமேனோன்: இந்த ஆளுக்கு வேட்டைப் பைத் தியம் கொஞ்சம் அதிகம்தான்! அந்தப் பையனையும் எதுக்காகச் சேர்த்து இழுத்துக்கிட்டுப் போக ணும்? கோவிந்தன்குட்டியும் மாத வன் மாதிரியே ஆயிட்டான்னு

தோணுது. அசட்டுப் பசங்களை இங்கிலீசு படிக்க வச்சதோட கோளாறு. போகட்டும், இந்த சம்பந்தத்தைப் பத்தி நீ என்ன நினைக்கிறே?

சங்கரமேனோன்: நீங்க எப்படி இஷ்டப்படறீங்களோ அப்படியே நடக்கட்டும்.

பஞ்சுமேனோன்: நம்பூதிரிப்பாடு அசடா இருந்தாலும் பெரிய ஆளில்லே? அவரோட சம்பந்தம் நம்ம குடும்பத்துக்கு ரொம்பப் பெருமையா இருக்கும். அதிலே சந்தேகமில்லே. ஆனால் இந்தக் கும்மனி வம்சத்திலே இந்த சம்பந்தம் ஆகிறதிலே மட்டும்தான் எனக்குக் கொஞ்சம் வருத்தமா இருக்கு.

சங்கரமேனோன்: அதைப் பத்தி யோசிக்காதீங்க. அந்தப் பொண்ணு ரொம்ப சாதுப் பொண்ணு.

பஞ்சுமேனோன்: ஆம்பிளைப் பசங்கதான் வக்கிரம். போகட்டும், அப்படீன்னா உனக்குச் சம்மதம்தானே?

சங்கரமேனோன்: உங்க இஷ்டப்படி நடக்கிறதிலே எனக்குச் சம்மதம்தான்.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா நீ நம்பூதிரிப் பாடுகிட்டப் போய் விவரத்தைத் தெரிவிக்கணும்.

சங்கரமேனோன்: இன்னிக்கே முடிக்கணும்னா தீர்மானிச்சிருக்கு?

பஞ்சுமேனோன்: (சிரித்துக் கொண்டு) அப்படித் தான் நம்பூதிரிப்பாடு சொன்னாரு. அப்படியே நடக்கட்டும். பாரம் தீரட்டும்—இன்னிக்கு நடந்து முடிஞ்சா நாளைக் காலையிலே இங்கேருந்து போயிருவாரில்ல?

இன்னிக்கே முடிச்சிடலாம். சரிதானே?

சங்கரமேனோன்: அப்படியே ஆகட்டும். நான் கேச வன்நம்பூதிரிகிட்டச் சொல்லிடு றேன்—அதுதானே நல்லது?

பஞ்சுமேனோன்: ரொம்ப ரகசியமா என்கிட்ட நம்பூ திரிப்பாடு இந்தக் காரியத்தைச் சொன்னாரு. கேசவன்நம்பூதிரி கிட்டே இப்போ சொல்ல வேண்டாம். ஆனால் நம்பூதிரிப் பாடு கூடவே இருக்கிற கோவிந் தன் என்கிறவனைக் கூப்பிட்டுச் சொல்லிறணும்.

பஞ்சுமேனோனின் கட்டளைப்படி சங்கரமேனோன் மாடி ஏறிச் சென்று கோவிந்தனை அழைத்து விவரம் சொன்னார். கோவிந்தன் உடனே நம்பூதிரிப்பாடு இருக்கும் அறைக்குச் சென்றான்; நேரம் இரவு ஏழு மணி ஆகி யிருந்தது. நரி இரைக்குக் காத்திருப்பதுபோல் நம்பூதிரிப் பாடு மாடி அறையில் உட்கார்ந்திருந்தார்.

நம்பூதிரிப்பாடு: என்ன கோவிந்தா! எல்லாம் ஏற்பாடாயிரிச்சா?

கோவிந்தன்: எஜமான், எல்லாம் ஏற்பாடா யிரிச்சி. இனி குளிக்கப் போற துக்குத் தாமதப்படுத்த வேண்டாம். இந்தக் காரியம் எல்லாருக்கும் சம்மதமாயிரிச்சி. இருந்தாலும் யார்கிட்டேயும் இதைப் பத்திப் பேச வேண்டாம். இந்துலேகா வுக்குத்தான் இன்னிக்கு ராத்திரி சம்பந்தம்னு எல்லாருகிட்டேயும் அடியேன் சொல்லி வச்சிருக்கேன்.

நம்பூதிரிப்பாடு: இனிமே அப்படிச் சொன்னா நம்புவாங்களா?

கோவிந்தன்: உங்க குளியல் முடிஞ்சவுடனே மடத்திலே பிராமணங்களுக்கு

தட்சணை கொடுத்து முடிச்சாப் போதும். தட்சணை கொடுத்து முடிச்சா ஆளுங்க பிரிஞ்சி போயிரும். வெளியே எல்லா இடத்திலேயும் இந்துலேகாவுக்குத்தான் சம்பந்தம் முடிஞ்சதுன்னு அவங்க பரப்பிடுவாங்க.

நம்பூதிரிப்பாடு: கில்லாடிதான். நீ—படுகில்லாடி! அப்படீன்னா கறுத்தேடத்துக்கும் செறுசேரிக்கும் இந்த விவரம் தெரியாதா?

கோவிந்தன்: இதுவரைக்கும் தெரியாது. என்னவோ சில சந்தேகங்கள் ஏற்பட்டிருக்கும்னு தோணுது. உள்குட்டு ஒண்ணும் தெரியாது. சீக்கிரமா குளிச்சி முடிச்சி தட்சணை கொடுத்து முடிக்கணும்.

நம்பூதிரிப்பாடு: செறுசேரி எங்கே?

கோவிந்தன்: கோயிலுக்கோ வேறெங்கேயோ போயிருப்பாரு. அடியேன் பார்க்கலே.

நம்பூதிரிப்பாடு: கறுத்தேடம்? கறுத்தேடத்துக்கிட்ட நான் இங்கேதான் இருப்பேன்னு சொல்லியிருந்தேன்.

கோவிந்தன்: இப்போ தூங்கி எந்திரிச்சி தெற்குப் பக்கத்து அறையிலே உக்காந்து வெத்திலை போட்டுக்கிட்டிருக்காரு.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா குளிக்கப் போகலாம்.

என்று சொல்லி கோவிந்தனைக் கொண்டு லாந்தர் விளக்கைப் பிடிக்கச் செய்து நம்பூதிரிப்பாடு கீழே இறங்கினார். கூடவே கேசவன்நம்பூதிரியும் புறப்பட்டார். சங்கரசாஸ்திரிகளும் இரண்டு நம்பூதிரிகளுமாகச் சேர்ந்து ஏழு மணிக்கு இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு

புகைவண்டி நிலையத்துக்குப் புறப்படுவதற்காகக் கோயில் வாசலில் நின்றுகொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது. அவர்களில் ஒரு நம்பூதிரியை நம்பூதிரிப்பாடுக்குப் பரிச்சயமாகியிருந்தது. அவரும் சாஸ்திரிகளும் மற்றொரு நம்பூதிரியும் நம்பூதிரிப்பாடைக் கண்டதும் மரியாதை நிமித்தம் வழிவிட்டு ஒதுங்கி நின்றனர்.

நம்பூதிரிப்பாடு: ஒகோ! கிளிமங்கலம் எப்போ வந்தாப்பிலே? எங்கே இப்போ இந்த அகாலத்திலே பயணம்?

கிளிமங்கலம்: நான் கோர்ட்டுக்கு ஒரு காரியமா அவசரமா போக வேண்டியிருக்கு. சாயங்காலம் இங்கே வந்தேன், நாளைக் காலை வண்டியைப் பிடிச்சி கோர்ட்டுலே இருக்க வேண்டிய காரிய்ம். அப்படியில் லேன்னா பெரியவங்களைப் பார்க் காம கிளம்பியிருக்க மாட்டேன். வந்திருக்கிற விவரத்தையும் மத்த தையும் நான் கேள்விப்பட்டேன். சந்தோஷமாயிருந்தது. நான் திரும் பின உடனே அங்கே வந்து பார்த் துக்கிடுறேன்.

நம்பூதிரிப்பாடு: கிளிமங்கலம் இந்துலேகாவைப் பார்த்ததுண்டா?

கிளிமங்கலம்: இல்லே.

நம்பூதிரிப்பாடு: அப்படீன்னா அங்கே நம்ம வீட்டுக்கு வந்து பார்த்துக்கிடலாம். நான் விடிகாலையிலே புறப்படு வேன்.

கிளிமங்கலம்: கூடவே கூட்டிக்கிட்டுப் போறீங் களாக்கும்.

நம்பூதிரிப்பாடு: இந்துலேகாவோடதான். இனிமே அதிலே சந்தேகமா என்ன?

கிளிமங்கலம்: அப்படித்தான் செய்யணும். உங்க அதிருஷ்டம் வேறே யாருக்கும்

கிடைக்காது. நான் திரும்பின உடனே வீட்டுக்கு வந்து பார்த்துக் கிடுறேன்.

இந்த உரையாடல் முடிந்தவுடன் சாஸ்திரிகளும் நம்பூதிரிமார்களும் சேர்ந்து சத்திரத்திற்குப் புறப்பட்டார்கள். புகைவண்டி நிலையத்திற்குப் போவதான பாதித் தொலைவை நடுநிசி நேரமாகும்போது நடந்து பூவள்ளிக்குச் சொந்தமான சத்திரத்தைச் சென்றடைந்து படுத்துத் தூங்கினார்கள்.

நம்பூதிரிப்பாடு நிமிடத்தில் குளியலை முடித்து, பிராமணர்களை மடத்திற்கு அழைத்து தட்சணை கொடுக்கத் தொடங்கினார். இருநூறு பேர்களுக்கு தட்சணை கொடுத்து முடிந்ததும் ஆட்கள் எல்லாரும் பிரிந்து சென்றார்கள்.

செறுசேரி அப்போதுதான் வந்து சேர்ந்தார். அவர் அதுவரைக்கும் பூவரங்கில் இந்துலேகாவுடன் மாடி முகப்பில் பேசிக்கொண்டிருந்தார். நம்பூதிரிப்பாடிடம் விவரம் தெரிவிக்கும்படி கோவிந்தனிடம் சொல்லி முடித்துவிட்டு சங்கரமேனோன் பூவள்ளி மனைக்கு வந்து கல்யாணிக்குட்டியின் அம்மா கும்மிணியம்மாவிடம் விவரம் தெரிவித்தார். எல்லாம் ஏற்பாடாகிவிட்டதாகவும் சொன்னார். இந்த விவரத்தைக் கேட்டதும் கும்மிணியம்மாவுக்கு மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டது. உடனே பார்வதியம்மாவுக்குத் தகவல் தெரிவித்தாள். பார்வதியம்மாவுக்கு இதைக் கேட்டபோது இரண்டு மடங்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. தகவலை இந்துலேகாவுக்கு உடனே தெரிவிக்க வேண்டுமென்று தீர்மானித்தாள். மறு நிமிடமே பார்வதியம்மா இந்துலேகாவின் மாடி ஏறிச் சென்றாள். அவள் சென்றபோது இந்துலேகாவும் செறுசேரிநம்பூதிரியும் பேசிக்கொண்டிருந்தார்கள். பார்வதியம்மா வந்துகொண்டிருப்பதைப் பார்த்தவுடன் இந்துலேகா எழுந்து அருகில் சென்றாள். ரகசியம் ஒன்று சொல்ல வேண்டுமென்று பார்வதியம்மா சொன்னாள். இரண்டு பேருமாக அறைக்குள் போனார்கள்.

பார்வதியம்மா: இந்துலேகா ஒரு சமாச்சாரம் கேட்டியா?

இந்துலேகா: இல்லையே; என்னவாம்?

பார்வதியம்மா: நம்பூதிரிப்பாடு நம்ம கல்யாணிக் குட்டிக்கு இன்னிக்கு ராத்திரி சம்பந்தம் தொடங்க நிச்சயம் பண்ணிருக்குதாம்.

இந்துலேகா மூச்சுமுட்டச் சிரித்தாள். சிறிது நேரம் சிரித்துக்கொண்டிருந்தாள். ஆற அமர மூச்சு சரியான பின்னர்:

இந்துலேகா: உங்ககிட்ட யாரு சொன்னது?

பார்வதியம்மா: என்ன, சங்கரன்னே பூவள்ளி வந்து சொன்னாரு. அங்கே கட்டிலும் படுக்கையும் மேற்குப் பக்கத்து அறையிலே கொண்டுபோய் விரிச்சி அறையை ஆயத்தப் படுத்தற அமர்க்களமா இருக்கு. மாமா இருந்து கவனிச்சிக்கிடுறாரு. விளக்குகளும் மத்ததும் அறையிலேருந்து எடுக்கச் சொல்லிக்கிட்டிருக்காரு.

இந்துலேகா: கல்யாணிக்குட்டிக்கு இந்த விவரத்தைச் சொல்லியாச்சா?

பார்வதியம்மா: சொல்லலே. அவளை நான் பார்க்கலே. அக்கா சொல்லியிருப்பாங்களோ என்னவோ தெரியலே. அக்காவுக்கு ரொம்ப சந்தோஷம்னு தோணுது.

இந்துலேகா: கஷ்டம்! அந்தப் பொண்ணுக்கு சம்பந்தம் தொடங்குற விவரத்தை அவளுக்குத் தெரிவிக்க வேண்டாமா? போகட்டும், நீங்க போங்க. நான் வெளியே இருக்கிற அந்த நம்பூதிரியைச் சொல்லி அனுப்பிச்சிட்டு உடனே பூவள்ளி வர்றேன்.

பார்வதியம்மா போனவுடன் இந்துலேகா வெளியில் வந்து செறுசேரியின் முகத்தைப் பார்த்துச் சிரித்தாள்.

இந்துலேகா: பெரியவங்க ஒரு சமாச்சாரம் கேட்டீங்களா? தாத்தாவோட மருமகள் கல்யாணிக்குட்டிக்கு நம்பூதிரிப்பாடு இன்னிக்கு ராத்திரி சம்பந்தம் தொடங்கி வைக்கிறார் போலிருக்கு.

செறுசேரிநம்பூதிரி: (சிரித்துக்கொண்டு) கடவுளே! கல்யாணிக்குட்டிகூடக் கிடைக்கலேன்னா வேலைக்காரி அம்முவையாவது நிச்சயமா சம்பந்தம் பண்ணிக்குவாரு. கஷ்டம்! ஒரு போக்கிலே நிக்காதவரையும் சுயமரியாதை இல்லாதவரையும் பத்தி என்னத்தைச் சொல்ல! இப்படிக் கேள்விப்பட்ட சமாச்சாரம் சரியா இருந்தா நாளை விடிகாலையிலே பயணம் இருக்கும்னு தோணுது. மாதவன் வந்து சேர்ந்ததும் நான் இங்கே வர்றன். மாதவன் வந்த மறுநாள் பட்டணத்துக்கு நீ போகிறதா இருந்தா, அந்த விவரத்துக்கு எனக்குக் கடுதாசு எழுதி அனுப்பு. நான் பட்டணத்துக்கு வந்து சேர்ந்துடுறேன். உனக்கும் மாதவனுக்கும் மேலே மேலே நல்லது நடக்கட்டும்.

என்று சொல்லிவிட்டு செறுசேரி அங்கிருந்து இறங்கி மடத்தைச் சென்றடைந்த போது நம்பூதிரிப்பாடு தட்சணை கொடுத்து முடித்திருந்தார். சாப்பாடு முடித்து நம்பூதிரிப்பாடு வெற்றிலை போடுவதற்காக மடத்தின் வராந்தாவில் உட்கார்ந்திருந்தார்.

கேசவன்நம்பூதிரி மொத்தத்தில் பெரியதொரு பிரமிப்பில் ஆழ்ந்திருந்தார். தட்சணையும் மற்றதும் கொடுப்பது கண்டும், நம்பூதிரிப்பாடு கிளிமங்கலத்து நம்பூதிரியிடம்

சொன்ன பேச்சுக்களை நினைத்தும், மதியம் பாட்டும் பிறவும் நடந்த நிலைமையை நினைத்தும், இந்துலேகாவின் சம்பந்தம் அன்றைக்கே நடக்கும் என்று நினைத்த போதிலும் அதற்குப் பின்னரும் ஒரு கலக்கம்! கலக்கத் திற்கான காரணம் என்னவென்று அந்த அப்பாவிக்குத் தீர் மானிக்க முடியவில்லை. நம்பூதிரிப்பாடு இந்துலேகாவின் மாடியிலிருந்து பகல் இரண்டு மணிக்கு இறங்கியது முதல் நம்பூதிரிப்பாடின் கட்டளைப்படி தான் இருந்த அறையி லிருந்து எந்தத் திசைக்கும் கேசவன்நம்பூதிரி வெளி யேறவோ, எந்த ஒரு செய்தியையும் அறிந்து கொள்ளவோ இல்லை. நம்பூதிரிப்பாடு வெற்றிலை போட மடத்து வராந் தாவில் உட்கார்ந்தவுடன் கேசவன்நம்பூதிரி செறுசேரி நம்பூதிரியைக் கூட்டிக்கொண்டு அறைக்குள் போனார்.

கேசவன்நம்பூதிரி: என்னங்காணும் செறுசேரி, இது கதை? எனக்கு ஒண்ணும் புரிய லையே. செறுசேரி இவ்வளவு நேரம் எங்கே இருந்தீரு?

செறுசேறுநம்பூதிரி: நான் இந்துலேகாவோட மாடி யிலே இருந்தேன்.

கேசவன்நம்பூதிரி: என்னங்காணும், இன்னிக்கு சம் பந்தம் உண்டுன்னு சொல்லி தட்ச ணையும் மத்ததும் நடந்திருக்கு. இந்துலேகாவுக்கு சம்மதம்னு தோணுது.

செறுசேரிநம்பூதிரி: இன்னிக்கு சம்பந்தம் உண்டு, அது நிச்சயம். ஆனால் இந்துலேகா வோட இல்லே.

இந்த வார்த்தையைக் கேட்டதும் கேசவன்நம்பூதிரியின் உயிர் ஒடுங்கி மயக்கம் ஏற்பட்டது. அங்கேயே நிலை குலைந்தார். குடிக்கத் தண்ணீர் வேண்டுமென்று கேட்டார். ஒரு குவளைத் தண்ணீரைக் குடித்தார். தன்னை அறைக் குள்ளேயே இருக்கச் செய்ததன் காரணமும், பஞ்சு மேனோனும் நம்பூதிரிப்பாடும் ரகசியம் பேசிக் கொண்ட தன் தாத்பரியமும் இப்போதுதான் புரிந்தன. தன்னுடைய மனைவி லட்சுமிக்குட்டி கைவிட்டுப் போய்விட்டாள்

என்றே முடிவு செய்தார்; பிராண வேதனை சகிக்க முடியாமல் செறுசேரியின் முகத்தைப் பார்த்தார். கேசவன் நம்பூதிரி பாடம் படிக்க வேண்டியது அவசியம்தான் என்ற எண்ணம் செறுசேரிக்கு ஏற்பட்டது.

செறுசேரிநம்பூதிரி: எதுக்காக என் முகத்தைப் பார்க் கறீரு? இந்த ஏடாகூடமெல்லாம் நீர் உண்டாக்கிக் கிட்டதுதானே?

இந்தக் கேள்வியைச் செவியுற்றதும் கேசவன்நம்பூ திரிக்கு சந்தேகமெல்லாம் தீர்ந்தது.

கேசவன்நம்பூதிரி: நான் இதெல்லாம் நினைக்கவே இல்லே, செறுசேரி. நான் மகா சோப்ளாங்கி. என்னோட தலை யெழுத்து எனக்கு இதெல்லாம் தோனியிருக்கு. நான் இனிமே இங்கே ஒரு நிமிஷம்கூட இருக்க மாட்டேன். இப்பவே இந்த நிமிஷமே ஊருக்குப் போறேன். இனிமே இந்தத் திசைக்கு இந்த ஜன்மத்திலே வர மாட்டேன். நான் கிளம்பட்டுமா?

செறுசேரிநம்பூதிரி: நம்பூதிரிப்பாடுகிட்ட பயணம் சொல்லிக்காமப் போக முடியுமா?

கேசவன்நம்பூதிரி: இந்த ஜன்மத்திலே இந்த நம்பூதிரிப் பாடோட நான் பேசப் போற தில்லே. இந்த ஜன்மத்திலே இனி நான் மூர்க்கில்லாத்தமனைக்கல் பக்கம் போகப் போறதே இல்லே. இவரோட தயவு இல்லேன்னா எனக்கொண்ணும் குடிமுழுகிப் போயிடாது. இவ்வளவு மோசக் காரனும் துஷ்டனும்னு இந்த ஆளை நான் முன்னாடியே தெரிஞ் சிக்காமப் போயிட்டேன்.

செறுசேரிநம்பூதிரி: இந்துலேகாவோட சம்பந்த காரியத் திலே உதவணும்னு முன்னாலே

என்கிட்ட நீங்க சொன்னப்போ அது நடக்காதுன்னு நான் சொன்னது இப்போ ஞாபகத்திலே இருக்கா?

கேசவன்நம்பூதிரி: ஞாபகம் இருக்கு. நீங்க புத்திசாலியாச்சே! உங்க அறிவிலே நூறிலே ஒரு பங்கு எனக்கு இருந்திருந்தா இந்த ஆபத்து எதுவும் எனக்கு வந்திருக்காது.

செறுசேரிநம்பூதிரி: போகட்டும், அவங்கவங்களுக்குத் தேவையில்லாத காரியத்திலே தலையிட்டா இப்படியெல்லாம் வருத்தப்பட வேண்டியிருக்கும்னு இப்போ தெரிஞ்சதா?

கேசவன்நம்பூதிரி: நல்லாத் தெரிஞ்சது, செறுசேரி! நான் இனிமே போறேன். இந்த சம்பந்தத்தைப் பார்த்துக்கிட்டு நான் இங்கே இருக்க முடியாது. நான் வேலைக்காரங்களைக் கூப்பிடுறேன்.

செறுசேரிநம்பூதிரி: ஏன் இந்த சம்பந்தம் நடக்கிறது உங்களுக்குப் பிடிக்கலே?

கேசவன்நம்பூதிரி: நல்ல கொடுமை—கொடுமை—கொடுமை! உங்களைப் போல புத்திசாலி இல்லேன்னாலும் நான் அவ்வளவு சொரணை கெட்ட சோப்ளாங்கின்னு நினைக்காதீங்க. இந்த சம்பந்தம் நடக்கறப்போ நான் இங்கே இருக்கிறது ரொம்ப மரியாதையாக்கும்?

செறுசேரிநம்பூதிரி: இது என்ன கதைங்காணும்!—நம்பூதிரிப்பாடு கல்யாணிக் குட்டிக்கு சம்பந்தம் தொடங்கற சமயம் கறுத்தேடம் இங்கே இருந்தால் கறுத்தேடம் சோப்ளாங்கின்னு ஆகுமா?

கேசவன்நம்பூதிரி மிகவும் ஆச்சரியப்பட்டு வாயைப் பிளந்தார்.

கேசவன்நம்பூதிரி: கல்யாணிக்குட்டிக்கா? — கல்யாணிக் குட்டிக்கா சம்பந்தம்?

செறுசேரிநம்பூதிரி: ஆமாம், கல்யாணிக்குட்டிக்குத் தான்.

கேசவன்நம்பூதிரி: சிவ! சிவ! நாராயணா! நாராயணா! நான் ரொம்பவும் மலைச்சிப் போயிட்டேன்! சிவ! சிவ! செறுசேரி என்னை ரொம்பவும்தான் கலங்க வச்சிட்டீரு.

செறுசேரிநம்பூதிரி: நான் ஒண்ணும் கலங்க வைக்கலே. நீங்கதான் சும்மா வருத்தப்படுறீங்க. அதுக்கு நான் என்ன செய்யட்டும்? இன்ன ஆளுக்குத்தான் சம்பந்தம்னு நான் சொன்னேனா? என்கிட்ட நீங்க கேட்டீங்களா? இல்லே. இந்து லேகாவுக்கு சம்பந்தம் இல்லேன்னு தானே நான் சொன்னேன்? சும்மா குழம்பிப்போய் கறுத்தேடத்தோட பெண்டாட்டிக்கின்னு நினைச்சி வருத்தப்பட்டால் என்ன செய்றது?

கேசவன்நம்பூதிரிக்கு உயிர் வந்தது. இருவருமாகச் சேர்ந்து நம்பூதிரிப்பாடு இருந்த இடத்திற்குச் சென்றார்கள்.

உடனே நம்பூதிரிப்பாடும் செறுசேரிநம்பூதிரியும் கேசவன்நம்பூதிரியும் மற்றவர்களும் பூவரங்குக்கு வந்து சிறிது நேரம் பஞ்சுமேனோனுடன் உரையாடினார்கள். பின்னர் "இனி அங்கே போகலாம்" என்று பஞ்சுமேனோன் சொன்னபடி நம்பூதிரிப்பாடு, செறுசேரிநம்பூதிரி, கேசவன் நம்பூதிரி, வேலைக்காரர்கள் கூட்டம் ஆக எல்லோருமாகச் சேர்ந்து பூவள்ளி மனைக்குப் போனார்கள். வழக்கமாக சம்பிரதாய முறைப்படி நம்பூதிரிப்பாடு கால் கழுவி உள்ளே சென்று மேற்கு அறையில் அதிவிசேஷமாக விரித்திருந்த பட்டு விரிப்புக் கட்டிலில் படுத்தார். அந்த அறையின் கிழக்குப் பக்கத்துக் கதவு அடைக்கப்பட்டது. அப்போது .

அந்த வீட்டிலிருந்த பெண்கள் எல்லோருமாகச் சேர்ந்து நெருக்கியடித்துக் கொண்டு அந்த அறையின் மேற்குப் பக்கத்து வாசல் வழியே ஓர் உயிருள்ள பன்றியையோ மற்றதையோ பிடித்துக் கூட்டிலடைப்பதுபோல் அப்பாவி கல்யாணிக் குட்டியைப் பிடித்துச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு அறைக்குள் தள்ளி மேற்குப் பக்கத்து வாசல் கதவைப் பூட்டிவிட்டார்கள். சம்பந்தமும் முடிந்தது. கோவிந்தன் அதி ஜாக்கிரதையாகப் பல்லக்குத் தூக்கிகளையும் மற்றதையும் ஏற்பாடு செய்து பல்லக்கு, டோலி முதலியவற்றை இரவுப் போதிலேயே வெளியே எடுத்து வைக்கச் செய்து கொஞ்சம் கூட உறங்காமல் இருந்தான். வழியிலோ வேறெங்கோ யாராவது கேட்டால் இந்துலேகாவைத்தான் சம்பந்தம் செய்து கொண்டு போகிறோம் என்பதாகச் சொல்ல வேண்டும் என்று நம்பூதிரிப்பாடுடன் இருக்கும் மற்ற எல்லோருக்கும் தகவல் தெரிவித்து எச்சரிக்கை செய்தான். விடிவதற்கு ஒரு பத்து நாழிகை இருக்கும்போதுதான் மேற்கு அறையின் வாசல் கதவில் நின்றுகொண்டு கோவிந்தன் செருமியும் கனைத்தும் நம்பூதிரிப்பாடை எழுப்பினான். உடனே வீட்டில் எல்லோருமே எழுந்துகொண்டார்கள். பூவரங்கி லிருந்து பஞ்சுமேனோனும் கேசவன்நம்பூதிரியும் வந்தார்கள். பெண்ணைக் கூட்டி வந்து ஒரு பல்லக்கில் ஏற்றி வைத்துப் பூட்டினார்கள். நம்பூதிரிப்பாடு அவருக் கான பல்லக்கில் ஏறிக்கொண்டார். கேசவன்நம்பூதிரி துணை யாத்திரை செய்யத் தீர்மானித்து ஒரு டோலியிலும், செறுசேரி சிரித்துக்கொண்டு தன்னுடைய டோலியிலும் ஏறிக் கொண்டார்கள். ஆட்டமும் குலுக்கலுமாக ஆரவாரக் கூச்சலுடன் புறப்பட்டுச் சென்றார்கள்.

# 15

## ஓர் ஆபத்து

நம்பூதிரிப்பாடின் ஆரவாரப் பயணம் விடிவதற்கு முன்பாகவே சாஸ்திரிகளும் நம்பூதிரிகளும் படுத்துறங்கும் சத்திரத்தை நெருங்கியது. அந்த பிராமணச் சத்திரம் பஞ்சு மேனோனின் நிர்வாகத்தைச் சேர்ந்தது; இரண்டு பாதைகள் சந்திக்கும் இடத்தில் அது அமைந்திருந்தது, அவற்றில் ஒரு பாதை நம்பூதிரிப்பாடு சார்ந்த பகுதிகளிலிருந்து வரும் பாதையாகும். இங்கே பூவள்ளியைச் சேர்ந்த ஒரு சத்திரம் இருப்பதுடன் ஒரு களஞ்சியப் பகுதியும் குளியலறை வசதியும் மற்றவையும் உண்டு. பயணத்தின்போது இங்கே தங்கி காலை உணவு முடித்துப் போகலாமென்று பஞ்சு மேனோனும் கேசவன்நம்பூதிரியும் சேர்ந்து சொன்னதை நம்பூதிரிப்பாடு கோவிந்தனின் அறிவுரையின்படி ஏற்றுக் கொள்ளவில்லை. வழிநெடுகிலும் இந்துலேகாவைத்தான் அழைத்துச் செல்வதாக வெளியில் தெரியட்டும் என்று நம்பூதிரிப்பாடும் கோவிந்தனும் தீர்மானித்திருந்தார்கள் பயணக் குழு சத்திரத்து வாசலை அடைந்தபோது கோவிந்தனின் தூண்டுதலினால் பல்லக்குகள் சற்று அதிக வேகத்துடன் நடத்திச் செல்லப்பட்டன. வேலைக்காரர் களையும் மற்றவர்களையும் முன்னதாக ஓடச்செய்து முழக் கங்களை ஆரவரமாக்கி கோவிந்தன் பின்னாலேயே ஓடினான். இந்த முழக்கங்களையெல்லாம் கேட்டு சாஸ்திரி களும் நம்பூதிரிமாரும் சத்திரத்திலிருந்து வெளியில் இறங்கி வந்து பார்ப்பதற்கு முன்பாகவே பல்லக்குகளும் டோலி களும் கடந்து போயிருந்தன. சாஸ்திரிகள் கோவிந்தனை

மட்டும் பார்த்தார். கோவிந்தன் முன்பே பார்த்துப் பரிச்சயமானவன்தான். பார்த்தவுடன் கையசைத்துக் கூப் பிட்டார். கோவிந்தன் சாஸ்திரிகளின் அருகில் சென்றான்.

சாஸ்திரிகள்: என்னப்பா கோவிந்தா, இது அவங்க ஊரு சத்திரம்தானே, இங்கே தங்கி சாப்பிட்டு முடிச்சிப் போகிறதுதானே நல்லது?

கோவிந்தன்: அப்படித்தான் கேசவன்நம்பூதிரியும் மத்தவங்களும் சொன்னாங்க. எஜமானுக்கும் செறுசேரி நம்பூதிரிக்கும் அதுதான் எண்ணம். ஆனால் வேறே ஒருத்தருக்கு நேரா ஊருக்கு போய் சாப்பிட்டுக்கிடலாம்னு விருப்பமாம். அவங்களுக்கு இங்கே பிடிக்கலே.

சாஸ்திரிகள்: யாருக்கு—இந்துலேகாவுக்கா?

கோவிந்தன்: ஆமாம்.

சாஸ்திரிகள்: ஒண்ணும் பிடிக்கலே. இவ்வளவு கெட்ட புத்தியோட ஒரு பொம்பிளையை நான் பார்த்ததில்லே.

கோவிந்தன்: ரொம்பப் பொல்லாதவங்க எனக்கு சந்தேகமே இல்லே. என்ன செய்றது! எஜமானுக்குக் கொள்ளை ஆசை. அப்படியேதான் இந்துலேகாவுக்கும் அவங்க மேலே. பின்னே என்ன போக்கிடம்? இனிமே நாங்க இந்துலேகாவோட வேலைக்காரங்கதான்— என்ன செய்றது!

சாஸ்திரிகள்: இந்துலேகாவோட ஆசையெல்லாம் பணம் பிடுங்கிறதான ஆசைதான்—வேறெந்த ஆசையும் இல்லே.

கோவிந்தன்: அதேதான்; அதிலே யாருக்கு சந்தேகம்? நான் போறேன். பல்லக்கு

ரொம்ப தூரம் போயிரிச்சி.

என்று சொல்லிவிட்டு கோவிந்தன் ஓடிப் போனான். சாஸ்திரிகளும் நம்பூதிரிமாரும் புகைவண்டி நிலையத் திற்கான வழியில் புறப்பட்டனர்.

மாதவன் சென்னையிலிருந்து அனுப்பிய கடிதப்படி இந்த சம்பந்தம் நடந்ததற்கு முந்தின நாள் வண்டியில் புறப் பட்டான்; நம்பூதிரிப்பாடின் ஆரவாரப் பயணம் இருந்த அன்று பதினொன்றரை மணிக்கு சாஸ்திரிகளும் மற்றவர் களும் வண்டி ஏறப்போகும் நிலையத்தில் இறங்கினான். நிலையத்துக்கு அருகில் இரண்டு மூன்று சாப்பாடு விற்கும் மடங்கள் உண்டு. அசதி காரணமாக அவற்றுள் ஒன்றில் தங்கி சாப்பாடு முடித்து, சாயங்காலம் வழியிலிருக்கிற தன் ஊருக்குச் சொந்தமான சத்திரத்தில் தங்கி, மறுநாள் சாப்பாட்டுக்கு முறைப்படி வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம் என்று தீர்மானித்தான் (அவனுடன் ஒரு வேலைக் காரன் மட்டும் இருந்தான். சின்னனையும் மற்றொரு வேலைக்காரனையும் சென்னையிலே இருக்கச் செய்து விட்டு, எட்டு நாள் விடுப்பு பெற்று வந்திருந்தான்). சாப்பாடு விற்பனை செய்யும் மடத்திற்குச் சென்றபோது அங்கே வழிப்பயணிகளான இரண்டு மூன்று நம்பூதிரி மாரும் நான்கைந்து பட்டர்மாரும் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் முந்தின நாள் பகலில் செம்பாழியோட்டுக் கோயிலில் விருந்து சாப்பிட்டு வந்தவர்கள். அன்று காலையில் வண்டி கிடைக்காமல் அங்கே தங்கிப் போயிருந்தனர். எல்லோருமே சாப்பிட்டு முடித்திருந்தார்கள். அதைத் தொடர்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தார்கள். மாதவன் அங்கே சென்றடைந்த போது:

ஒரு நம்பூதிரி: இந்துலேகாவோட அதிருஷ்டம் தான்னு எனக்குத் தோணுது.

'இந்துலேகா' என்ற பெயரைக் கேட்டதும் மாதவன் ஒரு முறை சிலிர்த்து பிரமித்தான். இது என்ன விவகாரம் என்று யோசித்தான்.

"எந்த இந்துலேகா?" என்று மாதவன் அங்கே முற்றத் தில் நின்றுகொண்டிருந்த அந்த வார்த்தை பேசிய

நம்பூதிரியைக் கேட்டான்.

நம்பூதிரி: செம்பாழியோட்டு இந்து லேகான்னு ஒரு பொண்ணு. என்னவாம், அவளைத் தெரியுமா?

மாதவன்: என்ன அதிருஷ்டம் இந்துலேகா வுக்கு வந்தது? சொல்லுங்களேன், கேட்டுக்கிடுறேன்.

நம்பூதிரி: இந்துலேகாவுக்கு நேத்து சம்பந்தம் ஆயிரிச்சி.

மாதவன் இடி விழுந்த மரம் போல ஒரு கணம் நின்று விட்டான். அதற்குப் பிறகு குரல் வெளிவரவில்லை. என்ன முயன்றும் வெளிப்படவில்லை. ஒரு நிமிடம் கழித்து, "யாரு—யாரு?" என்று (ஒரு பிணம் பேச நேருமானால் அந்த மாதிரி என்று சொல்லலாம்) கேட்டான்.

மாதவன்: யாரு?—யாரு?—யாருங்க சம்பந்தம் பண்ணினது?

மாதவனுடைய உணர்வைக் கண்டு நம்பூதிரி மாரெல்லாம் திகைத்துப் போனார்கள். யாரும் எதுவும் பேசாமல் ஒருவர்க்கொருவர் முகத்தோடு முகம் பார்த்துக் கொண்டார்கள்.

மாதவன்: யாரு?— யாரு?—சொல்லுங்க— சொல்லுங்க. ஏன் சொல்லத் தயங் குறீங்க? சொல்லுங்க—சொல் லுங்க. எதுக்காகத் தயங்குறீங்க? சொல்லக்கூடாததா? யாருங்க சம் பந்தம் நடத்தினது? சொல்லுங் களேன், கேட்டுக்கிடுறேன்.

ஒரு நம்பூதிரி: ஏம்பா ரொம்ப அலட்டிக்கிறே? ஏன் இவ்வளவு படபடப்பு? எங்க ளுக்கு விவரம் எதுவும் தெரியாது.

மாதவன்: விவரம் எதுவும் தெரியாம வரம்பு முறை இல்லாம இல்லாததும் பொல் லாததும் பேசினா?

ஒரு பட்டர்: என்ன மிரட்டல்? ஏன், எங்களை அடிச்சி உதைப்பியோ?

மாதவன்: அது நடக்கணுமா?

என்று கேட்டபடி மாதவன் நின்ற இடத்திலிருந்து ஓர் அடி எடுத்து வைத்தான்.

அப்போது மற்றொரு நம்பூதிரி எழுந்து சமாதானப் படுத்தினார்: "தம்பி, கோபப்படாதே. உக்காரு. வண்டி இறங்கி வந்த களைப்பா இருக்கும். பட்டணத்திலேருந்து வந்திருப்பே. அசதி முகத்திலே நல்லாவே தெரியுது. உக்காரு. எல்லா விஷயமும் சொல்றேன்."

மாதவன்: யாருங்க சம்பந்தம் செஞ்சது? எனக்குத் தெரியணும்.

பட்டர்: மூர்க்கில்லாத்தமனைக்கல் நம்பூதிரிப்பாடு.

மாதவன்: என்னிக்கு சம்பந்தம் நடந்தது?

பட்டர்: நேத்துத்தானிருக்கணும். நாங்கள் நேரத்தோடேயே கிளம்பிட்டோம். நேத்து ராத்திரிதான் சம்பந்தம் நிச்சயம் பண்ணியிருந்தது. அது எங்களுக்குத் தெரியும். அது நிச்சயமா எங்களுக்குத் தெரியும்.

மாதவன்: எப்படி நிச்சயமாத் தெரியும்?

பட்டர்: கோயில்லே எல்லாருமே சொன்னாங்க. அந்த வீட்டு சம்பந்தக்காரரான சீனுபட்டரும் சொன்னாரு—என்கிட்டதான் சொன்னாரு.

மாதவன் உயிரற்றுப்போய் முற்றத்தில் உட்கார்ந்தான்.

அந்த மடத்தில் சாப்பாடு விற்றுக்கொண்டிருந்தவள் ஒரு கிழட்டு பிராமணப் பெண்மணி. அதிசுந்தரனான அந்தப் பையன் மிகவும் பதற்ற நிலையில் இருப்பதைக் கண்ட அவள் ஒரு பாயை எடுத்து விரித்து, "இதிலே உக்காரு" என்று சொன்னாள். "கொஞ்சம் மோர் குடிச்சால் அசதி தீரும், கொண்டாரட்டுமா?" என்று கேட்டாள். மாதவனுக்கு இந்த வார்த்தைகள் எதுவும் கேட்கவே இல்லை. தரையிலேயே உட்கார்ந்திருந்தான். சிறிது நேரம் கழித்து இன்னாரோடு பேசுகிறோம் என்றில்லாமல், "எனக்குத்

குடிக்கக் கொஞ்சம் தண்ணி வேணும்" என்றான். ஒரு நம்பூதிரி வேகமாகத் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்தார். மாதவன் தண்ணீரைக் குடித்துவிட்டுப் பாயை விரித்து அதில் படுத்தான். அதியழகனாயிருந்த அந்தப் பையனின் வருத்தத்தையும் நிலைமையையும் பார்த்து அந்த மடத்தில் தங்கியிருந்தவர்களெல்லாம் ஒட்டுமொத்தமாக வருத்தப் பட்டார்கள். சிறிது படுத்திருந்த பிறகு எழுந்து தன் கடிதப் பையைத் திறந்து நம்பூதிரிப்பாடின் சம்பந்தத்தைப் பற்றித் தனக்கு அப்பா கோவிந்தப் பணிக்கர் எழுதியிருந்த கடிதத்தைப் படித்தான். அப்படிப் படிக்கப்பட்டது கீழே தரப்பட்டிருக்கிறது:

"காரணவதாக பஞ்சுமேனோனும் கேசவன்நம்பூ திரியும் இந்துலேகாவுக்கு மூர்க்கில்லாத்தமனைக்கல் நம்பூதிரிப்பாடு கொண்டு சம்பந்தம் நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள். இந்த நம்பூதிரிப்பாடு ஒரு பெரிய பணக்காரர். ஆனாலும் எனக்கு இந்தக் காரியம் நடக்குமென்று தோன்றவில்லை. தம்பிக்கு இதில் கொஞ் சமும் வருத்தம் வேண்டாம்."

இதைப் படித்து முடித்து தபால்பையிலேயே வைத்து விட்டு மாதவன் மீண்டும் அங்கே படுத்தபடி யோசிக்கத் தொடங்கினான்:

'இப்படி நடந்திருக்குமோ? ஒருக்காலும் நடந்திருக்கக் கூடிய சங்கதியில்லை. ஏனென்றால் இந்த நம்பூதிரியைப் பற்றி மாதவி எனக்கு ஒரு கடிதம்கூடப் போடவில்லை. நான் போனதற்குப் பிறகு மாதவியிடமிருந்து ஒரு கடிதம்கூட எனக்குக் கிடைக்கவில்லை. இதற்கு முன்பு இப்படி எழு தாமல் இருந்ததில்லை. இருக்கட்டும்—வேறே காரணத் தினாலும் அப்படிக் கடிதம் வராமலிருந்திருக்கலாம். ஆனால் சீனுபட்டர் விவரங்கள் எதுவும் தெரியாமல் இந்தக் காரியத்தில் பொய் சொல்லியிருக்க மாட்டார். என்ன ஒரு விவகாரம் இது! பெண்களின் மனம் இப்படி இருக்கலாம். நம்பூதிரிப்பாடு என்னைவிடத் தகுதியானவனாக இருக் கலாம். என்னைவிட அதிகத் திறமைசாலியாகவும் வசீகர மானவனாகவும் இருக்கலாம். இந்துலேகா விரும்பி யிருக்கலாம். தாத்தாவின் நிர்ப்பந்தமும் சேர்ந்திருக்கும்'—

என்பதாக ஒரு சமயம் யோசிப்பான். பிறகு அதெல்லாம் தவறு என்பதாக எண்ணுவான். 'என்னுடைய மாதவி வேறு ஒருவனை எப்போதாவது விரும்பியிருப்பாளா? நான் எவ்வளவு அசடு! சீ! யாரோ ஏதோ ஒரு வதந்தி கிளப்பியதை இவர்கள் கேட்டு வந்திருப்பார்கள்'—இப்படிக் கொஞ்ச நேரம் யோசிப்பான். 'ஆனால் சீனுபட்டர் சொன்னார் என்ற எதற்காகச் சொல்ல வேண்டும்?—அதற்குக் காரணம் இல்லை அல்லவா?'—என்று நினைத்து வருந்துவான். இப்படி மனது அங்குமிங்குமாக அலைபாய மாதவன் படுத்துக் கிடந்தபோது ஐந்தாறு வழிப்போக்கர்கள் மேலும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் நம்பூதிரிப் பாடுக்கு நெருக்கமானவர்கள். வரும் வழியில் நம்பூதிரிப் பாடின் ஆரவாரப் பயணத்தை நேரில் பார்த்தவர்கள். அவர்கள் வந்து சேர்ந்தபோது அவர்களில் ஒருவர், ஏற்கனவே அங்கிருந்த பரிச்சயமான ஒருவரிடம் சொன்னார்:

"இன்னிக்கு வர்ற வழியிலே நான் ஒரு கல்யாண யாத்திரையைப் பார்த்தேன்."

இதைச் சொல்லக் கேட்டபோதுதான் மாதவனுக்கு விவரம் புரிந்தது. எலக்ட்ரிக் பேட்டரி என்ற மின்சார இயந்திரப் பெட்டியைக் கையால் தொட்டவனை அந்த இயந்திரம் திருப்பித் தாக்கி உடம்பெங்கும் எப்படி அதிர்ச்சி ஏற்படுமோ அதைப் போல மனதில் மட்டுமல்லாமல் உடம்பின் எல்லாப் பகுதிகளிலும் தாங்க முடியாத வேதனையும் மந்தத்தனமும் ஏற்பட்டன.

ஒரு நம்பூதிரி: என்ன கல்யாணம்? யாரோட பயணம்?

மாதவனை முன்பு சமாதானப்படுத்திய நம்பூதிரி: ஓய், எதுவும் கேட்கவேணாம். அங்கே படுத்திருக்கிற பையன் மறுபடியும் சண்டைக்கு வந்திரும்.

மற்றொரு நம்பூதிரி: இதென்னய்யா கதை! நினைச்சதைப் பேசக்கூடக் கூடாதா? சண்டைக்கு வந்தா வரட்டும்—என்னய்யா கல்யாணம்? சொல்லும்.

கடைசியில் வந்த பயணிகளில் ஒருவர்: மூர்க்கில்லாத்

தமனய்க்கல் நம்பூதிரிப்பாடின் கல்யாண யாத்திரை. செம்பாழியோட்டுக் குடும்பத்திலே நேத்து சம்பந்தம் முடிச்சி பொண்ணு ஒரு பல்லக்கிலே; அவரு வேறே ஒரு பல்லக்கிலே; செறுசேரி கோவிந்தன்நம்பூதிரி ஒரு டோலியிலே; கறுத்தேடத்து கேசவன்நம்பூதிரி ஒரு டோலியிலே; நிறைய வேலைக்காரங்க—வாளும் கேடயமும் கூப்பாடும் ஆர்ப்பாட்டமும் அமர்க்களம்—மகா அமர்க்களம்!

முன்பு சமாதானப்படுத்திய நம்பூதிரி மற்றொரு நம்பூதிரியிடம்: அதோ எந்திரிச்சிட்டான்—இப்போ சண்டை வரும்னு தோணுது. அதோ பாரு; கிளம்பி வர்றான்.

மாதவன்: இல்லேய்யா, நான் ஒரு சண்டைக்கும் வரல்லே.

என்று சொல்லிவிட்டு மடத்து முற்றத்தில் இறங்கி அங்குமிங்குமாக நடந்து கொண்டிருந்தான். அப்போது சங்கரசாஸ்திரிகளும் மற்றவர்களும் அதற்கு நேர்த்தெற்கே இருந்த மடத்திற்குச் சென்றுகொண்டிருப்பதைப் பார்த்து "சங்கரசாஸ்திரிகள்தானே அது?" என்று மாதவன் குரல் கொடுத்து விசாரித்தான். சாஸ்திரிகள் திரும்பிப் பார்த்து பெரிதும் ஆச்சரியப்பட்டார். 'மகாபாவம்! இவ்வளவு சீக்கிரம் எனக்கு இப்படி ஒரு கஷ்டம் வந்திரிச்சே! இந்தப் பையனை நான் எப்படிப் பார்க்கிறது? நான் மகா பாவிதான்' என்று கலங்கினார்.

சங்கரசாஸ்திரிகள்: ஆமாம்; நான்தான்.

என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே மாதவன் இறங்கி நடந்து அவருக்கு அருகில் போய் நின்றான்.

மாதவன்: நான் இப்போ இங்கே மாதவியைப் பத்திக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதானா?

சங்கரசாஸ்திரிகள்: ஆமாம்.

அந்த 'ஆமாம்' என்ற சொல் இடி விழுந்ததற்குச் சமம்; இடிதான். மாதவனின் முகமும் தேகமும் கருகிச் சாம்பலாயின. கார்க்கோடகப் பாம்பு கடித்தபோது நளனுக்கு உடல் சிதைந்தது போல என்று சொல்லலாம். பிறகு சாஸ்திரிகளிடம் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. நேர் கிழக்கே பார்வையைச் செலுத்தியபோது ஒரு பெரிய

குணமும் ஆலமரத்தடியும் தெரிந்தன. அந்தத் திக்கு நோக்கி நடந்தான். சாஸ்திரிகளும் பின் தொடர்ந்து நடந்தார். அதை மாதவன் அறியவில்லை. குளக்கரையில் ஆலமரத்தடியைச் சென்றடைந்து கண் இருளடைய உணர்வற்றவனாக அரை மணி நேரம் நின்றிருந்தான். அப்போது மனதில் கொஞ்சம் அமைதி வந்து சேர்ந்தது. திரும்பிப் பார்த்தபோது சாஸ் திரிகள் பக்கத்தில் நிற்பதைப் பார்த்தான். சாஸ்திரிகளைப் பார்த்ததும் வெகுளி மாதவன் அழலானான். கண்களி லிருந்து கண்ணீர் வழிவது நிற்கவில்லை. சாஸ்திரிகளும் அழுதார். இவ்வாறு சிறிது நேரம் கழிந்தது. வெகுளியான சாஸ்திரிகளுக்கு மாதவனைவிட அதிக வருத்தம். ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. கடைசியில் இந்த விஷ யத்தில் மாதவனுக்குத்தான் பெரிய அவமானமாகத் தோன் றியது. தன்னுடைய கண்ணீரைத் துடைத்துக்கொண்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சாஸ்திரிகளிடம் பேசினான்:

மாதவன்: சாஸ்திரிகள் ஏன் வருத்தப்பட றீங்க? வருத்தப்படாதீங்க. உலகத் திலே இதெல்லாம் நடக்கிற விஷ யங்கள்தானே!

அதற்குப் பிறகும் சாஸ்திரிகளுக்கு ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. தொண்டை வறண்டுபோய், கண் ணீரும் வழிந்து கொண்டிருந்தது. அவர் நல்ல படிப்புள்ள பண்பான ஒரு பிராமணர். மாதவனைக் கண்ணுக்கு முன்பாகப் பார்த்தபோதுதான் தான் நினைத்தபடி இந்து லேகாவின் துஷ்டத்தனமான நடவடிக்கை அமைந்தது குறித்து அதிகம் சங்கடப்பட்டார். மாதவனுக்கு இந்த சாஸ் திரிகள் மீது மிகவும் மரியாதை. இந்துலேகாவுக்கும் அப்படித்தான் என்று மாதவனுக்குத் தெரியும்.

மாதவன்: ஏன் சாஸ்திரிகள் சும்மா வருத்தப் படறீங்க? எனக்குக் கொஞ்சமும் வருத்தமில்லே. இப்போ மாத விக்கு—இல்லே, இந்துலேகாவுக்கு ரொம்ப சந்தோஷமான நேர மில்லையா? உங்களோட சிநேகமா

இருக்கிற எனக்கும் இந்துலேகாவுக்கும் வருத்தம் தராத காரியத்தில் எனக்காக வேண்டி எதுக்காக நீங்க வருத்தப்படணும்?

சாஸ்திரிகள்: இந்துலேகா இனிமே என்னோட சிநேகிதத்துக்கு அருகதை இல்லாதவ. அவளை நான் வெறுக்கிறேன்.

இதைக் கேட்டதும் மாதவனுக்கு இரண்டாவது தடவையாகக் கண்களில் நீர் நிறைந்தது. சிறிது நேரம் எதுவும் பேசாமல் இருந்தான். பின்னர்—

மாதவன்: அவளை எதுக்காக அப்படிக் குத்தம் சொல்றீங்க? தாத்தாவோட வற்புறுத்தலா இருக்கும்.

சாஸ்திரிகள்: அதெல்லாம் ஒண்ணுமில்லே. இந்துலேகாவோட சொந்த விருப்பப்படிதான் இதெல்லாம் நடந்திருக்குது. அவளும் நம்பூதிரிப்பாடும் ரொம்ப விரும்பி மனசு லயிச்சிப் போனது எல்லாருக்கும் தெரியும். ஆனால் நம்பூதிரிப்பாடோ?—மகா அசடுன்னு உலகப் பிரசித்தம். பார்த்தால் குதிரை மூஞ்சி.

மாதவன்: போதும், போதும். எனக்கு இதெல்லாம் கேட்கத் தேவையில்லே. நான் இன்னிக்கு சாயங்கால வண்டிக்கே பட்டணத்துக்குத் திரும்பிப் போயிடறேன்.

சாஸ்திரிகள்: அதுதான் இப்போதைக்கு நல்லதுன்னு எனக்கும் தோணுது. எல்லாம் சீக்கிரம் ஆகட்டும். சாப்பிட்டு முடிக்கணுமில்ல?

மாதவன்: சாப்பிடணும்னு தோணலே.

சாஸ்திரிகள்: அப்படியெல்லாம் இருக்கக்கூடாது. மடத்துக்குள்ளே போய் மத்தவங்

களோட உட்கார்ந்து சாப்பிடப் பிடிக்கலேன்னா, நான் போய் சாப்பாட்டை இங்கே எடுத்துக் கிட்டு வரட்டுமா? ஆலமரத்தடி தனிமையா இருக்கு. நல்லா குளிர்ச் சியா இருக்கு.

மாதவன்: அப்படீன்னா நீங்க சாப்பிட்டு முடிச்சி கொஞ்சம் சாப்பாடு இங்கே கொண்டு வந்திருங்க.

சாஸ்திரிகள் சாப்பிடப் போனார். மாதவன் ஆல மரத்தடித் திண்ணையில் உட்கார்ந்து யோசிக்கத் தொடங் கினான். அதையெல்லாம் இங்கே சொல்வதில் எந்தப் பலனும் இல்லை. சிலவற்றைச் செய்து முடிக்கத் தீர்மானித் தான். அதை இந்தக் கதையில் இனி நடப்பதைக் கொண்டு தெரிந்துகொள்ளலாம்.

சாப்பிட்டு முடித்து வண்டி ஏறினான். சாஸ்திரிகள் துணைக்கு வருவதாகச் சொல்லியும் சம்மதிக்கவில்லை.

மறுநாள் சென்னையைச் சென்றடைந்தவுடன் கில் ஹாம் துரையைக் காணச் சென்றான். அவர் அன்றைக்குக் கச்சேரிக்குப் போயிருக்கவில்லை. ஆபீஸ் அறையில் உட் கார்ந்திருந்தார். மாதவனுடைய கார்டு பார்த்ததும் மிகவும் ஆச்சரியப்பட்டார். எட்டு நாட்கள் விடுப்பு பெற்று நேற்றைக்கு முந்தின நாள் மலையாள நாட்டுக்குச் சென்று கல்யாணத்தை முடித்துக்கொண்டு வரவேண்டுமென்று போன மாதவன் திரும்பி வந்துவிட்டானா என்று ஆச்சரி யப்பட்டுக் கூப்பிடச் சொன்னார்.

மாதவன் உள்ளே வந்தான். முகத்தை நோக்கியபோது துரை மிகவும் வருத்தப்பட்டார். இந்த கில்ஹாம் துரை மாதவன் மீது மிகவும் அன்பு செலுத்திய ஒருவர். மாதவனை சிவில் சர்வீசில் தேர்ந்தெடுக்க அவர் தீர்மானித்து வைத்தி ருந்தார். வண்டியில் இரண்டு மூன்று நாட்கள் பயணத் தினாலும், மனதில் வருத்தம் இருந்ததனாலும் மாதவனின் முகம் மிகவும் வாடிப்போயிருந்தது. முன்னதாகக் கார்டு கொடுத்தனுப்பி இருந்திராவிட்டால் துரை மாதவனை அடையாளம் கண்டறிய அல்லல்பட்டிருப்பார் என்றே

சொல்லலாம். பார்த்தவுடன்—

கில்ஹாம் துரை: மாதவா, என்னப்பா இது? குடும்பத்திலே யாராவது செத்துப் போய்ட்டாங்களா? என்ன நீ பாதியிலே திரும்பி வந்தது? உன்னோட முகமும் போக்கும் மோசமா இருக்கு— உக்காரு.

மாதவன்: என் குடும்பத்திலோ சிநேகிதங்களிலோ யாரும் சாகலே. ஆனால் எனக்கு மனசிலே பெரிய வருத்தம் ஏற்பட்டிருக்கு. என்மேலே இவ்வளவு பிரியம் வச்சிருக்கிற உங்ககிட்ட சொல்றதிலே எனக்குத் தயக்கமில்லே.

இதைக் கேட்டவுடன் புத்திசாலியான துரைக்கு விவரம் ஏறத்தாழப் புரிந்து விட்டது. கல்யாணத்திற்குப் போவதாகச் சொல்லி மாதவன் விடுப்பு வாங்கிச் சென்றது அவருக்கு நினைவிருந்தது. அதில் பெரிய தகராறு ஏற்பட்டிருக்கலாம். அந்த விவரத்தைத் தன்னிடம் சொல்வதற்கு மாதவனுக்குத் தயக்கம் ஏற்படவில்லையென்றாலும், சொல்லும் போது ஒரு வேளை வெட்கம் உண்டாகலாம். அதனால் உடனே சொல் என்று கூறாமல் 'பின்னால் சொல்லலாமே' என்றொரு பீடிகை போட்டு துரை பேசினார்.

கில்ஹாம் துரை: எனக்கு விவரம் இப்பவே தெரியணும்னு இல்லே. பின்னால் சாவகாசமாகச் சொன்னால் போதும். ஆனால் உனக்கு ஏதாவது தேவையானால் செய்றதுக்கு நான் ஆயத்தமா இருக்கேன்.

மாதவன்: தயவுசெய்து எனக்கு ஒரு வருஷம் விடுப்பு தரணும்னு நான் கேட்டுக்கிடுறேன். எனக்கு நாடு சுத்திப் பார்க்கணும்னு கொஞ்சம் ஆசையுண்டு.

சிறிது யோசித்துவிட்டு துரை பதில் கூறினார்:

கில்ஹாம் துரை: மனசிலே ரொம்ப வருத்தம் இருக்குமானால் அதைச் சரிப்படுத்தறதுக்கு நாடு சுத்திப் பார்க்கிறதுக்கு மாத்து வேறே ஒண்ணுமில்லே. உன்னோட கவலை எனக்கு முழுதுமா தெரிஞ்சி போச்சி. நீ படிப்பு முடிஞ்சதும் ஒரு சுற்றுப் பயணம் முடிச்ச பிறகுதான் வேலையிலே சேரலாம்னு உனக்கே தெரியுமே! எந்த நாட்டை சுத்திப் பார்க்கணும்னு நினைச்சிருக்கே? முடியுமானால் ஐரோப்பாவுக்குப் போய்ட்டு வா. ஆனால் இப்போ வர்ற மாசம் முதல் மூணு மாசம் அங்கே ரொமப் குளிரும் சுகக்கேடும் உள்ள காலம். இப்போ எங்கே போறதாக நினைச்சிருக்கே?

மாதவன்: இப்போ ஐரோப்பாவிலே சரியில்லேன்னா வடஇந்தியாவிலும் பர்மாவிலும் பயணம் பண்ணி ஊரெல்லாம் பார்க்கணும்னு நினைக்கிறேன்.

கில்ஹாம் துரை: அப்படீன்னா நீ இப்போ ஒரு நாலு மாசம் விடுப்பு எடுத்தாப் போதும்னு நான் நினைக்கிறேன். பின்னாலே அதிகம் தேவைப் பட்டா எழுதி அனுப்பினா நான் அனுமதி தர்றேன். உன்கிட்ட அசதி ரொம்பத் தெரியுது. சீக்கிரம் போய் சாப்பிட்டு முடி.

என்று சொல்லிவிட்டு துரை எழுந்தார். மாதவனும் எழுந்து நின்றான். துரை மாதவனின் கையைப் பிடித்து, "உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகட்டும். உன்னுடைய

வருத்தமெல்லாம் தீர்ந்து உன்னைப் பார்க்கிற நிலைமை வரட்டும்" என்று சொன்னபோது துரைக்கும் மாதவனுக்கும் சேர்ந்தாற்போல் கண்களில் நீர் நிரம்பியது.

மாதவன் உடனே தான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்று குளித்து முடித்து சாப்பிட்டதாகப் பேர்பண்ணி விட்டு, அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதி சின்னனையும் வேலைக்காரர்கள் இருவரையும் கடிதத்துடன் கேரளத்திற்கு அனுப்பி வைத்தான். மறுநாள் சாயங்கால வண்டியில் பம்பாய்க்கு டிக்கட் வாங்கிக்கொண்டு சென்னையிலிருந்து புறப்பட்டான்.

இனி எனக்குச் சொல்ல வேண்டிய கதை மிகவும் கஷ்ட மான கதையாகும். இதுவரை எழுதியதைவிடக் கஷ்ட மானது. ஆனாலும் சொல்லாமல் இருக்க முடியாதல்லவா!

சின்னனும் இரண்டு வேலைக்காரர்களுமாகச் சேர்ந்து மறுநாள் மதியம் வண்டியிலிருந்து இறங்கி பட்டர்களின் மடத்தில் தங்கி சாப்பிட்டு முடித்து, அங்கிருந்து கிளம்பி செம்பாழியோட்டைச் சேர்ந்த சாப்பாட்டுச் சத்திரத்தை அடைந்து அன்று அங்கே தங்கினார்கள். மறுநாள் காலை யில் பத்து மணிக்கு செம்பாழியோட்டைச் சென்றடைந் தார்கள். சின்னனும் ஒரு வேலைக்காரனும் பூவள்ளி வீட்டுக்கும், மற்றவன் கோவிந்தப் பணிக்கர் வீட்டுக்குமாகப் போனார்கள். இவன் போகும்போது கோவிந்தப் பணிக்கரும் கோவிந்தன்குட்டிமேனோனும் இரண்டு நாற் காலிகளில் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந் தார்கள். வேலைக்காரன் படியேறி வருவதைக் கண்டதும் கோவிந்தப்பணிக்கர் எழுந்து மாதவன் வந்திருக்கிறானா என்று விசாரித்தபடி முற்றத்திற்கு வந்து நின்றார். "தம்பி எஜமான் வரலீங்க—ஒரு கடுதாசு குடுத்திருக்காங்க" என்று கூறினான். அப்போது கோவிந்தப் பணிக்கருக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. "உடம்புக்கு ஒண்ணும் இல்லேல்ல?" "இல்லே" என்று வேலைக்காரன் சொன்ன பிறகு கடி தத்தைப் பிரித்துப் பார்த்தார். அவர் வாசித்த கடிதத்தைக் கீழே தருகிறேன்:

"விவரமெல்லாம் சங்கரசாஸ்திரிகளும் மற்றவர்களும் சொன்னார்கள். என்னுடைய அபிப்ராயத்தைப் போலவே

அப்பாவுக்கும் இந்துலேகா மீது அபிப்பிராயம் இருந்தது என்று நான் அறிந்துகொண்டதனால் நான் அவ்வாறு அபிப்பிராயம் கொண்டதில் என்னை அதிகம் நிந்திக் காதீர்கள். மனிதர்களின் கபடம் எவ்வளவென்றும், எத்த கையது என்றும் ஒருவருக்குத் தீர்மானிக்க முடியாதல்லவா? எனக்கு மனது கொஞ்சம் சரியில்லாததனால் ராஜ்ய சஞ்சாரம் செய்யப் போகிறேன். சில நாட்கள் கழித்து சரியானதும் திரும்பி வந்து அப்பாவையும் அம்மாவையும் சந்திப்பேன். இதன் பொருட்டு அப்பா கொஞ்சம்கூட வருத்தப்பட வேண்டாம். நான் தற்கொலை போன்ற தவறான நடவடிக்கைகள் எதிலும் இறங்கிவிடுவேன் என்று சந்தேகப்பட வேண்டாம். ராஜ்ய சஞ்சாரம் முடித்து நிச்ச யமாகத் திரும்பி வருவதாகத்தான் நான் இப்போது நினைத் திருக்கிறேன். ஆனால் அது எவ்வளவு காலத்திற்கென்று நான் தீர்மானிக்கவில்லை. அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நான் எவ்வளவு பிரியமான மகனென்று எனக்கு நன்றாகவே தெரியும். நான் என்னதான் எழுதினாலும் அப்பா வருத்தப்படாமல் இருக்கப் போவதில்லை. ஆனால் அம்மாவைக் கருதியாவது அப்பா வருத்தத்தை வெளியே காட்டிக்கொள்ளக் கூடாது. அப்பா கொஞ்சம் வருத்தப் பட்டாலும் அம்மா மிகவும் வருந்துவார்கள். நான் நாளை சென்னையிலிருந்து கிளம்புகிறேன். இப்படிக்கு என் அப்பாவுக்குப் பிரியமான—மாதவன்."

இந்தக் கடிதத்தைப் படித்தவுடன், "அய்யோ! என் மகனே! நீ என்னை விட்டிட்டு ஓடிப்போயிட்டியே" என்று சொல்லி நெஞ்சில் அடித்துக்கொண்டு கோவிந்தப் பணிக்கர் மூர்ச்சையாகி விழுந்தார்.

கோவிந்தன்குட்டிமேனோன் அதையெல்லாம் பார்க் காமல் உடனுக்குடன் கடிதத்தை எடுத்துப் படித்துப் புரிந்து கொண்டார். சிறிது தண்ணீர் கொண்டு வந்து கோவிந்தப் பணிக்கரின் முகத்தில் தெளித்து, அவருக்குத் தெளிவு வந்ததும் மிகுந்த கோபத்துடன் கூறினார்:

கோவிந்தன்
குட்டிமேனோன்: இதென்ன அலங்கோலம்? கஷ் டம்—கஷ்டம்! இவ்வளவு புத்திசாலி யாயிருந்தும் இந்த மாதிரி நடந்துக்

கிடுறதா? கஷ்டம்—கஷ்டம்! மகா கஷ்டம்! இந்த அமர்க் களத்தைப் பார்த்ததும் மாதவன் செத்துப் போயிட்டானோன்னு நான் சந்தேகப்பட்டுட்டேன். அண்ணாச்சிக்கு புத்தி மழுங்கிப் போயிடல்லியே? மாதவன்கிட்ட இருக்கிற ரொம்பப் பிரியத்தினாலே இப்படி அனாவசியமா வருத்தப்படறீங்க. மாதவனுக்கு இப்போ என்ன வந்திட்டது? மனசு சரியில்லேன்னு கொஞ்ச நாள் ராஜ்ய சஞ்சாரம் பண்றதுக்குத் தீர்மானிச்சி பட்டணத்திலேருந்து கிளம்பியிருக்கேன்னு தெரிவிச்சிருக்கான். இதிலே இவ்வளவு வருத்தப்படறதுக்கு என்ன இருக்கு? இந்தியா முழுக்க புகைவண்டி இருக்கு— ஐரோப்பாவுக்குப் போயிருந்தாலும்கூட சுலபத்திலே அவனைக் கண்டுபிடிச்சிடலாம். பணத்தை செலவு பண்ணிணா எங்கே இருந்தாலும் அவனைப் பத்தி எப்படியும் தெரிஞ்சிக் கிடலாம். நாமே தேடிக் கண்டு பிடிச்சிடலாம்.

கோவிந்தப்பணிக்கர்: அதிலே என்ன சந்தேகம்? நான் இனிமே சாப்பிடுறதுங்கறது இந்தக் கேரளத்தைத் தாண்டின பிறகு தான்—அதிலே சந்தேகமில்லே.

கோவிந்தன் குட்டிமேனோன்: ஆகட்டும்; போறதுக்கு என்ன தடை? நிச்சயமா நானும் வர்றேன். இப்படி வரம்பில்லாம வருத்தப் படறது என்ன கஷ்டம்! அண்ணாச்சியோட இந்த வருத்தத்தைப் பார்த்தா அண்ணி எப்படி

உயிரோட இருப்பாங்க?

இப்படிப் பேசிக்கொண்டிருந்தபோது கடும் வெயிலில் இந்துலேகா வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார்கள். உடனே கோவிந்தப்பணிக்கர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எழுந்து நின்றார். இந்துலேகா வெயிலில் நடந்து வியர்த்து முகம் ரத்தச் சிவப்பாகியிருந்தது. தலைமுடி முழுவதும் அலைக்கழிந்து கிடந்தது. "சென்னையிலேருந்து என்ன சேதி வந்தது?" என்று அவள் கேட்டுக்கொண்டிருந்த போதே பின்னாலேயே இந்துலேகாவின் அம்மா, பாட்டி, பார்வதியம்மா, ஐந்தாறு வேலைக்காரிகள் ஆகியோர் வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார்கள். எல்லோருமாகச் சேர்ந்து அங்கே ஒரு நெரிசலையே உண்டாக்கிவிட்டார்கள் என்றே கூறலாம்.

இந்துலேகா: சென்னையிலேருந்து என்னங்க சேதி? என்கிட்ட சொல்லக் கூடாதா?

கோவிந்தன் குட்டிமேனோன்: இந்துலேகா உள்ளே போ. ஒண்ணும் கவலைப்பட வேண்டாம்; வருத்தப்படறதுக்கு ஒண்ணுமில்லே.

பார்வதியம்மா: அய்யோ! என் கண்ணு எங்கே போயிட்டான்? அய்யய்யோ—நான் இனிமே அரை நாழிகைகூட உயிரோட இருக்க மாட்டேன்!

இந்துலேகா: கடுதாசி கொண்டு வந்தது சின்னன் என்கிட்டசொன்னான். அந்தக் கடுதாசி எங்கே?

கோவிந்தப்பணிக்கர் கடிதத்தை இந்துலேகாவின் கையில் கொடுத்தார்.

இந்துலேகா கடிதத்தைப் படித்தவுடன் உள்ளே ஓர் அறைக்குள் போய்க் கட்டிலில் விழுந்து அழத் தொடங்கினாள். பார்வதியம்மாவின் அரற்றல் பொறுத்துக் கொள்ள முடியாததாயிருந்தது:

"என் மகனே, உன்னை இனிமே நான் எப்போ

பார்க்கப்போறேன்? என் மகனைப் போல ஒரு பையனை இந்த பூமியிலே பார்க்க முடியுமா, ஈஸ்வரா! நான் இனிமே எப்படி உயிரோட இருப்பேன், ஈஸ்வரா! என் கண்ணு, உன்னை யாரு கவனமாப் பார்த்துக்கிடுவாங்க? எனக்கு வேறே எந்தப் பிள்ளையும் இல்லேன்னு தெரிஞ்சிருந்தும் நீ இப்படி என்னை விட்டிட்டுப் போயிட்டியே, செல்லம்! ஈஸ்வரா!"

என்று சொல்லி ஆங்காரமாக நெஞ்சிலடித்துக் கொண்டு அரற்றுவதைக் கேட்டுக் கொண்டு நின்றிருந்த ஒருவருக்கேனும் அந்தத் தாயுடன் ஒரு வார்த்தைகூடப் பேச தைரியம் வரவில்லை.

அப்போது பூவள்ளியிலிருந்து சங்கரமேனோன், சாத்தரமேனோன் முதலிய எல்லோரும் வந்து சேர்ந்தார்கள்.

சங்கரமேனோன்: (பார்வதியம்மாவிடம்) எதுக்காக நீ இப்படி அழுறே? மாதவனுக்கு ஒண்ணும் வராது.

இவ்வளவு சொல்லி முடிப்பதற்குள்ளாகவே சங்கர மேனோனும் அயர்ந்துபோனார். அவருக்கு மாதவன் மீது கொள்ளைப் பாசம்.

சங்கரமேனோன்: (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) பத்து நாளுக்குள்ளே மாதவன் இங்கே வருவான். அவன் எந்தத் திக்கிலே இருந்தாலும் நாங்க போய்க்கூட்டி வந்திடுறோம். பிறகு நீ ஏன் வருத்தப்படறே?

பார்வதியம்மா: அண்ணாச்சி போறதா இருந்தா நானும் கூடவே வருவேன். எனக்கு என் குழந்தையைப் பார்க்காம இங்கே இருக்க முடியாது, நிச்சயமா.

சங்கரமேனோன்: ஆகட்டும், .நீயும் வா. இப்போ பூ வள்ளி போய் அமைதியா இரு. எந்திரி—காரியம் எல்லாம் சரியா நடந்து முடியும். மாதவனுக்கு எந்தக் கெடுதலும் வராது.

கோவிந்தப்பணிக்கர்: பார்வதி, போய் இரு—நானும் கோவிந்தன்குட்டியும் இந்த

நிமிஷமே கிளம்பி மாதவனைத் தேடிப் போறோம். பத்து நாளுக் குள்ளே நாங்க மாதவனோட இங்கே வந்து சேர்றோம். ஒண் ணும் கவலைப்படாதே.

என்று சொல்லி பார்வதியம்மாவை சற்றே ஆசுவாசப் படுத்தி பூவள்ளிக்கு அனுப்பி வைத்தார்.

யாருக்கும் இந்துலேகாவுடன் எதுவும் பேச தைரியம் வரவில்லை. கடைசியில் கோவிந்தன்குட்டிமேனோனும் சங்கரமேனோனும் வற்புறுத்தியதனால் இந்துலேகா படுத் திருந்த அறைக்குள் கோவிந்தப்பணிக்கர் சென்றார்.

கோவிந்தப்பணிக்கர்: (இந்துலேகாவிடம்) எதுக்காக இப்படி வருத்தப்படறே? இப்படி வருத்தப்படறதுக்கு ஒரு கெடுதலும் உனக்கு இப்போ வந்திரலே. நீ இப்படி வருத்தப்பட்டுப் படுத்துக் கிடந்தா நானும் கோவிந்தன் குட் டியும் மாதவனைத் தேடிப் போகத் தீர்மானிச்சிருக்கிறது தடைப்படும்.

இதைக் கேட்டதும் இந்துலேகா எழுந்து நின்றாள்.

இந்துலேகா: தேடிப் போகத் தீர்மானிச் சிருக்கீங்களா?

கோவிந்தப்பணிக்கர்: என்ன சந்தேகம்? நான்தான் போறேன்.

இந்துலேகா: நேத்தோ இன்னிக்கோ பம்பாயி லிருந்து கப்பல் ஏறியிருப்பாரு; அப்பஎன்னா?

அப்போது கோவிந்தன்குட்டிமேனோன் உள்ளே வந்தார்.

கோவிந்தன் குட்டிமேனோன்: எங்களுக்கென்ன வெளிநாட் டுக்குப் போறதுக்குக் கப்பல் கிடைக்காதா? நீ எதைப் பத்தியும் கவலைப்படாதே. உயிரோட இருந்தா நாங்க மாதவனை எங்க ளோட கூட்டிக்கிட்டு வந்திரு

வோம்.

என்று சொல்லி கோவிந்தன்குட்டிமேனோன் அம்மாவை அழைத்துக் கொண்டு தனக்குப் புறப்படுவதற்குத் தேவையானதையெல்லாம் ஆயத்தப்படுத்த பூவரங்குக்குப் போனார்.

இந்துலேகா: (கோவிந்தப்பணிக்கரிடம்) இப்படி ஒரு சதி செஞ்சது யாரு? அவருக்கும் எனக்கும் எந்த விரோதியும் இருக்கிறதா எனக்குத் தெரியலே.

கோவிந்தப்பணிக்கர்: இதிலே ஏதோ ஒரு தப்பான எண்ணம் ஜனங்களுக்கு வந்தாப்பிலே இருக்கு. நம்பூதிரிப்பாடு இந்துலேகாவோட மாடியிலே வச்சி பாட்டுக் கேட்டுக்கிட்டு அங்கேயே இருந்து ரெண்டு ராத்திரிப் பொழுதுகள் தூங்கினார்னும் மத்ததும் இந்தப் பக்கத்திலேயெல்லாம் ஒரு வதந்தியா பரவிடுச்சி. பொல்பாயிப் பண்ணையிலே இப்படிப் பேசிக்கிட்டிருந்ததை நான் கேட்டேன். அதுவும் போக, நம்ம சாஸ்திரிகளும் பையன்கிட்ட அசட்டுத்தனமா என்னென்னமோ பேசினதாக் கேள்விப்பட்டேன். என்ன செய்யலாம்! நம்ம தலைவிதி—என் பையனைப் பார்க்காம நான் திரும்பப் போறதில்லே. அவனைப் பார்க்கலேன்னா நான் அதுக்குப் பின்னாலே உயிரோட இருக்கப் போறதில்லே.

என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே கண்களிலிருந்து நீர் பெருக்கெடுக்கத் தொடங்கியது.

இந்துலேகா: வருத்தப்படாதீங்க. அவரைப் பார்த்திரலாம். சுகமா இருக்கிறதா

நமக்குத் தகவல் வரும். ஆனால் எனக்கு ரொம்ப வருத்தம், என்னோட சுபாவம் இவ்வளவு நல்லாப் புரிஞ்சிருந்தும் நான் இவ்வளவு உதவாக்கரைன்னு இவ்வளவு சீக்கிரமா தீர்மானிச்சிட்டாரேன்னுதான், இந்த வருத்தத்தை என்னாலே பொறுத்துக்க முடியலே.

என்று சொல்லி இந்துலேகா அழுதாள்.

கோவிந்தப்பணிக்கர்: மாதவன் இந்தத் தடவை பட்டணத்துக்குப் போறப்போ நான்தான் உன்னோட மன உறுதியைப் பத்தியும் மத்ததும் நிறையச் சொன்னேன். தலைவிதியினாலே அவனுக்கு அதெல்லாம் நினைப்பிலே வரல்லே போலிருக்கு. இனி என்னவானாலும் இங்கேயே வருத்தப்பட்டுகிட்டு இருக்கிறதிலே பிரயோஜனமில்லே. நான் புறப்படுறதுக்கு எல்லாத்தையும் ஆயத்தம் செய்யணும்.

என்று சொல்லி கோவிந்தப்பணிக்கர் புறப்படுவதற்கான ஆயத்தங்களை செய்யத் தொடங்கினார். இந்துலேகாவை ஒருவழியாக அமைதிப்படுத்தி, அம்மா லட்சுமிக் குட்டியம்மாவுடன் பூவரங்குக்கு அனுப்பி · வைக்கவும் செய்தார். கோவிந்தப்பணிக்கர் தன் மனைவியையும் ஆசுவாசப்படுத்திவிட்டுப் புறப்படத் தயாரானார். பஞ்சு மேனோன் இந்தச் செய்தியைக் கேட்டபோது மிக்க மகிழ்ச்சியடைந்தார். 'கூறுகெட்டவனுக்கு அப்படித்தான் நடக்கும்' என்று சொல்லி மகிழ்ந்தார். ஆனால் மாதவன் எதற்காக இப்படிப் போனான் என்று அவருக்குத் தெளிவாகப் புரியவில்லை. தன்னுடைய சபதம் கேட்டு பயந்ததனாலோ வேறெதனாலோ இப்படி ஆகியிருக்க வேண்டுமென்று ஓர் ஊகம் மட்டும் இருந்தது. கோவிந்தன்

குட்டிமேனோன் தன் பயணத்தைப் பற்றிப் பஞ்சுமேனோ னிடம் தெரிவித்தபோது அது கொஞ்சம்கூடத் தனக்கு விருப்பமில்லை என்ற போதிலும், மறுப்பதால் பலனேதும் இல்லையென்று தீர்மானித்து மௌனத்தின் மூலமாகச் சம்மதித்தார் என்றுதான் சொல்ல வேண்டும். அன்றைய மதியச் சாப்பாடு முடித்து கோவிந்தப்பணிக்கரும் கோவிந்தன்குட்டிமேனோனும் நான்கு வேலைக்காரர் களுடன் மாதவனைத் தேடிப் புறப்பட்டுச் சென்றார்கள்.

## 16

# மாதவனின் சுற்றுப் பயணம்

மாதவன் சென்னையிலிருந்து வண்டி ஏறும்போது பம் பாய்க்கு டிக்கட் வாங்கினான் என்று சொல்லப்பட்ட தல்லவா? அவனுடன் வேலைக்காரர்கள் யாரும் இல்லை. உடுப்புகள் வைக்கும் தோல்பெட்டியில் சில ஆடைகள் (பெரும்பாலானவை இங்கிலீஷ் மாதிரியான உடுப்புகள்), வேறு ஒரு பெட்டியில் அவனுடைய விசேஷமான துப்பாக் கிகள், தோட்டாக்கள், ஒரு சிறிய கடிதப்பெட்டியில் பணம், எட்டுபத்து புத்தகங்கள்—இவற்றை மட்டுமே அவன் தன் னுடன் எடுத்துச் சென்றிருந்தான். வழிப்பயணம் நெடு கிலும் தரமான ஐரோப்பிய டிரஸ்ஸும் பூட்சும் என்ப தாகத்தான் தீர்மானித்து வந்திருந்தான். ஆறு குழல்கள் உள்ள ஒரு ரிவால்வரை கால்சட்டையின் பெரிய பாக்கெட்டில் வைத்தபடிப் பெரும்பாலும் நடக்கும் சம்பிரதாயத்தை ஆரம்பம் முதல் மாதவன் எப்போதும் பின்பற்றி வந்தான். "ஐரோப்பாவுக்கு இப்போது போக வேண்டாம்" என்ப தான துரையின் அறிவுரையாலும், கையில் தாராளமாகப் பணம் இல்லாததனாலும் ஆலமரத்தடியில் வைத்து தான் சஞ்சரிக்கத் திட்டமிட்டிருந்த இடங்களையெல்லாம் மனதி லிருந்து நீக்கிவிட்டு, வடஇந்தியாவிலும் பர்மாவிலும் பயணப்படுவதாக மாதவன் தீர்மானித்தான்.

பம்பாயைச் சென்றடைந்ததும் அப்பா கொடுத்த சிவப்புக் கடுக்கன்கள் இரண்டையும் விற்றான். அப் போதைக்கு விற்க வேண்டுமென்ற தேவை இல்லாமல்தான் இருந்தது. கையில் ஏறத்தாழ இருநூற்று ஐம்பது ரூபாய்ப் பணம் நாணயமாகவும் நோட்டாகவும் இருந்தது. ஆனாலும்

தன்னுடைய காதுகளில் கிடக்கும் கடுக்கன்கள் இரண்டும் அப்போது தனக்கு அதிக பாரமாகவும் தொந்திரவாகவும் தோன்றியதால் கழற்றி விட்டான். ஒரு பெரும் கள்ளனான வியாபாரி நூற்று ஐம்பது ரூபாய்க்கு அப்பாவி மாதவனின் கடுக்கன்களைத் தட்டிப் பறித்துக் கொண்டான்.

மாதவன் ஒரு ஹோட்டலில் சாப்பாடு முடித்து பிற்பகல் மூன்று மணிக்குக் கப்பல் துறைமுகத்திற்குச் சென்று கடலை நோக்கியபடி நின்றான். மாதவனின் மனதில் மிகவும் நிம்மதி ஏற்பட்டது. மலையாள நாட்டில் கோழிக்கோடு முதலான இடங்களிலான கடல் பகுதிகளை மட்டும் பார்த் திருப்பவர்களுக்கு பம்பாய் துறைமுகத்தின் அமைப்பு எப்படி இருக்குமென்று மனதில் எந்த அனுமானமும் செய்ய முடியாது. இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்கும், ஐரோப் பாவிலிருந்து இந்தியாவுக்குமாக நடக்கும் எல்லா வியா பாரச் சார்பான கப்பல்களும் போர்க் கப்பல்களும் முதலா வதாக வந்து சேர்வது பம்பாயில்தான். எல்லா நேரங் களிலும் இந்தத் துறை முகத்தில் அதிகம்பீரமான கப்பல்கள் நின்ற வண்ணமாகவே இருக்கும். ஐரோப்பாவிலிருந்து வரும் பெரும் புள்ளிகள் எல்லோருமே முதலில் இங்கேதான் இறங்குகிறார்கள். அதைப் போன்றே இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குப் போகிறவர்களும் இங்கிருந்துதான் பெரும்பாலும் கப்பல் ஏறுகிறார்கள். பெரும்பாலும் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்கு வந்து சேரும் சகல விதமான விசேஷ சரக்குகளும் முதலாவதாக இங்குதான் இறக்குமதி யாகின்றன. இப்படியான ஓர் இடத்தின் பெருமையைப் பற்றி நான் மேலும் வர்ணிக்க வேண்டுமா என்ன?

சாயங்காலம் நான்கு மணி முதல் ஏழு மணி வரை இந்தத் துறைமுகத்தில் நடந்து கொண்டே பார்த்துக் கொண்டிருந்தால் தென்படும் காட்சி பூமியில் வேறே எந்த இடத்திலும் காண முடியாது என்று சொல்ல முடியா விட்டாலும், இந்தியாவில் வேறு எந்த இடத்திலும் இல்லை யென்று நிச்சயமாக நான் கூறுவேன்.

பால்நுரை போல அதிவெண்மையாகவும், நீருண்ட மேகம் போல நீலமாகவும், பலவித குங்கும நிறங்களாகவும்,

சிவப்பு நிறங்களாகவும், கலப்பு நிறங்களாகவும் உள்ள பலவகை அதியுன்னதமான ஆறு, நான்கு, இரண்டு ஆகிய எண்ணிக்கையிலான குதிரைகளால் ஆன சாரட்டு வண்டிகள் எண்ணிக்கையில்லாமல் திக்குதிசை இல்லாமல் ஓடிக் கொண்டிருப்பதையும், சித்திரங்களாக நிலைத்திருப்பது போல் மிக அழகாகக் கடற்கரையின் சில பகுதிகளில் நிறுத்தப்பட்டிருப்பதுமான காட்சியும், மற்றும் அந்த வண்டிகளில் இருந்தபடி கடற்காற்று வாங்கிக் கொண்டிருப்பவர்களையும், வெளியில் இறங்கிக் காலாற நடந்து கொண்டிருப்பவர்களையும், கடலோரத்தில் கட்டி உருவாக்கப்பட்ட அதிமனோகரமான இருக்கைகளில் அமர்ந்தபடி வேடிக்கை பார்க்கும் பெரிய குடும்பத்து ஆண்களும், சந்திர முகப் பெண்டிரும், மலர்ந்த செந்தாமரை போன்று அழகொளிரும் முகங்கள் கொண்ட சின்னக் குழந்தைகளும் ஒருசேர கடலிலிருந்து வீசும் மந்தமாருதத்தை ஏற்று ரசித்தபடி சல்லாபித்துக் கொண்டிருப்பதைக் காண்பது ஆனந்தகரமான ஒரு காட்சி. பெரியவன் நீயா நானா என்று போட்டியிட்டு நிற்பதாகத் தோற்றமளித்து வரிசை வரிசையாக நிற்கும் இங்கிலீஷ் ஸ்டீமர், பிரெஞ்சு ஸ்டீமர், ஜெர்மன் ஸ்டீமர் மற்றும் பெரிய ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த கப்பல்கள் ஆகியவற்றின் காட்சி. அந்த நிலையில் அவற்றுள் சில கப்பல்கள் பயணப்படப் புறப்பட்டு, புகையைப் பெரிய குழாய்களின் மூலமாக வெளியேற்றி வெளியேற்றி ஆகாயத்தில் தள்ளுவதைப் பார்த்துக் கொண்டே இருக்க அந்தக் கப்பல்களையும் புகையையும் தொடர்ந்து காண்பது ஒரு காட்சி. அவ்வாறே துறைமுகத்துக்கு வந்து சேரும் கப்பல்கள் மஞ்சள் வெயில் பட்டுத் தெரிக்கும் அதியழகான சிறிய பித்தளைக் கழுத்துகள் பொருத்திய குழாய்களின் வழியே புகைவிட்டு அதிமனோகரமாக கப்பல்களின் அருகாமையிலிருந்து பியரித் தூண்களுக்கும், பியரிகளிலிருந்து கப்பல்களின் அருகாமைக்கும் கொழுத்துத் தோற்றமளிக்கும் அந்தக் கப்பல்களின் குழந்தைகள் பாய்ந்து விளையாடுகின்றனவோ என்று தோன்றும்படி அங்குமிங்கமாக ஓடும் சின்ன நீராவிப் படகுகளின் அதிகுதூகலமான நடமாட்டங்களைக் காண்பது ஒரு காட்சி.

கடல் பயணத்துக்காகப் புறப்பட்டு வந்த பெரும் புள்ளிகள் தங்கள் குடும்பத்தாருடன் கப்பலில் ஏற ஆயத்த மாகிறவர்களையும், அவர்களை வழியனுப்ப வந்தவர்கள் ஆசீர்வாதங்கள் சொல்லிப் பயணத்துக்கு விடை கூறி வருத்தமாய்ப் பிரிந்து செல்பவர்களையும் ஓரிடத்தில் காணலாம். மற்றோரிடத்தில், மிக நீண்ட காலமாக சந்தர்ப்ப வசத்தால் ஐரோப்பா சென்று அங்கு தங்க நேர்ந்த தன்னுடைய உயிருக்குயிரான மனைவி கப்பலிலிருந்து இறங்கும்போது அத்யந்த ஆவேசத்துடன் எதிர்கொண் டழைக்கச் சென்று நின்றுகொண்டிருந்த கணவன் விரைந்து மனைவியைப் படகிலிருந்து இறக்கி ஆர்வத் துடன் ஆலிங்கனம் செய்து, வானரதம் போன்றதான சாரட்டு வண்டியில் ஏற்றிக்கொண்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் ஓட்டிக்கொண்டு போவதைக் காணலாம். வேறோர் இடத்தில், நான்கைந்து ஆண்டுகளாக அப்பாவையும் அம்மாவையும் ஒரு முறை கூடப் பார்த்திராத குழந்தை களைப் பெற்றோர்கள் தாவி வந்து எடுத்து எல்லை மீறிய மகிழ்ச்சியுடன் முத்தமிட்டு ஆனந்தக் கண்ணீரோடும் தழு தழுத்த குரலோடும் ஆழ்ந்த அன்புக்கு ஆட்பட்டவராகி நிற்பதைக் காணலாம். இதெல்லாம் போக, ஜனங்களின் வேடிக்கை வினோதத்திற்காக அங்கே நடைபெறும் பாண்டு வாத்தியத்தின் சுகமான சங்கீதக் கோலாகலம். மேலும், இவ்வாறான எல்லாக் காட்சிகளுக்கும் வினோதங் களுக்கும் உயிர்ப்பும் அழகும் கொடுப்பதும், வார்த்தை வர்ணனைக்கு அப்பால் ஈடு இணையற்றதுமான சூரியா ஸ்தமன அழகு. இவற்றையெல்லாம் கண்டு கண்டு மாதவன் மகிழ்ந்தபடி ஆடாது அசையாது நின்றுவிட்டான். பழ மொழி கூறுவது போல, சுங்கம் செலுத்தி முடித்தவன் தன்னிஷ்டம்போல் எதையும் செய்யலாம் என்பதான சுதந்திரம் பெற்றது போன்று மாதவனுடைய மனதில் மிகவும் நிம்மதி ஏற்பட்டிருந்தது. எதிரில் தென்படும் ஏதாவ தொரு கப்பலில் ஒரு முறை ஏறிப் பயணம் செய்ய வேண்டு மென்று மாதவனுக்கு ஓர் ஆசை தோன்றிற்று. அன்று இரவு ஒன்பது மணிக்கு கல்கத்தா புறப்பட இருந்த 'மொர்னா' என்ற ஸ்ட்டீமர் கப்பலுக்கு டிக்கட் வாங்கி இரவு எட்டு மணிக்குக் கப்பலில் ஏறிக் கொண்டான்.

ஆபத்துக் காலத்தில் எதுவும் சீராக நடக்காதல்லவா? தான் ஏறிய கப்பல் என்றைக்குக் கல்கத்தா போய்ச் சேரும் என்று மாதவன் விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்க வில்லை. இந்தக் கப்பல் கல்கத்தாவைச் சென்றடைவதற்கு முன்பு பல துறைமுகங்களில் தங்கிச் செல்வதாக இருந்தது. இரண்டு நாட்களுக்குள்ளாக மாதவனுக்குக் கப்பல் பயணத்தின் மீதான மோகம் தீர்ந்தது. அத்துடன் உடம்பில் சற்றே சுகவீனமும் ஏற்பட்டது. மலபார் கடற்கரையை கப்பல் சென்றடையவே ஒன்பது நாட்களாகிவிட்டன. மலபார்ப்பகுதியைக் கப்பலிலிருந்தபடி தொலைக் கண்ணாடி மூலமாகப் பார்க்க நேர்ந்தபோது மாதவனிடம் வந்து சேர்ந்த துக்கத்தைப் பற்றி எப்படிச் சொல்ல? தன் னுடைய அம்மாவையும் அப்பாவையும் நினைத்துக் கண் களில் நீர் புரண்டது. அதற்கான தனிப்பட்ட காரணமும் அப்போது ஏற்பட்டிருந்தது. அவனுக்கு அப்போது லேசான காய்ச்சலுடன், தொடை மீது ஒரு பெரிய கட்டியும் உண்டாகியிருந்தது. எழுந்து நிற்கவும் நடக்கவும் அல்லல் பட்டான். கப்பலில் ஆகாரம் எதுவும் அவனுக்குப் பிடிக்க வில்லை. அவனுக்குத் தெரிந்த ஒரு முகம்கூட எங்கேயும் தென்படவில்லை. மிக ஏளனமாகப் பார்க்கும் சில ஐரோப்பியர்களும் சில தாடிக்காரத் துலுக்கர்களும் தவிரக் கப்பலில் வேறு யாருமில்லை. துணையாக ஒரு வேலைக் காரன்கூட இல்லை. இவ்வாறெல்லாம் இருக்கும்போதுதான் கப்பல் மலையாளப் பகுதிக்கு வந்து சேர்ந்தது. கப்பலி லிருந்து தொலைக்கண்ணாடி வைத்துப் பார்த்தபோது கரைப் பகுதியைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. தன் அன்புக்குரிய அப்பாவையும் அம்மாவையும் நினைத்துக் கண்ணில் நீர் நிறைந்தது. 'கஷ்டம்! தெய்வமே! என்னை இந்த நிலைமைக்கு ஆளாக்கிட்டியே!' என்று நினைத்து சிறிது அழுதான். தொடர்ந்து இந்துலேகாவின் நினைவு வந்தது. தொலைக்கண்ணாடி இருந்த இடத்தை விட்ட கன்றான். தான் இறந்து சவத்தைக் கடலில் தூக்கி எறிந் தாலும் மலையாள நாட்டில் அவ்வளவு சீக்கிரமாகக் காலடி எடுத்து வைப்பதில்லை என்று உறுதியாகத் தீர்மானித்து, தன்னுடைய படுக்கைக்குச் சென்று படுத்தான்.

கப்பல் அதிசாவதானமாகத்தான் மறுபடியும் பயணம் புறப்பட்டது. சுருக்கமாகவே சொல்லிவிடலாம். கப்பல் கல்கத்தாவைச் சென்றடைந்தபோது பம்பாயை விட்டுப் புறப்பட்டு இருபத்து மூன்று நாட்களாகியிருந்தன. ஆனாலும் கப்பலை விட்டு இறங்கியபோது மாதவனுக்கு உடம்பு நல்ல நிலைமையில்தான் இருந்தது. அதிக நாட்கள் பழகிப்போய்விட்டதனால் கடல் காற்றும் கப்பலில் உணவு வகைகளும் மாதவனுக்குப் பிடித்துப்போய்விடவே இந்த சுகம் ஏற்பட்டருந்தது. ஆனாலும் கரையில் இறங்கியதும் 'அப்பாடா! கடவுள் செயல். கரைக்கு வந்து சேர்ந்தோமே! ' என்றுதான் மாதவனுக்கு முதலில் தோன்றியது. கல்கத்தா பட்டணத்தைப் பார்த்து மாதவன் அதிசயித்தான். அதிசயித்தபடி சொல்ல நான் முனையவில்லை. இரண்டு நாட்கள் கல்கத்தாவில் தங்கியிருந்த பிறகு ஒரு நாள் அங்கிருந்த பார்க் (மிருகங்களைக் காட்சிப் பொருட்களாக வைத்திருந்த இடம்) பார்த்து வரச் சென்றான். ஒவ்வோர் அதிசயத்தையும் பார்த்தபடி நடந்துகொண்டிருந்தபோது மிகவும் நேர்த்தியான உடுப்புகள் அணிந்திருந்த மூன்று நான்கு பேர் தனக்குத் தெரிந்தவர்களாக வந்துகொண்டிருப்பதைப் பார்த்தான். மாதவன் அப்போது பார்க்கில் 'சீட்டா' என்று இங்கிலீஷில் கூறப்படும் ஒரு வகைப் புலியை அடைத்து வைத்திருந்த ஓர் இரும்புக் கம்பிகளிட்ட கூண்டின் அருகில் நின்றிருந்தான். அங்கேதான் அந்த ஆடம்பரமான நான்கு பேரும் வந்து நின்றார்கள். அந்தப் புலிக்கு இரை கொடுக்கும் நேரமாக அது இருந்ததனால் அங்கிருந்த எல்லோருமே கூண்டை ஒட்டி நின்றிருந்தார்கள். அவ்வாறு இருக்கும் போது இரையைத் தின்னக் கொடுக்கும் கூண்டுப் பாது காவலன் கூண்டின் முதல் கதவைத் திறந்து அந்த வழியே கொஞ்சம் மாமிசத்தை வைத்தான். பின்னர் அந்தக் கதவை அடைக்க மறந்துபோய்க் கூண்டின் நடுக்கதவைத் திறந்தான். ஒரே கணத்தில் ஒரே ஓட்டத்தில் அந்தச் சிறுத்தைப் புலி கூண்டுக்கு வெளியே வந்துவிட்டது. அங்கே வந்த நான்கு பேரும் பயந்து அலறியடித்து ஓடிவிட்டார்கள். அந்தச் சமயத்தில் மாதவன் தன்னுடைய பாக்கெட்டிலிருந்து ரிவால்வர் எடுத்து ஒரு முறை சுட்டான். சிறுத்தை நேராகப்

பாய்ந்தது. இரண்டாவதாக ஒரு முறை சுட்டான்; புலி செத்து விழுந்தது. உடனே அங்கிருந்து ஓடிப்போன சூரர்கள் திரும்பி வந்தார்கள். வந்த நால்வரில் ஒருவன் மாதவனின் கையைப் பிடித்து, இங்கிலீஷில் "புத்திசாலி—புத்திசாலி" என்ற சொல்லி—பின்னர் இவ்வாறு கேட்டான்:

"நீங்க மலபார்லேருந்து வந்திருக்கிறவர்னு நான் நினைக்கிறேன்."

(இந்தக் கேள்விக்கு அடிப்படை இருக்கிறது. சிறுத்தையுடன் போராடியதில் மாதவனின் தலையில் வைத்திருந்த தொப்பி நழுவி விழுந்ததில் அதிநீளமான மாதவனின் குடுமிப் பின்னல் நெகிழ்ந்து வெளியே தெரிந்ததனால் கேள்வி கேட்ட ஆள் மாதவன் மலபார்ப் பகுதியிலிருந்து வந்திருப்பதை ஊகித்துப் புரிந்துகொண்டான். கேள்வி கேட்டவன் சென்னையில் சில மலையாளிகளைப் பார்த்துப் பழகியவனாயிருந்தான்).

மாதவன்: ஆமாம்.

"இந்த ஊருக்கு எப்போ வந்தீங்க?"

மாதவன்: ரெண்டு நாளாச்சி.

"எங்கே தங்கியிருக்கீங்க?"

மாதவன்: ஒரு ஹோட்டலில்.

"ஊரு சுத்திப் பார்க்க வந்தீங்களாக்கும்?"

மாதவன்: ஆமாம்.

"உங்க மலபார் நாட்டுக்காரங்களை எனக்கு ரொம்பப் பிடிக்கும். உங்க வாலிப வயசும் அழகான உடல்வாகும் அதிதைரியமும் புத்திசாலித்தனமும் பார்த்து நாங்க ரொம்ப சந்தோஷப்படுறோம். நான் இந்தப் பக்கத்திலே ஒரு வியாபாரி; குடும்பத்தோட இருக்கேன். என்னோட பேரு பாபு கோவிந்தசென். எனக்கடுத்து நிற்கிற இவரோட பேரு கோவிந்தநாத பானர்ஜி. இவர் என்னோட கூட்டு வியாபாரம் பண்றாரு. இதோ இருக்கிறாரே இவரோட பேரு பாபு சித்ரப்ரசாதசென்; என்னோட தம்பி. இந்தப் பையன் என்னோட மகன். கவர்ன்மெண்ட் உத்தியோகமா பம்பாயிலே இருக்கிறான். பாபு கேசவசந்திரசென் அப்படீன்னு பேரு. நீங்க வேறே விதமாத் தீர்மானம் எதுவும் செய்திருக்கலேன்னா இந்தக் கல்கத்தாவிலே தங்கியிருக்கிற வரைக்கும்

எங்க விருந்தாளியா தயவுசெய்து எங்க பங்களாவிலே வந்து இருக்கணும்னு கேட்டுக்கிறேன். என்னோட மகன் கேசவ சந்திரசென் ஒரு வார காலத்திலே பம்பாய்க்குத் திரும்பிப் போகணும். அந்தச் சமயத்திலே நீங்களும் மலபார் போகணும்னு நினைச்சா ரெண்டு பேருமாச் சேர்ந்து வசதியா பம்பாய் வரைக்கும் போகலாமில்ல?"

மரியாதையுடன் முதல்தர இங்கிலீஷில் அதிக ஆதரவோடு அந்தப் பெருந்தன்மையான மனிதர் சொன்னது மாதவனின் மனதை ஈர்த்தது.

மாதவன்: உங்க அழைப்பை நான் மரியாதையோட ஏத்துக்கிடுறேன். எனக்கு இந்த ஊரிலே எந்த பந்துக்களோ தெரிஞ்சவங்களோ இல்லே. முன் பின் தெரியாத என்மேலே உங்களுக்குப் பிடிப்பு ஏற்பட்டது என்னோட பாக்கியம்னுதான் நான் நினைக்கிறேன்.

செத்த சிறுத்தையின் சவத்தைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு விவரங்களையெல்லாம் பார்க் கீப்பரிடம் தெரிவித்தார்கள். எல்லோருமாகச் சேர்ந்து பார்க் கேட்டுக்கு வந்தார்கள். அங்கே நின்றிருந்த நான்கு அதியுன்னதக் குதிரைகள் பூட்டியதொரு திறந்த நிலையிலான, மிகச் சிறப்பானதாக சாரட்டு வண்டியில் டாபுமார்களும் மாதவனும் ஏறிக்கொண்டு பாபு கோவிந்தசென்னின் வீட்டிற்குப் போனார்கள்.

பாபு கோவிந்தசென்னும் தம்பி சித்ரப்ரசாதசென்னும் கல்கத்தாவில் உள்ள கோடீஸ்வரர்களில் முக்கியமானவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய பங்களாவின் பெயர் அமராவதி என்பதாகும். குறிப்பாக, தெருக்களிலிருந்து விட்டு விலகி, நான்கு புறமும் அதிமனோகரமான மலர்க்கூட்டங்களால் சூழப்பட்டு பங்களாக்கள் அமைந்திருந்தன. இந்தப் பெரிய தோட்டத்திற்குள் நுழைந்ததும் நுழையாததுமாக மாதவனின் மனதில் மிகுந்த ஆச்சரிய உணர்வு ஏற்பட்டது. நான்கைந்து அதியுன்னத மாடிக்கட்டிடங்கள் வெள்ளை வெளேரென்று வானத்தை முட்டிக்

கொண்டு உயர்ந்து நிற்கும் கோபுரங்களுடன் இருப்பதைப் பார்த்து மாதவன் வியந்தான். இவ்வளவு உயரமான மாளி கைகளை அதற்கு முன்பு தான் பார்த்ததில்லை என்பதை அவன் நிச்சயித்துக் கொண்டான்.

இந்த பங்களாக்களின் உன்னத வேலைப்பாடு களாலான கேட் கதவுகளைத் தாண்டியது முதல் தென்பட்ட சகல சாதனங்களும் அவனுக்கு மிகவும் ஆச்சரியமானவை யாகவே இருந்தன. இது சாட்சாத் தேவேந்திரனின் அமராவதியாகத்தான் இருக்குமோ என்று மலைத்தான். பணத்தைக் கணக்கு வழக்கில்லாமல் செலவு செய்து உரு வாக்கப்படாத எதையும் அவன் அங்கு பார்க்கவில்லை. அதியுன்னதமானதும் குறிப்பிடத்தக்கதுமான சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய கேட் கதவுகளைத் தாண்டிக் கடந்தபோது பங்களாக்களின் வாசல்களை நோக்கிப் பிறைச் சந்திர வடிவிலான ஒரு வழி தெரிந்தது. விசேஷ மான சரளை, மண்படலம் ஆகியவற்றை இட்டு நிரப்பி யதாக அதிக அகலமான அந்த வழியின் இருபுறங்களிலும் வலைப்பின்னல் மாதிரியாக வெள்ளிப் பூச்சுக்கொண்ட தாமிர அழிகளைக் கொண்டு விசித்திரமான வேலைப்பாடு களாலான வேலிகள் வைத்து, அவற்றின் மீது தேன் மலிந்தும் மனோகரமாகவும் உள்ள பூவள்ளிக் கொடி களைப் படரவிட்டு, அவற்றிற்கு அருகில் ஐந்தைந்து ஆறாறு அடிகள் இடைவெளியில் அழகான கட்டமைப்புக் களில் மார்பிள் என்ற கல்லினால் ஆங்காங்கே உருவாக்கப் பட்ட செயற்கை நீருற்றுகளைக் கண்டால் யாருடைய மனது தான் வியப்படையாது! அந்த அமராவதியில் உள்ள எல்லா வற்றையும் பற்றிச் சொல்ல வேண்டுமானால் நான் இங்கே எழுதுகிற மாதிரி நான்கைந்து புத்தகங்கள் எழுத வேண்டி யிருக்கும். பங்களாக்களின் வாசலில் வண்டியிலிருந்து இறங்கி நாலாபுறமும் பார்த்தபோது தான் ஏதோ ஒரு கனவோ வேறேதோ காண்கிறோமோ என்று மாதவ னுக்குத் தோன்றிற்று. மனதுக்குக் குதூகலம் தராத ஒரு பொருளைக்கூட அங்கு பார்க்க முடியவில்லை. பங்க ளாவின் ஒவ்வோர் அறையிலும் சேகரித்து அழகாய் வைக்கப்பட்டிருந்த சாமான்களைப் பார்த்து அவன்

அதிசயித்தான். பல மாதிரிகளில் தங்க கில்ட் செய்த பச்சை வெல்வேட், சித்திரப் பூ வேலைப்பாடு ஆகியவற்றாலான துணிகள் கொண்டு அலங்கரிக்கப்பட்ட இருக்கைகள், இழைக்கப்பட்டதும் பலவித அதிமோகன சிற்ப வேலைப் பாடுகளுடன் கூடியதுமான நாற்காலிகள், கட்டில்கள், வெவ்வேறு பரப்பளவுகளில் அதியுன்னதங்களான அறை களில் பரப்பி வரிசை வரிசையாய் வைத்த எண்ணி லடங்கா மார்பிள் என்ற வெள்ளைக் கற்கள் கொண்டும் சிறப்பான மரவகைகளைக் கொண்டும் தந்தம் கொண்டும் மற்றும் இங்கிலீஷ் மாதிரியாக உருவாக்கப்பட்ட அதியழ கான பலவித மேசைகள், நான்கு கஜத்துக்கு ஆறு கஜம் என்ற அளவிலான தங்கச் சட்டங்கள் கொண்டு அவற்றுக்கு எதிரே அருகில் வைக்கப்பட்டுள்ள அதிமனோகரமான பலவித சாதனங்கள் அவற்றில் பிரதிபலிப்பதனால் அந்த வகையான சாதனங்கள் எல்லாவற்றையும் இரட்டிப்பாக்கிக் காண்பித்துக்கொண்டு அறிமுகமில்லாதவளை பிரமிப்புக் குள்ளாக்குவதுமான பெரிய நிலைக்கண்ணாடிகள் எண் ணிக்கையில்லாமல் இருந்தன. நானூறும் ஐந்நூறுமான விளக்குகள் தனித்தனியே ஏற்றுவதற்காக உள்ள வெள்ளிக் குழல்களில் உருண்டை வடிவில் சிறிய கண்ணாடிக் கூடுகள் வைத்து தானே அதிவெண்மை கொண்டிருந்த போதிலும் சூரிய ஒளியோ விளக்கொளியோ படும்போது பலவித வண்ணங்களை வெளிப்படுத்திக் கொண்டு தொங்கிக் கொண்டிருப்பதான பலவித சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட ஸ்படிகத் தொங்குமாலைகளுடன் உத்தரங்களி லிருந்து அந்தரத்தில் தொங்குபவையும், விளக்கு வைத்தால் சந்திர ஒளிவட்டம் என்று எண்ண வைப்பதான லஸ்தர் விளக்குகள். அங்கங்கே தங்க வார்னீஷ், பச்சை மற்றும் மஞ்சள் முதலிய பலவித வண்ணச் சாயங்கள் பூசப்பட்டு மின்னி மிளிர்ந்து கொண்டு நிற்கும் அதியுன்னதங்களான மச்சுகளிலிருந்து வெள்ளிச் சங்கிலிகளில் தொங்கவிடப் பட்டவை ஏராளம். அதிமேம்பாடான சுவர்களில் பதிக்கப்பட்டுள்ள பெரிதும் வியப்பிலாழ்த்துவதான சித்திரக் கண்ணாடிகளின் இடையிடையே தங்க நிறமாகவும் வெள்ளிமயமாகவும் உள்ள தண்டுகளில்

இறக்கிச் சுவரில் பதித்து நிறுத்தப்பட்டுள்ள வால்செட் என்று இங்கிலீஷில் சொல்லப்படுவதான விளக்குகள், படிகத் தொங்கல்களுடன் வெள்ளையாகவும் நீல நிறமாகவும் மஞ்சள் நிறமாகவும் உள்ள சாயங்களும் வார்னீஷ்களும் பூசப்பட்டு அதிகம் பீரமான நிற்கும் சுவர்களை அலங்கரித்துக் கொண்டிருப்பவை ஏராளம். சில இடங்களில் முழுவதுமாகப் பட்டுக் கம்பளங்கள் விரித்தும், சில இடங்களில் மார்பிள் கற்கள் கடைந்துண்டாக்கிய பலகைகள் பதித்தும் உள்ள தளங்கள். மகோன்னதமான மாடிகளுக்கு ஏறிச் செல்வதற்காகத் தாமரை வடிவிலும் பாம்பு வடிவிலும் மற்றும் அதிமனோகரமாக உருவாக்கப் பட்டதும் அதிகம்பீரமானதும் ஆன ஏணிப்படிகள். மேலும் கீழும் மட்டும் தங்க முலாமிடப்பட்டு மீதி முழுவதும் வெள்ளைச் சாயமோ பச்சைச் சாயமோ மஞ்சள் சாயமோ பூசப்பட்டுத் தடிமனாக அதியுன்னதங்களாக நிற்கும் தூண்கள்! வசீகரமான ஜன்னல்கள், கதவுகள், விலையுயர்ந்த பட்டுத் துணிகளால் உருவான திரைச்சீலைகள், வெள்ளியாலும் தங்கத்தாலும் கில்ட் இட்ட சரிகைப் பட்டுத் திரைகள் தொங்க வெல்வெட் கொண்டும் பட்டு கொண்டும் அமைந்த படுக்கைகள், தலையணைகள், வெள்ளிச் சரிகை மேல்விரிப்புகள் ஆகியவற்றோடு கூடிய கட்டில்கள். இந்த மாதிரி ஒவ்வொரு சாதனத்தையும் மாதவன் பார்த்ததைப் பற்றி முழுவதுமாக வர்ணிக்க யாரால் முடியும்!

அதிகம்பீரமாக நிற்கும் தூண்களை ஆதாரமாகக் கொண்டு அடுக்கடுக்காய் அமைந்த கூடகோபுரங்களைக் கண்டால் யாருடைய மனம்தான் குதூகலப்படாது! ஐந்து-ஆறு அடுக்கு மாடிகளைக் கடந்து மேலேறிப் போனால் அவற்றின் மேல்தளம் ஒவ்வொன்றிலும் சந்திரசாலைகள் என்று கூறப்படும் மேற்கூரையில்லாத வெண்மாட மேடைகளைக் காணலாம். இந்தச் சந்திரசாலைப் பகுதிகளின் சில இடங்களில் சுத்த ஸ்படிகம் பதித்தும், சில இடங்களில் கண்ணாடியை உருக்கி மெழுகி திடப்படுத்திப் பலவிதமான நிறங்களில் அவற்றின் மீது கொடிகளாகவும் பூக்களாகவும் தோன்றும் சித்திரங்களைக் கொண்டு அலங்கரித்தும், சில இடங்களில் தூய முத்துச்சிப்பியை அரைத்துப் பலகை

யாக்கிப் பதித்தும், சில இடங்களில் சிறப்பான முறையில் அழகான பட்டுப் பாய்கள் கொண்டு முடியும் இருப்பதைக் காணலாம். சந்திரசாலைகளின் நான்கு புறங்களிலும் ஓங்கி உயர்ந்து நிமிர்ந்து நிற்கும் பல்வேறு மாதிரிகளிலான தடுப்பு வேலிகளின் அழகு சொல்லுக்கு ஆட்படாதது என்று கூறலாம். சில இடங்களில் நான்கு புறங்களிலும் பூச்சு கை யாளப்பட்டு நிறம் மங்கிவிடாதபடியாகத் தங்க நிறத்திலான பித்தளைக் கம்பிகளில் ஆங்காங்கே வெள்ளிநிறக் குமிழ்கள் பொருத்தியதான வேலிகள் கொடிகளைப் போன்ற அமைப்பிலும் பூக்களைப் போன்ற அமைப்பிலும் வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருப்பதைச் சுற்றிலும் காணலாம். சில இடங்கள் மார்பிள் என்பதான சலவைக் கற் களைக் கடைந்துண்டாக்கிய எண்ணில்லாத அழிகளால் சூழப்பட்டிருப்பதைக் காணலாம். சில மேடைகளின் நான்கு புறங்களிலும் உலோகங்களால் வார்க்கப்பட்டதும், மார்பிள் பதித்துக் குழிகள் உண்டாக்கியதும் விசேஷமான மண்ணினால் உருவாக்கப்பட்டவையுமான பலவித தொட்டிகளில் தேன் மலிந்ததாயும் மனம் கவர்வனவாயும் உள்ள பூச்செடிகளை நட்டு வளர்த்து வகைப்படுத்தி வரிசை வரிசையாய் வைத்திருப்பதைக் காணலாம். சில இடங்களில் இயந்திர முடுக்கத்தினால் செப்புக் குழாய்களின் வழியே மிக்க ஆழத்திலிருந்து மேலேற்றப்பட்ட தண்ணீர் மார்பிள், கண்ணாடி ஆகியன கொண்டு தாமரை வடிவிலும் பல்வேறு மிருகங்களின் முக வடிவிலும் பறவைகள் வடிவிலும் வளைய வடிவிலும் உருவாக்கப்பட்ட துவாரங் களின் மூலமாக வெளியேறி கண்களையும் காதுகளையும் ஒருசேர மகிழ்விக்கும்படியான தோற்றங்களுடனும் ஒலி களுடனும் அமைந்திருக்கக் காணலாம். இவ்வாறு அந்த அமராவதி பங்களாவில் மாதவனால் காணப்பட்ட சாதனங் களின் அமைப்பைப் பற்றிக் கூறிப் புரிய வைக்கும் சொல் லாற்றல் எனக்கு இல்லையென்று நான் நினைப்பதனால் இனி சுருக்கமாகக் கூறுகிறேன்.

மேலே குறிப்பிடப்பட்டதான சந்திரசாலைகள் முத லியன மட்டுமல்லாமல் குளங்கள், அலங்கார ஊஞ்சல்கள், புத்தகசாலைகள், தோட்டங்கள் முதலிய பலவற்றைக் கண்டு

மாதவன் மிக மகிழ்ந்தான் என்றுதான் சொல்ல முடியும். இந்த பூமியை விட்டு விலகி ஏதோ இதுவரை அனுப விக்காத சுகங்களோடு கூடிய ஒரு சொர்க்கலோகத்தையோ வேறெதையோ உருவாக்கிக்கொண்டது போல மாதவ னுக்குத் தோன்றியது.

பாபு கோவிந்தசென்னின் அழைப்பை ஏற்று சொர்க் கத்துக்கு நிகரான இந்த அமராவதியில் எட்டு-பத்து நாட்கள் சுகமாகத் தங்கியிருந்தான் மாதவன்.

கோவிந்தப்பணிக்கரும் கோவிந்தன்குட்டிமே னோனும் ஊரைவிட்டுப் புறப்பட்டு இருபது நாட்களுக்கு மேலாகிவிட்டது. அவர்களுடைய கதை என்னவாயிற்று என்றறிய எனது வாசகர்கள் வினவுவார்களானால் எனக்குச் சிறிதே சொல்லே வேண்டியுள்ளது. "இந்தியா நெடுகிலும் புகைவண்டி, தந்தி, தபால் உண்டு—மாதவனைக் கண்டுபிடிக்க என்ன கஷ்டம்?", என்று தாட்டிகம் பேசிப் புறப்பட்ட கோவிந்தன்குட்டிமேனோனின் சர்வ கர்வமும் ஒடுங்கியது. அறிவு மழுங்கியது; புகைவண்டியும் தந்தியும் நீராவிக்கப்பல்களும் எவ்வளவுதான் இருந்தாலும் அதி ருஷ்டம் இல்லாமல் எதுவும் மனிதன் நினைப்பது போலவும் விரும்புவது போலவும் நடப்பதில்லையென்று கோவிந்தன் குட்டிமேனோனின் மனதில் நன்றாகப் பதிந்தது. சிலவற்றை வெளியில் சொல்லவும் தொடங்கினார்.

சென்னையைச் சென்றடைந்தவுடனேயே கோவிந் தன்குட்டிமேனோன் கில்ஹாம் துரையை நேரில் போய்ப் பார்த்தார். மாதவன் அவரைச் சந்தித்தது வரையிலான விவரங்களைத் தெரிந்துகொண்டார். கோவிந்தன்குட்டி மேனோனுக்கும் கோவிந்தப்பணிக்கருக்கும் மனதில் அப்போது கொஞ்சம் அமைதி ஏற்பட்டது. பின்னர் அவர்கள் நேராக பம்பாய்க்குச் சென்றார்கள். பம்பாயி லிருந்து தேடிக்கொண்டு காசிக்குச் சென்றார்கள். காசியில் கோவிந்தப்பணிக்கருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டதால் பத்து நாட்கள் அங்கே தங்கியிருக்க நேரிட்டது. மாதவன் அயல்நாட்டுக்குத்தான் போயிருக்கக்கூடுமென்று கோவிந் தன்குட்டிமேனோனுக்குத் தற்செயலாக ஓர் எண்ணம் உதித்தது. பைத்தியக்காரர்களைப் போல மறுபடியும்

பம்பாய் நோக்கி கோவிந்தன்குட்டிமேனோனும் கோவிந்தப்பணிக்கரும் திரும்பிப் போனார்கள். பல வழிகளில் ஐந்தாறு நாட்கள் அதிநுணுக்கமாக விசாரித்துத் தேடியதில் முன்குடுமியுள்ள வாலிபனான ஒரு நபர் சில நாட்களுக்கு முன்பு கப்பலில் ஏறியதாகத் தெரிந்து கொண்டார்கள். உடனே அயல்நாட்டுக்குக் கப்பல் ஏறியவர்களின் பெயர் விவரங்களைப் போர்ட் ஆபீசிலும் பிற இடங்களிலும் தீர விசாரித்தார்கள். அவற்றுள் எதிலும் மாதவனின் பெயர் காணப்படவில்லை. ஆனால் மாதவன் தன்னுடைய பெயரை மாற்றிச் சொல்லியிருக்கலாம் என்று சந்தேகப்பட்டார்கள். ஆனால் உண்மையில் அப்படி அல்ல. மாதவன் சரியான பெயர் சொல்லித்தான் கப்பல் ஏறினான். ஆனால் அது கல்க்த்தா செல்வதாக கப்பல்களில் ஏறியவர்களின் பெயர்கள் தென்படும் புத்தகத்தில் சேர்க்கப் பட்டிருந்தது. அப்படியிருக்க, ப்ரீன்டிசி வழியாகவும் மார் சேல்ஸ் வழியாகவும் ஐரோப்பா செல்லும் கப்பல்களில் ஏறியவர்களின் பெயர்ப் பட்டியலைப் பார்த்தால் மாதவனின் பெயர் தென்படுமா? அற்ப மனிதனே, உன்னுடைய நிலைமை எவ்வளவு பரிதாபம்! கோவிந்தன்குட்டி மேனோன் பயணிகள் பட்டியலை எந்தப் பேரேட்டிலிருந்து படித்தாரோ அதில் மற்றோர் இடத்தில் மாதவனின் பெயர் தெளிவாக எழுதப்பட்டிருந்தது. அந்தப் பக்கத்தைப் பார்க்க வேண்டுமென்று கோவிந்தன்குட்டிமேனோன் நினைக்கவே இல்லை. என்ன செய்ய! புத்திசாலித்தனமும் அதிருஷ்டத்தைச் சார்ந்துதான் இருக்கும்—இல்லாவிட்டால் காரியம் வெற்றியடைவது கஷ்டம். காசியிலிருந்து பம்பாய்க்குத் திரும்பியபோது கோவிந்தப்பணிக்கருக்கு மறுபடியும் உடல்நலக் குறைவு ஏற்பட்டது. கல்கத்தாவுக்குச் சென்று அங்கிருந்து பர்மாவுக்கும் போகவேண்டுமென்றுதான் அவர்கள் தீர்மானித்தார்கள். அப்போதைக்குப் புறப்படுவதற்குத் தக்கதான உடல்நலம் கோவிந்தப்பணிக்கருக்கு இல்லாததனால் இரண்டுமூன்று நாட்கள் கழித்துப் போகலாமென்று எண்ணி பம்பாயிலேயே தங்கினார்கள்.

கோவிந்தன்குட்டினேனோனுக்குப் பல எண்ணங்கள் தோன்றியதில் நியூஸ்பேப்பரில் விளம்பரப்படுத்தலாம்

என்றும் தோன்றிற்று. அதன்படி ஓரிரண்டு தடவைகள் சில நியூஸ்பேப்பர்களில் இந்துலேகாவைப் பற்றிய வதந்திகள் தவறானவை என்பதாக விளம்பரப்படுத்தினார்கள். அவ்வாறு விளம்பரம் வந்த நாட்கள் மாதவன் கப்பலில் படுத்துக் கவலைப்பட்டுக்கொண்டிருந்த நாட்களாக இருக்க லாமென்று நான் நினைக்கிறேன். எப்படியானாலும் மாதவன் இவ்வாறு வெளியான பேப்பர் எதையும் பார்க்கவே இல்லை. நிச்சயமாகத்தான்.

17

## மாதவனைக் கண்டுபிடித்தது

செல்வத்தால் குபேரனுக்கு நிகராக இருந்த பாபு கோவிந்த சென்னின் அழைப்பை ஏற்று சொர்க்கலோகத்தின் அமரா வதிக்கு இணையான அமராவதி பங்களாவில் மாதவன் மிகவும் சுகமாகப் பத்து நாட்கள் தங்கியிருந்தான். அதன் பிறகு பயணம் புறப்படுவதாகத் தெரிவித்தான். அவன் பயணம் சொல்லிக்கொண்ட நான்கு நாட்களுக்கு முன்பு கோவிந்தசென்னின் மகன் கேசவசந்திரசென் விடுப்பு முடிந்துவிட்டிருந்ததனால் பம்பாய்க்குத் திரும்பிப் போயி ருந்தான். பாபு கோபிநாதபானர்ஜி கூட்டு வியாபாரத்தின் ஒரு பிராஞ்ச் வியாபார நிலையத்திற்கு அன்றுதான் போனார். அவருடைய நிலையான இருப்பிடம் அந்த பிராஞ்ச் வியாபாரம் நடக்கும் இடத்திலிருந்தது. மாதன் மலபாருக்குத் தற்போதைக்குத் திரும்ப போவதில்லை யென்றும் பர்மா, காசி, அலகாபாத், ஆக்ரா, டில்லி, லாகூர் முதலிய இடங்களில் இரண்டு மாதங்கள் சுற்றிப் பார்த்து விட்ட பின்னரே திரும்பப் போவதாகச் சொன்னதால் கேசவசந்திரசென்னும் கோபிநாதபானர்ஜியும் மாதவ னிடம் அவன் எப்போதேனும் திரும்புவதற்கு முன்பு கோபிநாதபானர்ஜி வசிக்குமிடத்தில் இரண்டு நாட்களும், திரும்பும் வழியில் பம்பாய் வரும்போது கேசவசந்திர சென்னுடன் இரண்டு நாட்களும் தங்கி விட்டுத்தான் போக வேண்டுமென்று வாக்குறுதி வாங்கிக் கொண்டுதான் அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் போன நான்கு நாட்கள் கழிந்து மாதவனும் பயணம் புறப்படுவதாக கோவிந்தசென்னிடம் தெரிவித்தான். இந்த பாபு கோவிந்த

சென் செல்வத்தில் மட்டுமல்லாது மரியாதை, பெருந்தன்மை, உதாரகுணம், இரக்கம் ஆகியவற்றிலும் யாராலும் மிஞ்சப் படாதவர்.

இந்தப் புத்தகத்தில் நான் பஞ்சுமேனோனையும் மூர்க்கில்லாத்த நம்பூதிரிப்பாடையும் பெரும் செல்வந்தர்கள் என்றும், ஓரிரு இடங்களில் மூர்க்கில்லாத்த நம்பூதிரிப் பாடை 'குபேரன்' என்றும் சொன்னதுண்டு. இப்போது பாபு கோவிந்தசென்னையும் செல்வந்தர், குபேரன் என்றெல்லாம் சொல்கிறேன். ஆனால் எனது வாசகர்கள் இவர்களையெல்லாம் செல் வத்தில் ஏறத்தாழ ஒரே மாதிரி என்று நினைத்துவிடப் கூடாது. வங்காளத்தில் குபேர னுக்கும் சென்னை மாகாணத்தில் குபேரனுக்கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு. அவர்களிடையேயான வேறு பாட்டை செல்வத்தைக் கணக்கிடுவதன் மூலம் அறியலாம். சென்னையில் ஐந்து லட்சம் ரூபாய் வைத்திருப்பவன் ஒரு பெரிய பணக்காரன்தான். வங்காளத்தில் ஐந்து லட்சம் ரூபாய் வைத்திருப்பவன் நாலாம்தர பணக்காரன்தான். அங்கே ஐந்து கோடி வைத்திருப்பவர்கள்தான் நல்ல செல்வந்தர்கள். நல்ல பண!க்காரன், குபேரன் என்று சந்தேகமில்லாமல் வங்காளத்தில் ஒருவனைச் சொல்ல வேண்டுமானால் அவனுக்குப் பதினைந்து கோடிக்கு மேல் பணம் இருக்க வேண்டும். கோவிந்தசென்னும் தம்பி சித்ரப்ரசாதசென்னும் இவ்வாறு பதினைந்து கோடிக்கு மேல் பணம் உள்ளவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாக இருந்தார்கள்.

மாதவன் பயணம் சொல்லிக்கொண்டு பிரிய நேர்ந்த போது கோவிந்தசென் மிகவும் வருத்தப்பட்டார்.

கோவிந்தசென்: நாம் நெருங்கின சிநேகிதர்களா யிட்டோம். நீங்க பிரியறது இப்போ எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு. ஆனால் தவிர்க்க முடியாது தானே! உங்க தகுதியும் சாமர்த் தியமும் மரியாதையும் பத்தி எனக்குத் தெரிஞ்சவரைக்கும்

யோசிச்சிப்பார்க்கிறப்போ நீங்க மதராஸ் கவர்ன்மெண்ட்டிலே ரொம்பச் சிறப்பான உத்தியோகத்திலே வருவீங்கன்னு நான் நம்புறேன். என் மகனை அடுத்து வர்ற வருஷம் சிவில் சர்வீசில் எடுத்துக்குவாங்கன்னு எதிர்பார்க்கிறேன். ஆனால் எனக்கு அவன் உத்தியோகத்திலே சேரணும்னு அவ்வளவா எண்ணமில்லே. ஆனாலும் அவனுக்கு உத்தியோகத்திலே தான் பிடிப்பிருக்கு. குடும்பத் தொழிலோ வியாபாரமோ ஆட்களைத் தேடிப் போறதோ அவனுக்கு அவ்வளவா பிடிக்கலே. உங்க மனசிலே இருக்கிற வருத்தமெல்லாம் தீர்ந்து நீங்களும் அவனும் ஒரே சமயத்திலே சிவில் சர்வீசில் சேரவும், நீங்க ஊர் திரும்பி மனசுக்குப் பிடிச்ச குடும்பத் தோட சுகமாக இருக்கிறதாகக் கேள்விப்பட நான் சர்வ வல்லமை படைச்ச கடவுளை வேண்டிக்கிடுறேன்.

என்று சொல்லி கோவிந்தசென் மாதவனை மார்போடு அணைத்து ஆலிங்கனம் செய்து தனித்தன்மையான ஒரு தங்கக் கடியாரத்தையும் தங்கச் சங்கிலியையும், தங்கச் சரிகையிட்ட ஒரு சூட் உடுப்பையும், யானைத் தந்தமும் வெள்ளியும் கொண்டு வேலைப்பாடான அதிமனோகரமான ஒரு கடிதப்பையையும் சம்மானமாகக் கொடுத்தார். கோபிநாதபானர்ஜியின் பிராஞ்ச் வியாபார நிலையத்திற்கு வண்டியேறும் புகைவண்டி நிலையத்திற்குத் தன்னுடைய சாரட்டு வண்டியில் கோவிந்தசென் மாதவனை ஏற்றிச் சென்றார். வண்டி ஏற்றிவிடும்போது இருவர் கண்களிலும் நீர் பொங்கியது.

மாதவன்: ஏதோ ஒரு காரணத்தினாலே இவ்வளவு மகாபாக்கியவானும் பெருந்தன்மையானவருமான உங்களுக்கு என்மேலே இந்த தயவும் பிடிப்பும் ஏற்பட்டிருக்கு. இது எனக்கு இந்தப் பிறவியிலே கிடைச்ச ஒரு பெரிய அதிருஷ்டம்னுதான் நான் என்னோட உயிர் இருக்கிற வரைக்கும் நினைச்சிக்கிட்டிருப்பேன். சர்வ பாக்கிய சம்பூர்ணராய் இருக்கும் உங்களுக்கு அற்பனான என்னால் என்ன பிரதியுபகாரம் ஏற்படப் போகிறது? எதுவும் இல்லே. ஏற்படணும்னு எதிர்பார்க்கவும் மாட்டீங்க. ஆனால் உங்களுக்கு என் மேலே ஏற்பட்டிருக்கிற இந்த அதிக அளவிலான வாத்சல்யத்தின் விலையை நான் விசுவாசத்தோடப் புரிஞ்சிக்கிட்டேன்; இந்த உடம்பு உள்ள நாள் வரைக்கும் உங்களோட ஞாபகம் என்னைவிட்டுப் போகாது; இப்படி நான் சொல்றதை நீங்க முழுமையா நம்பணும்னு வேண்டிக்கிடுறேன். நான் என்னோட சுற்றுப்பயணத்தை முடிச்சித் திரும்பி ஊருக்குப் போய்ச் சேர்ந்த விவரங்களையெல்லாம் கடுதாசியிலே எழுதறேன். உங்களுக்கு வேண்டியவங்களிலே ஒருத்தனா என்னை தயவு செய்து எப்போதும் நினைவிலே வச்சிருக்கணும்னு மறுபடியும் நான் கேட்டுக்கிடுறேன்.

கோவிந்தசென்: கேசவசந்திரசென்னோட முன்னேற்றத்தை நான் எப்படி விரும்ப

றேனோ அப்படி உங்களோட முன்
னேற்றத்தையும் விரும்பறேன்.

என்று கூறியபோது பாபு கோவிந்தசென்னின் நா தழு தழுத்தது. எப்படியோ புகைவண்டியில் மாதவனை ஏற்றி விட்டு ஆழ்ந்த வருத்தத்துடன் கோவிந்தசென் திரும்பினார். மலையாளத்திலும் சென்னையிலுமான மாதவனின் இருப்பிட முகவரி விவரங்களையெல்லாம் நோட்புக்கில் கோவிந்தசென் குறித்துக்கொண்டார். வண்டியில் ஏறும் போது தன்னுடைய புகைப்படம் ஒன்றை எடுத்து மாதவ னிடம் கொடுத்தார்.

கோவிந்தசென் போனதும் புகைவண்டியும் புறப் பட்டது. மாதவன் அப்போது கோபிநாதபானர்ஜி இருந்த ஊருக்கு டிக்கட் வாங்கியிருந்தான். கோபிநாதபானர் ஜியிடம் சொல்லியிருந்தபடி அவரைப் பார்க்காமல் போக முடியாதல்லவா? பல விஷயங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்ததனால் மாதவனுக்கு வழியில் தென்பட்ட வற்றில் கவனம் செல்லவில்லை. அவ்வாறு இருக்கும்போது ஒரு பெரிய ஸ்டேஷன் வந்து சேர்ந்தது. அங்கிருந்து கோபி நாதபானர்ஜியின் இருப்பிடம் அறுபத்தைந்து மைல் தொலைவில் இருந்தது. அந்த ஸ்டேஷனில் சிறிது பலகாரமும் பிறவும் சாப்பிட்டு முடித்து மாதவன் பயணத்தைத் தொடர்ந்தான்.

அந்தப் பெரிய ஸ்டேஷனுக்கு அடுத்து வந்த ஸ்டே ஷனில் வண்டி ஏறிய வாலிப வயதினனான ஓர் அழகன் கதவைத் திறந்தபடி அந்தப் பெட்டியில் தனக்குச் சிறிது இடம் கொடுப்பதில் யாருக்காவது மறுப்பிருக்கிறதா என்று ஆங்கிலத்தில் மாதவனின் முகத்தைப் பார்த்துக் கேட்டான். எந்த மறுப்பும் இல்லையென்று மாதவன் பதில் சொன் னான். அந்தப் பெட்டியில் இருந்த மற்ற பயணிகள் ஆங் கிலம் தெரியாத காரணத்தால் எதுவும் பேசவில்லை. அந்த அழகிய வாலிபன் மாதவனுக்கு அடுத்துப் போய் உட் கார்ந்தான்.

அவன் பார்வைக்கு அதிசுமுகனாயிருந்தான்; அவனு டைய உடுப்பும் நடப்பும் மிக அழகாயிருந்தன. ஒரு முஸ்லீமைப்போல் தென்பட்டான். தலைமுடி வளர்த்து

தோள்வரை எட்டும்படி வெட்டப்பட்டிருந்தது. அதியழகான மீசையுடன் அல்லாது முகத்தின் இரு புறங்களிலும் சைடு லாக்ஸ் என்று ஆங்கிலத்தில் கூறப்படுகிற மாதிரி சிறிது நீட்டி நேராக்கி வெட்டப்பட்டிருந்தது. நிறத்தில் நன்றாகப் பழுத்த ஆரஞ்சுப் பழ நிறமாக இருந்தான். ஒட்டு மொத்த மாகப் பார்க்கும்போது முகம் மிக அழகாக இருந்தது. தலையில் முடி மட்டும் நன்கு மூடுகிறபடி முழுவதும் ஜரிகை வேலைப்பாடான ஒரு தொப்பி வைத்திருந்தான். அந்தத் தொப்பியும் அதைச் சுற்றியுள்ள கறுத்த தலைமுடியும் வெளுத்த முகமும் மீசையும் சேர்ந்து பார்ப்பதற்கு அதி மனோகரம் என்றே சொல்ல வேண்டும். உடம்பில் அதி விசேஷமான வெள்ளை நிறத்தில் மின்னும் வெல்வெட் கொண்டு தைக்கப்பட்ட ஜிப்பா வகையான அங்கர்க்கா குப்பாயம். அது முழங்காலுக்கும் கீழே நான்கைந்து விரற் கடை தாழ்வாக இருந்தது. வெள்ளை வெல்வெட் அங் கர்க்கா முழுவதும் தங்க நிறத்தில் கழுத்து முதல் முழங்கால் வரை அடுத்தடுத்துப் பின்னப்பட்ட முடிச்சுகளால் தொடுக் கப்பட்டிருந்தது. காலில் முதல்தரமான பச்சை நிறப் பட்டில் தைக்கப்பட்ட கால் குப்பாயம்; காலடிகளில் முதல்தரமான பளபளக்கும் பூட்ஸ்; மார்பில் தங்க நிறத்தில் மின்னும் ஒரு கடியாரச் சங்கிலி தொங்கிக்கொண்டிருந்தது. இதுதான் அவனுடைய தோற்றம். அவன் தன்னை அடுத்து உட்கார்ந்த போதுதான் தன்னை அதிகம் தாக்கிய ஒரு வாசனை வரு வதை மாதவன் உணர்ந்தான். லேவண்டரோ அத்தரோ ஏதோ ஒன்றின் அதிதீவிர நறுமணம். இந்த மகாரசிக னானவன் உட்கார்ந்த உடனேயே தன் பாக்கெட்டிலிருந்து தங்க நிறத்தாலான ஒரு சுருட்டுக்கேஸைத் (சின்னப் பெட்டி) திறந்து ஒரு சுருட்டைத்தான் எடுத்துக்கொண்டு பெட்டியை மாதவனிடம் நீட்டினான். தான் சுருட்டு புகைப்பதில்லை யென்று ஆங்கிலேயர் சம்பிரதாயப்படி உபசாரத்துடன் மாதவன் கூறியபோது, தான் புகைப்பதில் ஏதும் மறுப்பு உண்டோ என்று அவன் கேட்கவே, கொஞ்சம்கூட இல்லை யென்று மாதவன் அனுசரணை யாகச் சொல்லவும் அவன் உடனே சுருட்டைப் புகைக்கத் தொடங்கினான். சிறிது

கழிந்ததும் அவன் மாதவனிடம்: "நீங்க எங்கேருந்து வர்றீங்க? எங்கே போறீங்க? இதுக்கு முன்னாலே இந்தப் பக்கம் வந்ததில்லேன்னு தெரியுது."

மாதவன்: நான் இப்போ கல்கத்தாவிலேருந்து வர்றேன். ஒரு நண்பரைப் பார்க்கப்போய்க்கிட்டிருக்கிறேன். எங்க ஊரு மலையாளம்—சென்னை மாகாணத்திலே இருக்கு. இங்கே வட இந்தியாவைச் சுத்திப் பார்க்கணும்னு வந்தேன். உங்களோட அறிமுகமானது என்னோட அதிருஷ்டம்னு நான் நினைக்கிறேன்.

அழகிய வாலிபன்: ஆமாம். நானும் அப்படித்தான் நினைக்கிறேன். உங்ககூட நண்பர்களோ மத்தவங்களோ யாரும் வரல்லியா? இல்லே, தனியாத்தான் புறப்பட்டீங்களா?

மாதவன்: ஒருத்தருமில்லே, நான் மட்டும்தான்.

அழகிய வாலிபன்: சரி. நான் அலகாபாத்திலே ஒரு சபார்டினேட் ஜட்ஜ். என்னோட அப்பாவைப் பார்க்க எங்க சொந்த ஊருக்குப் போய்க்கிட்டிருக்கேன். என்னோட அப்பா ஒரு பெரிய வியாபாரி. நான் உத்தியோகம் பார்க்கிறது அவருக்கு அவ்வளவா பிடிக்கலே. என்னோட சொந்த விருப்பத்தினாலே இந்த உத்தியோகத்திலே இருக்கிறேன். நான் முதல் வகுப்புப் பெட்டிக்குத்தான் டிக்கட் வாங்கியிருக்கிறேன். என்னோட மனைவியும் ரெண்டு பிள்ளைகளும் அந்தப் பெட்டியிலே இருக்காங்க வண்டியில் உட்கார்ந்து அலுத்துப் போய் ஒவ்வொரு ஸ்டேஷன்லேயும் வண்டி

நின்னதும் வழக்கமா நான் பிளாட் பார்மில் இறங்கி நடந்துக்கிட்டிருப்பேன். எனக்கு இந்த வண்டியில் தூரப் பிரயாணம் செய்றது ரொம்ப எரிச்சல். நீங்க இந்தப் பெட்டியிலே இருக்கிறதைப் பார்த்தேன். பார்த்ததும் எனக்குப் பேசணும்போல இருந்தது. முகத்தைப் பார்த்ததுமே இங்கிலீஷ் தெரிஞ்சிரிக்கும்னு நான் தீர்மானிச்சிட்டேன். இப்போ சந்தோஷமா இருக்கிறேன். என்னோட பேரு ஷியர் ஆலிகான். நீங்க ஒரு பி.ஏ. வா இருப்பீங்கன்னு நினைக்கிறேன்.

மாதவன்: ஆமாம்.

ஷியர் ஆலிகான்: இன்னும் ஒரு அடையாளம் சொல்லட்டுமா? பி.எல். கூடத்தான்; இல்லையா?

மாதவன்: (சிரித்துக்கொண்டு) ஆமாம்.

ஷியர் ஆலிகான்: நானும் ஒரு கிராஜுவேட்தான். நீங்க உங்க நண்பரோட எத்தனை நாள் தங்கியிருப்பீங்க?

மாதவன்: ஒரு நாள்.

ஷியர் ஆலிகான்: குறிப்பிடறாப்பிலே வேறே ஒண்ணும் இல்லேன்னா நீங்க என்னோட கூட எங்க ஊருக்கு வரலாம். ஊர் சுத்திப் பார்க்கத் தானே வந்தீங்க? இந்த ஊருக்குத் தான் முதல்லே போகணும்னு ஒண்ணும் இல்லேல்ல; எங்க வீட்டிலே ஒரு வாரம் தங்கி அந்தப் பக்கத்திலே இருக்கிற விசேஷங்களையெல்லாம் பார்த்த பிறகு இஷ்டம் போல வேறெந்த ஊருக்கும் போகலாமில்ல?

மாதவன்: நான் ஒரு நண்பரைப் பார்க்கணும்னு நினைச்சேன். அதனாலே அவரோட வீட்டுக்கு முதல்லே போகணும்னு சொன்னேன்.

ஷியர் ஆலிகான்: உங்களுக்கு இந்தப் பக்கத்திலே யாரும் தெரிஞ்சிருக்காதுன்னு நினைச்சேன். யார் அந்த நண்பர்?

மாதவன்: கோபிநாதபானர்ஜி. அவரை நான் சமீபத்திலே கல்கத்தாவிலே தற்செயலாப் பார்த்து அறிமுகமாச்சி. அவர் கல்கத்தாவை விட்டு வந்தப்போ என்னைக் கூப்பிட்டிருந்தாரு. அதனாலே போய்க்கிட்டிருக்கிறேன்.

ஷியர் ஆலிகான்: ஓ! மிஸ்டர் கோபிநாதபானர்ஜி என்னோட நெருங்கின நண்பராச்சே! எங்கப்பாவுக்கும் ரொம்பப் பிடிச்சவரு. நான் கொஞ்ச நாளா அவரைப் பார்க்கலே. அவர் ரொம்ப நல்ல மனுஷர். பெரிய வியாபாரி. நீங்க அவரோட நண்பர்னு தெரிஞ்சி எனக்கு சந்தோஷம். அப்படீன்னா நான் அவருக்கு ஒரு கடுதாசி தர்றேன். அவருகிட்ட கொடுத்திருங்க. நீங்க ரெண்டு பேருமாச் சேர்ந்து ஒண்ணா எங்க ஊருக்கு வர்றது எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும். நான் நாலு மாசம் விடுப்பு எடுத்துக்கிட்டுப் போய்க்கிட்டிருக்கேன். இந்த நாலு மாசத்துக்குள்ளே எப்போ நீங்க வந்தாலும் எனக்கு சந்தோஷம் தான்.

மாதவன்: அப்படியே ஆகட்டும்—வர்றோம்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது வண்டி அடுத்து ஒரு பெரிய ஸ்டேஷனைச் சென்றடைந்தது. அந்த ஸ்டேஷனில் இருந்த கூட்டம் எப்படியென்று விவரிக்க முடியாது. வண்டி அந்த இடத்தைச் சென்றடைந்தபோது சூரிய அஸ்தமனம் ஆகியிருந்தது. ஸ்டேஷனில் பிளாட் பாரம் எங்கு பார்த்தாலும் ஆட்களும் சாமான்களுமாக நிறைந்திருந்தது. அடுத்திருப்பவரிடம் உரத்த குரலில் பேசினால்கூடக் காது கேட்பது கஷ்டம்தான். வண்டி ஸ்டேஷனில் நின்றதும் சபார்டினேட் ஜட்ஜ் ஷியர் ஆலி கான் மாதவனின் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு வண்டி யிலிருந்து பிளாட்பாரத்தில் இறங்கி, "பியூன், பியூன்" என்ற உரக்கக் கூப்பிட்டார். அப்போது குஃப்பாயமும் குறுக்குத் தோள்பட்டையும் இடுப்புப்பட்டையும் பிறவும் அணிந் திருந்த ஒரு தாடிக்கார வாட்டசாட்டமான பட்டாணி அடுத் திருந்த பெட்டியிலிருந்து வெளியே வந்தான். "எஜமான்" என்று அதிபயபக்தியுடன் சொல்லிக்கொண்டே சப்ஜட்ஜ் அருகே வந்து நின்றான்.

ஷியர் ஆலிகான்: நீ இந்தப் பெட்டியில் ஏறி இவ ரோட சாமான்களையெல்லாம் பந்தோபஸ்தாப் பார்த்துக்கிட்டு இங்கேயே இருக்கணும். நாங்க ரிஃப்ரெஷ்மென்ட் ரூமுக்கு (பல காரங்கள் முதலியவற்றை துரை மார்களுக்கும் மற்றர்களுக்கும் தயா ராக்கி வைத்திருக்கும் அறை) போய்ட்டு வர்றோம்.

என்று கூறினார்.

"சரி, எஜமான்" என்று சொன்ன அவன் மாதவன் இருந்த பெட்டியில் ஏறி சாமான்களுக்குப் பக்கத்தில் வெகு ஜாக்கிரதையாக நின்றிருந்தான்.

சபார்டினேட் ஜட்ஜ் மாதவனின் கையைப் பிடித்தபடி வேடிக்கைப் பேச்சு பேசிக்கொண்டு ரிஃப்ரெஷ்மென்ட் ரூமுக்கு இட்டுச் சென்றார்.

ஷியர் ஆலிகான்: நீங்க என்ன சாப்பிடுறீங்க? (என்று மாதவனிடம்)

மாதவன்: உங்க இஷ்டம்போல.

ஷியர் ஆலிகான்: புலாலுக்கும் ஒயினுக்கும் உங்களுக்கு மறுப்பில்லையா?

மாதவன்: மறுப்பில்லே.

ஷியர் ஆலிகான்: "சரி; பாய்—பாய்" என்று கூப்பிட்டார்.

பணியாள் "எஸ் சார்" என்று குரல் கொடுத்துக் கொண்டு ஓடி வந்தான்.

ஷியர் ஆலிகான்: "மட்டன் சாப்ஸ், கட்லெட், ப்ரெட், சீஸ், ஷெர்ரி ஒயின் எல்லாம் கொண்டுவா" என்று ஆணையிட்டார்.

பணியாள் "எஸ் சார்" என்று சொல்லிவிட்டுக் கேட்டவற்றைக் கொண்டுவர ஓடினான்.

சப்ஜட்ஜும் மாதவனும் தனித்தனி நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தார்கள். திடீரென்று சப்ஜட்ஜ் நாற்காலியிலிருந்து எழுந்து, "ஓ, என்னோட மகனையும் நான் கூட்டிக்கிட்டு வந்திடுறேன். அவன் முதல் வகுப்புப் பெட்டியிலே அவங்க அம்மாவோட இருக்கிறான். நான் அந்தப் பெட்டியிலேருந்து இறங்கறப்பவே அவன் முரண்டுபண்ணி என்கூட வரணும்னு அழுதான். நான் இல்லாம அந்தப் பொடியன் சாப்பிட மாட்டான். நான் ஒரு நிமிஷத்திலே வந்திடுறேன்" என்று சொல்லி கடியாரத்தை எடுத்து ஒரு தடவைப் பார்த்தார். "வண்டி புறப்பட இன்னும் பதினாலு நிமிஷம் இருக்கு" என்று சொல்லிக் கொண்டு ஜட்ஜ் வேகமாக வெளியே சென்றார். குழந்தையைக் கூட்டிக்கொண்டு வரப் போனது மாதவனுக்கு மிக்க மகிழ்ச்சியளித்து. மாதவன் அங்கேயே உட்கார்ந்திருந்தான். அப்போது ஆணையிட்டபடி பட்லர் ஒவ்வொன்றாகக் கொண்டுவந்து வைக்கத் தொடங்கினான். மாதவன் சப்ஜட்ஜ் வருகைக்காகக் காத்திருந்தான். ஐந்து நிமிஷம் கழிந்தது—ஆறு நிமிஷம் கழிந்தது—ஏழு—எட்டு—ஒன்பது—பத்து நிமிஷங்களாயின. அப்போது மாதவன் எழுந்து 'இவர் ஏன் இன்னும் வரல்லே?' என்று யோசித்தான். பக்கத்தில் நின்றிருந்த பட்லர் "இனி நாலு

நிமிஷம்தான் இருக்கு. இந்தப் பண்டமெல்லாம் ஆறி அலறிப் போகுது" என்றான்.

மாதவன், "அவரு வரல்லியே" என்று சொல்லி வெளி யேறி—முதலில் முதல் வகுப்புப் பெட்டிகள் இருந்த பக்கம் ஓடினான். அந்தப் பெட்டிகளின் கதவுப் பக்கம் போய், "மிஸ்டர் ஷியர் ஆலிகான் சப்ஜட்ஜ்! ஷியர் ஆலிகான் சப்ஜட்ஜ்!" என்று உரக்கக் கூப்பிட்டான். யாரும் பதிலளிக்க வில்லை. மாதவன் செயலற்றுத் திகைத்தான் தான் பயணம் செய்த பெட்டிக்குச் சென்று பார்த்தபோது அங்கே வைக்கப் பட்டிருந்த தன்னுடைய சாமான் எதுவும் காணோம். பியூனுமில்லை, ஜட்ஜுமில்லை. சாமான்களையெல்லாம் அந்தத் தடித்த பியூன் எடுத்துக்கொண்டு போனதாக அந்தப் பெட்டியிலிருந்த இங்கிலீஷ் அறிந்திராத சகபயணிகள் கைச்சாடை மூலமும் பிற சைகைகள் காண்பித்தும் மாதவ னுக்குப் புரிய வைத்தார்கள். மாதவன் மீண்டும் எப்படி, எங்கே என்று வகைபுரியாமல் பிளாட்பாரத்தில் அங்கு மிங்குமாக ஒரு பைத்தியக்காரனைப்போல் ஓடினான். அப்போது வண்டி கிளம்பி ஓடத் தொடங்கியது.

மாதவனுக்கு அப்போது ஏற்பட்ட திகைப்பையும் வருத் த்தையும் புரியும்படி சரியாகச் சொல்லி என் வாசகர் களுக்கு உணர்த்த என்னால் இயலாது. அவன் அப்போது உடுத்தியிருந்த குப்பாயமும் தொப்பியும் காலுறையும் பூட்சும் ஒரு சிறிய உருமாலும், இரண்டு ரூபாய்க்கோ எவ்வளவு சில்லறையும், ஒரு ரிவால்வரைப் பாக்கெட்டில் வைத்திருந்ததும், எப்போதும் வைத்திருந்த ஒரு சாதாரண கடியாரமும், ஒரு ரயில்வே டிக்கட்டும் தவிர மற்ற எல்லா சாமான்களும் பறிபோய்விட்டிருந்தன. பறிபோனவற்றில் மிகவும் விலையுயர்ந்தவை பாபு கோவிந்தசென் கொடுத்த தங்கக் கடியாரமும் சங்கிலியும், ஒரு விலையுயர்ந்த தந்தத் திலான கடிதப்பெட்டியும், சிறப்பாக ஜரிகையிட்ட உடுப்பு களும் ஆகும். பாவம்! அப்பாவி மாதவன் திக்கற்றவனாகி பிளாட்பாரத்தில் சிறிது நேரம் நின்றான்—வண்டியும் போய்விட்டிருந்தது. உடைமைகள் எல்லாவற்றையும் அலகா பாத் ஜட்ஜ்காரன் சுருட்டிக்கொண்டு போயிருந்தான்.

ஷியர் ஆலிகான் என்று கள்ளப்பெயர் சொன்ன இந்தப் பெருந்திருடன் இந்த வகை நடவடிக்கைகளினால் பெரும்பணத்தைக் கொள்ளையடித்திருந்தான். இவனும் இவனுடைய கூட்டாளியும் சேர்ந்து மாதவனை சாயங்கலம் பலகாரம் சாப்பிட இறங்கிய ஸ்டேஷனில் வைத்துப் பார்த்தார்கள். இந்த வட்டாரத்திற்குப் பழக்கமில்லாதவன் என்பது புரிந்துவிட்டது. தன்னுடைய திருட்டுக்கூட்டத்தில் இரண்டு பேருடன் சேர்ந்து முன்பு விவரித்த மாறுவேடம் பூண்டு புறப்பட்டு நம்முடைய மகாவெகுளியான மாதவனை இவ்விதமாக ஏமாற்றிவிட்டான். அந்தத் திருடர்கள் மாதவனின் இருக்கையிலிருந்து சாமான்களை எடுத்துக்கொண்டு, ஸ்டேஷனிலிருந்து தாண்டிக் குதித்து ஓடிப்போய்விட்டிருந்தார்கள்.

'இனி என்ன வழி, ஈஸ்வரா!' என்று நினைத்து மாதவன் ஸ்டேஷன் மாஸ்டரின் அறைக்கு ஓடிச் சென்றான்.

மாதவன்: என்னோட சாமான்களெல்லாம் களவு போயிடிச்சி. நான் வேறே ஊர்க்காரன். எனக்கு தயவுசெய்து உதவணும்!

ஸ்டேஷன்மாஸ்டர்: போலீஸ்காரங்ககிட்டப் போய்ச் சொல்லுங்க.

மாதவன்: போலீஸ்காரங்க யாரையும் காணோம்.

ஸ்டேஷன்மாஸ்டர்: அதுக்கு நான் என்ன செய்றது?

மாதவன்: நான் வெளியூர்க்காரன்.

ஸ்டேஷன்மாஸ்டர்: அதுக்கு நான் என்ன செய்றது?

மாதவன்: எனக்கு இந்தப் பக்கத்திலே யாரையும் பழக்கமில்லே.

ஸ்டேஷன்மாஸ்டர்: அதுக்கு நான் என்ன செய்றது?

மாதவன்: நீங்க எனக்கு சரியான உதவி செய்யலேன்னா நான் ரொம்பத் திண்டாடிப்போவேன்.

ஸ்டேஷன்மாஸ்டர்: போலீஸ்காரங்ககிட்டப் போய்ச் சொல்லுங்க. போர்ட்டர், இவரைப் போலீஸ்காரங்ககிட்டக் கூட்டிப்

போ. இங்கே போலீஸ்காரங்க யாரும் இல்லேன்னா போலீஸ் கச்சேரியைக் காமிச்சிட்டு வா.

பிளாட்பாரத்தில் போலீஸ்காரர்களைக் காணோம். போலீஸ் கச்சேரியைச் சென்றடைந்தபோது அங்கே கதவு பூட்டியிருந்தது. அந்தப் பகுதியில் நம்முடைய பிரிட்டீஷ் இந்தியாவைச் சேர்ந்த போலீசார் இல்லை. இந்தத் திருட்டு நடந்ததும் பிரிட்டீஷ் இந்தியாவைச் சேராத ஒரு பகுதியில் தான். மாதவனுடன் ஹோட்டல் பட்லரும் சேர்ந்து வந்திருந்தான். "பண்டம் தயார்பண்ணினதுக்கு ஒண்ணரை ரூபாய் சார்ஜ் ஆகுது—வேணுமின்னா சாப்பிடலாம்—பணம் தரணும்" என்று சொல்லி பின்னாலேயே வந்திருந் தான்.

மாதவன்: எனக்குப் பண்டம் எதுவும் தேவையில்லே. அந்தத் திருடன்தானே சொன்னது? நான் எதுக்காகப் பணம் தரணும்?

பட்லர்: நீங்கதான் சொன்னீங்க. நீங்கதான் பணம் தரணும்.

என்று சொல்லி மீண்டும் பின்னாலேயே விடாமல் தொடர்ந்தான்.

போலீஸ்காரர் எவரும் தென்படாததால் மாதவன் மீண்டும் புகைவண்டி நிலையத்திற்கே திரும்பி வந்தான். ஸ்டேஷன்மாஸ்டருக்கு அருகே சென்றான்.

மாதவன்: போலீஸ்காரங்க யாரையும் காணோம்.

ஸ்டேஷன்மாஸ்டர்: அதுக்கு நான் என்ன செய்றது?

பட்லர்: (ஸ்டேஷன்மாஸ்டரிடம்) இவரு ஹோட்டலுக்கு வந்து பண்டங்களுக்கு ஆர்டர் கொடுத்தாரு. தயார் பண்ணி வந்த பிறகு இப்போ காசு தரமாட்டேங்கறாரு.

ஸ்டேஷன்மாஸ்டர்: அதை ஏன் கொடுக்கலே?

மாதவன்: நீங்க சொன்னா கொடுத்திடுறேன், என் கையிலே இருக்கிற எல்லாப்

பணத்தையும் கொடுத்திடுறேன். ஆனால் நீங்க எனக்கு ஒரு உதவு மட்டும் செய்யணும். நான் இப்படி ஒரு சங்கடத்திலே மாட்டிக்கிட்ட ஆளில்லையா—என்னோட ஒரு நண்பருக்கு ஒரு டெலிகிராம் (தந்திச்செய்தி) அனுப்பி வைக் கணும்.

ஸ்டேஷன்மாஸ்டர்: நேரம் ஆறு மணி தாண்டியாச்சே. யாரு அந்த நண்பர்?

மாதவன்: மிஸ்டர் கோபிநாதபானர்ஜி என் னோட நண்பர். அவரைப் பார்க் கத்தான் போய்க்கிட்டிருக்கேன். அவருக்கு ஒரு தந்தி இப்பவே கொடுக்கணும்.

'கோபிநாதபானர்ஜி' என்ற பெயரைக் கேட்டதும் ஸ்டேஷன்மாஸ்டரின் நடவடிக்கை எல்லாமே மாறி விட்டது. அந்த கோடீஸ்வரருக்குப் பழக்கப்பட்டவர்தான் இந்த ஸ்டேஷன்மாஸ்டர். பலவிதமான சாமான்கள் இந்த ஸ்டேஷன் வழியாக அவருக்காக வேண்டி தினமும் வந்து போய்க்கொண்டிருக்கும். அவரிடமிருந்து ஸ்டேஷன்மாஸ் டருக்கு நிறையப் பணமும் பிறவும் சம்மானமாகக் கிடைத்த துண்டு. அது மட்டுமல்ல, ஒரு தடவை ஏதோ ஒரு தவறு நடந்துவிட்டதனால் இந்த ஸ்டேஷன்மாஸ்டருக்கு விலங்கு மாட்ட இருந்து, அவருடைய தயவினால் அவ்வாறு இல்லா மல் போய்விட்டது. கோபிநாதபானர்ஜி என்றால் அந்த ஸ்டேஷன்மாஸ்டருக்கு ஒரு கடவுளைப் போல! அந்தப் பெயரைச் சொல்லக் கேட்டதும் அவர் இருப்பிடத்திலிருந்து எழுந்து நின்றார்.

ஸ்டேஷன்மாஸ்டர்: நீங்க அவரோட நண்பரா? அவரைப் பார்க்கத்தான் போய் கிட்டிருக்கீங்களா? போர்ட்டர், நாற் காலி கொண்டு வா. உட்காருங்க. டெலிகிராம் இந்த நிமிஷமே கொடுத்திரலாம். அவரோட ஒரு

டெலிகிராமுக்கு இப்போதான் நான் பதில் அனுப்பிச்சேன். அவரு இப்போ அவங்க ஊரு ரயில்வே ஸ்டேஷன்லேதான் இருக்கணும். டெலிகிராம் சீக்கிரம் எழுதித் தாங்க.

மாதவன் உடனே டெலிகிராம் எழுதி ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்தான்.

ஸ்டேஷன்மாஸ்டர் ஐந்து நிமிட நேரத்தில் பதில் வருத்தித் தருவதாகச் சொல்லி டெலிகிராம் அடித்தார். மாதவனுக்குச் சிறிது தேநீரும் பிறவும் உடனே வர வழைத்துக் கொடுத்தார். போலீஸ்காரர்களுக்காக ஆள் அனுப்பி வைத்தார். பணம் கேட்டுக்கொண்டிருந்த ஹோட்டல் பட்லர் இப்போது ஆளைக் காணவே இல்லை. ஒருவழியாக அரை மணி நேரம் கழித்து பதில் டெலிகிராம் வந்தது. ஸ்டேஷன்மாஸ்டருக்கு நேரடியாகக் கீழே குறிப் பிட்டபடியாக இருந்தது டெலிகிராம்.

"மலபாரிலிருந்து வந்திருக்கும் மாதவனின் டெலிகிராம் கிடைத்தது. அவர் என்னுடைய உயிருக்குயிரான ஒரு நண்பர். அவருக்குத் தேவையான எல்லா உபசாரங்களும் செய்து நீங்கள் இன்று இரவு அவரைக் கவனித்துக் கொள்ள வேண்டும். மாதவனின் டெலிகிராம் இங்கே கிடைத்த நேரத்தில் இங்கிருந்து அங்கு வருவதற்கான கடைசி வண்டி போய்விட்டது. இல்லாவிட்டால் 'இந்த இரவு நேரத் திலேயே' நான் அங்கே வந்து சேர்ந்திருப்பேன். கொஞ் சமும் கவலைப்பட வேண்டாமென்று மாதவனிடம் நீங்கள் சொல்லுங்கள். நீங்கள் அவருடனேயே இருந்து எல்லா உபசாரங்களும் செய்து நான் வந்து சேர்கிற வரை பார்த்துக் கொள்ளுங்கள். நான் நாளை முதல் வண்டியிலேயே வந்து சேர்கிறேன். போலீசுக்கு இப்போதோ தகவல் தெரிவித்து விடுங்கள். இதெல்லாம் மாதவனுக்குத் தெரிய வேண்டாம்— தேவையான எல்லாவற்றையும் நீங்களே செய்யுங்கள்."

இந்த டெலிகிராம் கிடைத்த பிறகு ஸ்டேஷன்மாஸ்டர் மாதவனுக்குச் செய்த உபசரணைகளும் அனுசரணைகளும் ஒரு ராஜாவுக்கோ பெரிய பிரபுவுக்கோ அவர் செய்வாரா என்பது சந்தேகம்தான்.

உடனடியாகப் போலீசுக்கு ஆள் அனுப்பினார். மாதவனுக்கு ஹோட்டலில் படுக்கை, கட்டில், மேஜை, நாற்காலி முதலிய பல வசதிகள் உள்ள ஒரு பெரிய அறையை அமர்த்தி அதில் இருக்க ஏற்பாடு செய்தார். கால் மணி நேரத்துக்குள்ளாக அந்த வட்டாரத்தைச் சேர்ந்த போலீஸ் துறையின் ஒரு ஹெட்ஆபீசரும் சில ஏட்டுகளும் வந்து சேர்ந்தார்கள். ஹெடாபீசர் ஒரு முஸ்லீம்; அதிபயங்கரத் தோற்றம். ஸ்டேஷன் வந்ததும் ஸ்டேஷன்மாஸ்டரோடு:

ஹெடாபீசர்: திருடு போது யாருக்கு? எவ்வளவு பணம் போச்சி?

ஸ்டேஷன்மாஸ்டர்: மலையாளத்திலேருந்து ஒரு ராஜா வந்திருக்காரு. அவருகிட்டேருந்து ஒரு லட்ச ரூபாய்க்கானது திருடு போயிருக்கு. கோபிநாதபானர்ஜிக்கு வேண்டியவரு இந்த ராஜா. இந்த அறைக்குள்ளே இருக்காரு—பெரிய ராஜாவாக்கும். விவரத்தைச் சொல்லி கோபிநாதபானர்ஜிக்கு அவரே நேரடியாக டெலிகிராம் கொடுத்தாரு. அதுக்கு அடிச்ச பதில் தந்தி எனக்கு வந்திருக்கு. இந்தா பாருங்க.

என்று சொல்லி டெலிகிராமை ஹெடாபீசரிடம் கொடுத்தார்.

ஸ்டேஷன்மாஸ்டர் சொன்னதையெல்லாம் மாதவன் உள்ளே இருந்தபடியே கேட்டான். மிகவும் வருந்தத் தக்கதான நிலைமையில்தான் அப்போது இருந்த போதிலும், தான் மலையாளத்தில் ஒரு ராஜா என்றும் லட்ச ரூபாய்க்கான பொருள் களவு போய்விட்டதென்றும் ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னதைக் கேட்டபோது மாதவன் உரக்கச் சிரித்துக்கொண்டான்.

ஹெடாபீசர் டெலிகிராமை வாசித்துவிட்டுத் தலையை ஒரு முறை குலுக்கிக் கொண்டார். ஸ்டேஷன்மாஸ்டரிடம்: ஹெடாபீசர், "எனக்கு ராஜாவை நான் ஒரு தடவை பார்க்கணும். திருட்டைப் பத்தின விவரத்தை நான் குறிப்பெடுத்துக்கிடணும்" என்றார்.

ஸ்டேஷன்மாஸ்டர் உள்ளே போய்வந்து ஹெடாபீச ரிடம் உள்ளே வரலாமென்று சொன்னதன் பின்னர் எத்தனான அந்தத் துலுக்க அதிகாரி உள்ளே வந்து மிகுந்த பயபக்தியுடன் மாதவனுக்கு ஒரு சலாம் செய்து கைகள் இரண்டையும் தாழ்த்தி டிரில் செய்ய நிற்பதுபோல் மாதவனுக்கு எதிரில் நின்றார்..

மாதவன் அவசராக நாற்காலியிலிருந்து எழுந்து மிக்க மகிழ்ச்சியுடன், "உங்களைப் பார்த்ததிலே ரொம்ப மகிழ்ச்சி" என்று சொல்லிப் பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்காரச் செய்து மிகவும் பணிவுடன் பேசினான். அந்த அதிகாரிக்கு மாதவனைப் பற்றி மிகுந்த மரியாதையும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன.

அதிகாரி: ராஜா அவங்களுக்கு இப்படி ஒரு இக்கட்டு வந்ததுக்கு நான் ரொம்ப வருத்தப்படுறேன். என்னால் முடிஞ்ச வரைக்கும் முயற்சி பண்ணி இந்தத் திருட்டைத் துப்புத் துலக்கிடுறேன்.

மாதவன்: நான் ராஜா இல்லே.

இதைக் கேட்டபோது ஸ்டேஷன்மாஸ்டருக்கு மிகவும் எரிச்சல் ஏற்பட்டது—விவரம் கெட்ட இந்தத் தறுதலையோட முதல் கைவிட்டுப் போய்விட்டதாகவே மனதுக்குள் நிச்சயித்துக்கொண்டார்.

மாதவன்: நான் ராஜா இல்லே, மலையாளத்து நாயர். கவர்ன்மென்ட்டிலே உத்தியோகம்.

அதிகாரி: சரி, சொத்து எவ்வளவுக்குத் திருடு போயிருக்கும்?

மாதவன்: விலைமதிப்பு திட்டவட்டமா சொல்றதுக்கில்லே.

ஸ்டேஷன்மாஸ்டர்: ரொம்ப முதல் போயிருக்கு. ரொம்ப ரொம்ப.

மாதவன்: ஏறக்குறைய ஒரு ரெண்டாயிரத்துக்கு சொத்து மதிப்பு இருக்கலாம். திருடுபோன சாமான்களிலே

விலைமதிப்பானதெல்லாம் கல்கத்தாவிலேருந்து புறப்பட்டப்போ எனக்கு மகாராஜஸ்ரீ கோவிந்தசென் வெகுமதியா கொடுத்தது. அதுகளோட விலை எனக்குத் திட்டவட்டமாத் தெரியலே.

அதிகாரி: கோவிந்தசென்னும் உங்க நண்பரா?

மாதவன்: ஆமாம்.

அதிகாரி: திருடு நடந்த விவரத்தைக் கொஞ்சம் சொன்னா உதவியா இருக்கும்.

மாதவன் நடந்த விவரத்தையெல்லாம் விளக்கமாகச் சொன்னான். அதிகாரி கேட்டு முடித்த பின் பத்து நிமிடம் எதுவும் பேசாமல் தவமுனிவர்கள் தியானத்தில் இருக்கும் நிலையில் ஆடாமல் அசையாமல் யோசனையில் ஆழ்ந்தார். யோசித்து முடிந்ததும் ஒரு புன்னகை செய்தார். தனக்கு எல்லாத் துப்பும் கிடைத்துவிட்டது என்று காட்டிக்கொண்ட நிலையில்:

அதிகாரி: இந்தத் திருடு நடந்தது ஹோட்டல் பட்லருக்குத் தெரிஞ்சிதான் நடந்திருக்கு என்கிறதிலே எனக்குக் கொஞ்சம்கூட சந்தேகமில்லே.

ஸ்டேஷன்மாஸ்டர்: ஆமாம்—ஆமாம். சந்தேகமில்லே.

பிரதான சிப்பாய்: ஆமாம்—ஆமாம். எனக்கு அணுவளவுகூட சந்தேகமில்லே.

என்று சொன்னபோது சிப்பாய்கள் வியப்படைந்து ஒருவரையொருவர் முகம் பார்த்துக் கொண்டார்கள். திருட்டை இவ்வளவு சீக்கிரமாகத் தங்களுடைய எஜமானர் துப்பு துலக்கியதை நினைத்து மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். தங்களுக்கு ஆணை பிறப்பிக்கப்படும் நேரம் வந்துவிட்டதென்ற எண்ணத்துடன் அதிகாரியின் முகத்தைப் பார்த்தபடி நின்றார்கள்.

மாதவன்: ஹோட்டல் பட்லருக்கு இது தெரிஞ்சிருக்கும்னு எனக்குத் தோணலே.

ஸ்டேஷன்மாஸ்டர்: (மிகுந்த எரிச்சலுடன்) நீங்க இனிமே இந்த விஷயத்திலே எதுவும் தலையிட வேண்டாம். வேண்டியதையெல்லாம் அதிகாரிங்களே செஞ்சி துப்புதுலக்கு வாங்க. ஏறக்குறைய லட்சம் விவகாரங்களிலே இது மாதிரி துப்பு துலக்கின கெட்டிக்காரராக்கும் இவரு. அவரோட வேலையை அவரே செய்யட்டும்.

மாதவன்: அப்படியே ஆகட்டும், இனிமே நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன். என்று சொன்னான்.

பெரிய அதிகாரி உடனே அங்கிருந்து எழுந்து வெளியே வந்து ஹோட்டல் பட்லரை அழைத்துவரச் சொன்னார். பட்லர் மிகுந்த பயத்துடன் நடுங்கியபடி அதிகாரிக்கு அருகில் வந்து நின்றான்.

அதிகாரி: அவரோட பொருளைத் திருடினதை நீ எங்கே வச்சிருக்கே? எடு.

பட்லர்: நானா, யாரோட பொருள்? கஷ்டமே, நான் திருடினேனா?

அதிகாரி: (ஒரு சிப்பாயிடம்) அந்த நாயை ஒதை.

பட்லர்: அய்யோ!

அதிகாரி: விடாம ஒதை.

பட்லர்: அய்யய்யோ! அய்யய்யோ! எனக்கொண்ணும் தெரியாது.

அதிகாரி: நல்லா ஒதை—கழுதே. உனக்கு பலம் இல்லே. பிரதான சிப்பாய்! நீ ஒதை, சாத்து, தலையிலே சாத்து.

பட்லர்: அய்யோ! அப்பா! அப்பப்பா! செத்தேன்—செத்தேன்—நான் செத்தேன்—கடவுளே! என்னைக் கொல்றாங்களே!

அதிகாரி: ஒதை—விடாம அந்த நாயை அடிச்சிக் கொல்லு.

பட்லர்: அப்பா! எனக்குத் தண்ணி குடிக் கணும்—நான் செத்துக்கிட்டி ருக்கேன்.

அதிகாரி: அவன் கையைப் பிடிச்சி பின்னாலே முறுக்கிக் கட்டி மேலே தூக்கித் தொங்கப்போடு. இன் னொருத்தன் அவனோட காலைப் பிடிச்சி பலமா கீழே இழுக்கட்டும்.

ஆணையிட்டபடியே செய் போ:

பட்லர்: (வேதனை பொறுக்க முடியாமல்) அய்யோ! அய்யோ! நான் அதை யெல்லாம் எடுத்துக் கொடுத் திடுறேன்—எடுத்துக் கொடுத்திடு றேன்.

அதிகாரி: எங்கே வச்சிருக்கே?

பட்லர்: அங்கே எங்கேயாச்சும் வச்சி ருப்பேன். என்னைக் கொஞ்சம் அவுத்துவிடுங்க.

அதிகாரி: அங்கே வச்சிருக்கே.

பட்லர்: அய்யய்யோ! நான் தூங்குற அறையிலே வச்சிருக்கேன். கட்டை அவுத்துவிடுங்க!

ஸ்டேஷன்மாஸ்டர்: (மாதவனிடம்) பார்த்தீங்களா— திருட்டுப் பய, இவன்தான் திரு டினது. உங்களுக்கு ரொம்ப இரக்க குணம். இப்போ சாமானெல்லாம் வந்து சேர்ந்திடும். பாருங்க.

மாதவனுக்கு இது கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவன் வேதனை பொறுக்க முடியாமல் சொன்னதென்று உறுதி யாக நம்பினான். உண்மையும் அதுதான். தன்னுடைய அறைக்கு அழைத்துச் செல்லப்பட்ட பட்லர் உள்ளே போனதும் வெறுமனே நின்றான். அவனிடம் இல்லாத பொருளை அவன் எப்படி எடுத்துக் கொடுக்க முடியும்?

தொடர்ந்து சில விசாரணைகள் நடத்தி மீண்டும் உதைத் தார்கள். சில போர்ட்டர்களையும் கூலிக்காரர்களையும் அடித்து நொறுக்கினார்கள். எதுவும் துப்புதுலங்காததனால் ஏறத்தாழ பன்னிரண்டு மணிவாக்கில் அதிகாரிகள் விடிந்த பிறகு மீண்டும் வருவதாகச் சொல்லிப் போனார்கள்.

காலையில் முதல் வண்டிக்கு கோபிநாதபானர்ஜி வந்து சேர்ந்தார். திருடு போனதைப் பற்றி விவரம் விசாரித்தார். ஒரு துப்பும் துலங்கவில்லை. மீண்டும் விசாரிக்குமாறு அதிகாரிகளிடம் ஒப்படைத்துவிட்டு மாதவனை அழைத்துக் கொண்டு தன்னுடைய ஊருக்குத் திரும்பினார். இந்த விவ ரங்களையெல்லாம் தன்னுடைய ஊருக்குத் திரும்பியதும் கோவிந்தசென்னுக்குத் தந்தி மூலம் தெரிவித்தார். அதற்கு கோபிநாதபானர்ஜிக்கு வந்த பதில் தந்தி கீழே கொடுக்கப் படுகிறது.

"மாதவனுக்கு நேர்ந்த இடையூறு பற்றி நான் வருந்து கிறேன். மாதவன் வடஇந்தியாவில் சுற்றிப் பார்ப்பதற்கும், சென்னைக்குத் திரும்பிப் போவதற்குமான எல்லாச் செலவுகளுக்குமாக இரண்டாயிரம் ரூபாயை மாதவனிடம் கொடுத்துவிடுங்கள். ஆனால் ரூபாய் மொத்தத்தையும் கையில் கொண்டு போக வேண்டாம். தற்போதைக்குத் தேவையானது மட்டும் கையில் ரொக்கமாகப் பணமாக இருக்கட்டும். மீதி தேவையானது அலகாபாத், ஆக்ரா, டில்லி, லாகூர் ஆகிய பாங்குகளிலிருந்து அப்போதைக்கப்போது வாங்கிக் கொள்வதுபோல் செக்குகள் கொடுத்துவிடுங்கள். மாதவன் பம்பாய் திரும்பிப் போய்ச் சேரும் வரையில் துணையாகப் போவதற்கு நம்முடைய பைராம்கானை அவருடன் அனுப்பி வையுங்கள். அவன் பயணம் செய்து பழக்கமானவன். சாமான்கள் திருட்டுப் போனதில் அதிகம் கவலைப்பட வேண்டாமென்று மாதவனிடம் கட்டாயம் சொல்லுங்கள்."

இந்த டெலிகிராமைப் படித்தபோது மாதவனுடைய மனதில் கோவிந்தசென்னைப் பற்றி ஏற்பட்ட மரியா தையும் பக்தியும் எவ்வளவு என்பதை எனது வாசகர்கள் அனுமானிக்க முடிந்ததுதானே! ஆனாலும் கோவிந்தசென் மூலமாக இனி ஒரு காசுகூடத் தனக்காகச் செலவளிக்கச்

செய்வது மாதவனுக்குப் பிரான சங்கடமாகத் தோன்றி, கோபிநாத்பானர்ஜியிடம் கூறினான்:

மாதவன்: மகா தயாளனாகிய கோவிந்த சென் நீணட காலம் உலகத்தில் சுகமாக வாழ்ந்திருக்கட்டும். நான் இப்போ சென்னைக்குத் திரும்பிப் போகணும்னு நினைக்கிறேன். அங்கே போய்விட்டுக் கொஞ்ச நாள் கழிச்சி இங்கே மறுபடியும் வந்து கோவிந்தசென் அவங் களையும் உங்களையும் சந்திப் பேன். எனக்கு இங்கேருந்து சென் னைக்குப் போறதுக்கான பயணச் செலவுக்கான பணம் மட்டும் இப்போ கிடைச்சாப் போதும்.

கோபிநாத்பானர்ஜி: அப்படியே ஆகட்டும். ஆனால் ஒரு நாலஞ்சி நாள் என்கூட இங்கே தங்கியிருந்திட்டுப் போகலாம். அப்போதான் எனக்கு நிம்மதியா இருக்கும்.

என்று கூறியதை ஒப்புக்கொண்டு நான்கைந்து நாட்கள் அங்கே தங்கியருந்தான்.

கோவிந்தப்பணிக்கரும் கோவிந்தன்குட்டி மேனோனும் பம்பாயில் தங்க நேர்ந்தது பற்றி முன் அத்தி யாயத்தில் கூறப்பட்டதல்லவா? கோவிந்தப்பணிக்கருக்கு உடல்நலம் இப்போதும் சரியில்லை. பர்மாவுக்குப் புறப்படு வதாக இன்று, நாளை, நாளைக்கு மறுநாள் என்பதாகக் கழிந்துகொண்டிருந்தது. அப்படி இருக்கும்போது ஒரு நாள் கோவிந்தன்குட்டிமேனோன் பம்பாய் எஸ்ப்ளனேடுக்கு அருகில் காற்று வாங்கிக்கொண்டிருந்தபோது பாபு கேசவசந்திரசென் கடந்து போனான். கேசவசந்திரசென் கோவிந்தன்குட்டிமேனோனின் முகத்தைப் பார்த்தபோது மாதவனின் முகச்சாயல் போலத் தெரிந்தது. வந்த வழியே மீண்டும் திரும்பி வந்து கோவிந்தன்குட்டிமேனோனின் அருகில் வந்து விசாரித்தான்:

கேசவசந்திரசென்: நீங்க எந்த ஊரு?

கோவிந்தன் குட்டிமேனோன்: மலபார் ராஜ்யம்.

கேசவசந்திரசென்: சரிதான்; அப்போ பார்த்தப்பவே எனக்குத் தோணிச்சி. மலபாரில் மாதவன் என்கிறவரை உங்களுக்குத் தெரியுமா?

இதைக் கேட்டதும் கோவிந்தன்குட்டிமேனோன் அதிர்ந்து போனார். பெரிதும் திகைத்தார். மகிழ்ச்சியும் திகைப்பும் வியப்பும் ஒன்று சேர்ந்து மனதில் நிரம்பி வழியத் திக்குமுக்காடினார். உடனே—

கோவிந்தன் குட்டிமேனோன்: அவர் எங்கே இருக்காரு? நான் அவருக்கு உறவுக்காரன். அவர் எங்க ஊரை விட்டுப்போய் ரெண்டு மாசமாச்சி. அவரோட அப்பாவும் நானும் சேர்ந்து பல இடங்களிலே அலைஞ்சி தேடியும் காணாமல் வருத்தப்பட்டுக் களைச்சிப் போயிருக்கோம். நாங்க இங்கே வந்து ஏழெட்டு நாளாச்சி.

உடனே கேசவசந்திரசென் விவரங்களை எல்லாம் சொன்னான். கடைசியில்—

கேசவசந்திரசென்: இப்போ அவர் கல்கத்தாவை விட்டுக் கிளம்பியிருப்பாரு. எதுக்கும் அப்பாவுக்கு நான் ஒரு தந்தி கொடுத்து அந்த விவரத்தைத் தெரிஞ்சிக்கிடலாம்.

என்று சொல்லி கேசவசந்திரசென்னும் கோவிந்தன் குட்டிமேனோனும் சேர்ந்து டெலிகிராஃப் ஆபீஸ் போய்த் தந்தி அடித்தார்கள். அதை அடுத்து கோவிந்தப்பணிக்கர் இருந்த இடத்திற்குக் கேசவசந்திரசென் கோவிந்தன் குட்டிமேனோனுடன் சென்றான். அவரையும் அவருடன் வந்தவர்களையும் சேர்த்து அழைத்துக்கொண்டு சென்று தன்னுடைய வீட்டில் தங்கச் செய்தான்.

ஏறத்தாழ இரவு எட்டு மணிக்கு பதில் தந்தி வந்து சேர்ந்தது: "மாதவன் கல்கத்தாவை விட்டுக் கிளம்பியா யிற்று. கோபிநாதபானர்ஜியுடன் இருப்பார். அவரைப் பற்றி அவருடைய அப்பா எதுவும் கவலைப்படத் தேவை யில்லை. விரைவில் சுகமாக வந்து சேர்வார்" என்பதுதான் பதில். அது கிடைத்ததும் கோபிநாதபானர்ஜிக்கு அவ ருடைய ஊருக்கு அந்த இரவு நேரத்திலேயே தந்தி அடித்தான். மாதவன் அங்கே இருக்கிறாரா என்று மட்டும் தான் தந்தியில் கேட்டிருந்தான். அதற்கான பதில் காலையில் வந்து சேர்ந்தது.

பதில்—"மாதவன் இன்று சாயங்காலம் ஆறு மணிக்கு இங்கிருந்து பம்பாய்க்கு வண்டி ஏறினார். உடல்நலக் குறைவு எதுவும் இல்லை. பம்பாய் வந்து சேர்ந்ததும் உங்களைச் சந்திப்பார்."

மாதவன் ஏறிய வண்டி பம்பாய்க்கு வந்து சேரும் நாளன்று கேசவசந்திரசென் ஸ்டேஷனுக்குச் சென்று எதிர்கொண்டழைக்க சாரட்டு வண்டியுடன் தயாராக இருந்தான். ஒரு வேடிக்கை காண்பிக்க வேண்டுமென்று கேசவசந்திரன் திட்டமிட்டிருந்தான். கோவிந்தப்பணிக் கரிடமும் கோவிந்தன்குட்டிமேனோனிடமும் அவர் களுடன் வந்தவர்களிடமும் ஸ்டேஷனுக்கு வர வேண்டாம் என்பதாகவும், தானும் மாதவனும் சேர்ந்து வீட்டிற்கு வரும்போது அவரைப் பார்த்துக் கொள்ளலாம் என்ப தாகவும், தான் மாதவனைச் சீக்கிரம் அழைத்து வந்து விடுவதாகவும் சொல்லி ஏற்பாடு செய்துவிட்டுத்தான் கேசவசந்திரசென் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தான். ஸ்டேஷனைச் சென்றடைந்தபோது வண்டியும் வந்து சேர்ந்தது. மாதவன் வண்டியிலிருந்து இறங்கிக் கொண் டிருக்கும்போதே கேசவசந்திரசென்னைப் பார்த்து விட்டான். உடனே கை குலுக்கிக்கொண்ட பின்னர் இருவரும் சாரட்டு வண்டியில் ஏறி கேசவசந்திரசென்னின் பங்களாவுக்குச் சென்று வெளியில் வராந்தாவில் நின் றார்கள். கேசவசந்திர சென் கல்கத்தா புறப்பட்டதிலிருந்து நடந்ததையெல்லாம் மாதவன் சொன்னான். கேசவசந்திர சென் எல்லாவற்றையும் கேட்டான். கடைசியில்—

கேசவசந்திரசென்: போகட்டும், அலகாபாத்திலே ச்ப் ஜட்ஜோட அறிமுகம் கிடைச்சதே! கொஞ்சம் பொருள் நஷ்டம் ஏற்பட்டிருந்தாலும் பரவாயில்லே— ஒரு நல்ல நண்பரோட பழக்கம் கிடைச்சதே!

என்று பலவாறாகச் சொல்லி இருவரும் உரக்கச் சிரித்தார்கள்.

கேசவசந்திரசென்: இனி உத்தேசம் என்ன? மல பாருக்குத் திரும்பிப் போறதுதானே நல்லது?

மாதவன்: இல்லே. மலபாருக்கு இப்போ திரும்ப மாட்டேன். நாளை நான் சென்னைக்குப் போய் ஒரு பத்து நாளுக்குப் பிறகு மறுபடியும் இங்கேதான் திரும்பி வருவேன்.

கேசவசந்திரசென்: சென்னைக்கு மட்டும் போய்த் திரும் பிடுவீங்களா? மலபார் வரைக்கும் போகலியா? அப்பாவையும் மத்த வங்களையும் பார்க்க வேண் டாமா?

அப்பா என்று சொன்னதும் மாதவனுக்குப் பெரும் வருத்தம் ஏற்பட்டது. ஆனால் மற்ற சங்கதிகளை நினைத்துப் பார்த்தபோது மலபாரை மனதுக்குள் சபித்தான்.

மாதவன்: அப்பாவைப் பார்க்க எனக்கு ரொம்ப ஆசையா இருக்கு. ஆனால் இப்போதைக்கு அது முடியாதுன்னு தோணுது.

கேசவசந்திரசென்: இப்போ நாம சாப்பிடலாமா? குளிக்கணுமில்ல?

மாதவன்: குளிக்கலாம்.

என்று சொல்லி மாதவன் எழுந்தான்.

கேசவசந்திரசென்: நான் இன்னிக்கு என்னோட ரெண்டு நண்பர்களை உங்க

ஆசைக்காக வேண்டி சாப்பிட வரும்படிக் கூப்பிட்டிருக்கேன். அவங்களைப் பார்க்க உங்களுக்கு மகிழ்ச்சியா இருக்கும்னு நான் நம்பறேன்.

மாதவன்: உங்க நண்பர்கள்னா அவங்க எனக்கும் நண்பர்கள்தானே, அவங் களைக் கூப்பிட்டது எனக்கு மெத்த சந்தோஷம்.

என்று சொல்லிவிட்டு மாதவன் குளிக்கப் போனான். குளிக்கப் போனதும் கேசவசந்திரசென் கோவிந்தப் பணிக்கரையும் கோவிந்தன்குட்டிமேனோனையும் சாப் பாட்டு அறைக்கு அழைத்து வந்து உணவருந்தும் மேஜையின் முன் உட்கார வைத்தான். தானும் உட்கார்ந்தான். சிறிது நேரம் கழித்து மாதவன் குளித்து முடிந்து வருவதைப் பார்த்து கேசவசந்திரசென் எதிர்கொண்டழைத்து இந்த அறைக்கு அழைத்து வந்தான்.

கேசவசந்திரசென்: இதோ இங்கே இருக்கிற ரெண்டு பேரையும்தான் நான் அழைச்சி வந்தது. உங்களுக்கு இதுக்கு முன் னாடியே தெரிஞ்சவங்களா? எனக்கு அந்த விவரம் தெரிய லையே.

மாதவன் பார்த்தான். அதற்குப் பின் நடந்தது என்ன வென்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா? "ஓ— அப்பாவை நான் பார்த்தது என்னோட அதிருஷ்டம்!" என்று சொல்லும்போதே கோவிந்தப்பணிக்கர் எழுந்து போய் மாதவனை ஆலிங்கனம் செய்து, "அய்யோ! என் மகனே! நீ என்னை இப்படிப் பாடாய்ப்படுத்திட்டியேப்பா!" என்று நாத் தழுதழுக்க அழுதுகொண்டே சொன்னார்.

கேசவசந்திரன் உடனே அந்த அறையைவிட்டு மற்றோர் அறைக்குப் போய்விட்டான்.

இந்த ஆலிங்கனமும் அழுகையும் முற்றாக முடிந்த பின்னர் முதலாவதாக கோவிந்தப்பணிக்கர் பேசியது:

"கோவிந்தன்குட்டி உடனே ஊருக்கு ஒரு தந்தி அடிக்கணும். இவனோட அம்மாவும் அந்தப் பொண்ணும் துக்கத்தினாலே செத்திட்டாங்களோ என்னவோ தெரியலே."

மாதவன்: எந்தப் பொண்ணு? எந்தப் பொண்ணு எனக்காக வருத்தப்பட்டுச் சாகிறது?

கோவிந்தன் குட்டிமேனோன்: என்னோட மருமகள் இந்துலேகா தான். பைத்தியக்காரா! என்ன கதை இதெல்லாம்? என்னவெல்லாம் குழப்படி பண்ணிட்டே!

மாதவன் நன்கு சிந்திக்காமல் செயல்பட்டதனால் இதற்குள் பல ஆபத்துக்களை எதிர்கொள்ள நேரிட்டுவிட்டது. சில மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சிகளும் ஏற்படாமலில்லை. ஆனால் அவற்றுள் எதுவும் இப்போது ஏற்பட்டிருப்பதுபோல் ஒரு திகைப்பு நிலையை மாதவனுக்கு ஏற்படுத்தவில்லை.

கோவிந்தன்குட்டிமேனோன் சொன்னதைக் கேட்டபோது மாதவனின் சர்வாங்கமும் உணர்விழந்து மரத்துவிட்டது.

கோவிந்தப்பணிக்கர்: என்ன கஷ்டம்ப்பா தம்பி, நீ செஞ்சது? உன்னோட அம்மாவையும் அந்தப் பொண்ணையும் எங்களையும் நீ இப்படி வருத்தப்பட வச்சிட்டியே! நீ ஊருக்கு வந்து ஒரு வதந்தியைக் கேட்டிட்டு அர்த்தமில்லாம ஓடிப்போயிட்டியே, விவரத்தையெல்லாம் நாங்க தெரிஞ்சிக்கிட்டோம். கஷ்டம்! உனக்கு ஏதோ ஒரு சனிதசை இருந்திருக்கு. அது கழிஞ்சிபோச்சி.

மாதவன் ஒரு வார்த்தைகூடப் பேச முடியாதவாறு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான்.

அப்போது உள்ளே வந்த கேசவசந்திரசென் இதையெல்லாம பார்த்து ஏதோ சில சிக்கல்கள் ஏற்பட்டிருப்பதாக

அனுமானித்துக் கொண்டாலும் மாதவனிடம் எதுவும் கேட்டுக்கொள்ளவில்லை. எல்லோரும் சாப்பிடத் தொடங்கினார்கள். சாப்பிட்டு முடிந்ததும் கோவிந்தன்குட்டி மேனோன் விவரத்தைத் தெரிவித்து மலபாருக்கு ஒரு டெலிகிராம் அனுப்பினார்.

கேச்வசந்திரசென் வேறோர் அறைக்குப் போன பின்னர்—

கோவிந்தப்பணிக்கர்: என்னப்பா நீ எதுவும் பேசாம இருக்கிறே?

கோவிந்தன் குட்டிமேனோன்: இந்தக் கோமாளித்தனத்தைப் பண்ணிட்டு எப்படிப் பேசமுடியும்?

மாதவன்: அப்பா! எனக்கு இதையெல்லாம் கேட்கறப்போ, அராபியன் நைட்ஸ்ல உள்ள ஒரு கதையைப் படிச்சது போல இருக்கு.

கோவிந்தப்பணிக்கர்: நல்ல கதைப்பா இது! இந்துலேகாவை நீ இந்தப் பாடுபடுத்திட்டியே. உன்னோட அம்மா பொழைச்சிருக்காளோ என்னமோ சந்தேகம்தான், அவ்வளவு கலங்கிப்போயிட்டா

மாதவன் கண்ணீர் பெருக்கியபடி தலைகுனிந்தான்.

அன்று முழுவதும் கேசவசந்திரசென்னுடன் தங்கியிருந்துவிட்டு, மறுநாள் வண்டிக்கு மலபாருக்குப் புறப்படுவதாகத் தீர்மானமாயிற்று.

பாபு கேசவசந்திரசென்னின் உயர்ந்தோங்கிய பளிங்கு மாடமாளிகையின் மேலே சந்திர ஒளியில் கோவிந் தப்பணிக்கரும் மாதவனும் கோவிந்தன்குட்டிமேனோனும் சேர்ந்து அன்றிரவு காற்று வாங்கிக்கொண்டே அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொண்ட முக்கியமான சில உரையா டல்களைப் பற்றி எனது வாசகர்களுக்குத் தெரிவிக்க எனக்கு எண்ணமுண்டு என்பதனால் அந்த விவரத்தை அடுத்து வரும் அத்தியாயத்தில் எழுத எண்ணியிருக்கிறேன்.

18

## ஓர் உரையாடல்

பாபு கேசவ்சந்திரசென்னின் அதியுன்னதமான வெண் மாட மாளிகை முகப்பில் வெண்பனி நிகர்த்த நிலவொளியில் கோவிந்தப்பணிக்கரும் மாதவனும் கோவிந்தன்குட்டி மேனோனுமாகச் சேர்ந்து உட்கார்ந்திருந்தபோது கோவிந்தப்பணிக்கர் கீழே குறிப்பிட்டவாறு பேசத் தொடங்கினார்.

கோவிந்தப்பணிக்கர்: பிள்ளைங்களா! என்னோட அபிப்பிராயத்திலே உங்களைப் புது மாதிரியா இங்கிலீஷ் படிக்கவச்சி அறிவை வளர்த்ததிலே உங்களுக்குப் பல நன்மைகள் உண்டாயிருக்குன்னாலும் ஒண்ணு ரெண்டு பெரிய கெடுதல்களும் இதனாலே உங்களுக்கு உண்டாயிருக்கிறது எனக்குத் தெரியுது. பொதுவா உங்களுக்கு ஏற்படுற நல்லதுகளை இந்தக் கெடுதல்கள் பல சமயங்களிலே அழிச்சி உங்களை உதவாக்கரைகளா ஆக்கிட்டதைப் பார்த்து நான் வருத்தப்படுறேன். இந்த விஷயங்களை நான் விவரமாச் சொல்றேன். முதலாவது, இந்த உலகத்திலே பார்க்கிற நடைமுறையான பலவித நல்லதுகெட்டதுகளை அனுபவத்திலேருந்து காலப்போக்கிலே

சூட்சுமமா சிந்திச்சி தங்களுக்குத் தாங்களே கிரகிக்க வேண்டிய பலவித காரியங்களை புத்தித் தடுமாற்றம் தீராத குழந்தைகளாக நீங்க ஏதோ ஒரு விதமா புஸ்தகங் களைப் படிச்சும் பார்த்தும் குருட்டுத் தனமா லௌகிக ஆசாரங்களையும் மதங்களையும் ஒதுக்கிட்டு என்ன செய்யலாம், என்ன செய்யக் கூடாதுன்னு ஒரு அடாவடித்தனம் உங்ககிட்ட வளர்ந்திடுச்சி. ரெண் டாவது, இதனாலே உங்களுக்குப் பெரியவங்ககிட்டவும் உறவினர் கிட்டவும் உங்களுக்கு எப்பவும் இருக்க வேண்டிய பக்தி, விசு வாசம், ஒட்டுறவு இதுங்க உங்க ளுக்குக் கலாப்போக்கிலே கொஞ் சம்கூட இல்லாமப் போயிடுச்சி. மாதவன் இப்போ செஞ்ச காரி யத்தை யோசிச்சிப் பார்க் கிறப்போ இங்கிலீஷ் படிச்ச தனாலே மாதவனுக்கு இப்போ இருக்கிற அறிவும் யோசனைகளும் துணையாயிருந்து அப்படிச் செய்ய நேர்ந்ததுன்னு நான் அபிப் பிராயப்படுறேன். ஊரை விட்டுப் போகணும்னு நினைச்சப்போ மாதவனுக்குப் பிரியமான அப்பா, அம்மா இவங்களைப் பத்தி எந்த நினைப்பும் உண்டாகலே. உன் னோட மனசிலே ஏற்பட்ட ஒரு கவலையினாலே அதைப் போக்கு றதுக்கு ஊரைவிட்டுக் கிளம் பிட்டே. நீ இப்படிச் செய்ற தினாலே நானும் அம்மாவும்

எவ்வளவு வருத்தப்படுவோம்னு கொஞ்சம்கூட நீ நினைக்கலே. இதுக்குக் காரணம், எங்க மேலே உனக்கு பக்தியோ பாசமோ நம்பிக்கையோ இல்லாத குறை தான். அதுக்குக் காரணம் இங்கி லீஷ் படிச்சதுதான்னு நான் சொல் றேன். முதலாவது, மனுஷனுக்கு தெய்வ நம்பிக்கையும் பக்தியும் இயல்பா இருக்கணும். அது கொஞ் சம்கூட உங்களைப் போல இங்கி லீஷ் படிச்சவங்களுக்கு இல்லே. அந்த தெய்வ நம்பிக்கையையும் பயத்தையும் அனுசரிச்சிதான் பெரியவங்க மேலே விசுவாசமும் பக்தியும் உண்டாகும். தெய்வ நம்பிக்கையே இல்லாதப்போ எப்படிப் பெரியவங்ககிட்ட நம் பிக்கை வரும்? செய்கிற காரிய மெல்லாம் குழப்படிதான். என்ன செய்யலாம்?

மாதவன்: கஷ்டம்! இப்படி நீங்க என்னைப் பத்தித் தப்பா அபிப்பிராயப் படுறது நினைச்சி நான் வருத்தப் படுறேன். இங்கிலீஷ் படிக்காம இருந்திருந்தாலும் இந்த விஷயத் திலே நான் இப்படித்தான் செஞ்சி ருப்பேன். இங்கிலீஷ் படிக்காத வங்க யாரும் ஊரைவிட்டுப் போன தில்லையா?

கோவிந்தப்பணிக்கர்: இந்த மாதிரியான விஷயங்களிலே உங்களை மாதிரி படிச்சவங்களைத் தவிர மத்தவங்க இப்படித் தகப்பன் மார்களை வருத்தப்பட வைக்கிற மாதிரியான கொடூரத்தைச் செய்ய

மாட்டாங்க. உங்களோட புது மாதிரியான எண்ணங்களினா லேயும் யோசனைகளினாலேயும் எவ்வளவெல்லாம் சீரழிவு ஏற் படுது? காலங்காலமா நாம் இந்துக் கள் கடைப்பிடிச்சி வர்ற பலவித மான சத்காரியங்களையும் அத னாலே நமக்குக் கிடைக்கிற நன்மைகளையும் நீங்க ஒதுக்கிட்டு அந்த மாதிரியான பெருமையான சகல காரியங்களைப் பத்தியும் ஆழமா எதுவும் சந்திக்காம ஏள னமாப் பரிகாசம் பண்றதை நான் பார்க்கிறேன். இந்த சன்மார்க்க ஆசார துவேஷம் இங்கிலீஷ் படிப் பினாலே உண்டானதுதான். மனு ஷனுக்குப் படிப்பும் அறிவும் ஏற் படுறது தெய்வசிந்தனைக்குப் பிரதி கூலமா வந்தா அந்தப் படிப்பும் அறிவும் எதுக்குமே உபயோக மில்லே. அவனவனுடைய முன் னோர்கள் எந்த மதத்தைப் பின் பத்தி வந்தாங்களோ அதில் அவன வனுக்கு நம்பிக்கை உண்டா கணும். இந்து மதம் எதுக்கும் உப யோகமில்லேங்கிற அபிப்பிரா யத்திலே இப்போ நீங்க இருக்கீங் கன்னு எனக்குத் தோணுது. மாதவன் கோயிலுக்குப் போய்க் கும்பிட்டதை இப்போதைக்குள்ளே நான் பார்த்ததே இல்லே. கோவிந் தன்குட்டியும் போறதில்லே. சந்த னத்தைக் கூட அழகுக்காகப் பூசிக் கிறதாகத்தான் தெரியுது. விபூ தியைத் தொடுறதே இல்லே.

கஷ்டம்! நீங்க இப்படி மாறிட்டீங்களே!

மாதவன்: உங்களுக்கு அந்தக் கவலை கொஞ்சம்கூட வேண்டாம். நான் நாத்திகனில்லே. கடவுள் உண்டுன்னு தான் நான் பல சங்கதிகளை நினைச்சி உறுதியா நம்புறேன். கோயிலுக்குப் போக வேண்டாம்னு நான் இருக்கலே. விபூதி கிடைச்சா அதைப் பூசிக்கிறதிலேயும் எனக்கு மறுப்பு எதுவும் இல்லே. ஆனால் சந்தனமும் விபூதியும் கோயிலும் கடவுளும் இதுங்களுக்குள்ளே ஒண்ணுக்கொண்ணு என்ன சம்பந்தம்னு தான் எனக்குத் தெரியலே! அது என்னண்ணு நீங்க எனக்குச் சொல்லிப் புரியவச்சா கோயிலுக்குப் போறதும் விபூதி பூசுறதும் பத்தி இனிமேலே நான் தெரிஞ்சி பின்பத்துறேன்.

கோவிந்தப்பணிக்கர்: கோவிந்தன்குட்டி, உனக்கு என்ன அபிப்பிராயம்?

கோவிந்தன் குட்டிமேனோன்: மனுஷனுக்கு அறிவு வளர்றப்போ கடவுள் பத்தின எண்ணம் குறையுதுன்னு நினைக்கிறேன். மதம் என்கிறது ஒவ்வொரு மனுஷனும் உண்டாக்கிக்கிடுறதுதான். அதோட நல்லது கெட்டது பத்தி யோசிக்க எல்லா மனுஷருக்கும் உரிமை இருக்கு; மதத்தோட நல்லது கெட்டது பத்தி எதுவும் யோசிக்காம முன்னோர்கள் பின்பத்தினாங்க என்கிறதுக்காக நாமும்

பின்பத்தணும்னு சொல்றது ரொம்பத் தப்பு.

கோவிந்தப்பணிக்கர்: இந்த மாதிரி அதிகப்பிரசங்கம் செய்யத்தான் இங்கிலீஷ் படிப்பு முதல்லே உங்களைத் தயார்ப் படுத்துது. கடவுள் உண்டா இல் லையா, கோவிந்தன்குட்டி என்ன அபிப்பிராயப்படுறே?

கோவிந்தன் குட்டிமேனோன்: கடவுள்னு ஒரு தனிப்பட்ட சக்தி இருக்குன்னு எனக்கு நம்பிக்கை இல்லே. உலகம் எல்லாமே தன்னி யல்பா உருவாகி நிலைச்சி வளர் றதும் அழிவதுமா இருக்குன்னு எனக்குப்படுது. அதைவிட அதி கமா எனக்கொண்ணும் தெரிலே. கடவுள் என்கிற ஒரு பொரு ளையோ, அந்தப் பொருளுக்கு விசேஷமான ஒரு சக்தியையோ நான் எங்கேயும் பார்க்கலே. பின்னே எப்படி அது இருக்குன்னு நான் நம்புறது?

கோவிந்தப்பணிக்கர்: கொடுமை! மாதவனைவிட நீ ரொம்ப மோசம். மாதவனுக்கு கடவுள் உண்டுங்கற எண்ண மாவது இருக்கு. உனக்கு அதுகூட இல்லே. நீங்க ரெண்டு பேருமாச் சேர்ந்து ஒரே ஸ்கூல்லேதானே படிச்சீங்க? பின்னே இதென்ன இப்படி ரெண்டு அபிப்பிராயம்? பசங்களா, என்னவானாலும் உங்க போக்கே வேறேதான். மாதவ னுக்கு கடவுள் உண்டுங்கற எண்ணமாவது இருக்குல்ல—பர வாயில்லே. உனக்கு அதுவும் இல்லே, அப்படித்தானே?

கோவிந்தன் குட்டிமேனோன்: ஆமாம், கடவுள் உண்டுன்னு நினைக்கிறதுக்கு நான் கண்கூடா எதுவும் பார்க்கலே.

மாதவன்: போகட்டும்; கோயிலுக்குப் போறதும் சந்தனம், விபூதி பூசிக் கிறதும் கடவுள் சிந்தனைக்குத் தேவைன்னு நீங்க சொன்னதுக் கான உள்ளர்த்தம் தெரிஞ்சா நல்லா இருக்கும்.

கோவிந்தப்பணிக்கர்: நான் சொல்றேன். உங்களுக்குப் புரியுமோ என்னமோ எனக்குத் தெரியலே. உங்க புத்தியை இனிமே நேராக்குறது கஷ்டம். இருந்தாலும் நான் சொல்றேன். கோயில் நம்ம இந்துக்களுக்கு கடவுள் வழிபாடு செய்றதுக்கு ஏற்படுத்தப்பட்டிருக் கிற இடம். தெய்வம் எல்லா இடத் திலும் நிறைஞ்சி சர்வாந்தர் யாமியா இருக்குதுன்னாலும் சாதா ரண ஜனங்களுக்கு அந்தத் தத்துவ ஞானம் இல்லாததனால் அவங் களுக்கு தெய்வத்தைப் பத்தின எண்ணமும் பக்தியும் உண்டாக் குறதுக்காக வேண்டி புத்திசாலி களான நம்ம முன்னோருங்க ஆதி காலத்திலிருந்தே ஏற்படுத்தினது தான் கோயில்களும், அங்கே போய்ச் செய்ய வேண்டிய பூஜை வழிபாடுகளும், கும்பிடுற சம்பிர தாயங்களும் மத்ததுகளும்னு நான் சொல்றேன். விபூதியும் சந்தனமும் பூசிக்கிறது தெய்வ வந்தனம் செய் றப்போ கடைப்பிடிக்க வேண்டிய நியமங்கள்தான். இதுதான் இதுங் களுக்குள்ளே இருக்கிற சம்பந்தம்.

மாதவன்: அப்பா, நீங்க இப்போ சொன்ன திலே கோயிலும் விபூதியும் சந்தன மும் இதுங்களுக்குள்ளேயான சம் பந்தம் புரிஞ்சிரிச்சி. இந்த மூணு சாதனங்களுக்கும் கடவுளுக்கும் இடையிலான சூட்சுமஸ்திதியிலே என்ன சம்பந்தம் இருக்குன்னு இன்னமும் எனக்குப் புரியலே.

கோவிந்தப்பணிக்கர்: சரி, அங்கேதான் விவகாரமே. கோயில் என்கிறது கடவுளைக் கும் பிடுற இடம்னு நான் சொன்னே னில்ல?

மாதவன்: ஆமாம்; நீங்க சொன்னது, ஆதி காலத்திலிருந்தே புத்திசாலிகளான நம்ம முன்னோருங்க சாதாரண ஜனங்களுக்கு தெய்வ சிந்தனையும் பக்தியும் உண்டாகிறதுக்காக ஏற் படுத்தினதுதான் கோயில்கள்னு தானே? அப்படீன்னா கோயில் களுக்குப் போறப்போ மட்டும் தெய்வ சிந்தனையும் பக்தியும் வர்ற மாதிரி எண்ணம் இருக்கிறவங் களும், இந்த எண்ணமும் பக்தியும் இல்லாதவங்களும்தானே கோயி லுக்குப் போய்க் கும்பிடணும்? கோயிலுக்குப் போகாமலும் சந்தனம், விபூதி பூசாமலும் தெய் வத்தைப் பத்தி பக்தியும் நினைப்பும் உள்ளவங்க கோயி லுக்குப் போக வேண்டியதில்லேங் கறது நீங்க சொல்ற வழி முறைன்னா, சொந்த புத்தியில்லாத ஜனங்களோட நன்மைக்காக புத்தி சாலிகள் செஞ்சிவச்ச ஒரு பம்மாத்து என்கிறதைத் தவிர

கோயிலுக்கும் தெய்வத்துக்கும் இடையே உண்மையிலே எந்த ஒரு பிரத்தியேக சம்பந்தமும் இல்லேன்னு இப்போ தெளிவாயிடிச்சில்லே?

கோவிந்தப்பணிக்கர்: அத்வைதிகளாகி, ஆகாரநித்திரை முதலான பிரபஞ்சப் பிடிப்புகளிலேருந்து விடுபட்ட ஞானிகளுக்கு மட்டுமே கோயிலுக்குப் போகாம இருக்கிற விதிவிலக்குன்னு நான் நினைக்கிறேன். பிரபஞ்சத்தை அனுசரிச்சி நடக்கிற நமக்கு பிரத்யட்சமா கோயில்கள், விக்ரகங்கள் முதலான சாதனங்களோட உதவியில்லாம தெய்வத்து மேலே பக்தி உண்டாகிறதும் ஈஸ்வர ஸ்மரனை செய்றதும் ரொம்பக் கஷ்டம். செய்ய முடியாதுன்னே சொல்லலாம்.

மாதவன்: நீங்க சொன்னபடி அத்வைதிகளாகி பிரபஞ்சப் பிடிப்புகளிலேருந்து விடுபட்டவங்க யாரும் இல்லேன்னு நான் நினைக்கிறேன். பிரபஞ்சத்தை அனுசரிச்சி நடக்கிறதுக்காக தெய்வம் சிருஷ்டிச்ச ஒரு ஜன்மம்தான் மனிதன். அப்படியிருக்க பிரபஞ்சத்திலிருந்து விடுபட மனிதனுக்கு சக்தி ஒருபோதும் உண்டாக முடியாது. சக்தி இருக்கிறதாகச் சிலர் நடிக்கிறாங்கன்னா அது அவங்களோட வெறும் ஆணவமும் மூடத்தனமும்தான். அப்படிப்பட்டவங்களோட நடிப்பில் ஏமாந்து உண்மைன்னு மத்தவங்க நம்பினா அது சுத்தமா தப்புத்தான்.

ஆகாரம், நித்திரை, காமகுரோத லோபமோகங்கள் இதுங்க ளெல்லாம் இல்லாத மனுஷங்களை நீங்க காண்பிச்சா அவங்களை பிர பஞ்சப் பிடிப்பிலேருந்து விடுபட்ட வங்கன்னு நான் ஒத்துக்குவேன். அப்படிப்பட்டவங்க யாரும் இல் லேன்னுதான் என்னோட தீர்மான மான நம்பிக்கை. மனுஷங்க எல்லாருமே சாதாரண சுபாவங் களிலே ஒரே மாதிரிதான். படிப் பினாலேயும் அறிவினாலேயும் ஒவ்வொரு விஷயத்திலும் பரஸ் பரம் வேறுபாடு தென்பட்டாலும் சூட்சும சுபாவங்களிலே அவ்வள வாகப் பெரிய வேறுபாடு வர முடி யாது. அதனாலே நீங்க சொன்ன படி ஆகாரம், நித்திரை முதலானது ஒதுக்கினவங்க மனுஷக் கூட் டத்தைச் சேர்ந்தவங்க இல்லே. நீங்க முதல்லே சொன்னபடி சாதாரண அறிவில்லாத ஜனங்களோட உப யோகத்துக்காகக் கோயில்கள் ஏற்பட்டதுங்கறதனாலே அதுங் களை உபயோகிக்கத் தேவையான வங்கத்தானே அங்கே போய் தெய்வ வந்தனம் செய்யணும். நீங்க சொன்னபடி தெய்வம் சர்வ சரா சரத்திலும் காணப்படுறதும், சர்வ ஜகத்—சிருஷ்டி—ஸ்திதி—சம்ஹார சக்தியுள்ளதும்னு நான் ஒத்துக் கிடுறேன். என்னோட மனசிலே இந்தத் தெளிவு இருக்கும்னா அப்புறம் நான் கோயிலுக்குப் போய் அங்கே உண்டாக்கி வச்சி

ருக்கிற பிம்பம்தான் என்னோட கடவுள்னு நான் நினைச்சி தொழுது கும்பிடுறது பெரியதொரு பம்மாத்துச் செயல்னு ஆகும் தானே?

கோவிந்தப்பணிக்கர்: நீ சொல்றதைக் கேட்டால் தெய்வ சிந்தனை என்கிறது ரொம்ப இளப் பமாத் தெரியுது. சிவ—சிவ! தெய் வத்தைப் பத்தியும் தெய்வ சிந்த னையைப் பத்தியும் உனக்கு என்ன திட்டவட்டமாத் தெரியும்? தெய்வம் எங்கும் நிறைஞ்சதுன்னு ஒரு வார்த்தை சொன்னால் அதுக்காகக் கோயிலுக்கே போக வேண் டாம்னு ஆயிடுமா? பிரபஞ்ச விவ காரங்களிலேருந்து விடுபட்ட வங்களே இல்லேன்னு நீ சொல்றியா?

மாதவன்: ஆமாம்; வியாதிகள் வந்து ஒடுக் கினாலொழிய ஆகார நித்திரை ஆசைகளில் பற்றும் ஈர்ப்பும் இல்லாதவங்க இல்லேன்னு நான் நிச்சயமாச் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: சிவ—சிவ! எனக்குக் கேட்டது போதும். எத்தனை மகரிஷிங்க இந்த மாதிரிச் சபலங்களை யெல்லாம் ஜெயிச்சிருக்காங்க?

மாதவன்: அது உண்மைன்னு நான் நம்பலே.

கோவிந்தப்பணிக்கர்: அப்படீன்னா நீ இருக்கிறது நாத்திக மதம்.

மாதவன்: நான் நாத்திகனில்லே—கடவுள் உண்டுன்னுதானே நான் சொல் றேன்.

கோவிந்தப்பணிக்கர்: மகரிஷிங்க?

மாதவன்: நீங்க சொன்ன மாதிரியான

மனுஷங்க யாருமில்லே. மகரிஷி களானாலும் மத்த யாரானாலும் அப்படி யாருமில்லே.

கோவிந்தப்பணிக்கர்: ஏழு மிளகு மணிகளும் ஏழு வேப்பிலையும் தவிர வேறே எந்த ஆகாரமும் சாப்பிடாத ஒரு தவசியை நான் பார்த்திருக்கேன். அவருக்கு ஜலபானம்கூடக் கிடையாது.

கோவிந்தன் குட்டிமேனோன்: அவரு பெரிய சாமர்த்தியசாலி யான ஒரு கள்ளனா இருக்கணும். உங்களை அந்த ஆள ஏமாத்தி யிருக்காரு. எனக்கு சந்தேகமே இல்லே.

கோவிந்தப்பணிக்கர்: மடத்திலே அவரு என்கூட ஒன்பது நாள் தங்கியிருந்தாரு. ஒன்பது நாளும் எதுவும் சாப்பிடலே.

கோவிந்தன் குட்டிமேனோன்: சாப்பிட்டது எதையும் நீங்க பார்த்திருக்க மாட்டீங்க. எதையும் சாப்பிடலேன்னு நீங்க நம்பிட்டீங்க. இதுதான் நடந்திருக்கணும். ஆகாரம் இல்லாம மனுஷனாலே வாழ முடியாது. அது விஞ்ஞான ரீதியான ஒரு நிலைமை. அப்படியிருக்க பொய் பேசறதிலே என்ன லாபம்?

கோவிந்தப்பணிக்கர்: இதுதான் இங்கிலீஷ்காரங்களோட பழகறதனாலே வர்ற கஷ்டம். நாங்க சொல்றது எதையும் நீங்க நம்புறதில்லே. அப்போ நாங்க என்ன செய்ய முடியும்! அந்தத் தவசி! ஒன்பது நாளும் நான் சொன்னதைத் தவிர வேறே ஒரு ஆகாரமும் சாப்பிடலேன்னு நான்

சத்தியம் பண்றேன். அவரு நம்ம மடத்திலேதான் தங்கியிருந்தாரு. விடிஞ்சி ஏழரை நாழிகை இருக்கிறப்போ குளிச்சி யோகானுஷ்டானங்கள் முடிச்சால் பன்னிரண்டு மணி வரை பஞ்சாக்னி நடுவிலே உட்கார்ந்து ஜபம். அதுக்குப் பிறகு ஏழு குறுமிளகு மணிகளும் ஏழு வேப்பிலையும் எங்க எல்லோருக்கும் முன்னாலே சாப்பிடுவாரு. அதுக்குப் பிறகு வேறெந்த ஆகாரமும் சாப்பிடுறதில்லே. இப்படி ஒன்பது நாள் கழிச்சாரு. நான் கூடவே இருந்து பார்த்துக்கிட்டிருந்த அனுபவஸ்தனாக்கும்; அப்படியிருந்தும் உங்களுக்கு நம்பிக்கை இல்லேன்னா—

மாதவன்: நீங்க பொய் சொல்றீங்கன்னு நாங்க இந்த ஜன்மத்திலே சொல்ல மாட்டோம். உங்க வார்த்தையை விட எங்களுக்கு இந்த பூமண்டலத்திலே வேறே யாரோட வார்த்தையிலும் நம்பிக்கை இல்லே. ஆனால் நீங்க தப்பாப் புரிஞ்சிக்கிட்டிருக்கிறதனாலே நீங்க இப்படிப் பேசவேண்டியதாகிப் போச்சின்னு மட்டும்தான் நாங்க சொல்றோம். அந்தத் தவசி அந்த ஒன்பது நாட்களுக்குள்ளே எத்தனை தடவை உங்களுக்கும் மத்தவங்களுக்குத் தென்படாம ரசசியமா இருக்க நேர்ந்திருக்கும்? யோகானுஷ்டானங்கன்னு சொல்லிக் கதவை அடைச்சிக்கிட்டு உள்ளே இருக்கிறப்போ அவரு நல்லா சாப்

பிட்டிருக்கலாமில்லே? சாப்பிடுறதுக் கான பண்டங்கள் என்னவெல் லாமோ ரகசியமா பெரிய பாத்தி ரங்களிலேயும் மத்த இடத்திலேயும் வச்சிருக்கலாமில்ல? அவரோடு கைவசத்திலே அப்படி மறைச்சி வச்சிருக்க மாட்டார்னு என்ன நிச்சயம்? அவரோட உடம்பையும் சாமான்களையும் நீங்க சோதிச்சிப் பார்க்கலேயில்ல? பிற்பாடு ராத்திரி தூங்கறதுக்கு எல்லாரும் போயிட்டா அவருக்கு சாப்பிடுற துக்கு எவ்வளவு வசதி? ஒன்பது நாள் அவரு எதுவும் சாப்பிட லேன்னு திட்டவட்டமாச் சொல்ல ணும்னா ஒன்பது நாட்களும் இரவும் பகலும் அவரு கூடவே ஒரு நிமிஷம்கூடப் பிரியாம பாரா இருந்து கெட்டிக்கார ஆளுங் களைக் காவல் வச்சி சாப்பிடுறாரா இல்லையான்னு சோதிச்சிருக் கணும். அப்படிக் கண்காணிக்கலே யில்ல?

கோவிந்தப்பணிக்கர்: அந்தத் தவசி கள்ளத்தனம் பண் றதா எனக்குத் தோணலே. இந்த ஜன்மத்திலே அப்படித் தோணவும் தோணாது. எல்லாத்தையும் நீங்க பார்த்தாத்தான் நம்புவீங்க. மாதவா, நீ எங்க அப்பாவைப் பார்த் திருக்கியா? இல்லே. எனக்கு அப்பா இருந்தாரு. அவரு மாதவ னுக்குத் தாத்தான்னு நான் சொன்னா மாதவன் நம்புற தில்லையா?

மாதவன்: என்னப்பா இப்படிப் பேசறீங்க? இது தன்னியல்பாத் தெரியற ஒரு விஷயம் இல்லையா? இது நீங்க சொல்லலேன்னாலும் நான் நம்புற விஷயமல்லையா?

கோவிந்தப்பணிக்கர்: போகட்டும், அது அப்படி இருக்கட்டும். நீ நாத்திகன் இல்லேன்னு தானே சொன்னே, அப்படீன்னா கடவுளைப் பார்த்திருக்கியா? பார்க்காத பொருளை எப்படி நம்புவே?

மாதவன்: சரி; அப்பாவோட இந்தக் கேள்வி பிரமாதம்தான். நான் இதுக்கு பதில் சொல்ல முயற்சி பண்றேன். கோவிந்தன்குட்டி என்னோட தர்க்கம் பண்ணி என்னைத் தோற்கடிக்க நேரலாம். ஆனாலும் நான் சொல்றேன். கடவுளை நான் பார்த்ததில்லே. கடவுள் என்னவா இருக்காரு, எப்படி இருக்காருன்னு என்னாலே தெளிவாச் சொல்ல முடியலே. ஆனால் இந்த உலகமெங்கிலும் சொல்லுக்கு அடங்காத ஒரு சக்தியை உள்ளுக்குள்ளே உணர்ந்து பார்க்கிறேன். அந்த சக்தியைத்தான் நான் கடவுள்னு நினைக்கவும் சொல்லவும் செய்றேன். அந்த சக்தி இன்னதுதான்னு தெளிவாத் தெரிஞ்சிக்கிடுறதோ விளக்குறதோ கஷ்டம். அதைப் பத்தி ஒண்ணு மட்டும் நான் சொல்வேன். அந்த சக்தி இல்லேன்னா உலகத்துக்கு இப்போ இருக்கிற நிலைமை உருவாயிருக்க முடியாதுன்னு நான் நினைக்கிறேன். இந்த சக்தி எல்லா சராசரங்களிலும்

தென்படுது. மனுஷன் முதல் கட்டெ றும்பு வரையிலான உயிரினங் களிலும், மலைகள் முதல் புல்பூண்டு வரையிலான ஜடப்பொருள் களிலும், சூரியன் முதலான ஆகாசப்பரப்பிலுள்ள சகல கிர கங்களிலும் நட்சத்திரங்களிலும், சகல காலங்களிலும், பார்க்கவோ தொட்டுணரவோ கேட்கவோ மனதில் கிரகிக்கவோ முடியாத சகல பொருள்களிலும் விஷயங் களிலும் இந்த ஒரு சக்தியை நுட்பமா சிந்திக்கிறப்போ நான் எப்பவும் பார்த்துக்கிட்டுதான் இருக்கேன். இந்த சக்தியைத்தான் நான் கடவுள்னு நினைக்கிறேன்.

கோவிந்தப்பணிக்கர்: இருக்கட்டும்; கடவுள் இல்லேன்னு தானே கோவிந்தன்குட்டி சொன் னது? அந்த விவரத்தை முதல்லே கேட்டுக்கிடுறேன். இந்த சராசரங் களெல்லாம் மனுஷனாலே உண் டானது என்கிறதுதானே கோவிந் தன்குட்டி சொல்றது; அப்படித் தானே? அந்த விவரத்தைப் பத்தி ஒண்ணு கேட்டுக்கிடுறேன்— அதுக்குப் பிறகு மாதவன் சொல் றதைக் கேட்டுக்கலாம்.

கோவிந்தன் குட்டிமேனோன்: சொல்லுங்க. முதல்லே, கடவுள் இல்லேன்னு நான் சொல்லலே. கட வுள் உண்டுன்னு இதுவரைக்கும் உலகத்திலே தென்படுற நடவடிக் கைகளாலே நம்பவோ ஊகிக் கவோ முடியாதுன்னுதான் சொல்

றேன். ஐரோப்பாவிலே இருக்கிற சாஸ்திர விற்பன்னர்களான பல மேதாவிகள் இந்தக் கருத்தைப் பத்திப் பல சமயங்களிலே சிந்திச்சி எழுதின சில புஸ்தகங்களை நான் வாசிச்சிருக்கேன். இதிலே சில ரோட அபிப்பிராயங்களை முழுசா ஒத்துக்கிடலேன்னாலும் வேறே சிலரோட அபிப்பிராயங் களை நான் முழுக்க முழுக்க ஒத்துக் கிடுறேன். இந்த விவரத்தைப் பத்தி நான் வாசிச்ச புஸ்தகங்களிலே அதிமேதாவியான சார்லஸ் ப்ராட்லா என்கிற துரை இப்போ எழுதியிருக்கிற ஒரு புஸ்தகம்தான் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. இதிலே பல மேதாவிகள் எழுதி யிருக்கிற பல புஸ்தகங்களிலே ருந்தும், வெவ்வேறே அபிப்பிராய விவரங்களையும் ரொம்பச் சாதுர் யமா எடுத்துத் தொகுத்திருக்காரு. அந்தப் புஸ்தகம் என்னோட தோல் பெட்டியிலே இப்போ இருக்கு. அதிலே சில பகுதிகளை நான் மலையாளத்திலே மொழிபெயர்த்து வாசிச்சிக் காண்பிக்கிறேன். அதுக்குப் பிறகு உங்களுக்கு என் னோட அபிப்பிராயம் சரிங்கிற எண்ணம் ஏற்படும்னு நான் நம்புறேன்.

கோவிந்தப்பணிக்கர்: நீ என்ன சொன்னாலும், எந்த புக்கைப் படிச்சிக் காண்பிச்சாலும் நான் இந்த ஜன்மத்திலே கடவுள் இல்லேன்னு நினைக்கக்கூட மாட்டேன்.

கோவிந்தன்
குட்டிமேனோன்: நான் என்ன சொன்னாலும், எந்த புக் வாசிச்சாலும் நீங்க நாத்திகனா மாற வேண்டாம். ஆனால் நான் சொல்லப்போற விஷயங்கள் நல்ல விஷயங்களா இருந்தா அதை ஒத்துக்கிடுவீங்களா?

கோவிந்தப்பணிக்கர்: சொல்லு, கேட்டுகிடுறேன்.

கோவிந்தன்
குட்டிமேனோன்: சித்தாந்த ரீதியிலே அபிப்பிராயப் படக்குடாது. விவரங்களோட நிறைகுறைகளை யோசிக்கணும். அப்படீன்னா நான் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: சொல்லு, கேட்கிறேன்.

கோவிந்தன்குட்டிமேனோன் ப்ராட்லாவின் புத்தகத்தைத் தோல்பெட்டியிலிருந்து எடுத்துக்கொண்டு வந்து ஒரு சிறிய மெழுகுவத்தியை ஏற்றி அருகில் வைத்து சில பக்கங்களைப் புரட்டிப் பார்த்தான். பின்னர்,

கோவிந்தன்
குட்டிமேனோன்: இந்தப் புஸ்தகத்திலே ஒவ்வொரு பக்கத்தையும் வாசிச்சிச் சொல்றதுக்கு முன்னாலே நாத்திகத்தோட தத்துவம் என்னன்னு ஒட்டு மொத்தமா உங்களுக்கு ஒண்ணு சொல்றேன்—நாத்திக சித்தாந்தத்தின்படி இந்த உலகம் முழுவதும் காரிய காரணத் தொடர்பு கொண்டு பொருள்களோட தனித்தன்மையான அமைப்புகளாலும் செயற்பாடுகளாலும் பரஸ்பர இணைப்பாலும் சிதைவாலும் அநாதி காலமாப் படிப்படியா தானாகவே உண்டாகி வந்ததுதான் ஆகும். எல்லாப் பொருள்களுக்கும் உயிரினங்களுக்கும் அடிப்படைக்

காரணங்கள் நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாசம் இதுங்கதான்; இதுங் களோட சில பகுதிகள் இணைஞ்சி பரஸ்பரப் பிணைப்பினாலும் சிதைவினாலும் மத்த பொருள் களையும் கிரகிச்சி, படிப்படியா அனந்தகோடி உயிரினங்கள் உற் பத்தியாகவும் பெருக்கவும் நேர்ந் திருக்க. இதுக்குப் பொருத்தமான காரணங்களையும் காண்பிச் சிருக்காங்க. கடவுள் உண்டுன்னு அவங்ககிட்டச் சொல்லிப் புரிய வைக்க யாரேலேயாவது முடியுமா என்கிறது எனக்கு சந்தேகம்தான். தெய்வம் இருக்குன்னு சொல் றப்போ அப்படி இல்லேன்னு நிரூபிக்க லட்சம் விவரங்களை அவங்க சான்று சொல்றாங்க. தன்னோட இயல்பை விட்டிட்டு ஒரு பொருள்கூட ஒருக்காலும் உல கத்திலே இருக்கிறதில்லே. இந்துக் களோ புத்தமதக்காரர்களோ முக மதியரோ கிறிஸ்தவர்களோ வேறே எந்த மதத்தைச் சேர்ந்த வங்களோ அவங்களோட வேதங் களின்படி தெய்வதைப் பத்திச் சொல்ற எதுவும் உண்மையிலே மேதாவிகளான மனுஷங்களுக்கு ஒத்துக்கிடுறாப்பிலே இல்லே. நான் கையிலே வச்சிருக்கிற இந்தப் புஸ்தகத்தோட ஆசிரியர் ப்ராட்லா துரை அவரோட சொந்த மதத்தைப் பத்தித்தான் நிறையச் சொல்லி யிருக்காரு.

கோவிந்தப்பணிக்கர்: என்னன்னு, சொந்த வேதமே பொய்யின்னா?

கோவிந்தன் குட்டிமேனோன்: கிறிஸ்தவ வேதத்தின்படி உலக சிருஷ்டி ஏற்பட்ட முறையையும் இயல்பையும் பத்திச் சொல்லி, அதெல்லாம் முழுசுமே அறிவுக்குப் பொருந்தாதது என்கிறாரு. இப்போ மனுஷனுக்கு வளர்ந்திருக்கிற அறிவைக் கொண்டு பார்க்கிறப்போ அவங்க வேதப் புஸ்தகத்திலே சொல்லப்பட்ட சிருஷ்டி முறை கொஞ்சம் கூட நம்பக் கூடியதா இல்லேன்னு ப்ராட்லா அபிப்பிராயப்படுறாரு.

கோவிந்தப்பணிக்கர்: அந்த துரை மகாபாவி.

கோவிந்தன் குட்டிமேனோன்: இருக்கலாம்; ஆனால் மகாமேதாவியும்கூட.

கோவிந்தப்பணிக்கர்: கடவுள் இல்லேன்னு சொல்றதனாலே மகாமேதாவி, அப்படித்தானே?

கோவிந்தன் குட்டிமேனோன்: கடவுள் உண்டுன்னு நம்ப முடியலேன்னு அவர் சொல்ற கருத்துக்களை வாசிச்சா அவர் அதிபுத்திசாலின்னு புத்திசாலிங்க எல்லாரும் சொல்வாங்க.

கோவிந்தப்பணிக்கர்: கடவுள் இல்லேன்னு சொல்றது இந்த உலகத்துக்கு ரொம்பத் தேவையான ஒரு கருத்தாக்கும்! அதனாலே இந்தப் புத்திசாலித் துரை இதிலே இவ்வளவு அக்கறை எடுத்திருக்காரு, அப்படித்தானே?

கோவிந்தன் குட்டிமேனோன்: இந்த உலகத்திலே பொய்யாகவோ தப்பாகவோ மனுஷங்களுக்கு

சாதாரணமா ஒவ்வொரு விஷயத்திலேயும் ஏற்படுற அபிப்பிராயங்களையும் நம்பிக்கைகளையும் சிந்தனைகளையும் முடிஞ்ச வரைக்கும் களையணும்னு முனையறதும், சரியான அறிவைக் கொடுக்கிறதும் எப்பவும் புத்திசாலிகளோட பொறுப்புன்னு நான் நினைக்கிறேன்.

கோவிந்தப்பணிக்கர்: புத்திசாலிகளோட இப்போதைய அறிவு முன்காலத்திய அறிவை விட உசத்தின்னு நிச்சயப்படுத்த முடியுமா?

கோவிந்தன் குட்டிமேனோன்: அதனாலேதான் இப்போதைய புத்திசாலிங்க சொல்ற கருத்துக்களை சிந்திச்சிப் பார்க்கணும்னு சொல்றது.

கோவிந்தப்பணிக்கர்: அப்படீன்னா சொல்லு; விவரம் கேட்டுகிடுறேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: நாத்திகம்னா என்னன்னு ப்ராட்லா கொடுத்திருக்கிற விளக்கத்தோட சாரத்தை நான் மலையாளத்திலே சொல்றேன். நாத்திகவாதி சொல்றது:

"நான் கடவுள் இல்லேன்னு சொல்லலே; நீங்க கடவுள்னு சொல்றதோட அர்த்தம் எனக்குப் புரியலேன்னு தான் நான் சொல்றேன். கடவுள் இல்லேன்னு நான் சொல்லணும்னா நீங்க கடவுள்னு சொல்ற பொருள் என்னன்னு திட்டவட்டமாத் தெரிஞ்சிக்க வேண்டாமா? தனக்குத் தட்டுப்படாத ஒரு பொருளைப் பத்தி இருக்குன்னோ இல்லேன்னோ ஒருத்தன் எப்படிச் சொல்ல முடியும்? இங்கே பார்க்கிற சராசரங்களை தனித்தனியா சிருஷ்டி பண்ணி காப்பாத்தவும் அழிக்கவுமான ஒரு

பிரத்தியேக சிருஷ்டிகர்த்தா மனுஷன் மாதிரியோ வேறெப் படியோ எந்தத் திசையிலாவது இருக்கிறதாக நீங்க சொன்னா அது இல்லேன்னும் பொய்யின்னும் நான் சொல் வேன்; சந்தேகமில்லே. இப்படித் தகாததும் புரியாததுமான வார்த்தைகளைச் சொல்லி கடவுள் இருக்கிறதாகச் சொன் னால் எனக்குப் புரியாது. அதனாலே அதுக்கு பதில் சொல் லவும் முடியாதுன்னுதான் சொல்லணும். புரியாதபடி ஒரு பொருள் இருக்குன்னு நான் ஒருக்காலும் நம்ப மாட்டேன்." இதுதான் நாத்திகவாதிகளோட தத்துவம்.

கோவிந்தப்பணிக்கர்: இவ்வளவு மோசமான ஒரு தத்து வத்தை நான் இதுவரைக்கும் கேட்ட தில்லே. இதையெல்லாம் படிச்சா உங்க புத்தி எப்படிக் கெடாம இருக்கும்? உலகத்திலே எந்த இடத் திலே மகத்தான தெய்வ சக்தி தென் படாம இருக்கு? எவ்வளவு சுக சௌக்கியத்திலே இந்த உலகத்தை தெய்வம் வச்சிருக்குது! கடவுள் இல்லாம இந்த சூரியனும் சந்தி ரனும் எப்படி உண்டாச்சி? நீங்க இப்படி சுகமா ஆகாரம், நித்திரை முதலானதுகளோட பிரபஞ்சத் திலே வாழ்ந்துக்கிட்டிருக்கிறது யாரோட சக்தியாலே? ஒவ்வொரு பருவ காலத்திலும் எதிர்பார்க்கிற படியே எல்லாக் காரியங்களும் சரியானபடி உலகத்திலே நடந்துக் கிட்டிருக்கில்ல, இது யாரு செய்கிற வேலை? கருணை நிறைஞ்ச கட வுளல்லவா? சூரியன் தினமும் உதிக் குதில்ல? சர்வ சராசரங்களையும் வாழ வைக்குதில்ல? சந்திரன் கிரமப்படி உதிச்சி உலகத்தை ஆனந்தப்படுத்துதில்ல? பூமியிலே தானியங்களும் தாவரங்களும்

உண்டாகுதில்ல? இப்படி என்னவெல்லாம் சுகங்களைப் பருவ காலங்களுக்கு ஏத்த மாதிரி நாம அனுபவிக்கிறோம்! இதெல்லாம் தெய்வசக்தி இல்லாம எப்படி உண்டாக முடியும்? கஷ்டம்! கடவுள் இல்லேன்னு பைத்தியக் காரங்கதான் சொல்வாங்க.

கோவிந்தன்
குட்டிமேனோன்: சரி; நீங்க சொல்றதெல்லாம் சரி—ஆனால் நீங்க ஒரு பகுதிதான் சொல்லியிருக்கீங்க. இந்த உலகத்திலே எல்லாக் காரியங்களும் சுகமாகவும் மகிழ்ச்சியாகவும் தேவைப்பட்ட விதத்திலேதான் எப்பவும் நடக்குதுன்ன சொன்னா உண்மையிலே காரியங்கள் அப்படியெல்லாம் நடக்கலையே. எந்த இடத்திலேயும் தெய்வ சக்தி பிரத்தயட்சமாத் தென்படல்லே. தண்ணீர் குடிக்கக் கிடைக்காம சராசரங்கள் வெந்து தவிக்கிறப்போ பல சமயங்களிலே ஒரு துளிகூட மழை பெய்கிறதில்லே. மழை பெய்றதிலே தெய்வீகமான ஒரு சக்தி இருக்குன்னாலும், அந்த சக்தி தெய்வ நம்பிக்கை இருக்கிறவங்க சொல்ற மாதிரி உலகத்திலே கருணை நிறைஞ்சிருந்தாலும் ஏன் காலத்தை அனுசரிச்சி மழை பெய்கிறதில்லே? சூரிய ஒளியோட கடுமையினாலும் தீட்சண்யத்தினாலும் சுட்டுப் பொசுக்குற மணலிலே சுருண்டுபோய் பல ஜந்துக்கள் வெந்து மடியுது. சில

சமயங்களிலே கொடும் காட்டுத் தீயிலே விழுந்து சாதுவான மிரு கங்கள் காலத்துக்கு முன்கூட்டியே வெந்து கருகி கடும் வேதனை அனுபவிச்சிச் சாகுது. பணம் குமிச்சி வச்சிருக்கிற திருட்டுப் பசங்களோட கட்டாரிக் கத்திக்குக் குத்துப்பட்டு அதிபக்தர்களான இந்துவும் கிறிஸ்தவனும் பௌத் தனும் ஒரே மாதிரி வேதனைப் பட்டு அலறிக்கிட்டு வாய்பிளக் கிறாங்க. கடல் கொந்தளிச்சி ஊர் களை மூழ்கடிச்சி அந்த ஊர் மக்களை குழந்தை, கிழடு எல்லாத் தையும் வெள்ளத்திலே மூச்சு முட்ட வச்சிக் கொல்லுது. கப்பல் முழுகி ஜனங்க சாகிறாங்க. மீதியுள்ளவங்க குடிக்கத் தண்ணீர் கிடைக்காம தாகம் பிடிச்சி வாட்டி வதைக்க ஒருத்தன் கழுத்தை மத்தவன் கடிச்சி ரத்தம் குடிக்கிறான். பசி பொறுக்க முடியாமத் தன்னோட நண்பனைக் கொண்ணு பச்சை மாமிசம் சாப் பிடுறான். இடிமின்னல் தாக்கி அப்பாவிகளான சின்னக் குழந் தைங்க சாகுது. நிரபராதியான ஒருத்தனை அவன் தூங்கிக்கிட்டு இருக்கிறப்போ பாம்பு வந்து கடிச்சி சாகடிக்குது. பிறவிக் குரு டான ஒருத்தன் பசி தாங்க முடியாம ஒரு கவளம் கஞ்சிக்காகத் தட்டுத் தடுமாறி நடக்கிறப்போ பாழுங் கிணத்திலே விழுந்து கழுத்தும் காலும் ஒடிஞ்சி பிராண வேதனை அனுபவிச்சி சாகிறான்.

கொள்ளை நோய்கள், யுத்தங்கள், பஞ்சம் இதுங்களாலே எண்ணிக்கையில்லாம ஜனங்க குழந்தை கிழடுன்னு எல்லாமாகக் கணநேரத்திலே உயிர்வேதனையோட "ஈஸ்வரா! தெய்வமே! காப்பாத்து!" அப்படீன்னு கூச்சல் போட்டுகிட்டு வேதனையை சகிச்சிக்கிட்டு மாற்றுவழி கிடைக்காம சாகிறாங்க. இங்கேயெல்லாம் எதுக்காக தெய்வத்தின் கருணை பொருந்தின சக்தி தன்னோட சிருஷ்டிகளை சங்கடத்திலேருந்து காப்பாத்திறதில்லே? பெரும்பாலான சமயங்களிலே இந்த வகையான ஆபத்துகளிலேருந்து நிவாரணம் சாதாரண பழக்கப்பட்ட வழிமுறைகளாலே கிடைக்கிறப்போ அது தெயவ கிருபையாலே கிடைச்சதுன்னும் மத்ததும் சொல்றாங்க இதை யார் நம்புவாங்க? பிரபஞ்சத்திலே இப்படி உண்டாகிற சங்கடங்களுக்கு தெய்வீகமான சக்தியாலே மாற்று காண முடியாததைப் பத்தி உங்க இந்துக்களும் மத்த மதத்தாரும் சொல்ற காரணங்கள் கொஞ்சம்கூட சரியில்லே. முதலாவது, ஒவ்வொருத்தருக்கு வர்ற துன்பங்கள் கடந்த ஒரு ஜன்மத்திலே அவங்கவங்க செய்த பாபத்துக்குத் தெய்வம் கொடுக்கிற தண்டனைதான்னு இந்து மதத்திலே சொல்றாங்க. ஒரு குற்றத்துக்குக் கொடுக்கப்படுற தண்டனை என்கிறதுதான் செய்த தவறுக்கான

தண்டனைதான்னு குற்றவாளிக்குத் தெரிவிச்சிட்டுக் கொடுக்கிறது தான் எப்போதுமே நல்லது. அப்படி இல்லாம, இன்ன விஷயத் துக்காக நான் கஷ்டம் அனுபவிக் கிறேன்னு தெரியாமலே ஒரு கஷ்டம் அனுபவிக்கிறதிலே என்ன பலன்? தண்டணை என் கிறது பாவ நிவாரணத்திற்காகத் தான்னு சொன்னா அதை அந்தப் பாவிக்குத் தெரிவிச்சிட்டு வழங்க வேண்டாமா? இதைப் பத்திப் பெரிய அறிஞர் ஒருத்தர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்காரு. அதோட சாரத்தை அந்தப் புஸ்தகத் திலேருந்து நான் வாசிச்சிக் காட்டுறேன். நேரடி மொழி பெயர்ப்பாகச் சொன்னால் அண்ணாச்சிக்குப் புரியக் கஷ்டப் படும். சாரத்தை மட்டும் சொல் றேன். அந்த அறிஞர் சொல்றாரு.

“தன்னுடை சமசிருஷ்டிகளுக்கு நாசமோ உபத் திரவமோ எரிச்சலோ வரவழைத்த ஒரு குற்றவாளியின் இயல்பான துஷ்டபுத்தியைக் களைந்து அவனை சன் மார்க்கனாக்கித் தன்னுடைய சமசிருஷ்டிகளுடன் சமாதான மாகவும் சுகமாகவும் வைத்திருப்பதற்காக வேறு எந்த வழியிலும் முடியாமல் போகும்போது மட்டும்தான் மனிதன் உண்டாக்கிய சட்டதிட்டப்படி குற்றவாளியை தண்டிப் பதும், சிறையில் அடைத்து சன்மார்க்க உபதேசங்களைச் செய்வதும் ஆகும். அப்படியிருக்க, தெய்வமே தன்னுடைய சிருஷ்டிகளை இப்படி தண்டிப்பது எதற்காக என்று கேட்க வேண்டியிருக்கிறது. தெய்வம் உண்டென்றோ இல்லை யென்றோ உள்ள வாதத்தை முழுவதுமான ஒதுக்கிவிட்டு உண்டேன்பதாகவே வைத்துக் கொள்வோம். துன்பங்கள் ஏற்படுவதைப் பற்றியதான எல்லா சித்தாந்தங்களையும்

தற்போதைக்கு இல்லையென்று கொள்வோம். சர்வசக்தி யுள்ள ஒரு சிருஷ்டிகர்த்தா உண்டென்பதான சித்தாந் தத்தைப் பற்றியும் இப்போதைக்குத் தர்க்கம் செய்ய வேண்டாம். எனவே தெய்வத்தை இந்த உலகம் முழு வதையும் ஆள்கிற விஸ்வம்பரன் என்ற நிலையை மட்டும் நினைப்போம். இந்த நிலையில் இந்த விஸ்வம்பரனுக்குத் தன்னுடைய சிருஷ்டிகளை இப்படி தண்டனைக்குள்ளாக்கு வதை நியாயப்படுத்த என்ன காரணங்களைச் சொல்ல முடியும்? தன்னுடைய சுயபாதுகாப்புக்காக இப்படி இந்த அப்பாவிகளான தன்னுடைய சிருஷ்டிகளை தண்டிப் பதோ, அதல்லாமல் குற்றம் செய்தவர்களின் நன்மையைக் கருதி அவர்களை தண்டிப்பதோ இந்த இரண்டில் எந்தக் காரணமானாலும் இந்த தண்டனை இல்லாமல் காரியத்தை நிறைவேற்ற அந்த தெய்வத்துக்கு முடியாதா? ஒரு மனிதனை வேதனையோ சங்கடமோ அனுபவிக்கச் செய்யும் நட வடிக்கை என்பது நம் மனிதர்களை வருத்தும் ஒரு செய லாகும். அவ்வாறு செய்ய நேர்வதைத் தவிர்க்க முடியாத ஒரு தீச்செயல் என்பதாக மனிதர்களான நாம்தான் அபிப் பிராயப்படுகிறோம். படிப்புள்ள மனிதர்கள் இல்லாத வர்களைப் படிக்கச் செய்தும், மனித இனங்கள் பரஸ்பரம் நட்புகொண்டும் ஒற்றுமையாக இருக்கச் செய்வதற்கான வழிகள் எடுத்தும், பல சன்மார்க்க உபதேசங்கள் செய்தும் வருகிறார்கள். இந்த உபதேசங்களால் திருந்தாத சிலர் மீண்டும் கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள். அவர்கள் தண்டனைக்கும் உள்ளாகிறார்கள். இப்படி தண்டிப்பது என்பது மனிதர்களை அவமதிப்பதாக அமையு மானால் தெய்வத்தின்பால் அது எவ்வளவு பெரிய அவமரி யாதையை உண்டாக்கிவிடும்! நம்முடைய சமுதாயத்தைப் பரிபாலிப்பவர்களுக்கு குற்றவாளிகளின் துர்புத்தியை நீக்கி நல்ல புத்தியைக் கொடுக்க ஒரு சக்தி உண்டாகி இழுக்குமானால் அந்த சக்தியை உபயோகித்து தீய எண்ணமும் அடாத நடவடிக்கையும் மனிதர்களில் இல்லாமல் ஆக்கிக் களையாமல், குற்றம் செய்வதை முதலி லேயே தடுக்காமல் பார்த்துக்கொண்டிருந்து விட்டு, செய்த பிறகு குற்றவாளியைப் பிடித்து இம்சித்து தண்டிப்

பதற்காகக் காத்திருப்பார்களோ? ஒருக்காலும் செய்ய மாட்டார்கள். ஆனால் நமது மனிதர்களுக்கு எதிர்கால நட வடிக்கைகளை முன்கூட்டி அறிவதான சக்தி இல்லை. கருணாமூர்த்தி என்று சொல்லப்படும் அந்த தெய்வத் திற்கோ நீங்கள் சொல்வதுபோல் நிச்சயமாக இந்த சக்தி இல்லாமல் இருக்க முடியாது. மனிதனைப் படைத்தது தெய்வம் எனில் மனிதனின் மனதில் உண்டாகும் எல்லா எண்ணங்களும் தெய்வத்திலிருந்து முதலில் உரு வானவையே. அவற்றை தெய்வத்தின் விருப்பம்போல் இல்லாதாக்குவதோ குறைப்பதோ அதிகரிப்பதோ முடியும். விஷயம் இப்படி இருக்கும்போது தெய்வம் பாவச்செயல்கள் செய்ய ஒரு மனிதனில் உண்டாகும் சக்தியையோ எண்ணத் தையோ தடுத்து நிறுத்தாமல் அதைச் செய்ய வைத்த பிறகு அவனைக் கடுமையாக தண்டித்து வேதனைப்படுத்தி அழிப்பது எதற்காக? இது மகா கொடூரமல்லவா? தெய்வம் இவ்வளவு அறிவீனமாகவும் குரூரமாகவும் செய்யுமோ? கிறிஸ்தவ வேதப் புத்தகத்தில் சொல்லப்பட்டிருப்பதுபோல் தெய்வம் அளித்த தண்டனைகளை நாம் கவனித்தோ மானால் தெய்வம் எவ்வளவு கொடூரமாகவும் இரக்கமில்லா மலும் அதிகுரூரமாகவும் மனிதனை தண்டித்ததாகத் தெரிய வருகிறது! குற்றவாளி பின்னர் என்னதான் நல்ல காரியம் செய்தாலும் பச்சாதாபப்பட்டாலும் தெய்வம் எந்த விதத் திலும் இரக்கம் காட்டாத மாதிரிதான் கிறிஸ்தவ வேதத்தில் காணப்படுகிறது. ஆதாம் ஒரு குற்றத்தை ஒரு தடவை செய்தான். அதற்காக அவனையும் அவனுடைய எல்லா வாரிசுகளையும் பரம்பரையாக என்றென்றும் நரகக்குழி யிலிருந்து ஒருக்காலும் மேலேற முடியாதபடி தெய்வம் ஆக்கிவிட்டது. ஆதாம் தவறு செய்ததற்காக அவனுடைய வாரிசுகள் எதற்காக இந்த மகாபாபத்தை அனுபவிக்க வேண்டும்? தெய்வம் இப்படியெல்லாம் செய்யுமானால் பின்னர் அங்கே இருக்கிறது அதன் கருணையும் நீதியும்?"— இப்படித்தான் அந்த மகாயுக்திமானான அறிஞர் சொல்றாரு.

கோவிந்தப்பணிக்கர்: ஆதாம்னு ஒரு ஆள் இருந்ததா நம்ம இந்து மதப் புராணங்களிலே

எதுவும் சொல்லலே. நான் இதை நம்பலே.

கோவிந்தன் குட்டிமேனோன்: ஆதாமை நம்ப வேண்டாம். இந்த ஆதாம் இருந்ததாகச் சொல்கிற மாதிரி நம்ம புராணங்களிலே சாபங்களையும் தெய்வக் கோபத்தாலே வந்த துன்பங்களையும் கிறிஸ்தவ வேதத்திலே காணப் படுறதைவிட அதிகமாகவே காண லாம். நம்ம புராணங்களிலே தெய்வக் கோபத்தினாலே மட்டு மில்லாம தெய்வ பக்தர்களான மகரிஷிங்க கோபத்தினாலே, தேவர்களின் கோபத்தினாலே, பிராமணங்க கோபத்தினா லேன்னு மட்டுமில்லாம பதிவிரதை களான பெண்களின் கோபத் தினாலேகூட தேவர்களும் மனு ஷங்களும் மிருகங்களும் பல சமயங்களிலே குழம்பிப்போய் புத்திகெட்டு, பல ஜன்மங்கள் எடுத்துப் பல வகையான அல்லல் களும் துயரங்களும் அனுபவிச்ச தாகச் சொல்லப்பட்டிருக்கு. இவ் வளவு அதிகமான ஏமாளித்தனங் களும் குறைபாடுகளும் கிறிஸ்தவ வேதப் புஸ்தகத்திலே காணப் படலே.

கோவிந்தப்பணிக்கர்: அப்படிச் சொல்லாதே. நம்ம புரா ணங்களைப் பத்தி உனக்கு என்ன தெரியும்? ஏமாளித்தனம், குறை பாடுன்னு எவ்வளவோ ... பழ மையான நம்ம புராணங்களைப் பத்தி நேத்து உண்டாக்கின ஒரு

இங்கிலீசுப் புஸ்தகத்தைப் படிச்சிட்டுப் பேசினா யாரு நம்புவாங்க? அதிருக்கட்டும். அப்போ தெய்வம் இல்லேன்னா மனுஷன் தானா உண்டாயிட்டான்னா நீ சொல்றே?

கோவிந்தன் குட்டிமேனோன்: மனுஷன்னு இல்லே, இங்கே பார்க்கிற சகல சராசரங்களும் பலவித காரணங்களின் அடிப்படையிலிருந்தும் சக்திகளிலிருந்தும் தானாகவே உருவாகி, பல்கிப் பெருகினதா நான் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: அப்போ ஒரு மனுஷன் செத்துப் போயிட்டா? அவனோட உ்யிர் எங்கே போகுது?

கோவிந்தன் குட்டிமேனோன்: எங்கேயும் போகலே, அது இல்லாமப் போகுது. எரியிற ஒரு விளக்கை அணைச்சிட்டா அக்னி எங்கே போகுது? எங்கேயும் போறதில்லே. அது இல்லாமப் போகுது— அது போலத்தான் உயிரும்.

கோவிந்தப்பணிக்கர்: அப்போ மனுஷனுக்கு வேறே கதி ஒண்ணுமில்லையாக்கும்; செத்தா எல்லாம் முடிஞ்சது, அப்படித் தானே? உன்னோட இந்தக் கருத்து பிசாசுகளுக்குத்தான் சரி—மத்த யாருக்கும் ஒத்து வராது. மனுஷனுக்கு எப்படி இந்தக் கைகால்கள், கண், மூக்கு, காது முதலான இந்திரியங்களெல்லாம் உண்டாச்சி? இதெல்லாம் இவ்வளவு சரியாயும் பொருத்தமாயும் எந்தக் காரண காரியங்கள் உண்டாக்கினது?

மாதவன்: சரி; அப்பாவோட இந்தக் கேள்வி பிரமாதம். நீங்க சித்தப்பாகிட்ட கேட்ட கேள்வியிலே சில மாற்றங்களைச் செய்தா ஒரு நல்ல இங்கிலீஷ் விஞ்ஞானி எழுப்பின கேள்வி மாதிரி இருக்கும். அந்தக் கேள்வியை நான் கேட்கிறேன். இந்த உலகம் முழுவதும் ஒரு பிரத்தியேக சிருஷ்டிகர்த்தா இல்லாம தானாகவே உண்டாகி வந்தது என்கிறதுதான் சித்தப்பாவோட கொள்கையா?

கோவிந்தன் குட்டிமேனோன்: அப்படித்தான்; ஒரு தனிப்பட்ட சிருஷ்டிகர்த்தா உண்டாக்கினது தான்னு நினைக்கிற விஷயமே இல்லேன்னு நான் சொல்றேன்.

மாதவன்: அப்படி அபிப்பிராயப்படுறதுக்கான காரணங்களை சுருக்கமா தெளிவாச் சொல்லுங்க.

கோவிந்தன் குட்டிமேனோன்: சுருக்கமா தெளிவாச் சொல்றது கஷ்டம். மாதவன் என்னைப் போலவே இந்த விஷயத்தைப் பத்திப் பல புஸ்தகங்களைப் படிச்சிருக்கிறதுண்டுதானே. அதனாலே நான் அண்ணாச்சிக்குத் தெரியாததை மட்டும் சுருக்கமாச் சொல்றேன். சுருக்கிச் சொல்றதனாலே என்னோட கருத்தைத் தெளிவாச் சொல்ல முடியுமான்னு எனக்கு சந்தேகம். என் கையிலே இப்போ இருக்கிற இந்தப் புஸ்தகத்திலிருந்து சில பகுதிகளைப் படிச்சிக் காண்பிக்கிறேன்.

"மிஸ்டர் ப்ராட்லாவோட புஸ்தகத்திலே அதிகப் பகுதி கிறிஸ்தவ வேதத்திலே உலக சிருஷ்டி உண்டான முறையையும் காலத்தையும் பத்திச் சொல்றதெல்லாம் சுத்தப் பொய்யும் நடந்திருக்க முடியாததும்னு நிரூபிக்கிற விஷயங்களைத்தான் சொல்லியிருக்கு. ஆனால் இதுங்களைப் பத்தி இங்கே சொல்லத் தேவையில்லை. வாலேஸ், டார்வின் முதலான பல விஞ்ஞானிகள் உலக உற்பத்தியைப் பத்திச் சொல்லியிருக்கிறதை நுணுக்கமா சிந்திச்சா இங்கே பார்க்கிற சகல சராசரங்களும் 'எவலூஷன்' என்கிற உற்பத்தி முறைப்படித் தானாகவே உற்பத்தியாகி வந்தது தான்னு தெரியுது. டார்வின் சொல்றாரு: 'சாதாரண உயிரினங்களுக்குப் பிறப்பு, வளர்ச்சி, அழிவு இதுகளெல்லாம் இயற்கையாகவே உள்ளதுதான். ஒவ்வோர் உயிரினமும் ஒரு குறிப்பிட்ட வடிவமைப்போடும் குணத்தோடும் இருப்பது காலப்போக்கில் வேறுபட்ட வடிவமைப்பும் குணமும் கொண்டதாக மாறிவிடுகிறது; மேலும் வளர்கிறது. இவ்வாறு அனந்தகோடி ஆண்டுகளில் ஓர் உயிரினம் வேறு உயிரினங்களுடனான கலப்பினாலோ தேவை கருதியோ அதனுடைய முதலிலிருந்த தோற்றமும் இயல்பும் விடுத்து போகப்போக மற்றொரு தோற்றத்தையும் இயலையும் பெறுகிறது. இது சாதாரணமாக எல்லாப் பொருள்களிலும் தானாகவே அமைந்த ஒரு சக்தியாகும். இதன்படி தான் மனிதனின் உற்பத்தியும் நடந்திருக்கிறது. முதலில் எவ்வளவோ நுணுக்கமான அணுவளவான ஓர் உயிரினம் போகப்போகப் பன்னெடுங்காலமாக உயிரினத்தின் தேவைக்கேற்பவும் சூழ்நிலைகளுக்கேற்பவும் உடலமைப்புகள் சிறிது சிறிதாக மாற்றம் அடைந்து அந்தந்தக் காலத்திற்கேற்றபடி மாறி காலப்போக்கில் இப்போது காணப்படுவது போல மனிதனின் உடலமைப்பும் சுபாவமும் வந்து சேர்ந்திருக்கின்றன.' இதுக்கு உதாரணமாகப் பல விவரங்களை டார்வின் என்கிற விஞ்ஞானி சொல்லியிருக்காரு. தனிப்பட்ட ஒரு சிருஷ்டிகர்த்தா இந்த உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் தனித்தனியாக உண்டாக்கலேன்னு காண்பிக்கப் பல உதாரணங்கள் இருக்கு.

"ஈரமான கொஞ்சம் மண்ணை எடுத்து, தீயிட்டோ

வேறு விதமாகவோ சூடாக்கிப் பிறகு குளிரவைச்ச ஒரு பொருளைக் காற்றுக்கூடத் தொடர்பு கொள்ள முடியாதபடி அந்த மண்ணில் கலந்து நன்றாக மூடி வைத்துவிட்டு, நாலைந்து மணி நேரம் கழிச்சி மூடியைத் திறந்து பார்க்கிறப்போ அந்த இடத்திலே லட்சோபலட்சம் நுண்ணளவினதான கரையான் மாதிரியான வெள்ளை நிலத்திலான ஒருவகை உயிரினங்கள் நெளிஞ்சி வளைஞ்சி ஊர்வதைப் பார்க்க முடியும். எங்கேருந்து இவ்வளவு ஏராளமான புழுக்கள் இவ்வளவு சீக்கிரத்திலே உண்டானது? தெய்வம் அந்தத் தருணத்தில் உண்டாக்கியதா, இது பிரசவித்து உண்டானதா, அப்படியல்லாமல் அடிப்படை மூலப் பொருள்கள் தங்களுக்குள் வினைப்பட்டதால் தானாகவே உருவாகி வந்ததா? அதிலே ஒரு நுண்ணியிரையோ அல்லது உருவத்தில் சற்றுப் பெரியதான ஒரு புழுவையோ குளவி பற்றியெடுத்து தன்னோட கூட்டிலே கொண்டுபோய் வைக்குது. பத்துப் பதினைந்து நாட்கள் அந்தக் குளவியுடன் சேர்ந்திருக்கிறப்போ அந்தப் புழு தானும் ஒரு குளவியாக மாறிவிடுது. இப்படியான சின்ன அளவினதான உயிர்ப் பொருள்களை நோக்கினால் ஒன்றிலிருந்து மற்றொன்று உண்டாகும் முறையை அறியலாம். இந்த உலகத்திலே இருக்கிற எல்லாமே பன்னெடுங்காலமா அமைஞ்சிருக்கிற சக்தியாலும், ஒவ்வொன்றும் மற்றொன்றுடன் இணைவதாலும், இணையும் முறைகளாலும் தன்னியல்பாக உருவாகிப் பல்கிப் பெருகுவதும், தானாகவே அழிந்து விடுவதும் நிகழ்கிறதாக நினைக்க வேண்டியிருக்குது.

"ஹக்ஸ்லி என்கிற பேரறிஞர் சொல்றாரு: 'உயிர்த் தன்மையான எல்லா உயிரினங்களின், அல்லது ஐம்புலன்களுடன் அமைந்ததான உடம்புகளின் உருவாக்கத்தை நாம் நுணுக்கமாக விஞ்ஞானபூர்வமாக ஆராயும்போது ஒவ்வோர் உயிரினமும் ஆரம்பத்தில் உருவானது ஒவ்வொரு தனிப்பட்டதான அடிப்படைப் பொருளிலிருந்துதான் என்பது தெளிவாகத் தெரியும். நம்மைச் சுற்றிலும் தென்படும் அனந்தகோடி ஜீவராசிகள் இத்தகைய அடிப்படைப் பொருள்களிலிருந்து தாமாகவே உருவாகியும் வளர்ந்தும் பல்கிப் பெருகியும் அழிந்து மறைந்து போவதையும்-காண்

கிறோம். இது சாதாரண பல ஜீவராசிகளில் இயற்கையாகவே அமைந்த ஒரு சக்தியாகும். அத்தகைய சக்தியைப் பெற்றிராத ஜீவராசி எதுவுமே இல்லை.' இதுதான் ஹக்ஸ்லி என்ற பேரறிஞர் கருத்து.

"ப்ராட்லா என்கிறவர் சொல்வது: 'நமக்கு இதுவரை கிடைக்கப் பெற்றுள்ள சான்றுகளின்படி, ஆதியில் இருந்த மனிதர்கள் இப்போது காணப்படும் தோற்றமும் இயல்புகளும் கொண்ட மனிதர்களைப் போல இருக்கவில்லை. ஆரம்ப காலத்து மனிதன் கிட்டத்தட்ட ஒரு மிருகத்தைப் போல மற்ற மிருகங்களுடன் போராடி மல்லிட்டுக்கொண்டு குகைகளில் குடியிருந்து காலம் கழித்த உயிரினமாக இருந்தான். படிப்படியாக வளர்ச்சி பெற்ற இப்போதைய மனிதன் வலிமையும் அறிவும் சாமர்த்தியமும் கொண்டு விளங்குகிறான். இந்தக் கருத்துப்படி, இப்போது நமக்கு அறிவு உண்டானதற்கு முன்பாகப் பல கோடி ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிலையை நினைத்துப் பார்த்தால் ஐம்புலன்களுடனான உயிர்வாழ்க்கையைக் கிடைக்கப் பெறுவதற்கு முன்பு பலவித வாழ்க்கை நிலைகளில் இப்போதைய சாமர்த்தியசாலியான மனிதன் இருந்திருக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன்.' இப்படித் தான் ப்ராட்லா சொல்றாரு.

கோவிந்தப்பணிக்கர்: மனுஷன் ஆரம்பத்திலே குகையிலே மிருகத்தைப் போல இருந்தான் என்கிறதை யாரு நம்புவாங்க? ஆனால், அயல் நாடுகளில் அப்படி இருந்திருக்கலாம். அப்படி மிருகம் மாதிரியான மனுஷன் இப்பவும் உண்டு. இல்லையா மாதவா?

மாதவன்: உண்டு. ஆப்பிரிக்கா நாட்டிலே சாதாரண மிருகங்களைப் போல இருக்கிற மனுஷங்க இப்பவும் உண்டு.

கோவிந்தன் குட்டிமேனோன்: முதல்லே நான் சொன்ன காலத்திலே நான் சொன்ன மாதிரிதான்

மனுஷன் வாழ்ந்துக்கிட்டிருந்தான்.

கோவிந்தப்பணிக்கர்: அதுக்கு என்ன ஆதாரம்?

கோவிந்தன் குட்டிமேனோன்: விஞ்ஞானபூர்வமான அறிவுதான்.

கோவிந்தப்பணிக்கர்: என்ன விஞ்ஞானம்? நீ பேர் சொன்ன துரைமாருங்க உண்டாக்கின விஞ்ஞானமா?

கோவிந்தன் குட்டிமேனோன்: அவங்களும் அவங்களைப் போலவும் அதைவிட அதிகம் விஞ்ஞானம் தெரிஞ்சவங்க எழுதின பல புஸ்தகங்களிலேருந்து நான் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: ஆனால் நீ இப்போ சொன்னதிலே ஒண்ணு மட்டும் இந்து சாஸ்திரப்படி கொஞ்சம் ஒத்துப் போகுது. நீ சொன்னபடிதான் நம்ம சாஸ்திரத்திலேயும் தொடக்கத்திலே புல் முதல் பல பிறவிகள் கழிச்சிதான் மனிதப் பிறவி கிடைக்கும்னு சொல்லியிருக்கு. ஆனால் அப்படி யெல்லாம் வர்றது முற்பிறவி நட வடிக்கைகளை அனுசரித்து தெய்வ கட்டளையால்தான் நடக்கும்னு நம்ம சாஸ்திரம் சொல்லுது.

கோவிந்தன் குட்டிமேனோன்: சரி; அண்ணாச்சி அந்த அளவுக்கு ஒத்துக்கிட்டீங்கல்ல?

கோவிந்தப்பணிக்கர்: நான் என்ன ஒத்துக்கிட்டேன்? நீ சொன்னது எதையும் ஒத்துக்கிடல்லே. ஒருக்காலும் ஒத்துக்க மாட்டேன். கடவுளே இல்லேன்னுல்ல நீ சொல்றே? அதை இந்த ஜன்மத்திலே ஒத்துக்க முடியாது.

மகா அபத்தமான கொள்கை கடவுள் இல்லேங்கறது. அங்கிங் கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருந்து கருணாமூர்த்தியாய் இருக் கிற ஒரு சிருஷ்டிகர்த்தாவை இந்த உலகத்திலே இல்லேன்னு அப்பட்டமான மடையன்தான் சொல்வான்.

கோவிந்தன் குட்டிமேனோன்: நான் ஒரு கருணாமூர்த்தியையோ எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிற ஜகத் அந்த்தர்யாமியையோ பார்க் கலே.

கோவிந்தப்பணிக்கர்: இருக்கட்டும், இந்த நாத்திகக்காரங்க இப்போ இந்த மாதிரி ஒவ்வொரு புஸ்தகமா எழுத ஆரம்பிச்சிட் டாங்க. இதுக்கு எவ்வெவ்வளவோ முன்னாலேயும், இப்பவும் இனி எவ்வளவோ காலத்துக்குப் பின் னேயும் இங்கே பார்க்கிற எல்லா மனுஷங்களும் தெய்வ வழிபாடு ஒவ்வொரு விதமா செய்து வந்திருக் காங்கன்னும், செய்துகிட்டு வரு வாங்கன்னும் எனக்கு நம்பிக்கை இருக்கு. நாத்திகக்காரங்க மொத் தத்திலே பத்துப்பேர் இருப் பாங்களா, கோவிந்தன்குட்டி?

கோவிந்தன் குட்டிமேனோன்: ஏராளமா லட்சக்கணக்கான பேர் இப்போ நாத்திகரா இருக்காங்க. ஆனால் அது வெளிப்படையாகத் தெரியாது. பூமியிலிருக்கிற மக் களைப் பத்திக் கணக்கெடுப்ப தெல்லாம் ஒவ்வொரு மதத்திலுள்ள ஆட்கள் இத்தனை இத்தனை என்று

தான். இதில் ஒவ்வொரு மதத்திலும் நாத்திகர்கள் நிறையப் பேர் இருப் பாங்க. ஆனால் அதைக் கணக் கிலே காட்ட மாட்டாங்க. பூமியிலே மொத்த ஜனங்களிலே நானூற்றி ஐந்து கோடியே ஆறு லட்சம் பேர் புத்தமதக்காரர்களும், முந்நூற்றுத் தொண்ணூத்தொன்பது கோடியே ரெண்டு லட்சம் பேர் கிறிஸ் தவ மதக்காரர்களும், இருநூற்று நாலு கோடியே ரெண்டு லட்சம்பேர் முகமதிய மதக்காரர்களும், நூற்றி யெழுபத்திநாலு கோடியே ரெண்டு லட்சம் பேர் இந்து மதக் காரர்களும், ஐம்பது லட்சம் பேர் யூதர்களும், இது தவிர வெவ்வேறே விக்கிரக ஆராதனை செய்ற பல வகையான நூற்றிப்பதினெட்டு கோடிப் பேர் இருக்காங்கன்னு ப்ராட்லாவோட புஸ்தகத்திலே இருக்கு. ஆனால் மதத்தை அடிப் படையா வச்சி எடுத்திருக்கிற இந்தக் கணக்கு ரொம்பத் தவ றுன்னு அவர் நிரூபிக்கிறாரு. படிப்பும் அறிவும் அதிகமா இருக் கிற ஐரோப்பியர்களிலும் அமெரிக்கர்களிலும் பெரும் எண் ணிக்கையிலான பெரும்புள்ளிகள் நாத்திகர்கள் தானென்றாலும் அவங்களைப் புரோட்டஸ்ட்டன்ட் அல்லது ரோமன் கத்தோலிக் கராகக் கணக்கில் தவறாகச் சேர்த்திருக்காங்க என்கிறது அவ ரோட அபிப்பிராயம். அந்த அபிப் பிராயம் சரிதான் என்கிறதிலே

கொஞ்சம்கூட சந்தேகமில்லே. இப்போ மலையாளத்திலே ஜனத் தொகைக் கணக்கெடுப்பு நடத்தின திலே என்னை இந்துன்னுதானே சேர்த்திருக்காங்க; ஆனால் உண் மையிலே நான் இந்து மதத்தைச் சேர்ந்தவனில்லைதானே? அந்தத் தவறு சர்வசாதாரணமா ஏற்படுறது தான். அதனாலே தெய்வம் உண் டுன்னு நினைக்காமலும் கும்பிடா மலும் இருக்கிறவங்க நிறையப் பேர் இந்த உலகத்திலே இருந் தாலும் அவங்க எத்தனை பேர்னு கணக்கெடுக்கிறது கஷ்டம்.

கோவிந்தப்பணிக்கர்: இதைக் கேட்கிறதே மகாபாவம். கலியுக தர்மம்னுதான் நான் சொல்லுவேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: அப்படீன்னா இதைப் பத்தி எதுக்காக அண்ணாச்சி கவலைப் படணும்? கலியுகத்திலே மனுஷ துங்க நாத்திகர்களா வருவாங் கன்னு அண்ணாச்சி சொல்ற தெய்வம் எதிர்பார்த்ததுதான் அப்ப டீன்னா நாங்க நாத்திகர்களானது ஆச்சரியமா? இந்துக்களோட சாஸ் திரத்தைப் போல இவ்வளவு பொருத்தமில்லாதது ஏதாச்சும் உண்டா? ஒரு இடத்திலே சொல்லுது, மனுஷன் பிறக்கிற போதே அவனுக்கு எதிர்காலத் திலே நடக்கப்போற சகல நடப்புக் களையும் தலையிலோ வேறெங்கோ பிரம்மா எழுதி வச்சிட்டார்னு. இப்படி எழுதித்

தீர்மானிச்சிட்ட காரியத்திலே பின்னாலே மனுஷனுக்கு என்ன ஒரு சக்தி இருக்கு? "நீ இன்னபடி வாழணும்; நீ இத்தனை பேரைக் கொல்லணும்; நீ இன்னின்ன காரியங்களைச் செய்யனும்" அப்ப டீன்னு வெளிப்படையாகவும் தீர் மானமாகவும் எழுதிவிட்டான பிறகுதான் மனுஷனோட பிறப்பு. அப்படீன்னா அந்த அப்பாவி யான மனுஷனுக்கு என்ன சுயசக்தி இருக்கு? அவனுக்குக் கட்டளை இட்டதை அவன் செய்றான். பின்னே அவனை, அவன் செய்ற தவறுகளைக் கொண்டோ செய்ற நல்ல காரியங்களைக் கொண்டோ எதுக்காகப் பாவின்னும் நல்ல வன்னும் சொல்லணும்? கலியுகத் திலே ஜனங்களுக்குக் கடவுள் நினைப்பு இருக்காது. அனேக பாவ காரியங்கள் செய்வாங்க. மழை தேவையான அளவு பெய் யாது. பூமி விளையாது. நல்லது கெட்டது இல்லாமப்போகும். பிராமணங்களை இம்சிப்பாங்க. பசுவதை நடக்கும். அயோக்கியர் களுக்கு மேன்மை வரும். இப்படிப் பலவிதத் தீர்மானங்களை முடிவு பண்ணிட்டதாகச் சொல்லுது. இந்தத் தீர்மானப்படி ஒவ்வொரு காரியத்தையும் பார்க்கிறப்போ எதுக்காக அண்ணாச்சி இவ்வள வுக்கு ஆட்சேபிக்கணும்? அண் ணாச்சி கலியுக மனுஷனில் லையா? அண்ணாச்சிக்கு இந்தத் தீர்மானங்கள் சம்பந்தமில்லையா?

மகாகஷ்டம்! இப்படியும் அசட்டுத் தனம் உண்டா? இப்படியும் அறி வீனம் உண்டா? பிராமணங் களோட முக்கியத்துவத்துக்கும் மேன்மைக்கும் வேண்டி மட்டும் அவங்களிலே சிலர் எழுதி வைச்சி ருக்கிற புஸ்தகங்கள் தவிர இந்துக் களுக்கு இந்த வகை சங்கதிகளைப் பத்தித் தெரிஞ்சிக்க வேறே எந்த வழியும் இல்லேல்ல. வேறே என்ன செய்யலாம்? அசட்டுத்தனமா எழுதி வைச்சதையெல்லாம் அப்பாவிங்க நம்புறாங்க.

மாதவன்: சித்தப்பா இப்போ சொன்னது பெரிய பிசகாக்கும். பிராமணங்க எழுதிவைச்சிருக்கிற சில விலை மதிக்க முடியாத புஸ்தகங்களைப் பத்திக் கொஞ்சமாவது உங்க ளுக்குத் தெரிஞ்சிருந்தா இந்த மாதிரி சொல்ல மாட்டீங்க. இங்கி லீஷ் மட்டும் படிச்ச ப்ராட்லா வோட புக்கும், டார்வின், வாலேஸ், ஹக்ஸ்லி, ஹர்பர்ட் ஸ்பென்சர் முதலானவங்களோட புக்குகளும் படிச்சி அதுங்களிலே இருக்கிற கருத்துக்களை மட்டும் தெரிஞ்சி வைச்சிருக்கிறதனாலே மேன்மையான கிரந்தப் புஸ்த கங்களை இந்துக்கள் யாரும் எழுத லேன்னு சித்தப்பா எப்படிச் சொல்ல முடியும்?

கோவிந்தன் குட்டிமேனோன்: டார்வின் முதலான பெரிய விஞ் ஞானிகள் எழுதின புஸ்தகங்களும் நம்ம சமஸ்கிருதத்தில் பொருத்த

மில்லாமலும் நடக்க முடியாத சம்ப வங்களாலும் நிரப்பப்பட்டிருக்கிற பாரதம், பாகவதம், ராமாயணம், ஸ்காந்தம் முதலான புராணங் களும் சமமானதுங்கன்னு நீ சொல்றியா?

மாதவன்: சம்பந்தமில்லாம வேகவேகமாப் பேசக்கூடாது. நிதானமா யோசிச் சிப் பேசணும். ஹர்பர்ட் ஸ்பென் சர் முதலானவங்க எழுதினது இப்போ சமீபத்திலேதான். நம்ம இந்துக்களிலே மகான்களான கிரந்தகர்த்தாக்களும் அத்வைதி களும் உண்டாகி இப்போதைக்கு ஓரிரண்டாயிரம் வருஷங்கள் கழிஞ்சாச்சி. இந்த ஓரிரண்டாயிரம் வருஷங்களில் வளர்ந்த அறிவுகள் சேர்ந்து இப்போதைய இங்கிலீஷ் அறிஞர்களுக்குக் கிடைச்சிருக்கு. முன்னே இருந்த அறிவாளிகளைக் காட்டிலும் அவங்க அதிக அறிவு உள்ளவங்கதான். அதுக்குக் கார ணம் அவங்க பிற்காலத்திலே வந்த அறிவாளிங்க என்கிறதுதான். நீங்க இந்து மதத்தைப் பழிச்சிப் 'பேச றதை நான் மறுக்கலே. இந்து மதம் இப்போ பின்பற்றி வர்ற மாதிரி ரொம்பப் பொருத்தமில்லாமலும் முன்னுக்குப் பின் முரணான உப தேசங்கள் கொண்டும் உண்டானது என்கிறதிலே எனக்குச் சந்தேக மில்லே. அப்படித்தான் உலகத் திலே இருக்கிற பெரும்பாலான மற்றெல்லா மதங்களும்.

கோவந்தன்
குட்டிமேனோன்: அப்படீன்னா நான் சொன்னதை நீ எதுக்காக ஆட்சேபிக்கணும்?

மாதவன்: சொல்றேன். நீங்க சொன்னது இந்துக்களுக்கான சமஸ்கிருதத்திலுள்ள எல்லா கிரந்தங்களும் ஒரே மாதிரி முன்னுக்குப்பின் முரண்பாடான விஷயங்கள் நிறைஞ்சிருக்கு; இந்த அப்பாவிகளுக்கு வேறே எந்தப் புத்தகமும் இல்லே அப்படீன்னு. இந்த வகையான புஸ்தகங்கதான் சமஸ்கிருதத்திலே இருக்குன்னு நீங்க சொல்றது ஆச்சரியமா இருக்கு. பாரதம், பாகவதம், ஸ்காந்த புராணம்— அப்படித்தானே? இதுதான் இந்துக்களோட முக்கிய கிரந்தங்கள், இல்லையா? விசித்திரம்தான்.

கோவிந்தன்
குட்டிமேனோன்: அப்படித்தானே; இந்த கிரந்தங்களைத்தானே முக்கியமாகச் சொல்றது?

மாதவன்: ஆமாம், இந்த கிரந்தங்களை முக்கியமாச் சொல்வாங்க. அது போலத்தான் இங்கிலீஷிலே மில்ட்டனோட 'பாரடைஸ் லாஸ்ட்' ஷேக்ஸ்பியரோட நாடகங்கள் இதுங்களையும் சொல்வாங்க. மில்ட்டன், ஷேக்ஸ்பியர் இவங்களெல்லாம் எழுதின விஷயங்கள் வேறே. டார்வின், வாலேஸ் முதலானவங்க எழுதின விஷயங்கள் வேறே. சாக்ரட்டீஸ், செனெக்கா முதலானவங்களோட கொள்கைகளை வெளிப்படுத்தற புஸ்தகங்

களுக்கும் மில்ட்டன், ஷேக்ஸ்பியர் இவங்களோட புஸ்தகங்களுக்கும் என்ன சம்பந்தம்? அதே போல இப்போ நாம பேசிக்கிட்டிருக்கிற விஷயத்திலே இந்துக்களுக்கான புஸ்தகங்களிலே ராமாயணமும் பாரதமும் சேராது.

கோவிந்தன் குட்டிமேனோன்: பின்னே எது?

மாதவன்: இப்போ நீங்க என்ன வாதம் செய்றீங்களோ, அந்த நாத்திகக் கொள்கையை ரொம்பப் பெரிய மகான்களான இந்துக்கள் எவ்வளவோ முன்னாலே—ஏறத்தாழ ரெண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே—ஏற்படுத்தி ஒரு வகையில் நிலைநிறுத்தவும் செய்வாங்கன்னு நான் நிரூபிச்சிட்டா?

கோவிந்தன் குட்டிமேனோன்: அப்படியும் இருக்கா?

மாதவன்: பின்னே? ஒண்ணும் தெரியாம அவசரப்பட்டு எதுவும் பேசாம நிதானமாக் கேளுங்க.

கோவிந்தப்பணிக்கர்: என்ன மாதவா நீ சொல்றது? இந்துக்களுக்கு நாத்திக மதம் எப்போவாச்சும் இருந்திருக்கா?

மாதவன்: சந்தேகமில்லாம இருந்திருக்கு. இப்பவும் இருக்கு. சாங்கியம்னு சொல்ற கபில மகரிஷியோட சித்தாந்தம் என்னவாம்? இந்துக்களுக்கு ஆறு விதமான சித்தாந்தங்கள் இருந்திருக்கு.

முதலாவது, கபிலரோட நாத்திக சாங்கிய சித்தாந்தம்.

இரண்டாவது, பதஞ்சலியோட யோகமும் பகவத் கீதையும்.

மூன்றாவது, ஜயிமனியோட பூர்வ மீமாம்சம்.

நான்காவது, வியாசரோட உத்தர மீமாம்சம்—அல்லது வேதாந்தம்.

ஐந்தாவது, தௌதமரோட நையாயிக (நியாய) சித்தாந்தம்.

ஆறாவது, கணாதரோட வைசிஷ்யக சித்தாந்தம்

இதிலே கபிலரோட சாங்கியம் நேரடியா நாத்திகத்தை உபதேசிக்குது.

கோவிந்தன் குட்டிமேனோன்: அப்படியா; அப்படி இருக்கா?

கோவிந்தப்பணிக்கர்: நாத்திகக் கொள்கையெல்லாம் நம்ம சாஸ்திரத்திலே இல்லே.

மாதவன்: இருக்கு. ஆனால் அந்த சித்தாந்தம் சுத்த அத்வைதிகள் சொல்றபடி தன்னைத்தான் அறிகிறதுதான் தெய்வத்தை அறிகிறது, அப்படீங் கறது மட்டும்தான். எப்படியா னாலும் இதையெல்லாம் யுக்தியுக்த மாய்ச் சொல்லி விளங்க வைக் கிறது கஷ்டம். இந்த விஷயத்தைப் பத்தி எவ்வளவு தர்க்கம் பண்ணி னாலும் எந்தப் பலனும் ஏற்படா துன்னு எனக்குத் தோணுது. இந்த நாத்திக சித்தாந்தத்தைப் பத்தி சித்தப்பா சொன்னது ஹக்ஸ்லி என்கிற விஞ்ஞானியோட சொந்த அபிப்பிராயம்தான். ஒரு இடத் திலே அவர் சொல்லியிருக்கிறது எனக்கு மனப்பாடமாத் தெரியும். அதோட மொழிபெயர்ப்பை நான் சொல்றேன். அப்பா அதை யோசிச்சிப் பார்த்து ஹக்ஸ்லி என்கிற அறிஞர் நாத்திகவாதி யான்னு தீர்மானிச்சிக்க வேண் டியதுதான். அந்த அறிஞர் சொல்

றாரு: "துரதிருஷ்ட வசமாக நான் இதுவரை நான் படிக்க நேர்ந்த பொருத்தமில்லாத, சாரமில்லாத சில கட்டுரைகளையும் பிறவற்றையும் கொண்டு தெய்வத்தின் சுபாவத்தையும் செயலையும் சொரூபத்தையும் நிலைப்பையும் குறித்துச் சில மேதாவிகள் அறிந்திருப்பதாக நடித்து, அவற்றைப் புரிய வைப்பதாக உத்தேசித்து எழுதியிருக்கும் சில விஷயங்களுக்கு நிகரா ௲ அபத்தமாகவும் பொருத்தமில்லா மலும் பரிகாசத்துக்கு உரியதாகவும நான் வேறே ஒரு கருத்தை மட்டுமே வாசித்திருக்கிறேன். அது தெய்வம் இல்லையென்பதாக விளக்க முன்னர் கூறியவாறு மோசடித்தனமான சில நாத்திகர்கள் எழுதி வைத்துள்ள குற்றச்சாட்டுகளும் பித்தலாட்டங்களுமாகும். இந்தப் பித்தலாட்டங்கள் நான் முன்பு கூறிய மேதாவிகளின் பித்தலாட்டங்களைவிட அதிகமாக இருக்குமோ என்று நான் சந்தேகப்படுகிறேன்."

இப்படித்தான் ஹக்ஸ்லி என்கிற பேரறிஞரோட, மத்த ஏராளமான அதிபுத்திசாலிகளான அயல்நாட்டுக்காரர்களோட அபிப்பிராயம். இப்போ உறுதிப்படவும் செய்திருக்கு. இவங்களெல்லாம் நாத்திகவாதிங்க இல்லைதான். இந்து சித்தாந்தங்களிலிருந்துதான் தெய்வம் என்கிறதை அறியவும் வரையறைப்படுத்தவும் சாதாரண மனுஷனுக்கு முடியாத ஒரு சக்தின்னு நாம் தெரிஞ்சுகிக்கிடுறோம். இதுக்குப் பல சான்றுகளும் உண்டு. அதையெல்லாம் இப்போ பேசிக்கிடத் தேவையில்லே.

ஐரோப்பிய அறிஞர்களும் மற்றுமுள்ள அறிஞர்களும் (டார்வின் முதலானவர்கள்) சொன்ன பரிணாம தத்து வத்தையும் மத்ததையும் அறிஞர்கள் பலபேர் கொஞ்சம்கூட நம்பலே. என்னோட அபிப்பிராயத்திலே முதலாவதாக நாத்திகம் என்கிறது சாதாரண லௌகிகத்துக்கும் சன் மார்க்க நடைமுறைக்கும் ரொம்ப தோஷகரமான ஒரு மதம்னு தோணுது. நாத்திகத்தை உலகத்திலே பரப்புற தனாலே எந்த ஒரு பலனும் இல்லே என்கிறது மட்டுமில்ல, சாதாரண மனுஷ ஜீவிகளுக்கு ரொம்பக் குறைபாடுகளும் கஷ்டங்களும் உண்டாகக் காரணமாகிவிடும்னு நான் பயப்படுறேன். அதிலுள்ள விஷயங்களைத்தான் முதல்லே நான் சொல்லப்போறேன். பிறகு என்னோட சொந்த அபிப்பிராயத்தைச் சொல்றேன்.

தங்களோட சமசிருஷ்டிகளுக்கு நல்லதையும் மேன்மை யையும் சுகத்தையும வரவழைக்கத்தான் புத்திசாலிகளான ஜனங்க எப்பவும் முயற்சி செய்யணும் தெய்வம் இருக்குதா இல்லையான்னு என்கிற சூட்சும நிலையை யாராலும் அறிய முடியலேன்னு அறிவாளிகளான விஞ்ஞானிகள் ஒப்புக் கொண்டுவிட்டதனாலே அவங்க செய்ய வேண்டியது இந்த சந்தேகத்துக்குரிய விஷயத்தை எந்த நிலையில் நிறுத்திக் கொள்வது மனுஷங்களுக்குப் பரவலாக உபகாரமாய் அமையும்னு சிந்திக்கிறதுதான். தெய்வம் இல்லேன்னு நிலைநாட்ட உள்ள விஷயங்கள் எல்லாம் சரிதான்னும் உண்மைன்னும் மனுஷங்களுக்கு ஒரு தெளிவு வந்திரிச் சின்னா அதனாலே அவங்களுக்கு உண்டாகிற சங்க டங்களை நினைக்கிறப்போ அப்படி ஒரு நாத்திக எண்ணம் பொதுவா மனுஷங்களுக்கு வரக்கூடாது என்கிறது அறிவாளிகளோட எண்ணமாக இருக்கும் என்கிறதிலே எனக்குக் கொஞ்சம்கூட சந்தேகமில்லே. தெய்வம் இருக் குன்னு நிரூபிக்கப் பத்து விஷயங்களைச் சொல்றாங்க. அந்தப் பத்து விஷயங்களையும் நாத்திக வாதம் செய்கிற வனுக்கு முழுவதுமா மறுக்க முடியாவிட்டால் தெய்வம் இல்லேன்னு நிரூபிக்க வேறே பத்து சங்கதிகளை பதி லுக்குச் சொல்லி சாதாரண மனுஷங்களோட மனசிலே குழப்பத்தை ஏற்படுத்தி மனுஷங்களை துக்கத்திலே

ஆழ்த்துறது நல்லதா? தெய்வ நம்பிக்கை ஏற்படுறதனாலே உலகத்திலே நல்லது தவிர கெடுதல் எதுவும் உண்டாகா துன்னு தெரியறப்போ அந்த நம்பிக்கையை சந்தேகத்தி லேருந்து விடுபடாத விஷயங்களைச் சொல்லி மறுக்க எதுக்காக முயற்சி செய்யணும்? பொய் சொன்னாலோ, மத்தவங்க பொருளை அபகரிச்சாலோ, அயலான் மனைவி யோடு தொடர்பு கொண்டாலோ, தன்னுடைய கூட்டாளி களையோ மத்த உயிரினங்களையோ இம்சை செய்தாலோ, தர்மத்தைச் சிதைச்சாலோ இந்த உலகத்திலே கிடைக்கிற தண்டனைக்கோ அவமானத்துக்கோ அப்புறம் மரணத் துக்குப் பிறகும் தெய்வத்துக்கு முன்னாலே தான் ஒரு குற்ற வாளியாவோம் என்பதான ஒரு பயம் மனுஷனுக்கு ஏற்ப டுறது இந்தக் கெட்ட நடவடிக்கைகளுக்கு அதிகப்படியான தடையாக அமையும்னா அது இல்லாமச் செய்றதுக்கான தேவை என்ன? தெய்வம்னு ஒரு சக்தி இல்லேன்னு சந்தேகத் துக்கு அப்பாற்பட்ட விஷயங்களினாலே நிரூபிச்சித் தெளிவாக்க ஒருத்தருக்கு முடியும்னா அப்படிச் செய்றதிலே நான் ஆட்சேபம் சொல்லலே. அப்படி நிச்சயமா நிரூபிக்க முடியாம இருக்கிறப்போ இல்லாதது பொல்லாதது சொல்லி மனுஷங்களோட அறிவை மழுங்கடிக்கிறது எதுக்காக?

'சயின்ஸ்'னு இங்கிலீஷில் பொதுவாகச் சொல்லப் படுற விஞ்ஞானப் படிப்பினாலே இதுவரை பலவாறாக சந்தேகத்தில் இருந்த பொருட்களின் இயல்பையும் உற்பத்தி மூலத்தையும் செயற்பாடுகளையும் சக்தியையும் குறித்த தத்துவங்களை நாம் தெரிஞ்சிக்க முடியும்னாலும், ஒரு பராசக்தி இந்த உலகத்திலே தென்படும் எல்லா சராசரங் களுக்கும் ஆதிகாரணமாய் அமையலேன்னு அந்த 'சயின்ஸ்'களாலே நாம் ஒருக்காலும் தெரிஞ்சிக்கிடல்லே. காந்தத்துக்கும் இரும்புக்கும் இடையேயான ஈர்ப்புச் சக்தியை நாம் அறிகிறதனாலே அதிலிருந்து சயின்ஸ் களைக் கொண்டு பல கருவிகளை நாம் சிந்திச்சி உருவாக்கு கிறோம். ஆனால் இந்தப் பொருள்களிலே தன்னியல்பாகக் காணப்படுகிற சக்தியின் அடிப்படைக் காரணம் என்னன்னு சயின்ஸ் சொல்லலே. சொல்லணும்னு சயின் சுக்குத் தேவையுமில்லே. தெய்வம் இல்லேன்னு சயின்ஸ்

உபதேசம் செய்றதில்லே. பூமியிலுள்ள பொருள்களுக்குப் பரஸ்பரம் சேர்க்கைகளையும் சிதைவுகளையும் ஏற்படுத்தி அதுங்களோட சூட்சும தத்துவங்களையும் அதுங்களோட சக்தி, தோற்றம் முதலானதுங்களைத் தெரிஞ்சி அதுங்களை மனுஷனோட பயன்பாட்டுக்குத் தகுதியானதாக அமைத்தும் உயிரினங்களுக்கு லெளகிக சுகானுபவங்களை மேலும் மேலும் பெருக்குவதுதான் சயின்ஸ்களின் உத்தேசம். மனுஷனோட ஆத்மாவுக்கு லெளகிக சுகம் விடுபட்டுப் போனால் எதிர்ப்படுவதான சுகத்தைக் குறித்தோ, நிலை மையைக் குறித்தோ சயின்சுகள் நமக்கு எதையும் தெரிவிக்கிறதோ படிப்பிக்கிறதோ இல்லே.

'அக்னோஸ்ட்டிசிசம்'னு இங்கிலீஷிலே சொல்லப் படுகிற ஒரு வகையான நம்பிக்கை வச்சிருக்கிறவங்களோட சித்தாந்தத்தைப் பார்த்தா, தெய்வம் இல்லேங்கிறதுக்காக நாத்திகவாதிகள் சொல்ற சாதாரண விஷயங்களெல்லாம் பொருத்தமில்லாதவைன்னும் நம்பத்தகாதவைன்னும் தெரியும். மனுஷங்களோட சன்மார்க்க அனுஷ்டானத் துக்கும், பரஸ்பர வாத்சல்யம் ஏற்படவும், கொடூர காரியங் களைச் செய்றதிலே பயத்தை உண்டாக்கவும், இகலோ கத்திலே மனித சமுதாயத்துக்கு சுகமான நிலையிலான வாழ்வுக்காகக் கடைப்பிடித்து வருகிற நிபந்தனைகளையும் நடப்புக்களையும் சட்டங்களையும் சம்பிரதாயங்களையும் நிலைநிறுத்தவும், குறிப்பா வார்த்தைகளாலே சொல்ல முடியாத பயங்கரத்துக்கு ஆளாகிற அந்திமக் காலத்து எல்லையில்லாத் துன்பத்துக்கு ஒரு சிறிதேனும் நிம்மதியோ விசாரணமோ மனுஷனுக்குக் கொடுக்க தெய்வ நம்பிக்கை போல வேறெதுவும் இல்லேன்னு எனக்கு நல்லாத் தெரியும். இந்த நாத்திகத்தை இவ்வவளவு கூப்பாடுபோட்டு தெய்வம் இல்லேன்ன சொல்றவங்களோட சாவு நெருங்குற அந்திமக் காலத்திலே அவங்களுக்கு ஏற்படுற சங்கடம் சாதாரணமாக தெய்வ நம்பிக்கை இருக்கிறவங்களுக்கு அந்த சமயத்திலே ஏற்படுகிறதைவிட எப்படியும் அதிகமாகத்தான் இருக்கும் என்கிறதிலே சந்தேகமில்லே. மனுஷனோட அந்திமக் காலத்திலே தெய்வ நம்பிக்கை ஒண்ணு வச்சிருக்க லேன்னா அதிக துக்கத்தினாலே வதங்கிப் போயிருக்கிற

அவனோட மனசை வேறே எதனாலேயும் ஆறுதல் படுத்த முடியாதுங்கறது தெளிவு.

அப்படி இருக்கிறப்போ இவ்வளவு நெடுங்காலமா மனுஷன் கடைப்பிடிச்சி வந்த இந்த தெய்வ நம்பிக்கையை பெரும் சந்தேகத்துக்கிடமான சில சங்கதிகளைக் கொண்டு மறுத்து தெய்வம் இல்லேன்னு நிலைநாட்டப் புறப்படுறது ரொம்பத் தப்பான ஒரு காரியம் இல்லையா?

மனுஷனுக்கு மரண கால பயத்தைப் போக்குறதுக்கான நிவாரணம் காணத்தானே நாம் முயற்சி செய்கிறோம்? தன்னுடைய சொந்த சரீரத்தை விடுத்துப் புறப்பட்டுப் போறதைத் தவிர இனிமே வேறே வழியில்லேன்னு ஒருத்தன் அறிஞ்சி திகைச்சிப் பெரும் துக்கத்திலே அமிழும் சமயம்—

"ஏய்! சீக்கிரமா செத்துத் தொலை. இனிமே உனக்கு எந்த சுகமும் இல்லே. உன்னோட உயிர் இதோ இந்த விளக்குத் திரி கருகுற மாதிரி இப்போ போயிடும். உன்னோட சொந்த உடம்பையும் மக்களையும் மனைவியையும் தாயையும் சகோதரர்களையும் பணத்தையும் சுகத்தையும் எல்லாத்தையும் விட்டு இதோ நீ செத்துக்கிட்டிருக்கே. இனி உனக்கு ஒண்ணுமே இல்லே."

அப்படீன்னு சொல்றதைக் கேட்டு முடிவில்லாத துக்கத்திலே விழுந்து செத்துத் துடிக்கிற ஒருத்தரோட அவஸ்தையை நினைச்சிப் பாருங்க.

இதுக்கு பதிலாக, மனுஷனோட அந்திமக் காலத்திலே தன்னோட ஆத்மாவுக்கு ஒருவித நிலைமை மரணத்துக்குப் பிறகு உண்டாகும்கிற ஒரு சந்தேகமாவது மனசிலே உண்டானால்தான் அந்த சுகத்தைப் பத்தி ஒருதரம் ஆலோசிப்பான். தெய்வம் இல்லேன்னும், மரணத்தோட எல்லாமே முடிஞ்சிப்போச்சின்னும் தீர்மானமா அபிப்பிராயம் உருவாயிட்டா அந்த நிலைமை வேறே. காரிருட்டிலே முடிவில்லாத துக்கத்திலே விழுந்து உயிர் போறப்போ அந்த விசனத்தைக் கொஞ்சமாவது குறைக்க நினைச்சால் மனுஷனுக்கு நல்லது தெய்வ நம்பிக்கை இருக்கிறதுதான்னு தெளிவாகும்.

அதனாலே இந்த நாத்திகத்தை நிலைநிறுத்த முயற்சி செய்றது மனுஷனுக்கு ரொம்ப இழிவானதுன்னு நான் சொல்றேன்.

இனி என்னோட நம்பிக்கையைப் பத்திச் சொல்றேன். தெய்வ நம்பிக்கை என்கிறது காரணத்தோடதான் உண்டா கணும் என்கிறதில்லே. காரணம் இல்லாமலும் அந்த அந்த நம்பிக்கை வரலாம். ஆனால் சித்தப்பாவைப் போல படிக் கவும் சிந்திக்கவுமான ஒரு மனுஷனுக்கு எப்படி இந்த நம்பிக்கை ஏற்படும்னு இப்போ கேட்கத் தோன்றும். அதுக்கு என்னோட பதில், "பல விஷயங்களைச் சார்ந்து இந்தப் பிரபஞ்சத்திலே மனுஷனோட இந்திரியங்களின் சூட்சுமஸ்திதி புரிந்துகொள்ள முடியாத விதத்தில்தான் இருக்குது; சொல்லுக்கு ஆட்படாத ஒரு சக்தி இந்த உலகத்தை ஆண்டுகொண்டிருப்பதை கிரகிக்க புத்தியுள்ள மனுஷ னுக்கு நிச்சயமா முடியும்" என்பதாகும். இப்படியான ஒரு சக்தியை நான் தெய்வம்னு சொல்றேன். என்னோட அபிப் பிராயப்படி உலகத்திலே தென்படுற சகல சம்பத்துகளும் ஆபத்துகளும் பிரபஞ்ச ரீதியிலே அவசயமுள்ளது தான்னும் நம்மோட சிருஷ்டிகர்த்தாவின் உத்தேசம் அப்படி இருக்கலாம்னும் தோணுது. அப்படித்தான் இருக்கும்னு நான் சொல்லலே. அப்படி இருக்கலாம்னு நான் ஊகிக் கிறேன். இந்த உலகத்திலே பார்க்கிற சகல சராசரங்களும் அழியக்கூடியதாகத்தான் காணப்படுது. அப்படி அழியக் கூடியதா இல்லாம இருந்தா இந்தப் பிரபஞ்சம் ரொம்பக் காலம் நடக்குமா என்கிறது சந்தேகம்தான். கடந்த ஐம்ப தாயிரம் வருஷங்களாக உண்டான அசைவனவும் அசை யாத்தன்மையுமான உயிரினங்கள் அழியாமலும் இப்போ பார்க்கிற முறைப்படியே வளர்ந்தும் வந்திருந்தா இந்த பூமி இந்த உயிரினங்களுக்கு சுகமா வாழ்றதுக்குப் போதாம ஆயிடும்கிறது தெளிவு.

ஒரு நூற்றி ஐம்பது வருஷத்துக்கு முன்னாலே பிறந்த மனுஷனை நம்மாலே எந்த இடத்திலேயும் பார்க்க முடியலே. இந்த நூற்றி ஐம்பது வருஷத்துக்கு முன்னாலே பிறந்த ஆண்பெண் சகலரும் அழிஞ்சிபோயாச்சி. அப்படி எத்தனை கோடி நூற்றி ஐம்பது வருஷங்கள் கழிஞ்சிருக்கு!

எத்தனை கோடி மனுஷங்க அந்தக் காலத்துக்குள்ள பிறந்திருக்காங்க; எத்தனை பேர் இறந்திருக்காங்க! கணக்கில்லாம ஏராளம்! இப்படியாக வளர்ச்சிக்கு ஏறத்தாழ சமமாக அழிவையும் உண்டாக்கியிருக்கலேன்னா பிரபஞ்சம் இந்த மாதிரி நடக்க முடியாதுங்கறது தெளிவு என்கிறதனாலே நம்மோட சிருஷ்டிகர்த்தாவின் கட்டளையால் தான் அழிவுகள் உலகத்திலே ஏற்படுதுன்னும், அப்படி அழிவுகள் ஏற்படாம இருக்கிறதுதான் பிரபஞ்சத்தோட அழிவுக்குக் காரணமாயிடும்னும் நான் சொல்றேன். இதுதான் மனுஷங்களோட நிலைமைன்னு இப்போ அறிவுள்ள எல்லாருக்கும் தெரியும். ஆனாலும் எந்த ஒரு முனுஷனாவது மரணத்துக்கு பயப்படாம இருக்கானா? இந்த பூலோக வாழ்க்கை தனக்கு முடிஞ்சிபோச்சுன்னு தெரிஞ்சதும், இது நடக்கக்கூடாத ஒரு காரியம் என்பது போல உடனே திடுக்கிட்டு பிரமித்துப் போகாதவங்க யாரு? இங்கே சொல்லில் அடங்காத ஒரு சக்தி மனுஷங்களைப் பிரபஞ்சத்தில் மகிழ்விக்கிறதையும் இழுத்துப் பிடிச்சி ஈர்த்து வச்சிருக்கிறதையும் நாம் பார்க்கிறோம். இகலோக சுகங்கள் எதுவும் சாரமில்லேன்னு சில சமயங்களிலே ஏற்படுற சில துக்கங்களினாலும் ஆபத்துக்களினாலும் கண்கூடாகப் பார்க்கிறோம். அதை நாம் எல்லோருமே எப்போதும் ஒப்புக்கொள்ளத்தான் செய்கிறோம். சில சமயங்களில் இந்த விஷயங்களைப் பத்தித்தான் ரொம்பவும் யோசிக்கிறோம். இப்படி என்னதான் செய்தாலும் கடைசியிலே நாம் பிரபஞ்சத்திலேதான் அமிழ்ந்து லயிக்கிறோம். பிரபஞ்சம் நிலையில்லாதது, சாரமில்லாதது என்பதான நினைப்பு முழுக்க மறைஞ்சிடுது. இப்படி ஏற்படுறதுக்கான காரணம் நமக்கு விவரமாய் அறிய முடியாததான ஒரு மகாசக்தி இந்தப் பிரபஞ்சத்தை ஆட்டிப்படைக்கிறதனாலேதான்னு நான் நினைக்கிறேன். அந்த சக்தியை நான் தெய்வம்னு நினைக்கிறேன். பிரபஞ்சத்திலே ஆபத்துக்கள் பலவிதமாக நேரட்டும், மழையில்லாமல் திக்குகள் வேகட்டும், இடி விழுந்து பொசுக்கட்டும், சமுத்திரம் பொங்கி நாடுகளை மூழ்கடிக்கட்டும். பூகம்பங்கள் உண்டாகட்டும், யுத்தங்கள் உண்டாகட்டும், ஜனங்கள் ·கோடிகோடியாய் அழியட்டும்,

இப்படியெல்லாம் ஆனாலும் முடிவில் கணக்குப் பார்க்கும் போது ஒராயிரம் வருஷங்களுக்கு முன்னே இருந்ததைவிட பிரபஞ்ச நடவடிக்கைகள் ஐந்நூறு வருஷங்களுக்கு முன்பு தான் அதிகரிச்சி காணப்படுது. இருநூறு வருஷங்களுக்கு முன்னைவிட நூறு வருஷங்களுக்கு முன்னாலே காணப் படுது. ஐம்பது வருஷங்களுக்கு முன்பிருந்ததைவிட இருபத் தைஞ்சி வருஷங்கள் முன்னே காணப்படுது. கடந்த வரு ஷத்தைவிட இந்த வருஷம்; நேத்தைவிட இன்னிக்கு. இதுக்கு என்ன காரணம்? பிரபஞ்சத்தை அழிக்காம நிலைநிறுத்த ஒரு பராசக்தி இருக்கு. அதனாலே இந்த நாசங்களாலும் சங்கடங்களாலும் எதுவும் மாறாம இந்தப் பிரபஞ்சம் சரியாகத்தான் தொடர்ந்து நடக்குது. அந்தப் பராசக்தியை நான் தெய்வம்னு சொல்றேன். நாத்திகர்கள் சொல்றது போல காரிய காரணத் தொடர்பினாலே இந்த உலகம் தானாகவே உருவாகியதும் ஒரு தனிப்பட்ட சைதன்யத்தைச் சார்ந்து நிற்காததுமாக இருந்தால், அத்தகைய அசேதனமான காரண காரியத் தொடர்பான மாற்றத்தினாலே மட்டும் இந்தப் பிரபஞ்சத்திலே தென்படுகிற எல்லாப் பொருள் களும் உயிரினங்களும் தங்களுக்குள்ளே இணைந்தும் ஒன்றையொன்று சார்ந்தும்தான் எப்போதும் நிலைத்திருக்க வேண்டும் என்பதில்லே; அப்படி நிலைப்பதும் இல்லே.

சூரியனை தெய்வம்தான் சிருஷ்டிச்சதாக நான் சொல் றேன். இல்லே, அது காரண காரியங்களை அனுசரிச்சித் தானாகவே உண்டாகி வந்த ஒரு கோளம்னு நாத்திர்கள் சொல்றாங்க. எப்படி சூரியன் காரண காரியத் தொடர்பு கொண்டு இவ்வளவு பிரகாசத்தோட இந்த பூமிக்கு இவ்வளவு பாதுகாப்பா இருந்தபடி, கண நேரத்திலே பூமியைச் சூடாக்கிச் சாம்பலாக்குவதான இயல்பான தகன சக்தி தனக்கு இருந்தும் அப்படி எரிச்சி நாசம் உண்டாக் காமல் தூரத்தில் எப்போதும் நின்ற செயல்படுதுன்னு எனக்கும் நாத்திகனுக்கும் விளக்கமாச் சொல்லத் தெரியலே. இங்கே பொதுவாக மனுஷங்களுக்கான தெய்வ சிருஷ்டி தான் சூரியன் என்கிற அபிப்பிராயம் உண்டாகுமானால் அந்த அபிப்பிராயத்தைக் களைய முயற்சி பண்றது நியாயமா? அந்த அபிப்பிராயத்தினாலே என்ன ஆபத்து

மனுஷருக்கு ஏற்படுது? சூரியனோட தேஜஸைப் பார்க்கிறப்போ அதுக்கு ஆதி காரணமா அதைவிட மேலானதாக இன்னோரு சக்தி இருக்கிறதாக மனசினாலே மனுஷன் அனுமானிக்கிறான். அப்படி இல்லாம வேறே மாதிரியாக அனுமானிக்கிறதுக்கு புரியத் தக்க எந்த சங்கதியும் நாத்திகன் சொல்றதும் இல்லே. இப்படி இருக்கிறப்போ நாத்திகனோட அபிப்பிராயத்தை ஏத்துக்கிடுறது எதுக்கா? சயன்ஸ் சாஸ்திரங்களைக் கொண்டு சூரியனோட கோள அமைப்பையும் வெப்ப சக்தியையும் ஆகர்ஷண சக்தியையும் பத்திக் குறைவாகத்தான் தெரிஞ்சிக்க முடியும். மேலும், அப்படி ஒரு கோளம் இந்த பூமியையும், அதிலுள்ள உயிர்களையும் இப்படிக் காப்பாத்தணும்னு எதுக்காக உண்டாச்சி, எப்போ உண்டாச்சி, எதுக்காக பூமிக்கு இவ்வளவெல்லாம் நன்மைகள் செய்துக்கிட்டு நிக்குதுன்னு சயன்சினாலே அறிய முடியலே. எவலூஷன் என்கிற உற்பத்தி முறைப்படி காரண காரியங்களைச் சொல்லிக் கொண்டே போனால் கடைசியிலே ஒரு கட்டத்திலே எவலூஷன் உண்டான பிரச்னைக்கான ஒரு பதில் கிடைக்காம நிறுத்த வேண்டி வரும் என்பதிலே சந்தேகமில்லே. விவகாரம் இப்படி இருக்க கடவுள் உண்டுன்னு நினைக்கிறதுதானே சரியான நினைப்பு? வெப்பம், குளிர், மழை, காற்று முதலான பிரபஞ்ச சாட்சிகளாய் மறை முகமாக விளங்கும் பெரும் சக்திகளெல்லாம் அததுகளின் செயல்களை இந்த இகலோகவாசிகளின் சுகத்துக்கும் நல்லதுக்கும் ஏத்தபடி இவ்வளவு சரியாகத் தானாகவே செய்து வருதுன்னு ஊகிக்கிறதைவிட, அந்த சாதனங்களை இவ்வளவு சரியாக முறைப்படி நடத்திவரத் தூண்டுகோலாக ஒரு பெரும் சக்தி இருக்குன்னு நினைக்கலாமில்ல?

பசு என்கிறது சாதாரண புத்தி சூன்யமான ஒரு பிராணி; தன்னோட வயித்தை நிரப்புறது ஒண்ணு தவிர வேறே எந்தக் கவலையும் இல்லாத மிருகம். அது கன்னுக்குட்டியை ஈன்றதும் காண்பிக்கிற உணர்ச்சிகளைப் பத்தி யோசிச்சிப் பாருங்க. எப்படிப் பிரசவம் சமயம் வரைத் தன்னோட வயித்திலே ஒரு பகுதியாக்கிக்கிட்டு வாழ்ந்து கொண்டிருந்ததுன்னும், எப்படித் தன்னோட மூத்திர

துவாரத்தின் வழியே வெளியே வந்ததுன்னும் அந்தப் பசுவுக்கு அந்த நிமிஷம் வரைத் தெரியாது. வெளியே கன்று வந்து விழுந்த உடனேயே அதுகிட்ட இந்த சாதுவான மிருகம் காண்பிக்கிற வாத்சல்யத்தையும், அதனோட பாது காப்புக்கு வேண்டி அந்த பசு செய்கிற பிரயத்தனங் களையும், உற்சாகத்தையும் கண்டால் எவ்வளவு அதியற் புதமாத் தெரியுது! இந்தச் சங்கதிகளையெல்லாம் நாத்தி கர்கள் வேறே விதமாச் சொல்லுவாங்க. ஆனால் அவங்க சொல்றதையெல்லாம் நான் ஒருபோதும் ஒத்துக்க மாட்டேன். விசேஷ புத்தி இல்லாம எல்லா மிருகங்களும் தங்களோட அந்தந்த இனங்களிலே உயிரினங்கள் பல்கிப் பெருகிக் கொண்டிருப்பதற்காகத் தற்போது கண்கூடாகப் பார்க்கிறப்போ இந்தப் பிரபஞ்சத்தை நிலைக்கச் செய்கிற துக்காக ஒரு மகாசக்தி இருக்குங்கிறதிலே வாதம் ஏற்படுறது தேவைதானா? அப்படியான சக்தியோட சூட்சும சுபாவங் களைப் பத்தி எதுவும் எனக்குத் தெரிஞ்சிக்க முடியலேன் னாலும் இருக்குங்கிறதைத் தெரிஞ்சிக்க முடியும், அந்த மகாசக்தியை நான் தெய்வம்னு அனுமானிக்கிறேன். இந்தப் பிரபஞ்சத்திலே இருக்கிற துக்கங்களைப் பத்தி நீங்க இவ்வளவெல்லாம் சொன்னீங்களே, சுகங்களைப் பத்தி யோசிச்சிப் பாருங்க. ஒவ்வொரு வருஷத்திலே மழை இல்லாம தாகத்தினாலே வேகும் இடங்கள் எத்தனைன்னு ஒரு கணக்கெடுத்தால் பூமியோட லட்சத்திலே ஒரு பங்கா வது இப்படித் தவிக்கிறதைப் பார்க்க முடியுமா? சந்தேகம் தான். இந்த உலகத்திலே எதார்த்தமாய் நிகழ்கிற ஆபத்துக் களையும், எதிர்பார்க்காம வர்ற ஆபத்துக்களையும் இரண் டையும் ஒண்ணு சேர்த்துப் பாருங்க. காலரா, சீக்கு சில சமயங்களிலே இடத்திலே பாதிச்சி மனுஷங்களைக் கொல்லுது. லட்சம் பேர் வசிக்கிற ஒரு இடத்திலே இந்த சீக்கு வந்து பீடிச்சா எத்தனை பேர் சராசரியா சாதாரணமா அழிஞ்சி போறாங்கன்னு கணக்குப் பாருங்க. இந்த சீக்கு இவ்வளவு விரைவாகத் தாக்கி நாசத்தை உண்டுபண்ணி னாலும், ஒரு தடவை இந்தியாவிலோ வேறெங்கோ ஜன நெருக்கடியான பகுதியிலே கணக்கெடுத்த சமயத்திலே குழந்தை முதல் கிழடு வரை சகலரும் செத்துட்டாங்களா

என்ன? நாட்டிலே ஆளில்லாம ஆயிரிச்சா? ஏன் அப்படி சாதாரணமா நடக்கிறதில்லே? ஓடுகிற கப்பல்களிலே வருஷா வருஷம் எத்தனை முழுகிப் போயிருக்கு? எத்தனை பேர் குடிக்கத் தண்ணி இல்லாம நீங்க சொல்றது போலத் தங்களோட சிநேகிதங்களோட கழுத்தைக் கடிச்சி ரத்தம் குடிச்சி தாகத்தை தனிச்சிக்கிட்டாங்க? இதையெல்லாம் நுணுக்கமா யோசிச்சிப் பார்த்தா பிரபஞ்சத்திலே இருக்கிற உயிரினங்களுக்கு சாதாரணமா கிடைக்கிற சுகங்கள் முடிவில்லாம இருக்க முடியாதுன்னு நினைப்பூட்டுறதுக் கோன்னு தோணும். சில சமயங்களிலே சில கஷ்டங் களைப் பார்க்கிறோம்னாலும், மொத்தத்திலே எல்லா உயிர்களுக்கும் இந்தப் பிரபஞ்சத்திலே அமைஞ்சிருக்கிற இருப்பிடம் போல சுகமானது வேறே எதுவும் இல்லேன்னு சுலபமாத் தெரிஞ்சிக்க முடியும். நான் இதைப் பத்தி இனி அதிகம் சொல்ல மாட்டேன். அதியுன்னதமான வசதி களோடு விருப்பப்படி சர்வ போகங்களையும் பிரயாசைப் படாம அனுபவிச்சி சுகத்திலே மயங்கிக் கிடக்கிற மகா ராஜாவுக்கும் அன்றாடம் கூலி வேலை செஞ்சி ஆகாரம் மட்டுமே சாப்பிட்டுக்கிட்டு குடிசையிலோ கூடாரத் திலோ வாழ்நாளைக் கழிக்கிற தரித்திரனான ஒருத் தனுக்கும் இந்த பூமியிலே இருப்பதற்கான தாத்பரியம் ஒரே மாதிரித்தான் இருக்குது. எவ்வளவு வயசானாலும் மரணம் என்கிற பெரிய சங்கடம் இவங்க ரெண்டு பேருக்கும் ஒரே மாதிரி யான உணர்வைத்தான் உண்டாக்குது. அதிலுள்ள காரணங் களை யோசிச்சால் எளிதாப் புரியும். இந்த மகாராஜா வுக்கும் இந்த தரித்திரனுக்கும் பல முக்கியமான விஷ யங்களிலே ஒரே மாதிரியான சுகங்களைத்தான் தெய்வம் கொடுத்திருக்கு என்கிறதுதான் அதுக்குக் காரணம். தூக்கம் முழிச்சி மகாராஜா கண்ணைத் திறக்கிறப்போ அதியுன்ன தமான மாடமாளிகையின் உப்பரிகை வழியே உள்ளே நுழைவதும், தன்னுடைய தங்கமயமான கட்டிலின் மேலிருந்து தொங்கும் தங்க ஜரிகைத் திரைகளினூடே சிவப்பும் பொன்னிறமும் கலந்து காணப்படுவதுமான இளஞ்சூரியனின் ஒளிக்கதிர்களை மகாராஜா எப்படிப் பார்த்து ஆனந்திக்கிறானோ அதே போலத்தான் பரம

ஏழையும் அந்த ஒளிக்கதிர்களைத் தன்னோட வாசலிலுள்ள வாழைக் கூட்டங்களினூடே ரொம்ப அழகாய்ப் பிரகா சித்துப் பிரகாசித்து வருவதைக் கண்டு ஆனந்தப்படுகிறான். இங்கே அந்த ஒளிக்கதிர்கள் உயிரினங்கள் எல்லாத்துக்கும் ஒரே மாதிரி மகிழ்ச்சியைத் தருது. அலங்காரமான தங்கத் தாம்பாளங்களில் குவிச்சி வச்சிருக்கிற அதிருசியான பலவித உணவுப்பண்டங்களைக் கட்புலன், செவிப்புலன், தொடுபுலன் ஆகியன சார்ந்து ஏக காலத்திலே ஆடல், பாடல், மெல்லிளம் காற்றுன்னு சகல வசதிகளோடு ரசித்தபடி சாப்பிடும் ராஜாவுக்கு சாப்பிட்டு முடிந்ததும் உண்டாகும் திருப்திதான் இந்தப் பரம ஏழைக்குப் பழைய சோறு உண்டும், தண்ணீர் குடித்தும் வயிறு நிரம்பினால் உண்டாகிறது. ராஜாவுக்குத் தன்னோட மலர்மஞ்சத்திலே படுத்துத் தூங்கறப்போ உள்ள நிம்மதிதான் இந்த ஏழைக்குத் கோரம்பாயிலே படுத்துத் தூங்கும்போதும் உண்டாகிறது. அதனாலே இந்தப் பிரபஞ்சத்திலே உயிரினங்களுக்கு சுகத்தை உருவாக்கின தான ஏற்பாட்டை நோக்கும்போது இந்தப் பிரபஞ்சத்துக்கு ஆதாரப் பொருளாகி, பிரபஞ் சத்தைத் தாங்கி நிலைநிறுத்தறதான ஒரு மகாசக்தி இருக்கு என்கிறதிலே விவாதம் உண்டாக முடியாது.

சித்தப்பா சொல்றபடியான சங்கடங்கள் சில சமயங் களிலே ஏற்படுதுன்னாலும் உலகத்திலே இன்ப துன்பங் களோட அடிப்படையிலே ஒரு கணக்கு எடுத்தால் இன்பம் தான் எவ்வளவோ அதிகமா இருக்கும்னும், அதுக்கான காரணம் சந்தேகமில்லாம நமக்கு விவரமாத் தெரிஞ்சிக்க முடியாத ஒரு மகாசக்திதான்னும், அந்த மகாசக்தியை நான் தெய்வம்னு சொல்லி பக்தி செலுத்தறேன்னு மட்டும் நான் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: இனி இந்த சங்கதியைப் பத்திப் பேசினது போதும். வேதாந்த வாதம் செய்ய நமக்கு யாருக்கும் எதுவும் தெரியாது. முதல்லே நான் இதைப் பத்திச் சின்னப் பையன் களான உங்களோடப் பேசிப் பேசித் தப்புப் பண்ணிட்டேன்னு எனக்குத் தோணுது.

கோவிந்தன்
குட்டிமேனோன்: இதுதான் அண்ணாச்சியோட அபிப்பிராயமாக்கும், நாங்க இவ்வளவு சொன்ன பிறகும்?

கோவிந்தப்பணிக்கர்: என்ன நீங்க சொல்லிட்டீங்க? ரெண்டு பேரும் ரொம்ப அசட்டுத் தனமா பேசுனீங்க. உங்களுக்கு மதங்களைப் பத்தி என்ன தெரியும்? உங்ககிட்ட இப்படியெல்லாம் பேசினது என்னோட அசட்டுத் தனம். மத நம்பிக்கையும், பெரிய வங்க மேலே நம்பிக்கையும் உங்க ளுக்கு இல்லாமப் போயிரிச்சி. மாதவனுக்குக் கடவுள் இருக் கிறதாக நம்பிக்கை இருந்தாலும் அந்த நம்பிக்கையோட தன்மை யையும் போக்கையும் பார்க்கி றப்போ, மாதவனுக்கு நாத்தி கனான கோவிந்தன்குட்டியைவிட எந்தவிதமான ஒரு பக்தியும் நம் பிக்கையும் பயமும் கடவுள்மேலே இருக்கிறதாக எனக்குத் தோணலே. இனி நாம படுத்துத் தூங்கலாம். இங்கேயே படுங்க.

கோவிந்தப்பணிக்கரும் மாதவனும் கோவிந்தன்குட்டி மேனோனும் அந்த வெண்மாடத்திலேயே தூங்குவதற் காகப் படுத்தார்கள். இந்துலேகாவைப் பற்றிய விஷயங் களைக் குறித்துப் பலவாக அவனுக்குக் கேட்க வேண்டும் போல் இருந்தது. தந்தையுடனும் கோவிந்தன்குட்டிமேனோ னுடனும் இதைப் பற்றிப் பேச வெட்கப்பட்டு மாதவன் எதுவும் பேசவில்லையென்றாலும், கோவிந்தப்பணிக்கர் இந்துலேகாவின் வருத்தத்தைப் பற்றியும் நம்பூதிரிப்பாடின் நடவடிக்கையைப் பற்றியும் மாதவனுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். சிறிது நேரம் இப்படிப் பேசியதில்

பொழுது கழிந்தது. அப்படி இருக்கும்போது கோவிந்தன் குட்டி மாதவனிடம் ஒரு கேள்வி கேட்டார்.

கோவிந்தன் குட்டிமேனோன்: இந்தத் தடவை காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்துக்கு உன்னோட நண்பர்களான பாபுமார்கள் வரலாம். பாபு கோவிந்தசென்னும் சித்ரப்பரசாதசென்னும் மத்தவங்களும் காங்கிரசோட வெற்றிக்கு வழிபண்ண உற்சாகத்தோட வருவாங்கன்னு தோணுது. இந்த விஷயத்தைப் பத்தி அவங்க உன்கிட்ட குறிப்பிட்டு ஏதாச்சும் செய்யச் சொன்னாங்களா?

மாதவன்: என்கிட்ட ஒண்ணும் சொல்லலே. காங்கிரஸ்லே நாட்டம் உள்ளவர் தான் பாபு கோவிந்தசென். நான் அவரோடு தங்கியிருந்தப்போ ஒரு நாள் ஒரு கூட்டம் அவரோட பங்களாவிலே வச்சி நடந்தது. அன்னிக்கு நானும் அதிலே கலந்துக்கிட்டுப் பேசினேன்.

கோவிந்தப்பணிக்கர்: இங்கிலீஷ் ராஜாவோட ஆட்சியினாலே நமக்குச் சில நன்மைகள் ஏற்பட்டிருக்குன்னாலும் பல உபத்திரவங்களும் ஏற்பட்டிருக்குன்னும், அதைத் தடுக்கணும்னும் இப்போ நம்ம நாட்டுக்காரங்க ஒரு கூட்டம் கூடி வருஷம்தோறும் பிரசங்கம் பண்ணிக்கிட்டு வர்றாங்கன்னும் மத்ததும் நான் கேள்விப்பட்டிருக்கேன். இந்தக் கூட்டத்தைப் பத்தித்தான் கோவிந்தன்குட்டி சொல்றியா?

மாதவன்: ஆமாம்.

கோவிந்தன் குட்டிமேனோன்: ஆமாம், அந்தக் கூட்டத்தைப் பத்தித் தான். இந்த காங்கிரஸ் கூட்டம் இந்தியாவோட இப்போதைய நிலைமைக்குக் கொஞ்சம்கூடப் பிர யோஜனமில்லே. ஒரு சொரத்தும் இல்லே—வெட்டிக் கூட்டம்னு நான் நினைக்கிறேன்.

மாதவன்: இது பெரிய அபாண்டம். சித்தப்பா வோட வேகம் கொஞ்சம் அதிகம் தான். காங்கிரஸ் என்கிற மகா சபை என்னன்னும், அதனோட நோக்கங்கள் என்னவெல்லா முன்னும் அப்பாவுக்கு சரியாப் புரிய வச்ச பிறகுதானே அதனாலே ஏற்படுற பிரயோ ஜனத்தைப் பத்தி உங்களுக்குள்ள அபிப்பிராயத்தைச் சொல்லணும்? அந்த சபையோட தன்மையும் நோக்கமும் இன்னதுதான்னு சொல்லுங்க.

கோவிந்தன் குட்டிமேனோன்: ஓ! சொல்றேன். அண்ணாச்சி கேளுங்க. இங்கிலீஷ் படிச்சிட்டு நல்லா இங்கிலீஷ் பேசற சில பணக்கார இந்துக்களும் முஸ்லீம் களும் இங்கிலாந்திலே இருக்கிற கவர்ன்மென்ட் மாதிரி இந்தியா கவர்ன்மென்ட்டை ஆக்கிடணும் கிற எண்ணத்தோடு எந்த அதிகா ரமும் இல்லாமத் தாங்களாகவே ஒரு குழுவாகப் பரஸ்பரம் துதி பாடியும் பெருமை பேசியும் வெட்டியா முழக்கம் பண்ணியும் பொழுது போக்குற ஒரு கூட்டம்தான் காங்

கிரஸ் சபை. எந்த நிலைமையிலும் ஆங்கிலேயருக்கு நம்ம இந்தியருங்க இன்னும் சமதையாகலே. சமமா வர முயற்சி பண்ணினால் எளிதா சாதிக்க முடியறதும் எவ்வளவோ பிரயோஜனமுள்ளதுமான வேறே பல காரியங்கள் இருக்கு. அதிலே எதுவும் முயற்சி செய்யாமல், எல்லாத்திலேயும் முதன்மையா இருக்கிறதுக்காக ரொம்ப முயற்சியினாலே ஆகக்கூடிய ஒரு பெரிய காரியத்தை உத்தேசிச்சி அனாவசியமா செய்கிற முயற்சிதான் இது என்கிற நிலையிலே எந்தவித சந்தேகமும் இல்லே. ஆங்கிலேயருக்கு இப்போ கிடைச்சிருக்கிற சுதந்திரங்களெல்லாம் இப்படி காங்கிரஸ் மாதிரிக் கூட்டம் போட்டுக் கிடைச்சதில்லே. முதலாவது, சுதந்திரத்துக்கு இவ்வளவு ஆசைப்படுற இந்த உள்ளூர்ப் பேச்சாளர்கள் 'கடாபுடா'ன்னு இங்கிலீஷிலே முழக்கம் செய்கிறதெல்லாம் தீவிரமாகச் சிந்திக்க முடியாமதான்னு எனக்குத் தெளிவாத் தெரியுது. இவங்க உண்மையிலேயே இவ்வளவு சுயஜாதி அபிமானமும் சுதந்திர வேட்கையும் உள்ளவங்களா இருந்தால் முதல்லே ஒரு அன்னிய ராஜாவுக்குக் கீழே எதுக்காக இவங்க இருக்காங்க? யுத்தம் பண்ணி இந்த இங்கிலீஷ் காரங்களை விரட்டட்டும். பாபு மார்கள் ராஜ்யத்தை ஆளட்டும். இப்போ இங்கிலாந்து ராஜ்யத்தை

ஜெர்மன்காரங்க பிடிச்சா, இங்கி லீஷ்காரங்க காங்கிரஸ் மாதிரி கூடி அவங்களோட ஆட்சிக்கான நன் மைக்காக ஒவ்வொரு தயவு வேண்டி ஜெர்மன்காரங்ககிட்டக் கெஞ்சுவாங்களோ? மாட்டாங் கன்னு நான் நினைக்கிறேன். யுத்தம் பண்ணி ஜெர்மன்காரங் களைத் தோற்கடிச்சி விரட்டத்தான் பார்ப்பாங்க. அதை சாதிச்சி முடிக்கிற வரைக்கும் அவங்க அந்த முயற்சியை செஞ்சிக்கிட்டுத்தான் இருப்பாங்க. 'தேசாபிமானம் இருந் தால் அப்படித்தான் செய்யணும். அபிமானம் இருக்கிறதாகச் சொல்லிக்கிட்டுக் கெஞ்சுறது அழகா? பணம், சக்தி, அதிகாரம், ராஜாங்கம் எல்லாமே இங்கிலீஷ் காரங்க கிட்ட இருக்கிறப்போ அவங்களுக்கு எதிரா புலம்புற திலும் கூப்பாடு போடுறதிலும் என்ன பிரயோஜனம்? இந்து, முகம தியர் என்கிற இந்த ரெண்டு பிரி வினரை இங்கிலீஷ்காரங்க ஒரே மாதிரி அடிமைப்படுத்தி வச்சிருக் காங்க. இந்த நிலையிலே நாம இவ்வளவு பெரிய நாடகம் எதுக் காக நடிக்கணும்? பணமில்லே, தைரியம் இல்லே, சரீர மிடுக்கு இல்லே, ஒற்றுமை இல்லே, சத்தியம் இல்லே, உதார குணம் இல்லே, சமூக பலம் இல்லே, படிப்பு இல்லே, அறிவு இல்லே, உற்சாகம் இல்லே— இப்படி இருக்கிறவங்க முதல்ல இந்தியாவுக்குப் பார்லிமென்ட்

உண்டாக்குறதுக்கு எதுக்காக முயற்சி பண்ணணும்? ஒரே இனமாய் ரொம்ப ஒற்றுமையாய் இருக்கிற இங்கிலீஷ்காரங்களே பார்லிமெண்ட் சபையை சரியாக நடத்திவரக் குழம்புறாங்க. அப்படி யிருக்க, இந்தப் பதினாயிர வகை மதக்காரர்களும் ஒருத்தருக் கொருத்தர் கீரியும் பாம்பும் போல விரோதிகளான பல பிரிவின ரான இந்தியர்களையெல்லாம் கொஞ்சம் இங்கிலீஷ் படிக்சிக் கிட்டுக் கூச்சல் போடுற தாடிக்கார பாபுமார்களும் அய்யர்களும் முதலியார்களும் சேர்ந்து பார்லி மெண்ட் மாதிரியான சபையைக் கூட்டிப் பரிபாலனம் செய்ய முடியும்னா உத்தேசம்? இவ்வளவு அசட்டுத்தனமான யோசனை வேறெதும் இல்லே. துப்பாக்கிக் குண்டுக்கு இரையாகிப் போயிடு வோம்னு இருக்கிற ஒரு பயத்தி னாலும் இயலாமையினாலும்தான் இங்கிலீஷ்காரங்க வந்த பிறகு இமயமலையிலேருந்து ராமேஸ் வரம் வரையிலான ஜனங்கள் பரஸ்பரம் இவ்வளவு ஒட்டுறவா இருக்கிறாங்க. இந்த இங்கிலீஷ் காரங்க நாளை இந்தியாவை விட்டு போயிட்டால் அப்போ தெரியும் பாபுமார்களுடைய மிடுக்கும் ஒரு நிமிஷமாவது இந்த வாய்ப்பந்தல் காரங்களாலே நாட்டைக் காப்பாத்த முடியுமா? முதலாவது, இவங்களுக்கு வாய்ப் பேச்சு

பேசறப்போ தெரிகிற இந்த அபிமானம் இயல்பாகவே இருந் திருக்குமானால் இவங்க இப்போ கிடைக்கணும்னு ஆசைப்படுற பல பதவிகள் இதுக்கு எவ்வளவோ முன்னாலேயே இவங்களுக்குக் கிடைச்சிருக்கும். உண்மையிலே இவங்களுக்கு எந்த தைரியமும் மனோதிடமும் உற்சாகமும் பொறு மையும் இல்லே; எல்லாம் கூப்பாடு போடணும். இங்கிலீஷிலே பிர மாதமா பிரசங்கம் பண்றதா பேர் வாங்கணும். இதெல்லாம்தான் இவங்களுக்குள்ளே இருக்கிற பெரிய ஆசை. இங்கிலீஷ் கவர்ன் மெண்ட் இப்போ நடக்கிறபடியே இருந்துக்கிட்டு இந்தியாவிலே மேலும் ஒரு தலைமுறைக்குக் காலத் துக்கு ஏத்தபடி சின்னச் சின்ன மாறுதல்களையும் சீர்திருத்தங் களையும் செய்துகிட்டே இருந்தால் அதுவே போதுமானது. இந்தியா விலே இப்போ இருக்கிற கணக்கில்லாத, வெட்கப்படும் படியான பழக்கவழக்கங்களை சரி பண்ணியாகணும். எதுக்காக அதையெல்லாம் விட்டிட்டு முதல்லே ராஜ்ய பரிபாலன விஷ யத்திலே இவங்க அக்கறை செலுத் தணும்? முதலாவதாக இந்த ஜாதி பேதங்களை இவ்வளவு அதிகம் தேவையில்லாம ஜனங்களோட முன்னேற்றத்துக்கு இடைஞ்சலோ குறுக்கே வர்றதைக் களையறதுக்கு முயற்சி செய்ய வேண்டாமா?

இந்திய நாடு போகப்போக வறு மையிலே சிக்கிக்கிடுறதைத் தடுத்து நிறுத்த அண்டை நாடுகளோடு வியாபாரம், விவசாயம், கைத் தொழில்கள், இயந்திரத் தொழில் கள் முதலானதை இந்தியர்கள் கத்துக்கிட முயல வேண்டாமா? பெண்களுக்குத் தடையில்லாம படிப்புச் சொல்லித் தர முயற்சி செய்ய வேண்டாமா? நம்முடைய சில வீட்டு நடைமுறை களையும், ஒத்துவராத பழக்க வழக் கங்களையும் மாற்றிக் கொள்ள வேண்டாமா? எவ்வளவு காலமாக புகைவண்டி, டெலிகிராப் முத லான பல அற்புதமான கருவிகள் இந்தியாவிக்கு வந்திருக்கு! இந்த மாதிரியான இயந்திரங்களை உண்டாக்கவும் உபயோகிக்கவும் தெரிந்து கொள்ள இந்து—முஸ்லீம் களுக்கு முயற்சி வேண்டாமா? ஐரோப்பாவிலே இருக்கிற பெரிய நாடுகளிலே இப்படிப்பட்ட பல வகையான கல்வியைப் படிக் கிறாங்க இல்லையா? நமக்கு இரும் பினாலே நல்லதா ஒரு சக்கரம் வேணும்னா இங்கிலாந்திலிருந்து தானே வரவழைக்கிறோம்? ஒரு இரும்புச் சங்கிலி வேணும்னாலும் அங்கேருந்து தானே வரவழைக் கிறோம்? நல்ல ஒரு ஊசி வேணும் னாலும் இங்கிலாந்திலேருந்து தானே வரவழைக்க வேண்டி யிருக்கு? ஊசி முதல் போர்க் கப்பல் வரையிலான சகல

சாதனங்களும் நல்லதாக் கிடைக்கணும்னா நமக்கு இங்கிலாந்திலேருந்துதானே வரவழைக்க வேண்டியிருக்கு? இது நம்ம ஊர்க்காரங்களுக்கு அவமானமில்லையா? இந்த மாதிரியான பல காரியங்களிலும் இந்தியாவை இங்கிலாந்துக்கு சமமா கொண்டு வர்றதுக்குத்தானே முதல்லே முயற்சி பண்ணணும்?

பொதுமக்களுக்கு சுயராஜ்ய ஆட்சியிலே சுதந்திரம் கொடுக்க வேண்டியது இந்த மாதிரி நிறைய நிறையக் காரியங்களிலேதான். இப்போ இந்தியாவிலே பிரத்யட்சமா வெட்கக் கேடாகத் தெரிகிற பலவிதமான வீழ்ச்சிகளையும் அறியாமைகளையும் தவறுகளையும் நீக்கி சீர்திருத்த வேணுமில்ல? இந்த மாதிரி சீர்திருத்தம் எதுவும் செய்யாம இந்த ராஜாங்க விஷயங்களில் முதல்லே பிரவேசிச்சி சில ஆளுங்க எல்லாம் சேர்ந்து கூப்பாடு போட்டால் யாரு மதிப்பாங்க? மத்த எல்லா சங்கதிகளிலும் பாராமுகமாய் இருக்கிற இவங்க இந்த ஒரு சங்கதியில் மட்டும் தலையை நுழைச்சி முழக்கம் போட்டால் உருப்படுறது கஷ்டமில்லையா? எனக்கு இந்தக் காங்கிரசைப் பத்தி ரொம்பக் கேவலமாத் தோணுது. சர் லப்பல், க்ரிபின் முதலான பல துரைமார்கள் இந்தியர்களைப் பத்தி ஒவ்வொரு சமயம் பண்ற பிரசங்கங்களைக் கேட்கறப்போ எனக்கு வெட்கமா இருக்கு. பல விஷயங்கள் அவங்க சொல்றது சரியாகத்தான் இருக்கு. பல ஸ்திதிகளிலே நம்ம நிலைமை ரொம்ப வெட்கப்படுற மாதிரித்தான் இருக்கு. இதையெல்லாம் மூடி மறைச்சி ராஜாங்க காரியத்திலே மட்டும் இங்கிலீஷ்காரங்களோடு சமதையாகணும்னு ஆசைப்பட்டால் அது நடக்குமா? இந்த மாதிரி சபை உண்டாகிறதனாலே வீண் குழப்பமும் பண நஷ்டமும்தான் பலன்னு நான் சொல்றேன்.

கோவிந்தப்பணிக்கர்: கோவிந்தன்குட்டி சொல்றது சரிதான். இதிலே நான் கோவிந்

தன்குட்டியோடு ஒத்துப்போறேன். இப்போ நடக்கிற அரசாங்கம் முன்னே இருந்ததைவிட ரொம்ப நல்லா இருக்கு. இப்போதைக்கு இது போதும். ஆனால் ஜாதிபேதம் இல்லாம ஆக்கணும்கிற ஒரு அசட்டுத்தனம் கோவிந்தன்குட்டி சொன்னதிலே நான் உடன்பட மாட்டேன்.

கோவிந்தன் குட்டிமேனோன்: அதை நான் வற்புறுத்தலே. ஆனால் அரசாங்க நிர்வாகம் விஷயமா நான் சொன்னது அண்ணாச் சிக்குப் புரிஞ்சதில்ல?

கோவிந்தப்பணிக்கர்: என்ன மாதவன் ஒண்ணும் சொல்லலே?

மாதவன்: எனக்கு எதுவும் பேசத் தோணலே. முழுமையா படிச்சி முடிச்சி பி.ஏ. பாசான சித்தப்பா இப்படி சம்பந்த மில்லாமப் பேசின வருத்தம்தான் எனக்கு இப்போ இருக்குது.

கோவிந்தன் குட்டிமேனோன்: சம்பந்தமில்லாம நான் எதுவும் பேசலே. எது சம்பந்தமில்லாத துன்னு சொல்லு.

மாதவன்: சொன்னது எல்லாமே அப்படித் தான். மொத்தமே பொருத்தமில் லாதது. முதலாவது இந்தியாவிலே பார்லிமென்ட் அமைக்கிறதில்லே காங்கிரசோட நோக்கம். மேலும், இங்கிலீஷ்காரங்களுக்கு சமதை யானவங்க இந்தியர்கள் என்கிற தாக காங்கிரசில் பொறுப்பாக இருக்கிறவங்க யாரும் சொல்லலே.

இந்தியாவிலே பல சங்கதிகள் சீர்திருந்தணும்னு சொன்னது சரி. ஆனால் அந்தப் குறைபாடுகள் இருக்கிற தனாலே இந்த அரசாங்க நிர்வாக விஷயத்திலே இப்போ பிரவேசிக்கக் கூடாதுன்னு சொல்றது தப்பு. நாட்டுப்பற்றும் அபிமானமும் இருந்தால் இங்கிலீஷ்காரங்களோடு அரசியல் யுத்தம் பண்ணித் திருப்பி வாங்கணும்னும், அப்படிச் செய்தால் மட்டும்தான் அபிமானம் இருக்கிறதாக நினைக்க முடியும்னு சொன்னதும் பெரிய தப்பு. நீங்க ஐரோப்பிய ராஜ்யங்களின் சரித்திரங்கள் பலவும் படிச் சதனாலே இப்படி அபிப்பிராயப்படுறீங்களாக்கும்? இங்கி லாந்து நாட்டின் ஆரம்பக் காலக் கதையை நினைச்சிப் பாருங்க. பிரிட்டீஷ் தீவில் பண்டைக் காலத்திலே இருந்த வங்களை முதல்லே ரோமானியர்கள்போய் ஜயிச்சாங்க. பிரிட்டீஷ் ராஜ்யத்தை தங்களோட ராஜ்யமாக்கிக் கொஞ்ச நாள் வச்சிருந்தாங்க. பிறகு சாக்சன்காரங்களோட காலம் வந்தது. அதுக்குப் பிறகு டேனியர்கள் ஆட்சி. கடைசியிலே நார்மன் ராஜாக்களான பிரெஞ்சுக்காரங்க பிரிட்டீஷ் ராஜ்யத்தைப் பிடிச்சாங்க. அப்படியான கதை ஞாபக மில்லையா? இந்த ராஜாக்கள் ரொம்ப சக்தி வாய்ந்த வங்களாக இருந்ததனாலே அவங்களுக்கு பிரிட்டீஷ்காரங்க அடிமையா அடங்கிக் கிடக்க வேண்டியதாச்சில்ல?

கோவிந்தன் குட்டிமேனோன்: ஒருக்காலும் அடிமையா இல்லே. வெளியிலேருந்து வந்த இந்த ராஜாக்கள் இங்கிலீஷ்காரங்களோடு ஒத்துப்போய் அவங்க இனத்தோடு இணைஞ்சிட்டாங்க. பிரெஞ்சுக்கார நார்மானியர்கள் அவங்க நாட்டுக்குத் திரும்பிட்டாங்க. அது மாதிரி, மகாராணியும் மத்தவங்களும் இங்கே வந்து தங்கி நம்ம கூட்டத்தோட சேர்ந்திருக்கிற வரை ராஜாங்கம் பண்ண எதுக்காக இங்கிலீஷ்காரங்களை அனுமதிக்கணும்?

மாதவன்: சரிதான்; ஒத்துக்கிடுறேன். இங்கிலீஷ்காரங்க இங்கே வர்றதும் நாம அங்கே போறதும் எல்லாம் ஒரே மாதிரிதான். இங்கிலீஷ் ஆட்சி தொடங்கினதாலே நம்ம நாட்டிலே பல மேன்மைகளும் முன்னேற்றங்களும் வசதிகளும் மேலே மேலே பெருகிக்கிட்டு இருக்கிறதனாலே நம்ம காங்கிரஸ்காரங்களோட அபிப்பிராயமும் நோக்கமும் போகப் போக இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டும் இந்தியா கவர்ன்மெண்ட்டும் பரஸ்பரம் இணைஞ்சி ஒண்ணாகணும்னு மாத்திரம்தான். அதுக்காகத்தான் இந்த முயற்சிகளெல்லாம் செய்றது. நார்மன் ராஜாக்கள் எப்படி பிரிட்டீஷ் ராஜாக்களானாங்களோ, அது மாதிரிதான் இங்கிலீஷ் ராஜாக்களும் இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டும் இந்தியாவோட சொந்த ராஜாக்களும் இந்தியா கவர்ன்மெண்ட்டும் ஆகணும்னுதான் நம்ம காங்கிரஸ்காரங்களோட நோக்கமும் ஆசையும். நார்மன்காரர்கள் இங்கிலாந்துக்கு வந்த காலத்தில் பிரிட்டீஷாரும் அவங்களும் ஒருத்தருக்கொருத்தர் கொன்றும் இம்சிச்சும் பொறுக்க முடியாமப் போன பிறகுதான் இணங்கி ஒத்துப்போய் ஒண்ணா ஆனாங்க. இப்போ இருக்கிற கால நிலைமையை அனுசரிச்சி நாமும் இங்கிலீஷ்காரங்களும் கருத்து மோதலாக சண்டை போடுறோம். இங்கிலீஷ்

காரங்களுக்கு நம்ம மேலே இப்போ உள்ளதைவிட அதிக நம்பிக்கையும் அன்பும் மரியா தையும் உண்டாகவும், இங்கிலீஷ் கவர்ன்மென்ட் நம்மையும் இங்கி லீஷ்காரங்களையும் எந்த ஒரு வேறுபாடும் பார்க்காம இருக்கவும் நாம முயற்சி செய்கிறோம். நாம துப்பாக்கியினாலே சுட்டுப் பொசுக்கி இந்தக் காரியத்தை சாதிக்கப் போறதில்லே. பேச்சி லேயே நியாயம் சொல்லி புத்தி சாலிகளான இங்கில்லீஷ்காரங் களை நம்ம பக்கமா இழுக்கப் போறோம். நான் மனசிலே நினைச்ச மாதிரியே நடக்கும்னா, காங்கிரஸ் மாதிரி இவ்வளவு தகுதி யான ஒரு இயக்கம் இதுவரைக்கும் இந்தியாவிலே ஏற்பட்டதில் லேன்னு சொல்லலாம். ஆனால் சில சங்கதிகளை இந்த இயக் கத்தைச் சேர்ந்தவங்க மாற்றிச் சீர் திருத்தணும் என்கிறதை நான் ஒத்துக்கிடுறேன். சில சமயங் களிலே காங்கிரஸ்காரங்களிலே சிலர் அனாவசியமாகவும் தக்க தான காரணம் இல்லாமலும் பிரிட் டீஷ் கவர்ன்மென்ட்டைத் திட்டு றாங்கன்னு தோணலாம். இது மகா கஷ்டம்தான்னு நான் ஒத்துக்கிடு றேன். ஆனாலும் காங்கிரஸ் காரங்களிலே பொறுப்பானவங்க இதுவரைக்கும் நடந்த எந்தப் பிர சங்கத்திலும் இங்கிலீஷ் கவர்ன் மென்ட்டை எந்த விதத்திலும் ஒட்டு

மொத்தமா இகழ்ந்து பேசினதில்லே. ஒவ்வொரு சங்கடம் ஏற்படும்போது அதைத் தீர்த்து வைக்க ஏதாவது பேசத் தேவை ஏற்பட்டிருக்கு. அப்படியிருக்க நீங்க இப்படிக் குறை சொல்லலாமா? இந்தியாவிலே சீர்திருத்தங்கள் செய்றதுக்கான காரியங்களைச் செய்ய வேண்டாம்னு காங்கிரஸ் காரங்க சொல்லலே. பல வியாதிகள் பீடிச்சி முடங்கிக் கிடக்கிற ஒரு நோயாளியோட சகல வியாதிகளுக்கும் சேர்ந் தாப்பிலே ஒரே மருந்தினாலே ஒரே சமயத்திலே சரியாக்கிட முடியாதில்ல. ஒவ்வொண்ணா சரிப் படுத்த வேண்டியிருக்கும். அப்படி இல்லாம, எல்லாத்தையும் சேர்த்து ஒண்ணா சரிப்படுத்துற மருந்து மட்டுமே உபயோகப்படுத்து வேன்னு அந்த நோயாளி முரண்டு பண்ணினால் எல்லா வியாதிகளினாலேயும் நோயாளி தொல்லைப் படத்தான் வேணும். இந்தியாவிலே ஜாதிபேதம் இல்லாமல் செய்ய ஒரு சபை கூட்டப்பட வேண்டிய காலம் இன்னும் வரல்லே. அதுக்கான சமயம் இது இல்லே. கவர்ன்மெண்ட் சட்டங்களைப் போட்டு செம்மைப்படுத்தறது நாளையே நடந்தாலும் அதனாலே நன்மைதான் உண்டாகும். அதிலிருந்து விஷயத்தைச் சொல்றேன். ஜாதின்னு இந்தியாவிலே சொல்றதெல்லாம் ஒவ்வொரு

மதத்தைச் சார்ந்து இருக்குது. அந்த மத நம்பிக்கை ஒண்ணு மட்டும் தான் இந்த இங்கிலீஷ்காரங்களை இன்னமும் இந்தியாவிலேருந்து களைய முடியாம அமைஞ்சிருக்கிற ஒரு தடங்கல்.

கடவுள் நம்பிக்கையும் வழிபாடும் ஒவ்வொரு மாதிரியா இருக்கிறதை அடிப்படையாக்கி ஜாதி இருக்கிறதனாலே அந்த நம்பிக்கையைப் போக்க் முடிஞ்சால் அல்லாது ஜாதிபேதத்தை நீக்க முடியுமான்னு நான் சந்தேகப்படுறேன். அந்த நம்பிக்கையை இந்தியாவிலேருந்து விரட்டணும்னா இந்தியர்களான இந்து-முஸ்லீம்களின் மத நடவடிக்கைகளை ஜெயிக்கிறதான ஒரு வழிமுறையை அவங்களுக்கு எடுத்துக்காட்டி அதிலே பழக்கப்படுத்தணும். அப்படி ஒரு வழிமுறையை உருவாக்க முடியலே. அதனாலே இந்தியாவிலே இருக்கிற மதங்களை அனுசரிச்சி அமைஞ்சிருக்கிற ஜாதிமுறைகளை மாத்த இப்போ முயற்சி பண்ணினால் முடியுமா? சந்தேகம். ஆனால் காலப்போக்கிலே அறிவு அதிகம் வளர்றப்போ ஜாதி சித்தாந்தங்கள் படிப்படியாக் குறையும். கடைசியிலே முற்றாக அழிஞ்சி போகலாம். இந்தியாவிலே இப்போ இருக்கிற நிலைமையிலே ஜாதிபேதம் இல்லாமல் செய்ய முயற்சி பண்றது தப்பாகத்தான் வந்து சேரும்னு நான் நினைக்கிறேன். ஆனால் அரசாங்க நிர்வாக விஷயத்தைக் கொஞ்சம் யோசிச்சிப் பாருங்க. இங்கிலீஷ்காரங்க இமயத்திலேருந்து ராமேஸ்வரம் வரைக்கும் அரசாங்க நிர்வாகம் தொடங்கி இப்போ ஏறத் தாழ ஒரு நூறு வருஷம்தான் ஆகுது. ஆனாலும் ராஜாங்க விவகாரங்களைப் பத்தி ஜனங்களுக்கு இந்த நூறு வருஷங்களுக்குள்ளே எவ்வளவு அதிகம் அறிவும் ரசனையும் ஏற்பட்டிருக்குன்னு நீங்க யோசிச்சிப் பாருங்க. வழியிலே போற கூலிக்காரனோடோ, மீன் பிடிக்கிற ஒரு செம்படவனோடோ பேசிப்பார்த்தால்கூட இப்போதைய வித்தியாசம் தெரியும். அவனுக்கு சிவில் சட்டங்களும் கிரிமினல் சட்டங்களும் தெரிஞ்சிருக்கும்னு நான் சொல்லலே. இங்கிலீஷ் அர

சாட்சியிலே தன்னோட உடம்புக்கும் மனசுக்கும் தேவை யானதைத் தன்னோட விருப்பப்படி குற்றமில்லாத எதையும் பயன்படுத்திக்கிடுற சுதந்திரம் உண்டு என்கிற அறிவு நிச்சயம் அவனுக்கு இப்போ உண்டு. முன்னாலே அப்படி இல்லே. சாதாரணமா இவ்வளவு அறிவு இருந்தால் போதும். சகல சுதந்திர வசதிகளை அனுபவிக்கிற இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் மற்றும் உள்ள சாதாரண ஜன சமுதாயத் திலும் இந்தியாவிலுள்ள பொதுமக்களுக்குள்ள அறிவுதான் இந்த அரசாங்க விஷயத்திலே இருக்கு. சுதந்திர அரசாங் கத்தை விரும்புற பொதுமக்கள் எல்லாருமே க்ளாட்ஸ்ட்டன் முதலானவங்களைப் போல அரசியல் விவகாரங்களை கிர கிச்சிருக்கணும்னு சொல்றது தப்பில்லையா? இங்கிலாந்து மாதிரி இந்தியாவிலேயும் அரசு நிர்வாகம் செய்யணும்னர் பெண்கள் எல்லாரையும் இங்கிலீஷ் படிக்க வைக்கிறதும், அயல்நாட்டு இயந்திரங்களை இங்கே தயாரிக்கிறதும் அவ சியம்னு சொல்றதும் தப்புத்தான்.

இன்னொன்னும் நீங்க சொன்னீங்க, இமயத்திலேருந்து ராமேஸ்வரம் வரையிலான மக்கள் இங்கிலீஷ் ராஜாவுக்கு அடங்கியிருக்கிறதுக்கான காரணம் அப்படி அவங்க இருக்கலேன்னா வெடி வச்சி கண்ணு முழியைத் தோண் டிருவாங்க என்கிற பயத்தினாலேதான்னு. இது ரொம்பத் தப்பான ஒரு அபிப்பிராயம். இங்கிலீஷ்காரங்களோட பலம் இந்தியாவிலே இருக்கிற திருடங்களுக்கும் போக்கிரி களுக்கும் மோசக்காரர்களுக்கும் பயத்தையும், நல்ல ஜனங் களோட மனசிலே மரியாதையையும் ஏற்படுத்தறதுதான்; நாடு முழுவதும் இப்படி அமைதியாக இருக்கிறதுக்குக் காரணமும் இங்கிலீஷ் கவர்ன்மென்ட் நிர்வாகம் பண்ற நேர்த்திதான். ஜனங்களுக்கு இந்த கவர்ன்மென்ட் மேலிருக் கிற பிரியத்தினாலேதான் இந்த அமைதி என்கிறதிலே எனக்கு சந்தேகமில்லே. இதுக்கு முன்னே நமக்கு ஏற் பட்டிருந்த ராஜாக்கள் மாதிரி இங்கிலீஷ் கவர்ன்மென்ட் அநீதியும் அக்கிரமும் காட்டித் தொந்திரவு செய்திருந்தால் இதுக்கு எவ்வளவோ முன்னாலேயே இங்கிலீஷ் கவர்ன்மென்ட் இந்தியாவிலே இல்லாமப் போயிருக்கும். அதிலே சந்தேகமில்லே.

அடுத்ததாக இன்னொண்ணு நீங்க சொன்னது, நம்ம ஆளுங்க இங்கிலீஷிலே பிரசங்கம் செய்றது பெரிய பேச்சாளர்னு பேர் வாங்குறதுக்காகன்னு. அப்படிப் பேர் வாங்கணும்னு அவங்களுக்கு ஆசை இல்லாம இல்லே. ஆனால் அதுக்காக மட்டும்தான் பிரசங்கம் செய்றாங்கன்னு சொல்றதுதான் தப்பு. இந்தப் பிரசங்கங்களெல்லாம் எவ்வளவோ அவசியத் தேவை என்கிறது மட்டுமில்லே, அந்தப் பேச்சுக்களாலே பலவித நன்மைகள் இந்தியாவுக்கு இந்தக் குறுகிய காலத்துக்குள்ளே ஏற்பட்டிருக்கு. ஒவ்வொண்ணா நான் பட்டியல் போட்டுச் சொல்றேன். முதலாவது, நம்ம இந்தியாவிலே நல்ல படிப்பும் திறமையும் உள்ள பலர் இருக்கிறாங்க என்கிற முழு நம்பிக்கை இப்போ இங்கிலாந்திலுள்ள பட்சதாபமற்ற பெரியவங்களுக்கு வந்திருக்கு. இந்த மாதிரியான பிரசங்கங்கள் ஏற்படுத்தின எண்ணம் தான் இது.

இரண்டாவது, இந்த எண்ணம் உண்டானதால் காங்கிரஸ் சபையைக் காப்பாத்தி நிலைநிறுத்தணும்கிற ஆசை பல இங்கிலீஷ்காரங்களுக்கும் உண்டாகி உறுதிப்பட்டிருக்கு.

மூன்றாவது, பிரசங்கங்களோட சிறப்பினாலே இந்தியாவிலுள்ள மேட்டுக்குடி மக்கள் முன்னாலே காங்கிரஸ் மேலே வெறுப்பையோ அலட்சியத்தையோ காட்டினதை மாத்தி காங்கிரசை மதிச்சி அவங்களை காங்கிரஸ்காரங்களாக்கி வச்சிருக்கு.

இப்படிப் பலவிதமான நன்மைகள் இவ்வளவு சீக்கிரத்தில் இந்தியாவுக்கு வேண்டி சம்பாதிச்சது அறிவாளிகளும் சாமர்த்தியசாலிகளும் ஆன பேச்சாளர்களோட சிறப்பான பிரசங்கங்கள்தான். முறைப்படி கொஞ்ச காலம் இந்த காங்கிரஸ் நடந்தால் சந்தேகம் இல்லாம இங்கிலாந்திலே அந்தப் பிரஜைகளுக்கு கவர்ன்மென்ட்டிலேருந்து கிடைக்கிற எல்லா நன்மைகளும் இந்தியாவுக்கும் கிடைக்கும் என்கிறதிலே எனக்கு சந்தேகமில்லே. அப்படியிருக்க, இந்தப் பிரசங்கங்களைப் பத்தி வீணான கூப்பாடுன்னு நீங்க சொல்றது எவ்வளவு பெரிய தப்பு! ஆனாலும் சில சமயங்களிலே இந்த காங்கிரஸ்காரங்களிலே சிலரும் சில

நியூஸ்பேப்பர்களும், காங்கிரஸ்காரங்களோ அவங்க ளோட சினேகிதங்களோ எழுதியிருக்கிற சில புஸ்தகங் களுமாக அனாவசியமாகவும் ஏறுமாறாகவும் இந்தியா விலே இப்போ நடக்கிற கவர்ன்மெண்ட்டைப் பத்தி துஷ் பிரசாரம் பண்றாங்க என்கிறதை நான் ஒத்துக்கிடுறேன். இது ஒரு பெரிய தப்பு. இது இந்தியாவோடேயும் காங்கிர சோடேயும் பெரிய துரதிருஷ்டம்னுதான் சொல்லணும். இது இப்படி வளர்ந்துகிட்டே போனால் காங்கிரசுக்குத் தான் கடைசியிலே நாசகரமானதாகித் தீரும். பெரும் அறிவாளியான சர் ஆக்லண்டு கோல்வின் துரையவர்கள் மிஸ்டர் எ.ஒ.ஹ்யூம் துரையவர்களுக்கு காங்கிரஸ்காரங்க சில சமயங்களிலே இந்தியா கவர்ன்மெண்ட்டைக் குறிச்சி துஷ்பிரசாரங்கள் செய்கிறதைப் பத்தி ரொம்பவும் சாதுர்யமாகவும் அழகாகவும் எழுதிய ஒரு கடிதத்த நான் படிச்சிருக்கேன். பெருமை வாய்ந்த அந்த துரையவர்கள் அந்தக் கடிதத்திலே சுட்டி காட்டியிருக்கிற விஷயங்களைப் படிச்சி நான் வருத்தப் பட்டேன். இப்போ உள்ள இந்தியா கவர்ன்மெண்ட் நமக்குச் செய்ய முடிகிற நன்மையெல்லாம் செய்யணும்னு ரொம்ப ஆதரவோடும் அக்கறையோடும் இருக்கிறப்போ அவங்க அப்படிச் செய்றது விருப்ப மில்லாமலும் கெட்ட எண்ணத் தோடும்தான்னு சிலர் சொல்றது கஷ்டமில்லையா? இங்கிலீஷ் கவர்னர்களும் அரசாங்க அதிகாரிகளும் ரொம்ப பொறுமை குணமுள்ள வங்களாக இல்லேன்னா இப்படியான அவமானகரமான குற்றச்சாட்டுகளைக் கேட்டு அவங்க எப்படிப் பொறுத் துக்குவாங்க? நம்மகிட்ட எப்படி நட்பு காட்டுவாங்க? இந்த வகையான சில குறைபாடுகள் நம்ம சில ஆளுங்களுக்கு இல்லேன்னா காங்கிரஸ் இதுக்கு முன்னமேயே இதைவிட பலமுள்ளதாக ஆகியிருக்கும்.

லார்டு டஃப்ரின் என்ற பிரபு கவர்னர் ஜெனரலா இருந்த காலத்திலே முதல்லே அவருக்கு காங்கிரஸ்மேலே ரொம்பப் பிடித்தமாக இருந்தது. கடைசியிலே கவர்ன் மெண்ட்டைப் பத்தி காங்கிரசிலே சில பேர் அனாவசிய மாகவும் பொருத்தமில்லாமலும் குற்றங்கள் சொன்னதைக் கேட்டுக் கேட்டு அவர் கோப்பப்பட நேர்ந்தது. என்னோட

எப்போதும் தீராத சிந்தனையும் கடவுள்கிட்ட செய்கிற பிரார்த்தனையும், நம்ம இந்த காங்கிரஸ்காரங்க இப்போ இந்தியாவோட அதிருஷ்டத்தினாலே கிடைச்சிருக்கிற இந்த இங்கிலீஷ் கவர்ன்மென்ட்டை அனாவசியமாகவும் சம்பந்த மில்லாமலும் பொய்யாகவும் இகழ்ந்து பேசாமல் இந்தியா வோட முன்னேற்றத்துக்கு வேண்டியதான முயற்சிகள் செஞ்சி இந்தியாவை இங்கிலாந்து மாதிரி சுதந்திரமுள்ள நாடாக ஆக்கி வைக்கணுமே என்கிறதுதான். இப்போதைய கவர்ன்மென்ட்டை அனாவசியமாகவும் பொய்யாகவும் இகழாமல் இருந்து இந்தக் காரியத்தை முடிக்கிறதுக்குப் பல வழிகள் எனக்குத் தெரியுது. இந்தியர்களுக்கு நன்மை செய்யக்கூடாதுன்னோ, இந்தியர்கள் எப்பவும் இங்கிலீஷ் காரங்களின் அடிமைகளாக இருக்கணுமுன்னோ இங்கி லீஷ் கவர்ன்மென்ட்டுக்கு எந்தக் காலத்திலும் நினைப் பில்லே. அது வெளிப்படையாகத் தெரிஞ்சதுதான். அவங் களோட எண்ணம் மாறானதாக இருந்தால் நமக்கு அவங்க மாதிரியான படிப்பும் அறிவும் ஏற்படுத்தித் தர, கடந்த நூறு வருஷங்களா இவ்வளவெல்லாம் அவங்க ஆர்வமா இருந் திருக்க மாட்டாங்க. அதனாலே அவங்களோட நோக்கம் நம்மை அவங்களைப் போலத் தகுதியானவங்களாக ஆக்க ணும்கிறதுதான்னு குழந்தைகளுக்குக்கூடப் புரியும். ஆனால் அதுதான் அவங்களோட நோக்கம்னு தெரிஞ்சிக் கிட்டு நம்மில் படிப்பும் அறிவும் இருக்கிறவங்க நன்மைகள் தானாகவே வரும்னு தீர்மானிச்சி அசட்டையாக இருக்கக் கூடாது. நம்ம நிலைமை மேலே மேலே நல்லா மேம் பாடடைய நியாயமான வகையில் எல்லா முயற்சிகளும் எப்போதும் செய்து வரணும். அதுக்காகத்தான் இந்த காங்கிரஸ் சபை ஏற்பட்டிருக்கு. இப்படி ஒரு சபை ரொம்பத் தேவையானதுதான். கவர்ன்மென்ட் செய்கிற எல்லாக் காரியங்களும் இந்தியாவுக்குக் கெடுதலுக்கானதுதான்னு இந்த சபை ஒருபோதும் சொன்னதில்லே. யாராவது அதில் சில பேர் சொன்னால் அவங்க பைத்தியக்காரங்கன்னு நான் சொல்வேன். கவர்ன்மென்ட்டை சினேகிச்சும் ஆதரிச்சும் இருக்கிறதனாலே கவர்ன்மென்ட் செய்கிற ஒவ்வொரு காரியத்தின் குறைநிறைகளைப் பத்தி விமர்

சனம் செய்ய நமக்கு சகல சுதந்திரங்களும் இங்கிலீஷ் கவர்ன்மெண்ட் தந்திருக்க, அந்த கவர்ன்மெண்ட்டோட நடவடிக்கைகளில் உள்ள சத்தியத்தையும் உத்தம விசுவாசத்தையும் சந்தேகப்பட்டுக் கண்டதைச் சொல்றது மகாகஷ்டம் என்கிறதிலே சந்தேகமில்லே. அதனாலே காங்கிரஸ் இந்த கவர்ன்மெண்ட்டோட உத்தம விசுவாசத்தையும் நேர்மையையும் பத்தி இகழ்ந்து பேசறதாக இருந்தால் அது காங்கிரசோட அழிவுக்குத்தான்னு நான் நிச்சயம் ஒத்துக்கிடுறேன். எல்லாக் காரியங்களையும் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டுச் செய்யணும். சத்தியம் இல்லேன்னா பின்னே எந்தக் காரியமும் நல்லபடியா வர முடியாது.

அப்புறம் நீங்க சொல்றது, இந்தியர்களுக்குப் பணம் இல்லே, ஒற்றுமை இல்லே, நேர்மை இல்லே, ஊக்கம் இல்லே, இப்படி மற்றதும். இதில் சிலவற்றிலே குறை நேர்ந்திருக்கலாம். ஒற்றுமை இல்லேன்னா இந்த காங்கிரஸ் இப்படி நல்லா நடந்துக்கிட்டிருக்காது. இவ்வளவு வலுவான ஒரு ராஜ்யமாகி இப்போ பார்க்கிற மாதிரியான ஒற்றுமையும் இணக்கமும் வந்தது இங்கிலீஷ் பாஷையினாலே உண்டானதுதான். இனிமேலும் இந்த பாஷை பரவுறதனாலே ஒற்றுமை வளரும். ஜனங்களுக்குள்ளே ஒற்றுமை ஏற்படுறது ஒவ்வொரு விஷயத்தைப் பத்தி அவங்களுக்கு ஏற்படுற அபிப்பிராயங்கள் மாதிரி அமைகிறதனாலேதான். அறிவு வளர்றபோது முக்கியமான விஷயங்களிலெல்லாம் அபிப்பிராயம் சாதாரணமாக ஒரே மாதிரிதான் உண்டாக முடியும்.

'சத்திய மில்லே'ன்னு நீங்க சொன்னதனாலே இந்தியர்களை அனாவசியமா அபகீர்த்திப்படுத்திட்டீங்கன்னு நான் சொல்வேன். எவ்வளவு சத்தியவான்கள் இந்தியாவிலே இப்பவும் இருக்கிறாங்க, உங்களுக்குத் தெரியாதா? புராணங்களின்படி அரிச்சந்திரன், அஸ்வத்தாமா, தசரதன் முதலானவங்களைப் பத்திப் படிச்சதில்லையா? அனாதி காலத்திலிருந்தே இந்தியா சத்தியத்திலே பிடிப்புக் கொண்டதும் தயக்கம் காட்டாததுமான ராஜ்யம்னு பல சங்கதிகளைக் கொண்டு தீர்மானிக்க முடியும். அப்படி

இருக்கும்போது அவசரப்பட்டு நாம சதத்தியமில்லாதவங் கன்னு நீங்க சொன்னதைக் கேட்டு எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு. 'ஊக்கம் இல்லே'ன்னு நீங்க சொன்னதும் சரியில்லே. படிக்கவும்அறிவை வளர்த்துக்கொள்ளவுமான ஊக்கம் இந்தியாவிலே படிப்படியா வளர்ந்து வருதுங் கறதிலே எனக்கு சந்தேகமில்லே. இந்தியர்களுக்கு தைரி யமும் உடல்வாகும் இல்லேன்னோ இருக்குன்னோ சொல்றது, இந்தியாவிலே இப்போ அமைச்சிருக்கிற நேட்டிவ் பட்டாளத்தாரைப் போய்ப் பார்த்து அவங்க ளோட நிலைமையைத் தெரிஞ்சிக்கிட்ட பிறகு சொல்லி யிருக்கணும். ஒருவேளை நீங்க கோழையாக இருக்கலாம். மத்தவங்க எல்லாருமே தன்னைப் போலவே கோழைகள்னு தோணறது இயல்புதான். காங்கிரசில் 'சுரண்டுறவங்க' அப்படீன்னு அவமானகரமா உங்களால் சொல்லப்பட்ட பல பாபுமார்களும் அய்யர்மார்களும் முதலிகளும் தங்க ளோட வாழ்க்கை யையும் சர்வ தனத்தையும் இந்தியாவோட மறுமலர்ச்சிக்கும் நன்மைக்கும் வேண்டி உதறித்தள்ள ஆயத்தமாக இருக்கிற வங்கன்னு நான் நம்புறேன். புத்தி சாதுர்யத்தினாலே ஜெயிக்க வேண்டியதைத் துப்பாக்கி எடுத்து வெடி வச்சி ஜெயிக்கணும்னு சொன்னால் யார் கேட்பாங்க? தைரியமிருந்தால் பத்து பாபுமாரும் அய்யர் மாரும் சேர்ந்து இங்கிலீஷ் கவர்ன்மென்ட்டுக்கு எதிரா சண்டைபோட்டுப் பார்க்கட்டும்னு ஒரு அசடன் சொன்னால் யாராவது ஒத்துக்கிடுவாங்களா? சர் லெபெல், க்ரிஃபின் முதலானவங்க இந்தி யாவைப் பத்தி இழிவாப் பேசறதிலே உங்களுக்கு ரொம்ப சந்தோஷம். அதிலே எனக்கும் ரொம்ப சந்தோஷம்தான். உருப்படியான ஆளுங்க எதிரிங்க பக்கத்திலே சேர்ந்துக்கிட்டு நம்ம நிலைமைகளைப் பத்தி இழிவாப் பேசினால்தான் நமக்கு நம்ம நிறைகுறைகளை சரியாகத் தெரிஞ்சிக்கவும், தேவை யான மாற்றங்களைச் செய்துக்கவும் முடியும். இவங்க அடிப்படையிலே இந்தியாவுக்கு ரொம்ப நன்மைகளைத் தான் செய்றாங்க. வாய்ச்சவுடால் அடிக்கிற பாபுமாரும், அய்யரும், முதலியும் ஒரு முஸ்லீமை எதிர்க்க சக்தியில்லாத கோழைகள் என்பதாகவும் மற்றதும் சொல்லி அவமான

மாகப் பேசறது நமக்கு வீராப்பு உண்டாகவும், நம்ம வீரா பராக்கிரமங்களைத் தூண்டிவிடவும் விசேஷ காரணங் களாய் அமையும். அதனாலே அவங்க அப்படியே சொல்லிக்கொள்ளட்டும்.

சித்தப்பா சொன்னதுக்கெல்லாம் நான் ஒருவழியா பதில் சொல்லிட்டேன் இனி காங்கிரஸ் சபையோட நோக்கம் என்னன்னு நான் சுருக்கமாகச் சொல்லி அப்பா வுக்கு விளக்குறேன். நான் சொல்ற நோக்கத்திலிருந்து விலகி இந்த சபை எப்போவாவது மாறுபடுறதாகத் தெரிந் தால் அந்தக் கணமே நான் அதிலேருந்து விலகிவிடுவேன்.

இங்கிலீஷ் அரசாங்கம் இந்த நாட்டிலே தொடங்கினது முதல் பல கெடுதல்கள் ஏற்பட்டதனால் அதுங்களை இல்லாமச் செய்றதுக்குத் தடுக்கக்கூடிய ஒரு சபைதான் இதுன்னு அப்பா நினைக்கிறது தவறு. இங்கிலீஷ் கவர்ன் மென்ட் தொடங்கினது முதல் இந்தியாவுக்கு வார்த்தைகளில் அடங்காத நன்மைகள்தான் ஏற்பட்டிருக்கு. அந்த நன்மை களை மேலும் அதிகரிப்பதற்கான முயற்சிகள் செய்ய அமைந்த சபைதான் காங்கிரஸ் சபை. இங்கிலீஷ்காரங்க மாதிரி புத்திசாலித்தனம் இருக்கிற மற்றொரு இனத்தைப் பார்க்க முடியுமா? சந்தேகம். இந்த புத்திசாலித்தனத்தின் லட்சணங்களாக அவங்களிலே தெரியறது முதலாவது அரசியல் நிபுணத்துவம், இரண்டாவது பட்சபாதம் இல்லாத தன்மை, மூணாவது இரக்க குணம், நாலாவது வீரம், ஐந்தாவது ஊக்கம், ஆறாவது பொறுமை இதுங்கதான். இப்படியான ஆறு குணங்களைக் கொண்டுதான் இங்கிலீஷ் காரங்க இவ்வளவு அதிக ராஜ்யங்களை இந்த உலகத்திலே தன்வசப்படுத்தி ஆண்டுக்கிட்டு வர்றாங்க. இப்படித் திறமை சாலிகளான மனுஷங்களால் ஆளப்படறதான வாய்ப்பு வந்தது இந்தியாவோட ஒரு மகாபாக்கியம் என்கிறதிலே சந்தேகமில்லே. இவங்களோட அரசாங்கம் தொடங்கின திலிருந்து இந்தியர்களுக்கு அறிவு வளரத் தொடங்கிரிச்சி. அந்த அறிவுக்குத் தக்கதான பதவிகள் கிடைக்கணும் என்கிற ஆசையும் இந்தியர்களுக்கு வந்திரிச்சி. அந்த ஆசைகளை நிறைவேத்த தேவைப்பட்டால் நியாய ரீதியா இங்கிலீஷ்காரங்களே உதவி செய்வாங்க என்கிற முழு

நம்பிக்கை நமக்கு இருக்கிறதனாலே அந்த ஆசைகளை உசிதமான முறையிலே நடைமுறைப்படுத்த உருவான சபைதான் காங்கிரஸ் சபை.

இங்கிலீஷ்காரங்க எப்பவும் எல்லா விஷயங்களிலேயும் மக்களுக்கு சுதந்திரம் இருக்கணும்கிற அபிப்பிராயம் உள்ளவங்க. அந்த அபிப்பிராயத்தை ரொம்ப விஷயங்களிலே மனித சமுதாயத்தின் நன்மையை அனுசரிச்சி அவங்க பின்பத்தி வர்றாங்க. இப்போ இங்கிலாந்திலே எந்த மனிதனும் அடுத்த மனிதனோட அடிமைன்னு நினைக்கிறதில்லே. எந்த மனிதனும் தன்னிச்சையாய் மத்தவங்களுக்கு எந்தக் கெடுதலும் செய்ய முடியாது. இங்கிலாந்திலே எந்த மனிதனும் தன்னுடைய சக்திக்கும் இஷ்டத்துக்கும் ஏற்றபடி குற்றத்திற்குள்ளாகாத எந்த வேலையையும் செய்றதிலே அடுத்த ஆளுக்கு பயப்படுறதில்லே. இதுக்கான முக்கிய காரணம் இங்கிலாந்திலே அரசாட்சி முறை பெருந்தன்மையான ஆட்கள் ஏற்படுத்தின ஒரு சிறப்புத்தன்மைதான். அந்த மாதிரியான நன்மைகள் ஒட்டுமொத்தமா ஒரே சமயத்திலே கிடைக்கலேன்னாலும் எப்போவாவது அப்போதைக்கப்போதாவது நமக்குக் கிடைக்கணும்கிற எதிர்பார்ப்பிலேதான் காங்கிரஸ் இயங்கி வருது. இதிலே என்ன குற்றம்? இந்தியாவிலேன்னு மட்டுமில்லே, ஆப்பிரிக்காவிலுள்ள காப்பிரி இனத்துக்காரங்களெல்லாம் சேர்ந்து முடியுமானால் இந்த மாதிரி விதிமுறைகளை ஏற்படுத்தி அரசாட்சி நடத்த முடியுமானால் நல்லதுதான்னு நான் நினைக்கிறேன். இந்தியாவில் சாதாரண மக்களுக்குப் படிப்பும் அறிவும் இன்னும் நல்லபடி ஏற்படாததனாலே இந்த மாதிரி அரசாட்சிக்குக் காலம் வரல்லேன்னு சில கெடுதல்காரங்க சொல்றதுண்டு. இது வெறும் போக்கிரித்தனம். அறிவில்லாத ஆட்களைக் கொண்டு அரசாட்சியை நடத்தணும்னு யாரும் சொல்லலே. எவ்வளவு அறிவில்லாதவங்களுக்கும் சுகதுக்கங்களைப் புரிஞ்சிக்க முடியும். இந்தியாவிலே இருக்கிறவங்களுக்கு அதைத் தெரிஞ்சிக்க முடியாதுன்னு சொல்றது தெம்மாடித்தனம் இல்லையா? முன்னே நாடுவாழிகள் என்கிற பட்டத்தோடு நாட்டாண்மை செய்து வந்தப்போ ஏற்பட்டிருந்த

வசதிகளுக்கும் இப்போதைய அரசாட்சியிலே ஏற்பட்டிருக்கிற வசதிகளுக்கும் உண்டான வேறுபாடு இந்தியாவிலுள்ள எவ்வளவோ கீழ்மட்டத்திலே இருக்கிறவங்களுக்குக்கூடத் தெளிவாகத் தெரியும். மனுஷங்களை விடுங்க, சில மிருகங்கள்கூடத் தங்களை இரக்கத்தோட பாதுகாத்துப் பராமரிக்கிறவங்களையும், மாறாகக் குரூரத்தைக் காட்டுறவங்களையும் வேறுபடுத்தி அறியுது. இப்போ காங்கிரசுக்கு முக்கியமாகத் தேவைப்படுறது இந்த நாட்டை ஆளுறதிலே படிப்பிலேயும் அறிவிலேயும் இங்கிலீஷ்காரங்களுக்குச் சமதையான இந்தியர்களை அதிகம் சேர்த்து அவங்களோட அபிப்பிராயங்களை ஆலோசிக்கவும் அனுசரிக்கவும் வேணும்கிறதுதான். இதிலே என்ன தப்பு? இப்படி ஆனால்தானே மக்களுக்கு அதிக நன்மை? அரசாங்க நிர்வாக முறைகளை அறிஞ்சி நடத்த முடியறவங்க பலரும் நம்ம நேட்டிவ் ஆட்களின் மத்தியிலே இப்போ இந்தியாவிலே எல்லா இடத்திலேயும் உண்டு என்கிறதை ஒத்துக்கிடணும். அப்படி ஆட்களை உண்டாக்கி வைச்சதும் இங்கிலீஷ்காரங்கதான். அப்படி இருக்கிறப்போ படிப்புள்ள தகுதியான ஆட்களை அவங்கவங்க நிலைமைக்குத் தக்கபடி இங்கிலீஷ்காரங்களோடு சேர்ந்து அரசாங்கத்திலே இணைஞ்சி நிர்வாகம் பண்ணணும்னு நாம நினைக்கக் கூடாதா? இந்த விதமான ஒவ்வொரு விஷயத்தையும்தான் காங்கிரஸ் முக்கியமாக ஆலோசிக்குது.

இந்தியாவிலே படிப்புள்ளவங்களைவிட படிப்பில்லாதவங்க ரொம்ப அதிகம்னு ஒத்துக்கிடுறேன். இங்கிலாந்து, அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ் முதலான நாடுகளோட நிலைமையும் இந்த விஷயத்திலே இந்தியாவிலே இருக்கிறதைப் போலத்தான். சாதாரணமாக வியாபாரம், விவசாயம், கைத்தொழில், கூலி வேலை இதுகளைக்கொண்டு காலட்சேபம் நடத்துற பெரும்பாலான மக்களுக்கு எல்லா நாடுகளிலேயும் அரசாங்கக் காரியங்களைப் பற்றியதான அறிவு ஏறக்குறைய ஒரே மாதிரித்தான் இருக்கும். உதாரணத்துக்கு, பார்லிமெண்ட் சபைக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுக்கிறப்போ இங்கிலாந்திலே நடக்கிற கோலாகலங்களைப் போய்ப் பார்த்தாலே போதும். ஆனாலும் பார்லி

மென்ட்டில் மெம்பர்களாகப் போய்ச் சேர்வது பெரும் பாலும் தகுதி வாய்ந்த ஆட்கள்தான். இங்கே நுணுக்கமான ஒரு விஷயத்தை யோசிச்சிப் பார்க்கணும். மக்கள் பொது வாக எல்லாருமே அறிவாளிகளாக இல்லாவிட்டாலும் தங்கள் மத்தியிலுள்ள அறிவாளிகளோட சொல்லையும் அறிவுரையையும் அனுசரிச்சி முறைப்படி நடந்துக்கிடு வாங்கன்னு ஊகிச்சிக்கிடலாம்.

ஜாதிமதக் கோட்பாடுகளும் பெண்களுக்குப் படிப் பறிவு இல்லாமையும் பிறவும் காங்கிரஸ்காரங்களோட விருப்பங்களை நிராகரிக்கிறதுக்கான காரணங்களாக முடியாது.

இந்தியாவிலே வரி வசூலிக்கிறது, மக்களுக்கான நீதி பரிபாலனம் செய்றது, நிர்வாகம் நடத்துறது என்கிறதான பலவித அரசாங்க வேலைகளில் இந்தியர்களைத்தான் அதிகம் பயன்படுத்த வேண்டும்னு பட்சதாபமற்ற இங்கி லீஷ்காரங்களுக்கு இங்கிலாந்திலே இப்போ எண்ணம் ஏற்பட்டு, அவங்களே அந்த எண்ணத்தை நிறைவேற்றப் பல முயற்சிகளைச் செய்து வர்றாங்க். இதெல்லாம் கடந்த நாலு வருஷங்களில் காங்கிரஸ் செய்த முயற்சிகளோட பலன்தான்னு நம்பலாம்.

இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டுக்கு இந்தியாவிலுள்ள முதலாவது பாதுகாப்பு அந்த கவர்ன்மெண்ட்டினாலே தயாராகி யிருக்கிற இப்போதைய படிப்புள்ள ஜனங்கள்னு நான் நம்புறேன். படிப்புள்ளவங்களுக்கு மட்டுமே இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டோட நிறைகுறைகள் விவர மாகத் தெரிய முடியும், படிப்பில்லாதவங்களுக்கு நல்லது கெட்டது எதுவும் தெரிய முடியாது. 1857-இலே இந்தி யாவிலே உண்டான அதிபயங்கரமான கலவரம் அந்த மாதிரியான காரணங்களாலே இனி ஒரு தடவை இந்தி யாவிலே உண்டாக முடியாதுன்னு நான் நினைக்கிறேன். அப்படி உண்டாக முடியாதுன்னு நான் நினைக்கிறதுக்கு முக்கிய காரணம் இந்தியாவிலே இப்போ பெருகி வருகிற படிப்பும் அறிவும் கொண்டுதான்னு நான் சொல்றேன். பட்டாளங்கள் அதிகரிக்கச் செஞ்சதனாலும் கோட்டைக் கொத்தளங்கள் அதிகம் உண்டாக்கினதாலும் மற்ற

தனாலும் அல்ல இப்படி இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டுக்கு இந்தியாவிலே பலம் பெருகினது. ஒரு கவர்ன்மெண்ட்டின் பலம் அதனோட மக்களின் அறிவிலும் படிப்பிலும் நட்பிலுமிருந்து உற்பத்தியாகி வளரணும். அப்படி யல்லாமல் உருவாகிற பலம் நிலையாக நிற்கிற பலமில்லே. 1857-இலே மிருகங்களோட சவங்களிலேருந்து எடுத்த கொழுப்பு கலந்த வெடிமருந்து உருண்டைகள் தயாரிச்சி பட்டாளத்தார்களின் ஜாதியைக் களையப் போகிறோம்னு கிளம்பின ஒரு புரட்டு வதந்தி எவ்வளவு சீக்கிரம் காட்டுத் தீ மாதிரி நாடு முழுக்கப் பரவினது! எவ்வளவு சீக்கிரம் ஜனங்கள் நம்பிட்டாங்க! இங்கிலீஷ் கவர்ன்மெண்ட் அப்படி மோசமாக நடந்துக்கிடுற ஒரு கவர்ன்மெண்ட் இல்லேன்னு சொல்லிப் பொதுமக்களுக்குப் புரியவைக்க அன்னிக்கு அறிவுள்ளவங்க இந்தியாவிலே ரொம்பக் குறைவாக இருந்ததனாலே கெடுதல்காரங்க உண்டாக்கிப் பரப்பின இந்த வதந்தியை சீக்கிரமே ஜனங்கள் நம்பிட்டாங்க. இப்போ இந்தக் காலத்திலே இங்கிலீஷ் கவர்ன்மெண்ட் மேலே இப்படி ஒரு பொய் சொன்னால் ரொம்ப சீக்கிரம் அது பொய்யின்னுஜனங்களுக்குப் புரிஞ்சிடும். இதுக்கு என்ன காரணம்? ஜனங்களுக்கு மத்தியில் இங்கிலீஷ் கவர்ன்மெண்ட்டின் சூட்சுமத்தத்துவங்கள் அறிஞ்ச பலர் இப்போ இந்தியாவிலே பல இடங்களிலே இருக்கிற தனாலே இந்த வகைப் புழுகுகள் எதுவும் பரவ அவங்க சம்மதிக்கிறதில்லே. இதுதான் காரணம். நிலவரம் இப்படி இருந்தாலும் கெடுதல்காரங்க சிலபேர் இங்கிலீஷ் கவர்ன் மெண்ட்டைப் பொய்யாக இழிவாகப் பேசறதனாலே படிப்புள்ள எல்லாரும் கவர்ன்மெண்ட்டுக்குப் பகைன்னு ஒரு பரவலான எண்ணம் உண்டாகிவிட்டதைக் கண்டு நான் வருத்தப்படுறேன். இங்கிலீஷ்காரங்களுக்கு நாம நியாயமில்லாம மரியாதை செய்றதையும் பயப்படுறதையும் பெருந்தன்மையான இங்கிலீஷ்காரங்க யாரும் எதிர் பார்க்கலே. நாட்டிலே இப்போ இருக்கிற கவர்ன் மெண்ட்டே போதும்னு அப்பா சொல்றதை நான் ஒத்துக்க மாட்டேன். இங்கிலீஷ்காரங்களைப் போல படிச்சிருக்கிற

நமக்கு சாமர்த்தியமும் தகுதியும் உண்டான பிறகு நாம இயல்பான மனித சுபாவத்தை அனுசரிச்சித் தகுதிகளுக்குத் தக்கபடிப் பதவிகளில் இருக்க ஆசைப்படுறது குற்றம்னு சொல்றது நியாயமில்லே. கெடுதல் புத்திகாரங்களைத் தவிர வேறே யார் இதைத் தப்புன்னு சொல்வாங்க? இங்கிலாந்திலே முக்காலே மூணு வீசம் ஜனங்களுக்கு இந்தக் காங்கிரஸ் மேலே ரொம்ப மரியாதை இருக்கு. இப்போ இங்கிலீஷ் படிச்சி உயர்தரப் பரீட்சைகள் தேறி, அரசாங்க முறைகளில் பயிற்சியாகி அதிலே திறமைசாலிகளாகி இங்கிலீஷ்காரங்களுக்கு சமதையாக இருக்கிற நம்ம ஆட்கள் தங்களோட திறமைக்கு ஏற்றதான பதவிக்கு கவர்ன் மெண்ட்டை எதிர்பார்க்கிற போதும்,

"இந்தியாவிலே இப்போ நடக்கிற அரசாங்க முறைகளில் பொதுமக்களின் நன்மைக்காக சிற்சில மாற்றங்கள் செய்யணும்னு சொல்கிற போதும்,

தரித்திர நிலைமைக்குப் போய்க்கிட்டிருக்கிற இந்த நாட்டிலே பணத்தை கவர்ன் மெண்ட் செலவு செய்றதிலும், பணம் திரட்டுறதிலும், இப்போ வச்சிருக்கிற சட்டத் திட்டங்களில் சிற்சில மாற்றங்கள் செய்யாம இருந்தால் அது நாட்டுக்கு நாசகரமாகிவிடும்னு அறிவுபூர்மாக விவரங்களைச் சொல்ல நாட்டில் தலைவர்களாகவும் பொதுமக்கள் சார்பாகவும் உள்ள படிப்பாளிங்க ஒரு சபையாகக் கூடி கவர்ன் மெண்ட்கிட்ட எடுத்துச் சொல்கிறபோதும்,

"நீங்களெல்லாம் ஒரே ஜாதியில்லே. முதல்லே ஜாதியை ஒண்ணாக்குங்க. ரெண்டாவது, உங்க பொண்ணுங்களைப் படிக்க வைங்க. சாப்பாடும் குளியலும் ஆசாரங்களும் பழைய மாதிரி இருக்கிறதெல்லாம் விடுங்க. இரும்புச் சக்கரங்களும் ஊசியும் உண்டாக்கப் படிங்க. ஆக இப்போ இந்த சங்கதிகளைப் 'பத்திப் பேசினால் போதும்"னு சித்தப்பா மாதிரி இருக்கிற சிலருங்க பதில் சொன்னாங்கன்னா அது உருப்படாத பதில்னு அப்பாவுக்குத் தோணலையா?

கோவிந்தன்

குட்டிமேனோன்: மாதவன் இப்போ சொன்ன மாதிரி தான் காங்கிரசோட கொள்

கைன்னா நான் சொன்னதிலே பெரும்பகுதி தப்புன்னு ஒத்துக்கிடுறேன். ஆனால் உண்மை அப்படியில்லேன்னு நான் நினைக்கிறேன். காங்கிரஸ்காரங்களோட பல கட்டுரைகளை நான் வாசிச்சிருக்கேன். அந்தக் கட்டுரைகளிலே முக்காலே மூணு வீசம் இப்போ இருக்கிற பிரிட்டிஷ் கவர்ன்மென்ட்டை ரொம்ப சினேகிதத்தோடும் பரிவோடும் புகழ்ந்ததாக நான் கண்டதில்லே. அதுங்களை வாசிச்சப்போ இங்கிலீஷ்காரங்க மேலே காங்கிரஸ்காரங்களுக்கு ஒரு வெறுப்பு உள்ளது போலத்தான் தோணுது.

மாதவன்: அது நீங்க வாசிச்சிப் புரிஞ்சிக்கிட்டதிலே தப்பு. இங்கிலீஷ்காரங்களை வெறுத்தால் இப்போ இங்கிலாந்திலே இந்தக் காங்கிரசுக்கு இவ்வளவு மரியாதை இருக்குமா?

கோவிந்தன் குட்டிமேனோன்: காங்கிரசின் நிலைமை தெரியாதவங்களுக்கு இங்கிலாந்திலே அதைப் பத்தி மரியாதை இருக்கலாம். லார்டு டஃப்ரின் முதலான பெரியவங்களுக்கு காங்கிரஸ் மேலே ரொம்ப அலட்சியம்.

மாதவன்: ஒருக்காலும் இல்லே. ஆனால் நான் முன்னாலே சொன்னபடி, சில அவசரக்காரங்களோட வரம்பில்லாத பிரசங்கங்களாலும் மற்றதாலும் லார்டு டஃப்ரினுக்குக் கொஞ்சம் எரிச்சல் ஏற்பட்ட போதிலும் காங்கிரஸ்மேலே அவருக்கு ரொம்ப மரியாதை இருக்

குன்னு நான் நினைக்கிறேன். மேலும் அதிக நன்மைகள் கிடைக் கிறதுக்காக வேண்டி அது வரைக்கும் கிடைச்ச நன்மைகள் எதுவும் சரியில்லேன்னு ஒருத்தன் தன்னோட எஜமானன்கிட்ட முறை யிடுறப்போ அவருக்கு மனவருத்தம் ஏற்படுறது மனித சுபாவம்தானே? இப்படித்தான் லார்டு டஃப்ரின் முதலான பிரபுக்களுக்கு மனக் கசப்பு ஏற்பட்டிருக்கும். இந்தியர் களில் தகுதியான ஆட்கள் அர சாங்க வேலைகளில் இப்போ இருக்கிறதைவிட அதிகம் பேர் சேர்ந்து வேலை செய்யணும்னு தான் பெருந்தன்மையான சகல இங்கிலீஷ்காரங்களோட அபிப் பிராயம். லார்டு டஃப்ரினுக்கும் இதுதான் அபிப்பிராயம். அப்படி இருக்கிறப்போ காங்கிரசை அவங் களுக்குப் பிடிக்காமல் இருக்க முடியாது. ஆனால் நான் சொன்ன நிலைமையிலிருந்து காங்கிரஸ் விலகி அனாவசியமாகவும் பொய்யாகவும் கவர்ன்மென்ட்டை நிந்திக்கிற காலம் வந்தால் நான் காங்கிரசின் ஒரு சார்பாளனாக இருக்க மாட்டேன். சர் ஆக்லண்டு கோல்வின் துரையவர்களோட கடி தத்தில் சொன்னபடியான மோச மான நடவடிக்கைகள் இந்த சபைக்கு இனியும் உண்டாகு மானால் அது சபையினுடைய வீழ்ச்சிக்குக் காரணமாகிவிடும்னு நான் திட்டவட்டமாக நினைக் கிறேன்.

கோவிந்தப்பணிக்கர்: நேரம் அதிகமாயிரிச்சின்னு தோணுது. எனக்குத் தூக்கம் வருது.

அவ்வாறே மாதவனும் கோவிந்தன்குட்டி மேனோனும் சொல்லிக்கொண்டு தூங்கிவிட்டார்கள். மறுநாள் வண்டிக்கு பம்பாயிலிருந்து மலையாள நாட்டுக்கு அவர்கள் புறப்பட்டார்கள்.

# 19

# மாதவனின் சுற்றுப்பயணத்தின்போது வீட்டில் நடந்த நிகழ்ச்சிகள்

மாதவன் சென்னையிலிருந்து கிளம்பியது முதல் இந்து லேகாவுக்கு ஏற்பட்ட துக்கநிலையைக் குறித்து இங்கே சிறிது கூறாமல் தவிர்ப்பதற்கில்லை. மாதவன் ஊரை விட்டுப் போய்விட்டான் என்பதைக் கேட்டபோது மாத வனின் அம்மா முதலியோருக்கு ஏற்பட்ட துக்கம் போன்ற தல்ல இந்துலேகாவுக்கு ஏற்பட்ட துக்கம். இந்துலேகா விசனப்பட்டது முக்கியமாக இரண்டு விஷயங்களுக்காக. முதலாவது, மாதவன் தன்னைப் பற்றிய ஒரு வதந்தியைக் கேட்டு இவ்வளவு சீக்கிரம் சந்தேகப்பட்டுவிட்டானே; தன்னுடைய புத்திசாலித்தனத்தைப் பற்றி மாதவன் புரிந்துகொள்ளத் தவறிவிட்டானே என்பது. இரண்டாவது, மாதவனின் எண்ணத்தில் விரக்தி அதிகமாகி, சொந்த உயிரைவிட அவன்மீது அதிகப் பற்றுக் கொண்டவள் என்று தெரிந்திருந்தும் தன்னைப் பிரிவதனால் உண்டான கடும் துக்கத்தில் சொந்த வாழ்க்கையை மாதவன் அழித்துக்கொண்டு விடுவானோ என்றொரு பயம். இப்படி இரண்டு விஷயங்களை நினைத்துத்தான் இந்துலேகா வருந்தினாள்.

சுற்றுப்பயணத்திற்குப் போனதனால் ஒரு கோபமும் இல்லை. படிப்பு முடிந்ததும் தேச சஞ்சாரம் செய்ய வேண் டியது அவசியம்தான். அதில் ஏதும் பயப்படத் தேவை யில்லை என்பது இந்துலேகாவின் எண்ணம். மேற்குறித்த விஷயங்களில் தனக்கு ஆழ்ந்த வருத்தம் ஏற்பட்டிருந்தது என்ற போதிலும் அவை ·எல்லாவற்றையும் மனதுக்குள்

அடக்கிக்கொண்டு கோவிந்தப்பணிக்கரும் மற்றவர்களும் மாதவனைத் தேடிப் போனதன் மூன்றாம் நாள் என்று தோன்றுகிறது, இந்துலேகா ஏற்பாடு செய்து 'ரெயில்வே ஸ்டேஷனுக்கு ஏதேனும் தந்திச் செய்தி வந்தால் தன்னிடம் கொண்டு வந்து தரும் வகையில் ஸ்டேனுக்கு அருகிலேயே தங்கியிருந்து தினமும் ஸ்டேஷனுக்குப் போய் செய்தி கேட்டு வர ஒருவரை அனுப்பி வைத்தாள்.

இந்துலேகாவுக்கு நாள் போனது எப்படி என்று விளக்கிச் சொல்வது மிகவும் கடினம். பார்வதியம்மாவின் துக்கத்திற்கு ஆறுதல் சொல்லும் வகையில் எல்லா நேரமும் அந்த அன்னையின் அருகிலேயே இருந்தாள். மாதவன் போய்விட்டான் என்று கேட்டது முதலாகப் பார்வதி யம்மாவை விட்டகலாமல், ஏதோ தன் சொந்தத் தாயாரிடம் செலுத்தும் பாசத்தைக் காட்டிலும் அதிகமாக வெளிப் படுத்தி, இந்துலேகா ஒருபொழுதும் பிரியாதிருந்தாள். குளியல், சாப்பாடு, படுக்கை, உறக்கம் ஆக எல்லாமே சேர்ந்துதான். ஆனால் பார்வதியம்மாவுக்கோ இந்துலேகா வுக்கும் மாதவனுக்கும் இடையேயான உறவுநிலை முற்றாகப் புரிந்திருக்கவில்லை. அவர்களிடையே அதிக நட் புறவு உண்டென்று புரிந்துகொண்டிருந்தாள். அவர்கள் தீர்மானமாய் கணவன் மனைவி நிலைக்கு மாற இருக்கி றார்கள் என்றும், இந்துலேகாவுக்கு மாதவன் அல்லாமல் வேறு எவரையும் கணவனாக்க முடியாது என்றும் பார்வதி யம்மாவுக்குக் கடுகளவும் தோன்றியதில்லை. அவ்வாறான நிலையில் மாதவனையே நினைத்துக்கொண்டு ஒரு நாள் இரவில் இந்துலேகாவின் மாடியில் இந்துலேகாவின் அருகில் பார்வதியம்மா தூங்குவதற்காகப் படுத்திருந்தாள். இரவு ஏறத்தாழ ஒரு மணி கழிந்திருக்கும். பார்வதியம்மா தன் கட்டிலிலிருந்து எழுந்து இந்துலேகா தூங்குகிறாளா என்று கேட்டுப் பார்த்தாள். இல்லையென்று சொல்லி இந்துலேகாவும் எழுந்து உட்கார்ந்தாள்.

பார்வதியம்மா: மகளே, நான் உன்கிட்ட ஒண்ணு கேட்பேன். நீ என்கிட்ட உள் ளதைச் சொல்வியா?

இந்துலேகா: எதுக்கு சந்தேகம்?

பார்வதியம்மா: நீ மாதவனுக்கு ஏடாகூடமா கடுதாசி ஏதாச்சும் எழுதினியா?

இந்துலேகா: இதுவரைக்கும் இல்லே.

பார்வதியம்மா: உன்னைப் பத்தின வருத்தத்திலே தான் அவன் போயிருக்கான்.

இந்துலேகா: அப்படித்தான் இருக்கணும்.

பார்வதியம்மா: மாதவனைக் கல்யாணம் பண்ணிக்கிறதா நீ அவனுக்கு ஒரு கடுதாசி எழுதி அனுப்பினா ரெண்டு நாளிலே என் மகன் இங்கே வந்து சேர்ந்திடுவான். அதுக்கு இப்போ மாமனோட சம்மதம் இல்லையே, என்ன செய்றது? என் குழந்தை யோட தலையெழுத்து அப்படி.

என்று சொல்லி, பாவம், அழத் தொடங்கினாள்.

இந்துலேகா: அதைப் பத்தி எதுவுமே நீங்க கவலைப்பட வேண்டாம். அவரைத் தவிர வேறே யாரையும் இந்த ஜன்மத்திலே நான் கட்டிக்க மாட்டேன்னு அவருக்கு நல்லாவே தெரியும்.

பார்வதியம்மா: உன்னோட நெனப்பு இதுதான்னு மாதவனுக்குத் தெரியுமா?

இந்துலேகா: நல்லாவே தெரியும்—திட்டவட்டமாத் தெரியும்.

பார்வதியம்மா: அப்படீன்னா என் மகன் எங்கேயும் போக மாட்டான். திரும்பி வந்துடுவான்.

இந்துலேகா: திரும்பி வராம இருக்கக் காரணமே இல்லே. ஆனாலும் நம்ம கெட்ட காலத்தினாலே என்னவெல்லாம் வரும்னு தெரியலே.

என்றவாறும் பிறவும்பேசியபடி இருவரும் இரவு முழுவதும் தூங்காமல் கழித்தார்கள் என்றபோதிலும் பார்வதியம்மாவுக்கு அன்று ஒரு விஷயம் திட்டவட்டமாகப்-

புரிந்தது—மாதவனின் மனைவியாகத்தான் இருப்பாள் என்பதாக இந்துலேகா முடிவுகட்டியிருந்தாள் என்பது.

இப்படி நாட்கள் சில கழிந்தன. "மாதவன் ஊரை விட்டுப் போய்ட்டான் போலிருக்கு!" என்று ஊருக்கெல்லாம் தெரிந்துவிட்டது. சங்கரசாஸ்திரிகள் இந்துலேகாவைப் பற்றி பொய் வதந்தி சொன்னதால்தான் இப்படி நேர்ந்தது என்ற செய்தியும் பரவியது. ஒரு மாதம் கழித்து சங்கரசாஸ்திரிகள் செம்பாழியோட்டுக்கு வந்த போது அவருக்கு நேர்ந்த வசவுகளைக் கேட்டு வெளியே தலைகாட்ட முடியவில்லை. வெட்கப்பட்டும் வருத்தப்பட்டும் கோயிலுக்குள்ளேயே முடங்கிக் கிடந்தார். சாஸ்திரிகள் ஊருக்குள் வந்திருப்பதாக யாரோ இந்துலேகாவிடம் தகவல் சொன்னார்கள். உடனே அழைத்துவர ஆளை அனுப்பினாள். ஆள் வந்து கூப்பிடுவதாகச் சொன்னதும் சாஸ்திரிகளின் உயிர் நடுங்கியது. 'அட கஷ்டமே! இவ்வளவு பொருத்தமான ரெண்டு பேருக்குப் பேராபத்து வர நான் காரணமாயிட்டேனே' என்று நினைத்து மருகினார். இந்துலேகாவுக்குத் தன்மீது எவ்வளவு கோபம் ஏற்பட்டிருக்கும், என்ன சொல்வாளோ என்ற தெரியவில்லை என்பதாக நினைத்து அளவில்லாத ஒரு பயம். இந்த நிலைமையில் இந்துலேகாவைப் பார்க்காமலிருப்பது மகா மோசமல்லவா என்றும் ஓர் எண்ணம். 'என்னவானாலும் ஆகட்டும், நான் தப்பா ஒண்ணும் செய்திடலே. இந்துலேகாவுக்கும் மாதவனுக்கும் நல்லதல்லாத எதையும் ஒருக்காலும் நான் மனப்பூர்வமா செய்யவும் மாட்டேன். அதுக்கு எல்லாம் தெரிஞ்ச ஆண்டவன் சாட்சியா இருக்கானில்ல' என்றொரு தைரியம். இவ்வாறு மனதில் பல சிக்கல்களுடன் நடைப்பிணம்போல் சாஸ்திரிகள் இந்துலேகாவுக்கு முன்னால் போய் நின்றார்.

ஆனால் இந்துலேகாவுக்கு சாஸ்திரிகளிடம் எந்த மனவருத்தமும் ஏற்பட்டிருக்கவில்லை. இந்துலேகா விசாரித்தறிந்து எல்லா விவரங்களையும் புரிந்து கொண்டிருந்தாள். கோவிந்தன் வழியில் சத்திரத்து வாசலில் வைத்து சாஸ்திரிகளிடம் சொன்னதை அப்படியே நம்பிவிட்டார். சாஸ்திரிகளுக்குத் தன்மீதுள்ள அன்பினால் இந்தக்

கெடுதிகரமான பொய் வதந்தியைக் கேட்டு உண்மை யென்று நம்பி மிகவும் வருந்தியதனால் அன்றைய தினமே அவரும் இங்கிருந்து புறப்பட்டுப் போகக் காரணமாயிற்று என்பதுவும் இந்துலேகாவுக்குப் புரிந்தது. ஆனால் இந்து லேகா சாஸ்திரிகளை அப்போது கூப்பிடச் சொன்ன தற்குக் காரணம், மாதவனைக் கடைசியாகப் பார்த்துப் பேசிய நபர் அவராக இருந்ததனால் அந்த விவரத்தை அவரிடமே கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்பதற்காக மட்டும்தான்.

சாஸ்திரிகளை எதிரில் பார்த்தவுடன் ஒரு நாற்கா லியைப் போட்டு உட்காரச் சொன்னாள்.

தான் நின்ற இடத்தில் நின்றபடியே சாஸ்திரிகள் கலங்கி அழுதுகொண்டு பேசினார்.

“இந்த மகாபாவியான என்னை எதுக்காகக் கூப்பிட் டீங்க? நீங்க ரெண்டு பேரும் எனக்கு உயிருக்கு சமானம். கடவுளே! தெரியாத்தனமா நான் உங்களுக்கு இப்படி ஆபத்து உண்டாகக் காரணமாயிட்டேனே”—என்று சொன்னபோது,

இந்துலேகா: உக்காருங்க. நான் எல்லா விவரத்தையும் தெரிஞ்சிக்கிட்டேன். என்கிட்டவும் மாதவன்கிட்டவும் உங்களுக்கு இருக்கிற அன்புதான் இந்த ஆபத்துக்குக் காரணமாயிடிச்சி. உங்களுக்கு மட்டுமில்லே இப்படித் தப்பான எண்ணம் உண்டானது. வேறே நிறையப் பேர் தப்பா நினைச்சிக்கிட்டிருக்காங்க. என்னோட ஆச்சரியமும் வருத்தமும் அவரையே இந்த வதந்தி இவ்வளவு சீக்கிரம் நம்ப வச்சிருச்சே அப்படீங்கறதுதான்.

என்று சொல்லும்போதே இந்துலேகாவின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது.

சாஸ்திரிகள்: (தழுதழுத்து) கஷ்டம்! கஷ்டம்! இப்படி சந்தேகப்படக் கூடாது.

இதுதான் கஷ்டம். நான் மாதவன் கிட்ட சொன்ன வார்த்தையை நீ கேட்டிருந்தா நீயும் உடனே நம்பித் தான் இருப்பே. அப்படித் திட்ட வட்டமா நான் சொன்னேன். நான் இந்துலேகாவுக்கு ரொம்ப வேண்டி யவன்னு மாதவனுக்கு நல்லாத் தெரியும்தானே! அப்படியான நான் இந்துலேகாவைக் கடுமையாத் திட்டித் தீர்த்து மாரிலே அடிச் சிக்கிட்டு அழுததை மாதவன் பார்த் தாரு. நம்பூதிரிப்பாடும் இந்து லேகாவும் நானும் பாதி வழிவரை ஒண்ணா வந்ததாச் சொன்ன தோட இல்லாம, நிறைய ஆளுங்க இந்த ஊரிலேருந்து வர்றவங்க எல்லாரும் அந்த மாதிரிப் பேசி னாங்கன்னா நம்பறது ஒரு ஆச்சரி யமா? கஷ்டம்! மாதவனை எதுவும் தூஷணையாப் பேசாதே.

இந்துலேகாவுக்கு இதைக் கேட்டதும் மனதில் சிறிது சுகம் தென்பட்டது. மாதவன் தவறாக எதுவும் நடந்து கொள்ளவில்லையென்று கேள்விப்படுவது அவளுக்கு எப்போதும் மிகுந்த மகிழ்ச்சிதான். தான் தவறு செய்ததாக ஆனாலும் பரவாயில்லை.

இந்துலேகா: சாஸ்திரிகள் இப்படிச் சொன் னப்போ மாதவன் என்ன செய் தாரு?

சாஸ்திரிகள்: நான் மாதவனோட பேசினது நடு வழியிலேதான். ஆனால் அதுக்கு முன்னாலேயே பல பேர் சொல்லி யிருக்காங்க. கேள்விப்பட்டது சரி தானான்னு கேட்டப்போ ஆமாம்—ஆமாம்னு நான் சொன்னதைக் கேட்டு மாதவன் மயக்கம் போட்டது போல ஆயிட்டாரு.

இவ்வளவும் சொல்லச் சொல்ல இந்துலேகாவுக்குக் கேட்டுக்கொண்டிருக்க முடியவில்லை. கட்டிலில் படுத்து அழத் தொடங்கினாள்.

சாஸ்திரிகள்: சீ! வருத்தப்படாதே, வருத்தப் படாதே. சீக்கிரமே எல்லாமே சந் தோஷமா முடியும். நான் தினமும் திரிகால பூஜை செஞ்சி பகவதி யைக் கும்பிட்டு வர்றேன். எல்லாத் தையும் ஈஸ்வரி சுபமா முடிச்சித் தருவா.

என்பதாகவும் பிறவும் சொல்லி சாஸ்திரிகள் கண்ணீர் வார்த்தபடி ஒருவழியாக மாடியிலிருந்து இறங்கிப் போனார்.

இந்துலேகா நாள்தோறும் விடிந்ததிலிருந்து அஸ்த மனம் வரை பகல் யாராவது ஆட்கள் கடிதம் எடுத்துக் கொண்டு ஸ்டேஷனலிருந்து வருகிறார்களா என்று மாடியி லிருந்து பார்த்தபடிப் பொழுதைக் கழிப்பாள். குளியல், சாப்பாடு முதலியவற்றை வெளி ஆட்களின் பரிகசிப்புக்கு இடம் கொடுக்காபடி முடித்தாக வேண்டுமே என்ற கட்டாயத்தில் செய்து முடிப்பாள். இப்படிக் கழிந்து கொண்டிருந்தது. அவ்வாறு இருக்கும்போது ஒரு நாள் மாலை நான்கு மணி சமயத்தில் மாடியில் சோபாவில் படுத்துக் கிடந்த இந்துலேகா தன்னையறியாமல் தூங்கி விட்டாள். இரவு தூக்கமில்லாததனால் ஏதோ அலுப்பில் தூங்கிவிட்டாள். நேரம் ஏறத்தாழ ஆறரை மணி ஆன போது ஆழ்ந்த தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தாள். "அய்யோ! அய்யோ! என் புருஷனை அந்த முஸ்லீம் குத்திக் கொன்னுடுவானோ? கஷ்டம்! என் புருஷன் செத்திட்டாரு. இனி நான் இருந்தது போதும்" என்று சற்று உரக்கவே கூக்குரலிட்டாள். அந்தக் கூக்குரல் பூவரங்கு வாசற்புறத்தில் இருந்தவர்களுக்குக் கேட்டது. உடனே பஞ்சுமேனோன், லட்சுமிக்குட்டியம்மா முதலியோரும் வேலைக்காரிகள், வேலைக்காரர்கள் ஆகியோரும் அலறியபடி நெருக்கி யடித்துக்கொண்டு மாடியேறிப் பார்த்தபோது இந்துலேகா சோபா மீது மிகுந்த சோர்வுடன் படுத்துக் கிடந்தாள்.

லட்சுமிக்குட்டியம்மா சென்று கைத்தாங்கலாகப் பிடித்தாள். அதையடுத்து பஞ்சமேனோன் சென்று தாங்கலாக மடியில் வைத்துக்கொண்டார். உடம்பைத் தொட்டபோது கொள்ளிக்கட்டையைக் கையில் பிடித்ததுபோல் இருந்தது. இதென்ன கடவுளே! பெண்ணுக்கு இப்படிக் காய்ச்சல் அடிக்கிறதே என்று சொல்லியபடி இந்துலேகாவிடம் பஞ்சு மேனோன், "கண்ணு! நீ எதுக்காகக் கூப்பாடு போட்டே?" என்று கேட்டார்.

இந்துலேகாவுக்குப் பேச்சு எழவில்லை. கொஞ்சம் தண்ணீர் குடிக்க வேண்டும் என்றாள். தண்ணீர் கொண்டு வந்து குடித்த பின்னர் அறையில் நிறையப் பேர் நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

இந்துலேகா: எல்லாரும் வெளியே போயிடுங்க. அம்மா மட்டும் இங்கே இருக்கட்டும். அம்மாகிட்டே நான் தனியாப் பேசி அப்புறமா தாத்தாகிட்ட சொல்லச் சொல்றேன். தாத்தா கிட்ட என்னாலே நேரடியாப் பேச முடியாது.

என்று சொன்னதைக் கேட்டு பிரமித்துப்போய் லட்சுமிக்குட்டியம்மாவைத் தவிர்த்து மற்றெல்லோரும் கீழே இறங்கிப் போனார்கள்.

இந்துலேகா: அம்மா! நான் கெட்ட சொப்பனம் ஒண்ணு பார்த்து பயந்து சத்தம் போட்டுட்டேன். மாதவன் வங்காளத்துக்கு சமீபமா ஒரு இடத்திலே போய்க்கிட்டிருந்தப்போ ஒரு முஸ்லீம் மாதவனோட நெஞ்சிலே ஒரு கட்டாரிக் கத்தியாலே குத்தி மாதவனைக் கொன்னுட்டு வச்சிருந்த எல்லாத்தையும் திருடிட்டுப் போயிட்டதா சொப்பனம் கண்டேன். குத்து விழுந்ததும் மாதவன், 'அய்யோ! என்னோட இந்துலேகா இனிமே எப்படி உயிரோட

இருப்பா'ன்னு என் முகத்தைப் பார்த்தபடி சொல்லிக்கிட்டே உயிரை விட்டாரு. இதைப் பார்த்தப்போ பயங்கரமா அலறிட்டேன். மாதவனுக்கு ஏதோ ஒரு ஆபத்து நடந்திருக்குன்னு என் மனசிலே இப்பவும் தோணுது.

லட்சுமிக்குட்டியம்மா இதைக் கேட்டதும் அழத் தொடங்கினாள். உடனே கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

லட்சுமிக்குட்டியம்மா: வருத்தப்படாதேம்மா.சொப்பனத்திலே என்னவெல்லாமோ வேண்டாததையெல்லாம்தான் பார்க்கிறோம். அதையெல்லாம் பெரிசா நினைக்கத் தேவையில்லே. மாதவன் சீக்கிரமாவே சுகமா திரும்பிடுவான். என் கண்ணுக்கு சுகமாகவே மாதவனோட சேர்ந்து இருக்கிற மாதிரியா நடக்கும்.

இந்துலேகா: என்னவோம்மா, எனக்கு ஒண்ணும் தெரியலே. சொப்பனம் அப்படியே எதிர்காலத்தைச் சொல்லும்னு எனக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கை இல்லே; ஆனால் ஒத்தும் போகலாம். அது எப்படியானாலும் என் மனசுக்கு சங்கடமா இருக்கு.

லட்சுமிக்குட்டியம்மா: உனக்கு நல்லாகாய்ச்சல் அடிக்குது. நல்லாபோர்த்திப் படுத்துக்கணும்.

என்று சொல்லி கட்டிலுக்கு இட்டுச் சென்று படுக்க வைத்து போர்த்திவிட்டு பக்கத்தில் உட்கார்ந்தாள்.

இந்துலேகா: அம்மா நீ போய் இந்த விவரத்தைத் தாத்தாகிட்டச் சொல்லு.

லட்சுமிக்குட்டியம்மா: இப்பவே சொல்லணுமா? நீ தூக்கத்திலே மாதவனைப் பத்திச் சொன்ன வார்த்தை நினைப்பிருக்கா?

இந்துலேகா: இல்லே, என்ன சொன்னேன்?

லட்சுமிக்குட்டியம்மா: 'புருசனே'ன்னு கூப்பாடு போட்டே. அதை எல்லாருமே கேட்டிருப்பாங்க.

இந்துலேகா: அதனாலே என்ன? அவர் என் மனசுக்குப் பிடிச்சதாலே நான் புருஷனா வரிச்சிக்கிட்ட ஆள் தானே? எனக்கு இந்த ஜன்மத்திலே அவரைத் தவிர வேறே யாரும் புருஷனாகப் போறதில்லேன்னு நான் தீர்மானிச்சதுதானே? என்னையே விரும்பி எல்லாத்தையும் புறக்கணிச்சி எனக்காக இந்த சங்கடங்களையெல்லாம் ஏத்துக்கிட்ட அதிகோமளனான அவர் எந்தத் திசையிலே கிடந்து அல்லல் படுறாரோ தெரியலே. அப்படி இருக்கிற அவரை நான் புருஷன்னு கூப்பிடுறதிலும், அதை இனி மத்தவங்க தெரிஞ்சிக்கிடுறதிலும் எனக்கு மனசிலே சந்தோஷம் தானே உண்டாகும்? அவருக்கு ஏதாச்சும் நடந்திருந்தா அதைத் தெரிஞ்சிக்கிட்ட மறுகணமே என் உயிர் போகும் என்கிறதிலே சந்தேகமில்லே. இதோ நிமிஷ நேரத்திலே எனக்கு ஒரு காய்ச்சல் வந்து சேர்ந்ததே, பார்த்தீங்களில்ல? மாதவன் திரும்பி வந்து எனக்குத் தட்டுப்பட்டால்தான் இந்தக் காய்ச்சல்லேருந்து விடுபடுவேன். இல்லேன்னா—

இவ்வளவும் சொல்லிக்கொண்டிருந்தபோது லட்சுமிக்குட்டியம்மா குலுங்கி அழுதாள். "என் கண்ணு, இப்படியெல்லாம் எதுவும் பேசாதே" என்று சொல்லியபடிக் கட்டிலின்மீது அப்படியே சாய்ந்தாள்.

இந்துலேகா: போய்ச் சொல்லும்மா, தாத்தா கிட்ட சொல்லு. அவரு உனக்காகக் கீழே காத்துக்கிட்டிருப்பாரு. எனக்கு இனிமே எதுக்கும் பய மில்லே. என் மனசிலே இப்போ மொத்தத்திலே ஒரே ஒரு வெறி தான் இருக்கு. நான் என் புருஷனைப் புருஷன்னு கூப்பிட்ட திலே தாத்தாவுக்குப் பிடித்த மில்லாம இருக்கலாம். இருந்திட்டுப் போகட்டும். கொச்சுகிருஷ்ணன் மாமா என்னை ரொம்பப் பிரியமா வளர்த்து என்னோட மனம் போல என்னை வாழ வைக்கிறதுக்கு முன் னாலேயே இறந்து போய்ட்டாரு: அவரோட சாவுக்குப் பிறகு எனக்கு இந்த உலகத்திலே உயிர் வாழணும்னு அவ்வளவா பிடிப்பு எதுவும் இல்லே. தெய்வாதீனமா என்னோட யௌவனப் பிராயத் திலே என்னோட மனசுக்கு சர்வ சுகமும் கொடுப்பாருன்னு எனக்கு நம்பிக்கையுள்ள அதியோக்ய னான ஒருத்தரைப் புருஷனாக்கி மனசிலே வரிச்சிக்கிட எனக்கு அதிருஷ்டம் உண்டாச்சி. அது இப்போ எனக்குப் பலிக்காமப் போகுமோன்னு எனக்கு பயமா இருக்கு. நான் அதிருஷ்டக்கட்டை. அதனாலேதான் இப்படியெல்லாம் நடக்குது. என்னவானாலும் என் னோட கொச்சுகிருஷ்ண மாமா வோட அப்பா என்கிற முறை யிலே தாத்தாகிட்ட நான் எந்த விஷயத்தையும் மறைக்கப்போற

தில்லே. அம்மா, நீ போய் விவரமாச் சொல்லிட்டு இங்கே தானே வா. என்கூடத்தான் படுத்துக்கிடணும்.

லட்சுமிக்குட்டியம்மா மெதுவாக எழுந்து அழுது கொண்டே மாடியிலிருந்து இறங்கினாள்.

இங்கே எனது வாசகர்களுக்கு ஒரு விவரத்தைச் சிறிது குறிப்பிட்டுத் தெரிவிக்க வேண்டும்.

இந்துலேகா சாயங்காலம் ஆறரை மணிக்கு கனவு கண்டதும், மாதவனின் உடைமைகளை ஸ்டேஷனிலிருந்து 'அலகாபாத் சப்ஜட்ஜ்' மாதவனை ஏமாற்றி அபகரித்துச் சென்றதும் ஒரே நாளில் ஒரே சமயத்திலாயிருந்தன என்ற மாதவன் திரும்பி வந்த பிறகு இந்துலேகாவும் மாதவனும் சேர்ந்து நாட்களைக் கணக்கிட்டுப் பார்த்து முடிவு செய்து கொண்டார்கள். இந்த நிகழ்ச்சியை நான் விளக்கமாகச் சொன்னதன் மூலம் எனது வாசகர்கள் கனவுகள் வருங்கால விஷயங்களை முன்கூட்டியே தெரிவித்துவிடுகின்றன என்ற கருத்தில் எனக்கு நம்பிக்கை உண்டென்று நினைத்துவிடக் கூடாது. மனிதர்களின் மனது சாதாரண புலனறிவுக்கு எட்டாத விவரங்களை முன்கூட்டி அறியும் சக்தியுள்ளது என்றோ, அவ்வாறு அல்ல என்றோ முற்ற முடிவான நம்பிக்கை எனக்கு வரவில்லை. தியோசோபிஸ்டுகள் இந்த விஷயத்தில் சொல்லும் எதையும் நான் இன்னும் நம்பத் தொடங்கவில்லை. ஆனால் மொத்தத்தில் எனக்கு ஒரு நம்பிக்கை உண்டு. அது மனிதனின் சரீரம் என்பது அதன் சிருஷ்டி இயல்பையும் நடவடிக்கையையும் அடிப்படையாக வைத்துப் பார்க்கும்போது ஒருவேளை, ஒரு கடியாரம் அல்லது மற்ற இயந்திரங்கள் மாதிரி பல சாதனங்கள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டு ஒன்றையொன்று சார்ந்திருக்கிற மாதிரி சரியாக இயங்க உருவாக்கப்பட்ட ஓர் இயந்திரம் என்றுதான் சொல்ல வேண்டும்; ஆனாலும் மனிதரில் உள்ளோட்டமாகக் காணப்படும் சில நிலைமைகளைப் பார்க்கும்போது நம்மால் இதுவரை விவரமாக அறிய முடியாத சில சக்திகள் மனிதனின் ஆத்மாவில் உண்டென்று நான் கருதுகிறேன். கனவு

என்பது மனதில் உண்டாகும் பிரமைதான். சோம்னாம் புலிசம், மெஸ்மரிசம் என்பதாக அயல்நாட்டார் கூறும் விளக்கங்களைப் போல சாதாரண சிருஷ்டித் தன்மையில் மனிதனின் மனதில் தூக்கத்தின்போது சில சமயங்களில் ஏற்படும் ஒரு செயற்பாடு என்றுதான் கனவைச் சொல்ல வேண்டும்.

அந்தக் கனவு நிலை சில சமயங்களில் நம்மால் அறிய முடிவதான காரணத்தைச் சார்ந்து அமையலாம். சில சமயங்களில் நமக்குப் புலனாவதான எந்தக் காரணமும் இல்லாமலும்கூட அந்த நிலை ஏற்படலாம். சில சமயங்களில் சிறிதும் நிகழ முடியாத நிலைமைகளைக் கூடக் கனவில் காண நேரலாம்.

ஒரு பாம்பு அருகே வந்து கொத்துவதற்காகப் படம் விரித்து நிமிர்ந்து நிற்கிறது; கடித்துவிட்டது என்பதாகவே வேட்டை முடிந்து தளர்ந்து ஒரு கூடாரத்தில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த ஒரு துரை கனவு கண்டு பதறிக் கண்விழித்துப் பார்த்தார். உண்மையில் ஒரு பாம்பு கூடாரத் திற்குள் தன்னுடைய இரும்புக் கட்டிலுக்கு சுமார் நான்கு முழ தூரத்தில் நெளிந்து ஊர்வதை அவர் கண்டார். மற்றொரு துரை நெடுங்காலமாகத் தனக்குத் தட்டுப்படாதிருந்த நெருங் கிய நண்பர் ஒருவர் தற்செயலாகத் தன்னுடைய வீட்டிற்கு ஒரு நாள் வந்ததாகவும், இரவு கனவு கண்டதன் மறுநாள் விடிகாலையில் உண்மையாகவே அந்த நண்பர் நேரடி யாகவே கனவில் கண்டது போலவே வீட்டில் வந்து நின்றார். இவற்றைப் போன்று மற்றும் பல கனவு நிகழ்ச்சி களைக் குறித்து நான் படித்திருக்கிறேன். அதனால் இந்து லேகாவுக்கு வந்த கனவைப்பற்றி நான் அவ்வளவாக ஆச்சரியப்படவில்லை. நம்முடைய இந்தக் கதை முடிந்து இரண்டு மூன்று ஆண்டுகள் கழிந்த பிறகு கோபிநாத பானர்ஜி எழுதியிருந்த ஒரு கடிதத்தில், மாதவனின் உடைமைகளைத் திருடியவர்கள் இருவர் மூவரை வேறே ஒரு கொலையுடன் சம்பந்தப்பட்ட திருட்டின்போது கண்டுபிடித்து அவர்களுக்கு தூக்குதண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது என்றும், அவர்களில் அழகான ஒரு வாலிப வயதுத் திருடன் பல குற்றங்களை ஒப்புக் கொண்டான்.

என்றும், பல தடவைகளில் பதினேழு மனிதர்களிடம் உடைமைகளை அபகரிக்க அவனே கத்தியால் குத்தியும் துப்பாக்கியால் சுட்டும் விஷம் கொடுத்தும் பல கொலை களைச் செய்தான் என்றும், அன்று அந்த விதமாகக் கைப்பொருளை இழக்காமல் தடுக்க முனைந்திருந்தால் அந்தக் கயவன் மாதவனைக் கொல்ல நேர்ந்திருக்கலாம் என்றும் பிறவும் வருத்தத்துடன் குறிப்பிட்டிருந்தார்.

லட்சுமிக்குட்டியம்மா அழுதுகொண்டு படியிறங்கிய போது பஞ்சுமேனோனும் மற்றவர்களும் மாடிப்படியின் கீழ் மிகுந்த கவலையுடன் நின்றுகொண்டிருப்பதைக் கண்டாள். லட்சுமிக்குட்டியம்மாவைக் கண்டதும் பஞ்சு மேனோன் வேகமாக அழைத்து ரகசியமாகக் கேட்டார்:

பஞ்சுமேனோன்: ஏன் குழந்தை அலறினா?

லட்சுமிக்குட்டியம்மா: (அழுதுகொண்டு) பயணம் செய் றப்போ மாதவனை யாரோ குத்திக் கொன்னதா அவ கனவு கண்டிருக் கிறா. அப்போ கலங்கிப்போய் துக்கம் தாங்காம அலறியிருக்கா. இப்போ நல்லா காய்ச்சல் அடிக் குது. நான் சீக்கிரமா மாடிக்குப் போறேன்.

பஞ்சுமேனோன் சிறிது நேரம் அப்படியே நின்ற நிலையிலேயே நின்று யோசித்தார்—பின்னர்:

பஞ்சுமேனோன்: சீ! என்னவெல்லாம் கனவு காண்றது? மாதவன் மேலே அந்தப் பொண்ணுக்கு அவ்வளவு பிடிப்பா? சிவ—சிவ! எனக்கு இதெல்லாம் தெரியாது. அன்னிக்கு நான் ஒரு சத்தியம் பண்ணினது அவளுக்குத் தெரிஞ்சிருக்கும் தானே?

லட்சுமிக்குட்டியம்மா: தெரிஞ்சிருக்கும்.

பஞ்சுமேனோன்: அப்படீன்னா அதனாலேகூட வருத்தம் ஏற்பட்டிருக்கலாம்.

லட்சுமிக்குட்டியம்மா: ரொம்ப வருத்தமிருக்கு, அதனாலே தான் இப்படின்னு தோணுது.

பஞ்சுமேனோன்: அப்போ அந்த வருத்தத்தை யெல்லாம் போக்கிட்டா மனசிலே கொஞ்சம் சுகமா இருக்கும். கேசவ நம்பூதிரியைக் கூப்பிடு. லட்சமிக் குட்டி, சீக்கிரமா மாடிக்குப் போ. நான் சீக்கிரமா வர்றேன்னு சொல்லு. குழந்தையைக் கொஞ்சம் கூட வருத்தப்படும்படி வைக்கக் கூடாது.

உடனே கேசவன்நம்பூதிரி பஞ்சுமேனோனின் அருகே சென்றார்.

"இந்துலேகா சில கெட்ட சொப்பனங்கள் கண்டி ருக்கிறா. இப்போ அவளுக்கு ரொம்பக் காய்ச்சலடிக்குது. எதனாலேன்னு தெரியலே. என்னோட கொச்சுகிருஷ்ணன் போய்ட்டதை நான் பொருட்படுத்தாம இருக்கிறது இந்தக் குழந்தை இருக்கிறதனாலேதான்" என்று சொல்லி அப்பா வியான கிழவர் அடிக்க முடியாமல் ஒருமுறை அழுது தீர்த்தார்.

கேசவன்நம்பூதிரி: அடடா, அழாதீங்க.

என்று சொல்லியவாறே வெகுளியான நம்பூதிரியும் அழுதார்.

பஞ்சுமேனோன்: இந்துலேகாவுக்கு மாதவன் மேலே இருக்கிற பிடிப்பாலேதான் இந்தக் குழறுபடியும் மத்ததும். நான் இவளை மாதவனுக்குக் கொடுக்க மாட்டேன்னு சத்தியம் பண் ணினது கேட்டு வருத்தப்பட்டுக் கிட்டிருக்கிறா. அந்த சத்தியத்தை மீறிட்டு அதுக்குப் பிராயச்சித்தம் பண்ணினா அதுக்குப் பின்னாலே ஏதாச்சும் தோஷம் வருமா?

கேசவன்நம்பூதிரி: பிராயச்சித்தம் பண்ணினாப் போதும். நான் வாத்தியார்கிட்ட கேட்டிட்டு வர்றேன்.

என்று சொல்லிவிட்டு அண்ணாத்துரை வாத்தியாரை வரவழைத்துக் கேட்டதில் சத்தியம் செய்ததற்குப் பிராயச்

சித்தம் செய்துவிட்டால், அதற்குப் பிறகு மீறுவதனால் ஏற்படும் தோஷம் இல்லையென்று சொன்னார். விவரத்தைப் பஞ்சுமேனோனிடம் சொன்னார்.

பஞ்சுமேனோன்: என்ன பிராயச்சித்தம்?

அண்ணாத்துரை வாத்தியார்: தங்கத்தாலேயோ வெள்ளியாலேயோ, சத்தியம் பண்ணினப்போ அந்த சத்திய வாசகத்திலே உபயோகிச்ச எழுத்துங்க ஒவ்வொண்ணுக்கும் ஒரு அச்சு வார்த்து உண்டாக்கி வேதவித்துக்களான பிராமணர்களுக்கு அதையெல்லாம் தானம் பண்ணி, அன்னிக்கு ஒரு பிராமண விருந்து ஏற்பாடு பண்ணி, கோயில்லே சீக்கிரமா நல்லபடியா வழிபாடும் பண்ணினாப் போதும். ஆனால் எழுத்து அச்சுங்க தங்கத்தாலே பண்ணினா ரொம்ப உத்தமம். அதுக்கு முடியலேன்னா வெள்ளியாலே பண்ணினாப் போதும்.

பஞ்சுமேனோன்: தங்கத்தினாலேயே செஞ்சிரலாம்.

கேசவன்நம்பூதிரி: என்ன சந்தேகம், தங்கத்திலேதான் செய்யணும்.

அவ்வாறாகவே நிச்சயித்து அந்த நிமிடமே பெட்டியைத் திறந்து தங்கத்தை எடுத்து பரிசுத்த ஆத்மாவான பஞ்சுமேனோன் அதை எடையிட்டுத் தட்டானிடம் ஒப்படைத்தார். சத்தியம் செய்தபோது சொன்ன வார்த்தைகளைக் கணக்கெடுத்து எ-ன்-னோ-ட -ப-க-வ-தி-மே-லே-ஆ-ணை-நா-ன் -இ-ந் -து-லே-கா-வை-மா-த-வ-னு-க்-கு கொ-டு-க்-க-மா-ட்-டே-ன் என்பதில் இத்தனை எழுத்துக்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமா என்று சங்கர சாஸ்திரி சந்தேகம் எழுப்பிய போது அவசியம் எல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அண்ணாத்துரை வாத்தியார் முடிவு செய்தார். ஒவ்வோர் எழுத்தையும்

இரண்டு மஞ்சாடி என்ற எடையளவில் அச்சு வார்த்துக் கொண்டுவரக் கட்டளையிட்டுவிட்டு பஞ்சுமேனோன் இந்துலேகாவின் மாடிக்குச் சென்று விவரத்தையெல்லாம் இந்துலேகாவின் அருகே அமர்ந்து தெரிவித்தார்.

பஞ்சுமேனோன்: என் கண்ணு இனிமே எதுக்கும் கவலைப்பட வேண்டாம். மாதவன் வந்து சேர்ந்ததுமே நான் கல்யா ணத்தை நடத்தி வைக்கிறேன்.

இந்துலேகா: எல்லாம் தாத்தாவோட நல்ல மனசு போல நடக்கட்டும்.

என்று மட்டும் சொன்னாள்.

இந்துலேகாவுக்கு அன்றும் அதற்கு மறுநாளும் கடுமை யான காய்ச்சல் அடித்தது. அதற்குப் பின் காய்ச்சல் கொஞ்சம் குறைந்தது. இருமல், தலைச்சுற்றல், உடம்பு வலி ஆகிய இந்த உபாதைகள்தான் பின்னர் உண்டாயின. அவற்றுக்கு என்னவெல்லாமோ மருந்துகள் கொடுத்தும் கொஞ்சமும் குறையவில்லை. அவ்வாறு சில நாட்கள் கழிந்தன. அப்போது சபதத்தின் எழுத்து அச்சு வார்ப்புக் களைத் தயாரித்துக் கொண்டு வந்தார்கள். இந்துலேகா வுக்குக் காண்பிக்க வேண்டுமென்று எண்ணி பஞ்சு மேனோன் அந்த எழுத்துக்களை ஆமை ஓட்டுப் பெட்டி ஒன்றில் இட்டு இந்துலேகா இருந்த மாடிக்குக் கொண்டு சென்று திறந்து காட்டியபோது மிகுந்த வருத்தத்தோடும் அயர்வோடும் படுத்திருந்த இந்துலேகா புன்னகை புரிந்தாள்.

பஞ்சுமேனோன்: என் கண்ணுக்கு சந்தோஷம்னு தெரியுது. இனிமே நோவு எல்லாமே தீர்ந்திடும்.

இந்துலேகா: ஆமாம் தாத்தா, சந்தோஷமா இருக் கேன். என் தாத்தாவோட மனசி லேயும் எல்லாமே சந்தோஷமா இருக்கணும்.

என்று சொல்லிக்கொண்டிருந்தபோது லட்சுமிக்குட்டி யம்மா, கேசவன்நம்பூதிரி, சங்கரமேனோன் முதலிய வீட்டி லிருந்த எல்லோருமே புகைவண்டி ஸ்டேஷனுக்கு அருகில்

இருந்து செய்திகள் தெரிந்துகொள்வதற்காகத் தங்கியிருந்த ஆள் வேகவேகமாக மாடிப்படி ஏறி வருவதைப் பார்த்தார்கள்.

இந்துலேகா அந்த ஆளைக் கண்டவுடன் அடுத்த கணமே கட்டிலில் எழுந்து உட்கார்ந்தாள். தலைச்சுற்றல் இருந்ததால் முன்பெல்லாம் கைத்தாங்கலாகப் பிடிக்காமல் எழுந்திருக்க முடிந்ததில்லை.

இந்துலேகா: என்ன, தந்தி ஏதாச்சும் உண்டா?

லட்சுமிக்குட்டியம்மா: தந்தி இருக்கு, இதோ. சந்தோஷ சமாச்சாரம்தான்னு ஸ்டேஷன் மாஸ்டர் சொல்லி அனுப்பிச்சிருக்காரு.

என்று சொல்லி தந்திச் செய்தி உறையை இந்துலேகாவிடம் கொடுத்தாள். இந்துலேகா அதைத் திறந்து உரக்கப் படித்தாள்—கீழே குறிப்பிட்டபடி:

பம்பாயிலிருந்து—

"மாதவனை இங்கே இன்று பார்த்தோம். சுகக்கேடு எதுவும் இல்லை. நாங்கள் எல்லோரும் நாளை வண்டிக்கு அங்கு புறப்படுகிறோம்."

இதை வாசித்துக் கேட்டபோது அங்கே குழுமிருந்தவர்களில் மகிழ்ச்சியடையாதவர்கள் எவரும் இல்லை. இந்துலேகாவின் மகிழ்ச்சியைப் பற்றி நான் என்னவென்று சொல்வது? இந்துலேகாவின் தலைச்சுற்றல், இருமல், உடம்பு வலி இவையெல்லாம் எங்கே போயினவோ எனக்குத் தெரியாது.

பஞ்சுமேனோன்: (கேசவன்நம்பூதிரியிடம்) பாரும், நான் சத்தியம் பண்ணினதாலே வந்த ஆபத்தையும், அதுக்கு இப்போ பிராயச்சித்தம் செய்ய அச்சு உண்டாக்கின உடனே வந்து சேர்ந்த சந்தோஷத்தையும்.

கேசவன்நம்பூதிரி: அதிலே என்ன சந்தேகம்? எல்லாமே தெய்வகிருபையும் பிராமண அனுக்கிரகமும்தான்.

இந்துலேகா சிரித்தாள். சத்தியம் செய்ததற்கான பிராயச்சித்தத்துக்கும் தந்திச் செய்திக்கும் எந்தத் தொடர்பையும் இந்துலேகா காணவில்லை. அங்கே குழுமியிருந்தவர்களில் லட்சுமிக்குட்டியம்மாவைத் தவிர்த்து மற்றெல்லோரும் பஞ்சுமேனோனின் அபிப்பிராயம் சரி என்று கருதினார்கள். எல்லோருக்கும் மனதில் மகிழ்ச்சியாக இருந்தது. அன்றையத் தினமே பஞ்சுமேனோன் தங்க எழுத்து அச்சுக்களை தானம் செய்தார். அண்ணாத்துரை/ வாத்தியாருக்கு ஒரு ஏழெட்டு எழுத்துக்கள் கிடைத்தன. நான்கைந்து நம்முடைய சங்கரசாஸ்திரிகளுக்கும் கிடைத்தன. பிராமண விருந்தும் பிறவும் முடிந்து பஞ்சுமேனோன் இந்துலேகாவின் பக்கத்தில் வந்தபோது இந்துலேகாவின் உடல் நலம் மிகவும் தேறியிருந்ததைக் கண்டார். நல்லபடி கஞ்சி குடித்திருந்தாள். இருமலும் தலைச்சுற்றலும் இல்லையென்றே சொல்லிவிடலாம். உடல்நோவும் மிகவும் குறைந்திருந்தது. அயர்வும் குறைந்திருந்தது. இதையெல்லாம் பார்த்துக் கிழவர் மகிழ்ந்தார். தன்னுடைய பிராயச்சித்தத்தின் பலன்தான் இது என்று சம்பந்தமில்லாமல் முடிவுகட்டிக் கொண்டார். இந்துலேகாவுடன் ஒவ்வொரு விஷயமாகப் பேசியபடி இருந்தார்.

# 20

## கதை முடிவடைகிறது

கோவிந்தப்பணிக்கரும் மாதவனும் கோவிந்தன்குட்டி மேனோனும் பம்பாயிலிருந்து புறப்பட்டு சென்னை வந்தடைந்தார்கள். மாதவன் கில்ஹாம் துரையிடம் சென்று பார்த்து விவரங்களையெல்லாம் தெளிவுபடுத்தினான். அவர் உரக்கச் சிரித்தார். மாதவனை உடனடியாக சிவில் சர்வீசில் எடுத்திருப்பதாக கெஜட்டில் பார்க்கச் சொல்லி துரையவர்கள் வாத்சல்யபூர்வமாகத் தெரியப்படுத்தியதைக் கேட்டு மகிழ்ந்து அங்கிருந்து கிளம்பினான். தந்தையுடனும் கோவிந்தன்குட்டியுடனும் சேர்ந்து மலபார் நோக்கிப் புறப்பட்டான். மறுநாள் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான். மாதவன் வந்துவிட்டான் என்பதைக் கேட்டபோது இந்துலேகாவுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை அல்லவா!

மாதவன் வந்தவுடன் தன் தாயாரைப் போய்ப் பார்த்து விவரங்களையெல்லாம் அறிந்துகொண்டான். சபதப் பிராயச்சித்தம் பற்றிய விவரத்தையும் கேட்டறிந்தான். அடுத்து தாய்மாமனையும் சென்று பார்த்த பின்னர் மாதவன் இந்துலேகாவின் மாடிப்படியில் வந்து நின்றான். அப்போது லட்சுமிக்குட்டியம்மா மாடியிலிருந்து படியிறங்கி வந்தாள். மாதவனைப் பார்த்து ஒரு புன்னகை புரிந்துவிட்டு மீண்டும் மாடி மேலேறித் திரும்பிப் போனாள். மாதவன் வருகிறான் என்பதைத் தெரிவித்துவிட்டுத் திரும்பி வந்து மாதவனைக் கூப்பிட்டாள். மாதவன் படியேறிச் சென்று வாசலில் நின்றான். லட்சுமிக்குட்டியம்மா சிரித்தபடி கீழே இறங்கிப் போனாள்.

இந்துலேகா: (உள்ளே இருந்து) இங்கே உள்ளே வாங்க. எனக்கு எந்திரிச்சி அங்கே வர முடியாது.

மாதவன் மெதுவாக உள்ளே சென்றான். இந்து லேகாவைப் பார்த்தபோது அதிபரவசமானான். கண்ணி லிருந்து கண்ணீர் தானாகவே வழிந்தது. இந்துலேகாவின் கட்டிலின் மீது சென்றமர்ந்தான். இருவரும் பரஸ்பரம் கண்ணீர் மூலமாகத்தான் குசலப்ரச்னம் விசாரித்துக் கொண்டார்கள்.

இவ்வாறு இருவருமாக ஒவ்வொரு சல்லாபம் மூலமாக அன்றையப் பகல் முழுவதையும் கழித்தார்கள். மாலையில் பஞ்சுமேனோன் மாடிக்கு வந்து இந்துலேகாவின் உடல் நலம்பற்றி விசாரித்ததில் மிகவும் தேறியிருக்கிறது என்ற றிந்து மகிழ்ச்சி அடைந்தார். மாதவன் வீட்டிற்கு வந்து சேர்ந்த ஏழாம் நாள் இந்துலேகாவை சுயம்வரம் செய்து கொண்டான். உண்மையான சுயம்வரம் என்பதனால் அந்த வார்த்தையை இங்கே உபயோகிப்பதில் நான் வெட்கப் படவில்லை. சுயம்வர நாளில் பஞ்சமேனோன் மிக விமரி சையாக பிராமண விருந்தையும் மற்றவற்றையும் நடத்தி முடித்தார். அந்த நாளில்தான் கோவிந்தசென் வங்காளத்தி லிருந்து அனுப்பிவைத்த ஒரு பரிசுப் பொட்டலம் கிடைத்தது. முன்பு பரிசாகக் கொடுத்த பொருட்களைவிட அதிக எடையுள்ளதும் விலை கூடியதுமான பல பரிசுகள் அதில் அடங்கியிருந்தன. அவற்றையெல்லாம் பார்த்து இந்து லேகாவுக்கும் மற்றவர்களுக்கும் பெருத்த மகிழ்ச்சி ஏற் பட்டது. இந்துலேகாவின் பாணிக்கிரகணம் நடந்து முடிந்து ஒரு மாதம் ஆனபோது மாதவனை சிவில் சர்வீசில் தேர்ந் தெடுத்திருப்பதாக ஆணை வந்தது. இந்துலேகா, மாதவன், அவனுடைய அம்மா-அப்பா ஆக எல்லோருமாகச் சேர்ந்து சென்னைக்குச் சென்று சுகமாக இருந்தார்கள். இந்தக் கதை இங்கே முடிவடைகிறது.

